# குறும்பன்

## கஃபூர் குல்யாம்



# குறும்பன்

கஃபூர் குல்யாம்

தமிழாக்கம்:

பூ. சோமசுந்தரம்



நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்
41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
அம்பத்தூர், சென்னை- 600 098.
☎ : 26359906, 26251968

Language : Tamil

**Kurumban**

**Novel**

**Kafoor Kulyaam**

Translator : **P. Somasundaram**

Co-ordinator : **Yuma Vasuki**

N.C.B.H First Edition : December, 2013



No.of Pages : iv + 284 = 288

Publisher:

**New Century Book House Pvt. Ltd.,**

41-B, SIDCO Industrial Estate,

Ambattur, Chennai - 600 098.

Tamilnadu State, India.

Email: info@ncbh.in

Online: www.ncbhpublisher.com

ISBN : 978 - 81 - 2341 - 228 - 2

Code No. A 1648

**₹ 125/-**

**Branches**

**Ambattur** (H.O.) 044-26359906, 26258410, 26251968 **Thiruvanmiyur** 044-24404873 **Spenzer Plaza (Chennai)** 044-28490027 **Trichy** 0431-2700885 **Tanjore** 04362-231371 **Tirunelveli** 0462-2323990 **Madurai** 0452-2344106, 2350271 **Dindigul** 0451-2432172 **Coimbatore** 0422-2380554 **Salem** 0427-2450817 **Hosur** 04344-245726 **Ooty** 0423-2441743 **Vellore** 0416-2234495 **Villupuram** 04146-227800 **Pondicherry** 0413-2280101 **Thiruvannamalai** 04175-223449

குறும்பன்

நவீனம்

கஃபூர் குல்யாம்

மொழிபெயர்ப்பாளர் : பூ. சோமசுந்தரம்

நூலாக்க ஒருங்கிணைப்பு : யூமா வாசுகி

என்.சி.பி.எச். முதல் பதிப்பு : டிசம்பர், 2013

*அச்சிட்டோர் : பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்,*
*16 (142), ஜானி ஜான் கான் சாலை, இராயப்பேட்டை, சென்னை - 14*
☎ : 044 - 28482441, 28482973

## பொருளடக்கம்


| | |
|---|---|
| 1. பழைய வட்டாரத்துக் குழந்தைகள் | 5 |
| 2. கூட்டுப் புலவு | 17 |
| 3. சந்தை | 30 |
| 4. இரவுக் கூட்டாளிகள் | 51 |
| 5. முல்லாவும் பிணமும் | 61 |
| 6. ஓடிப்போனவனுக்கு நேர்ந்த விந்தை நிகழ்ச்சிகள் | 79 |
| 7. எழுபத்தொரு சொர்க்கங்கள் | 98 |
| 8. ஜமீன்தார் பட்ட பாடு | 118 |
| 9. ஆட்டு மந்தையை ஓட்டினோம் | 134 |
| 10. எங்களுக்குள் பூசல் | 151 |
| 11. விண்மீன்களுக்குச் சொந்தக் கதைகள் உண்டு | 175 |
| 12. எனது மதப்பள்ளி | 197 |
| 13. விடுமுறை நாள் | 210 |
| 14. ரஹ்மத் - ஹாஜியின் கதை | 224 |
| 15. புகைக்கூடம் | 233 |
| 16. எனக்குப் புளித்துப் போயிற்று | 247 |
| 17. வெடியதிர்ச்சி | 270 |

## அத்தியாயம் 1

# பழைய வட்டாரத்துக் குழந்தைகள்

கடை வரிசைகளின் ஜனக் கூட்டம் ஒரேயடியாக நெரியும்.

இல்ஹாமின் பெரிய சாயாக்கடை பாற்கடை வரிசையிலிருந்து மஹக்மா வட்டாரத்துக்குப் போகும் திருப்பத்தில் இருந்தது. அங்கே கிராமபோன் ஓயாமல் இசைத்துக் கொண்டிருக்கும். சாஸ்திரீய சங்கீதமும், நடன இசையும், தூய்ச்சி - ஹபீஸ், ஹம்ராக்குல் - கோர், ஹாஜி அப்துல் - அஜீஸ், அல்லது பர்கானாப் பாடகிகள் பாடியுள்ள மெல்லிசைப் பாட்டுக்களும் ஒன்று மாற்றி ஒன்று முழங்கிய வண்ணமாய் இருக்கும். கடை வரிசைகளைச் சேர்ந்த பணக்கார இளைஞர்கள் ஒழிவு நேரத்தை இங்கே கழிப்பார்கள். விரிப்பின் நடுவில், சர்க்கரை, வாதாம் பருப்பு, பிஸ்தா, முட்டை ஹல்வா, புளிப்புமாவு ரொட்டிகள், உப்பல் ரொட்டிகள் முதலியன பெரிய செப்புத் தாம்பாளத்தில் அழகாக வைக்கப்பட்டிருக்கும். ஒரு கிண்ணத்தில் பழக்கூழ் வைக்கப்பட்டிருக்கும். வைக்கோல் பின்னல் வலை சுற்றித் தகைவிலான் குருவிப் படம் பொறித்த மதுப் புட்டிகளும் அடிக்கடி காட்சி தருவதுண்டு. இளைஞர்கள் வசதியாக உட்கார்ந்து உரக்கப் பேசுவார்கள், வேடிக்கைக் கதைகள் சொல்லுவார்கள். இடையிடையே இடிக்குரலில் சிரிப்பார்கள். சாயாக்கடையில் எப்போதுமே இடத் தட்டுப்பாடு. தொலைவிடங்களிலிருந்து சந்தைக்கு வரும் குடியானவர்கள், ஏழைக் கம்மியர்கள், கஸாக்குகள், கிர்கீஸியர்கள் ஆகியோரோ, இங்கே நுழைவதே வீண்.

கடைப் பணியாள், வழுக்கைத்தலை அஸ்ரா என்ற பட்டமும் பெயரும் உள்ள ஒடிசலான வாலிபன். பொத்தான்கள் போடாத லேசான நீளங்கியை எப்போதும் அணிந்து இள நீலப் பட்டுக் குட்டையை இடுப்பைச் சுற்றிக் கட்டிக் கொண்டிருப்பான் அவன். வட்டப் புள்ளிகள் இட்ட மஸ்லின் குட்டை அவன் தோளில் தொங்கும். காலில் தோல் ஜோடுகள் அணிந்திருப்பான்.

கடைக்கு வந்தவன் எவனாவது "அஸ்ரா!" என்றோ "வழுக்கைத் தலையா!" என்றோ குரல் கொடுக்க வேண்டியதுதான் தாமதம், "என்ன வேண்டும் முல்லா - அகா, சாயாவா, ஹுக்காவா?" என்று அக்கணமே அருகில் ஓடிப் போய்ப் பணிவாகக் கேட்பான்.

கண் சிமிட்டும் நேரத்துக்குள் அவன் மறுபடி வந்துவிடுவான் - ஒரு கையில் சிறு தேக்கெண்டியும் இன்னொரு கையில் இரண்டு சின்னச் சீனாக் கோப்பைகளுமாக. இல்லாவிட்டால் பளிச்சிடும் செப்பு ஹுக்காவின் தலைப்பகுதியில் புகையிலை நிறைப்பான், உரத்த ஓசையுடன் இரண்டொரு முறை புகை இழுப்பான், பின்பு வணக்கமாகக் குனிந்து, "இந்தாருங்கள், முல்லா - அகா" என்பான்.

இந்தச் சாயாக் கடையில் எத்தனையோ விந்தைப் பொருள்களைக் காணலாம். ஆனால் இவற்றில் எல்லாம் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது வாயில் அருகே விட்டத்திலிருந்து தொங்கிய தங்க முலாம் பூசிய பெரிய கூண்டுதான். தீய கண்படாமல் காப்பதற்காகக் கட்டிய பல வித ரட்சைகளும் பல வண்ணச் சிறுகொடிகளும் அதை அலங்கரித்தன. அந்தக் கூண்டில் இருந்தது ஒரு கிளி - ஆண்டவன் ஆணை, உண்மையான உயிருள்ள கிளி! அதன் இறகுகள் வானவில்லின் எல்லா நிறங்களுடனும் ஒளிர்ந்தன - சித்திரத் தையல் வேலை செய்யும் ஆயஷாவின் பெட்டியில் இருக்குமே, பட்டு நூல்கள், அவை மாதிரி. நீலம், சிவப்பு, மஞ்சள், வெள்ளை, ரோஜா, பழுப்பு, கருஞ்சிவப்பு, இளம் பச்சை - உலகில் உள்ள எல்லா நிறங்களுமே! ஆனால் முக்கியமானது அந்தக் கிளி பேசுவதுதான். அது வெகு உற்சாகமாக, வேடிக்கையாகப் பேசும். இப்போதுதான் பேசக் கற்றுக் கொண்ட மூன்று வயதுப் பெண்ணின் குரல் போலக் கணீரென்று அதிர்ந்து ஒலிக்கும் அதன் குரலை இப்போதுகூட நான் கேட்கிறேன்:

"அஸ்ரா, அஸ்ரா, வந்தவருக்கு என்ன வேண்டும் என்று கேள். ஒரு சாயா, ஒரு ஹுக்கா, வாருங்கள் முல்லா - அகா, வாருங்கள் பாய் சாகேப்..."

சிறுவர்களான நாங்கள் அழுக்கேறிய வெறுங்காலர்களின் கூட்டமாகச் சந்தையில் அலைந்து திரிவோம். முரட்டுக் கைத்தறித் துணியில் தைத்த சட்டைகளும் காற்சட்டைகளும் அணிந்திருப்போம். சில வேளைகளில் தனித்தனியாகச் சிதறியும் வேறு சில வேளைகளில் மறுபடி ஒன்று சேர்ந்தும் எங்கும் குடுகுடுவென்று ஓடித் திரிவோம். சாயாக் கடையே, எப்போதும் எங்களைக் கவர்ந்து இழுக்கும்.

"செல்லக் கிளி, ஏய் செல்லக்கிளி!" என்று கொஞ்சலாக அழைப்போம்.

வழுக்கைத்தலை அஸ்ரா முகத்தைக் கொடூரமாக வைத்துக் கொண்டு எங்கள்மேல் பாய்வான். அகப்பட்டவனுக்கு நன்றாகக் கிடைக்கும் குத்துகள். கிளியோ எங்கள்மேல் வசை மாரி பொழியும் - ஆபாச வசவுகளுந்தான்.

ஆனால் சந்தையில் எங்கள் அக்கறையை முழுமையாகக் கவர்ந்தவர்கள் கிறுக்கர்கள்தாம், தாஷ்கந்த் நகரில்தான் எத்தனை கிறுக்கர்கள்! எண்ணித் தொலையாது! கரீம்-ஜின்னி, செம்பட்டையன், ஜுப்த்-கப்தார், மைராம் ஹான், பைத்தியங்களில் எல்லாம் பைத்தியம், மௌல்வியின் மனைவி, ஹால்-பராங்க், தாஜீஹான், அலீம், அவாஸ்... இவர்களில் ஒவ்வொருவரும் தங்கள் தங்களுக்கே உரிய வகையில் கிறுக்குகள். தனித்தனி விதத்தில் பைத்தியம் பிடித்தவர்கள். உதாரணமாக ஜுப்த்-கப்தார் அதிகாரிகள் மேல் உள்ள வெறுப்பால் பைத்தியம் பிடித்தவன். ஜார் நிக்கொலாய், காவுப்மான், மொச்சாலவ், திருடன் நபி என்ற பட்டப்பெயர் பெற்ற போலீஸ் சார்ஜண்டு, எல்லோரையும் ஒன்றாக விரவித் திட்டி நொறுக்குவான். பழக்கம் இல்லாவிட்டால் அந்த வசவுகளைக் கேட்கவே பயங்கரமாய் இருக்கும். கரீம்-ஜின்னியும் வாய் ஓயாமல் வைதுகொண்டிருப்பான். இவனுக்கு அல்லாவோ, தீர்க்கதரிசியோ, ஹாஜியோ, மௌல்வியோ, காஜியோ, யாரானாலும் ஒன்றுதான். எல்லோரையும் இவன் ஏழு தலைமுறை வரை வைது தீர்த்துவிடுவான். நாக்கில் நரம்பில்லாமல் திட்டி நொறுக்குவான். ஒரு காலத்தில் இவன் நெசவுகாரனாக இருந்தான். கைத்தறித் துணி நெய்து சந்தையில் விற்று வந்தான். அப்புறம் மில் துணி ஏராளமாகக் குவிந்துவிடவே கரீம் குடும்பத்தைப் போஷிக்க வகை அற்றவன் ஆகிவிட்டான். கடைசியில் அவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. ஹால்-பராங்க் விஷயமும் இப்படித்தான். அவன் கோக்கந்தைச் சேர்ந்தவன். மகமல் துணி நெய்துவந்தான். இந்தக் கலையில் தேர்ந்தவனாக மதிக்கப்பட்டான். அவனுடைய தொழிற்கூடமும் தறியும் தீக்கிரையாகிவிட்டதும் அவனுக்குப் பைத்தியம்

பிடித்துவிட்டது. மைராம்ஹானோ? பைத்தியங்களில் எல்லாம் புகழ்பெற்றவன் இவன் என்று சொல்லலாம். இவனுடைய உண்மைப் பெயர் மாமத்கரீம். கருமானாய் இருந்தான். கைதேர்ந்த கருமான். இவன் தொட்டதெல்லாம் துலங்கும். எவனுடைய தொழிற்கூடம், கடை அல்லது வீட்டிற்கு இவன் போனானோ, எவன் இவனுக்குத் தன் கையால் உணவு ஊட்டினானோ, அவனுக்கு 'அதிர்ஷ்டம் அடிக்கும் என்று எண்ணப்பட்டது. மைராம்ஹானுக்குத் தங்கள் கைகளால் புலவு ஊட்டக் கணக்கில்லாத பேர் சித்தமாயிருந்தபடியால் இவன் தன் கையால் சாப்பிட்டதே இல்லையாம், ஜனங்கள் சொல்லுவார்கள். தொட்டில்கள், தறிச்சீப்புகள், கதிர்கள் ஆகியவை செய்வதில் தேர்ந்த கம்மியர்கள் இவனுக்கு உணவு ஊட்டுவதைப் பாக்கியமாக மதித்தார்கள்... மொத்தத்தில் அவன் எல்லாருக்கும் இனியவனாய் இருந்தான். கம்பியில் கோத்த உலோக உடைசல்களைச் சுமந்தவாறு, வேடிக்கை பேசிக்கொண்டும் கண்ணைப் பறிக்கும் புன்னகையால் ஒளி வீசிக்கொண்டும் தெருக்களிலும் கடை வீதிகளிலும் திரிவான். இயந்திரத் தொழிற்சாலைகள் உலோக சாமான்கள் தயாரிக்கத் தொடங்கியதும் இவனுடைய தொழிலுக்கும் இவனுக்கும் அழிவு வந்துவிட்டது. நாளடைவில் யாருக்கும் தேவையற்றவன் ஆகிவிட்டான். வறுமையும் ஏக்கமும் காரணமாக இவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது.

மௌல்வியின் மனைவி என்ற பட்டப்பெயர் கொண்ட கிறுக்கி, பழுப்பேறிய, வடிவமைந்த மேனியும் மெல்லிய கரும் புருவங்களும் உள்ளவள். வயது சுமார் நாற்பத்தைந்து இருக்கும். ஒரு காலத்தில் அவள் மிட்டீஹான்-துராம் என்ற மௌல்வியின் மனைவியாக இருந்தது உண்மையே. அவன் கலந்தர்ஹான் வமிசத்தவன்.. ஒருமுறை கணவன் தங்கையுடன் சரசமாடுவதை இவள் கண்டுவிட்டாளாம். இதனாலேயே இவளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாம்.

அவாஸ் என்ற ஒருவன் மட்டுமே உண்மையில் கிறுக்கன் அல்ல, வேலை செய்ய விருப்பம் இல்லாமையால் பைத்தியம் போல நடித்தான்.

ஆக்கங்கெட்ட இந்த எல்லாருடையவும் கதைகளை நாங்கள் அறிந்திருந்தோம். பெரியவர்கள் எங்கள் முன்னிலையில் எத்தனை எத்தனையோ தடவைகள் இந்தக் கதைகளைத் திரும்பத் திரும்பப்



பேசியிருந்தார்கள். ஆனாலும் இரக்கம் காட்டச் சிறுவர்களுக்கு நேரம் கிடையாது. அதைப் பற்றி நாங்கள் நினைக்கவே இல்லை. கண்காட்சிகள் எங்களுக்கு அபூர்வமாகவே காணக் கிடைத்தன. ஆகவே முடிந்தவரை நாங்களே கற்பனை செய்து கொண்டோம். பைத்தியங்களை வைத்துக்கொண்டு நேர்த்தியான நிகழ்ச்சிகள் ஜோடனை செய்ய முடிந்தது. சில வேளைகளில் அவர்களைப் பாடவோ ஆடவோ சொல்லுவோம். ஆனால் பெரும்பாலும் இரக்கமின்றிக் கோரணி செய்து நகையாடுவோம், அவர்கள்மேல் கற்களை எறிவோம். அவர்களுக்கு வெறி பிடிக்கும்போதோ, எங்களுக்கு ஒரே கொம்மாளம். அவர்கள் எங்களை விரட்டிக் கொண்டு வருவார்கள். நாங்கள் விலகித் தப்ப முயல்வோம். ஆனால் சில வேளைகளில் வசமாக மாட்டிக்கொள்வோம். அவர்களிடம் அடி வாங்குவோம்... சுருங்கச் சொன்னால், இன்பக் கிளுகிளுப்பும் காட்டமான உணர்ச்சிகளுக்கும் பஞ்சம் இல்லை. சிரிக்கவும் நிறைய வாய்த்தது. அதிலும் இரண்டு மூன்று பைத்தியங்கள் ஒரே சமயம் வெறி கொண்டுவிட்டாலோ, கேட்கவே வேண்டியதில்லை. தாஜீஹான் என்ற கிறுக்கன் ஒரு தரம் மண்வெட்டிக் காம்பை ஆட்டியவாறு, வழிச் செல்பவர்கள் எல்லோரையும் தெருவின் ஒரு சாரி வழியே நடக்கும்படி விரட்டத் தொடங்கினான்.

"டேய், இங்கும் அங்குமாக நடக்காதீர்கள்! ஒழுங்கு வேண்டும், ஒழுங்கு!" என்று கூப்பாடு போட்டான்.

அலீம்-ஜின்னி வரும்வரையில் அவனை ஒருவராலும் ஒன்றும் செய்ய முடியவில்லை.

"டேய், பேயா, இங்கே என்ன குட்டை குழப்புகிறாய்?" என்று அதட்டினான் அலீம்-ஜின்னி.

"இவர்கள் ஒரே சாரியில் ஏன் போகமாட்டோம் என்கிறார்கள்? ஜார் நிக்கொலாயின் ஆட்சியில் ஒழுங்கு இருக்க வேண்டும்! கட்டுப்பாடு!" என்றான் தாஜீஹான்.

"அடே, அடி மடையனடா நீ, தாஜீ, படு முட்டாள். நமது பூமி எப்படிப்பட்டது, தெரியுமா? தராசுத் தட்டுகள் போல! எல்லோரும் ஒரே பக்கம் திரண்டால் என்ன ஆகும்? தாம்பாளம் போல அது ஒரு பக்கம் சாயும், நாம் எல்லாரும் குர்தூம்-தரியாவில் விழுந்து முழுகிப் போவோம்!" என்றான் அலீம்-ஜின்னி.

தாஜீஹான் மலைத்துப் போய், திறந்த வாயுடன் சற்று நின்றான், தலையை ஆட்டினான். பின்பு அப்பால் போய்விட்டான். ஒரு பைத்தியக்கார எண்ணத்தை அதைவிடப் பைத்தியக்காரத் தனமான வேறோர் எண்ணம்தான் சிலாம்பை ஊசி எடுப்பது போல அகற்ற முடியும் என்று தெரிந்தது.

இந்த மாதிரி முடிந்த வகையில் எல்லாம் பகல் பொழுதைப் போக்குவோம். எங்களுக்குத் தெரியாமலே மாலை வந்துவிடும். அஸ்தமனத்துக்கு முந்திய மூன்றாம் தொழுகை முடிந்ததுமே வீடுகளுக்கு ஓடுவோம். கோதுமை மாவுக்கூழோ பறங்கிக்காய், அல்லது சாதத்துடன் உளுத்தங்கஞ்சியோ சேமியாக் கஞ்சியோ - வீட்டில் எது கிடைத்ததோ அதை - சாப்பிட்டுவிட்டு மறுபடி தெருவுக்கு ஓடிவிடுவோம். வானத்தில் கண்ணுக்கு இதமான கோடைகால விண்மீன்கள் தெளித்திருக்கும்...

எங்கள் வட்டாரம் ஒருபுறம் திக்கான்லி-மஜார் ("முள் கல்லறை") வட்டாரத்தையும் மறுபுறம் குர்கான்தாகீ ("அடித்தளத்தில்") வட்டாரத்தையும் ஒட்டினாற்போல் இருந்தது. பிரதான வீதியின் இடப்பக்கம் இருந்த ஆளற்ற அடை சந்துகளில் நாங்கள் குழுமுவோம், மாலை வரை விளையாடுவோம். மாலையில் தான் விளையாட்டு மும்முரமாகும், அதிலும் நிலாக்காலத்தில். கோடையிலும் வசந்தத்திலும் இலையுதிர் காலத்திலும் எங்கள் வீதிகள் புழுதி நிறைந்து மெத்தென்று இருக்கும். அவற்றில் ஓடியாடுவது ஒரே இன்பம். குளிர்காலத்தில்தான் அவற்றில் கண்டபடி சேறும் சகதியும் நிறைந்துவிடும். சிலருக்கு முழங்கால் வரை வரும், நாங்களோ, இடுப்பளவு சேற்றில் புதைந்துவிடுவோம். அப்போது நாங்கள் சதுக்கத்திலோ அல்லது வீட்டு முகப்புக்களிலிருந்து வீதிக்கு வருவதற்கான கூரை வேய்ந்த நடை பாதைகளிலோ விளையாடுவோம். நகராட்சி மன்றத்தால் நாட்டப் பட்ட கம்பங்களில் மங்கிய மண்ணெண்ணெய் விளக்குகள் எரியும். விளக்குக்காரன் மாலை தோறும் ஏணியும் கையுமாக வந்து, எண்ணெய் போட்டு, திரிகளைக் கத்தரித்து, சிம்னியைத் துடைத்து விளக்கேற்றுவான். காலைதோறும் மறுபடி வந்து விளக்குகளை அணைப்பான். இருட்டில் கொஞ்ச தூரம் போக வேண்டியதுதான், இந்த விளக்குகள் பூனைக் கண்கள் போல லேசாக மினுமினுக்கும். அவற்றின் சிவந்த சுவாலைகள் வீதியில் ஒளி பரப்புவதில்லை. குறுகிய நடைபாதை வழியே



செல்பவர்களை, "இந்தா, என் மேல் மோதிக் கொண்டுவிடாதே! நான் இங்கே இருக்கிறேன்" என்று எச்சரிக்க மட்டுமே செய்யும்.

இந்த மாதிரித் தெரு விளக்கின் வெளிச்சத்தில் என்னதான் செய்ய முடியும்? உரையாடுவதுகூட அசௌகரியம். பெரியவர்கள் மாலை நேரக் கடைசித் தொழுகை முடிந்ததுமே அவரவர் வீடுகளுக்குப் போய்விடுவார்கள். வீதிகள் வெறுமை ஆகிவிடும். காக்கைகூடப் பறக்காது. நாங்கள் மட்டுமே எஞ்சி இருப்போம். ஒளிந்து விளையாடுவதற்குச் சரியான நேரம்...

ஆனால் நாங்கள் வேறு பல வித விளையாட்டுக்களும் ஆடுவது உண்டு: "குராஷ்" என்று சொல்லப்படும் குஸ்தி, "பாத்மன் - பாத்மன்" என்ற விளையாட்டு. "பாத்மன் - பாத்மன்" ஆட்டக் காரர்கள் ஒருவருக்கு ஒருவர் முதுகைக் காட்டியவாறு இணை இணையாக நிற்பார்கள், கைகளால் ஒருவருக்கு ஒருவர் இறுகப் பிடித்துக் கொண்டு மாற்றி மாற்றி முதுகில் தூக்கிக் கொள்வார்கள். "வெள்ளைப் பாப்ளார், பச்சைப் பாப்ளார்" என்று ஒரு விளையாட்டு. இதில் சிறுவர்கள் இரண்டு குழுக்களாகப் பிரிவார்கள். ஒவ்வொரு குழுவும் தனக்கு ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும், ஆட்டக்காரர்களில் ஒருவனை மனதுக்குள் தெரிந்தெடுக்கும். யாரை என்று எதிர்க் கட்சி ஊகித்து அறிய வேண்டும். சரியாக ஊகிக்கும் குழுவினர் எதிர்க் குழுவினரின் முதுகுகள் மேல் ஏறிச் சவாரி செய்வார்கள். இன்னும் என்னென்ன? "மிண்டி-மிண்டி" (ஒட்டக விளையாட்டு), திருடன் விளையாட்டு. "என் பட்சியின் தலை" என்ற விளையாட்டு, இப்படி எத்தனையோ.

உள்ளதைச் சொன்னால் இந்த விளையாட்டுக்கள் எல்லாம் ஓரளவு ஒரே மாதிரி இருந்தன. பக்கத்துப் பையன் முதுகில் சவாரி செய்வதில் இவ்வளவு இன்பம் கிடைப்பது ஏன்? "என் பட்சியின் தலை" என்ற விளையாட்டிலும் பையன்கள் இரண்டு கட்சிகளாகப் பிரிந்து ஒவ்வொரு கட்சிக்கும் 'தாய்' எனப்படும் தலைவனைத் தெரிந்தெடுத்துக் கொள்வார்கள். 'தாய்கள்' ஏதேனும் துணியை எடுத்து, சுருட்டி முடிச்சுப்போட்டு ஏதேனும் பறவையின் உருவத்தை அதற்குத் தர முயல்வார்கள். பின்பு அது என்ன பட்சி என்று தங்களுக்குள் பேசி முடிவு செய்வார்கள். அவர்கள் ஒரு முடிவுக்கு வரும் வரை இரண்டு கட்சிகளும்

பொறுமையுடன் காத்திருக்கும். அப்புறம் ஒரு 'தாய்' துணிப் பறவையைக் காட்டிக் கேள்வி கேட்பான்:

"என் பறவையின் தலை இதோ, இப்படி இருக்கும், உடல் இதோ, இப்படி இருக்கும். சொல்லு, அது என்ன பட்சி?"

"பருந்து!" என்று கத்தும் கூட்டம்.

"இல்லை, சரி இல்லை!"

"கோழி!"

"செக்கே, சரி இல்லையே!"

"காஞ்சனப் பறவை"

"தப்பு!"

"கோட்டான்!"

'தாய்கள்' தோல்வியை ஒப்புக்கொள்வார்கள்.

"சரியாய்ச் சொல்லிவிட்டான், சரியாய்ச் சொல்லிவிட்டான்!" என்று கொம்மாளம் கொட்டுவார்கள் பையன்கள்.

எந்தக் கட்சியைச் சேர்ந்தவன் சரியாய்ச் சொன்னானோ, அந்தக் கட்சிப் பையன்கள் எதிர்க்கட்சியினர் முதுகுகள்மேல் ஏறிக் கொண்டு, "ஹை, ஹை, என் கழுதைக் கண்ணே!" என்று ஒன்றாகக் கத்தியபடி குறித்த இடம்வரை சவாரி செய்வார்கள். அங்கே எவனாவது ஒருவன் 'தாயிடம்' கேட்பான்:

"சவாரியா, நடையா?"

"கீழே இருப்பது மேலே" என்று 'தாய்' சொன்னால் கழுதைகளும் சவாரிக்காரர்களும் இடம் மாற்றிக்கொள்வார்கள்...

சவாரி செய்கையில் நாங்கள் பாட்டுக்கள் பாடுவோம். அம்மாதிரிப் பாட்டுக்கள் எங்களிடம் ஜாஸ்தி. உதாரணமாக இதோ ஒரு பாட்டு:

"ஹாம், ஹாம், அதிகாரம் இருந்தால்,
ஜம்மென்று தின்று களித்திடலாம்
ஹான், ஹான், உமர் அலி,
பேக், பேக், மாதாலி



உம் அதிகாரம் எமக்குத் தாரும,
ஜம்மென்று உண்டு மகிழ்ந்திடுவோம்!"

இப்படி விளையாடுவோம், பாடுவோம், கத்துவோம். கடைசியில், எவளாவது கிழவி பொறுமை இழந்து சபிப்பாள்.

"நீங்கள் படக்கென்று போக, சைத்தான் மக்களா!"

...ஆம், இன்னொரு விளையாட்டு உண்டு. "அம்மணப் பந்தயம்" என்று அதற்குப் பெயர். ஆனால் இது மிகவும் சாதாரணமானது. இரண்டு குல்லாக்களை எடுத்துப் பொருத்துக்களுடன் சேர்த்துக் கட்டுவோம். குதிரைக் காதுகள்போல் இருக்கும் அவை. சட்டை நுனியை வால்போன்று பின்னால் முறுக்கிக் கட்டுவோம். பின்பு வெவ்வேறு தூரங்களுக்கு ஓட்டப் பந்தயம் விடுவோம். வழக்கமாக நாங்கள் திக்கான்லி-மஜார், கராத்தாஷ், யலான்காரீ, அல்மாஸரா, திவான்பேகி ஆகியவற்றின் வழியாக ஓடி மறுபடி திக்கான்லி-மஜார் சேர்ந்து விடுவோம். இது சுமார் மூன்று மைல் தொலைவு. முதலாவதாக ஓடி வருபவன் கைத்தட்டல்களுடனும் பாராட்டுரைகளுடனும் வரவேற்கப்படுவான். பல வகையிலும் அவனுக்கு மரியாதை செய்யப்படும். அடுத்த பந்தயம் வரை அவன் எல்லாரையும்விட பலசாலியாக மதிக்கப்படுவான் என்பது முக்கியமானது...

பலசாலிகள் தவிர, பணக்காரர்களும் எங்களிலே உண்டு. ஆனால் எங்களுடைய செல்வமும் தனி வகைப்பட்டது. வர்ணம் பூசப்பட்டு, காரீயத் துண்டு நிறைத்த ஆட்டு எலும்பு - இதற்கு ஆல்ச்சிக் என்று பெயர் - எல்லாவற்றிலும் மதிப்பு உள்ளதாகக் கருதப்பட்டது. நூற்புக் கதிர் செய்யும் கம்மியர்கள் எங்களுக்காகச் செதுக்கித் தரும் எலும்பு மட்டையும் கொட்டைகளும்கூட மதிப்புள்ளவையே. வேறு ஒன்றும் இல்லாவிட்டால் ஏதேனும் பழைய கடிகாரத்தின் மூடியாவது இருக்க வேண்டும்... கோடை காலப் பகல் நேரத்தில் வெக்கை மிகுதியாக இருக்கும், கடை வீதிகளிலோ பிறத்தியார் தெருக்களிலோ ஓடித் திரிய முடியாது. குளிர் காலத்திலோ சேறும் சகதியுமாக இருக்கும். அம்மாதிரி நேரங்களில் எங்கள் சொத்துக்கள் பயன்படும். ஆல்ச்சிக்குகளையும் கொட்டைகளையும் பந்தையும் கிட்டிப்புள்ளையும் வைத்துக் கொண்டு எத்தனையோ விதமான விளையாட்டுக்கள் ஆடுவோம். "யோர் - யோர்" எனப்படும் முற்றுகைப் போர் விளையாட்டு,

அம்பு எய்யும் விளையாட்டு, குதிரைத் திருடன் விளையாட்டு முதலியவை வேறு.

ரம்ஜான் விரத மாதத்திலோ இவற்றோடுகூட இன்னும் பல வகையான பொழுதுபோக்குகள் சேர்ந்து கொள்ளும். மாலையில் நாங்கள் வீடு வீடாகப் போய் "ரம்ஜான்" பாடுவோம். அஸ்தமனத்துக்குப் பிறகு "நமாஸ்ஷமா" எனப்படும் நான்காவது தொழுகை நேரம் வந்ததும் நாங்கள் ஒவ்வொரு மசூதியாகச் சுற்றி வந்து முல்லாக்கள் அசைந்தாடியவாறு ராகத்துடன் குரான் ஓதுவதைக் கேட்போம். நள்ளிரவில் விரதம் முடிந்து எல்லோரும் பொதுவில் உணவு அருந்தும் வேளை வரை இப்படிப் பொழுதைக் கடத்துவோம்.

இதெல்லாம் இருந்தாலும் எங்களுக்கு ஓழிவு நேரம் வேண்டிய அளவு இருந்தது. பள்ளிக்கூடத்தில் நாங்கள் சொற்ப நேரமே கழித்தோம். வேலையோ... எங்களுக்கு என்ன வேலை இருக்க முடியும்? சில வேளைகளில் எங்கள் பெற்றோருக்கே வேலை கிடைப்பது குதிரைக்கொம்பாகிவிடும். இந்த அழகில் சின்னப் பையன்களை வேலைக்கு அமர்த்துவது எங்கே? எங்களது போன்ற வட்டாரங்களில் வசித்தவர்கள் வழக்கமாகச் சிறு கைத் தொழிலாளர்கள் குடமுழவுகளுக்கும் தம்பட்டங்களுக்கும் தோல் பதனிட்டு இறுக்குவது, கைத்துவாலைகளும் கயிறுகளும் செய்வது முதலிய வேலைகளில் தேர்ந்த தோல் தொழிலாளர்கள், உலோக இறுக்கிகளின் உதவியால் பீங்கான், கண்ணாடிப் பாத்திரங்களைச் செப்பனிடுபவர்கள், நீர் சுமப்பவர்கள், சுமைகாரர்கள், குதிரைக் காரர்கள், காவலாட்கள், உடம்பைத் தேய்த்துப் பிடித்து விடுபவர்கள், சுற்றுப்புற மசூதிகளின் சில்லறைப் பணியாட்கள் முதலியோர் இவர்கள். ஆனால் எங்கள் வட்டாரத்தில் பெரும்பாலாக வசித்தவர்கள் அச்சுக்கூடங்களிலும் மிட்டாய்த் தொழிற்சாலைகளிலும் வேலை பார்த்தவர்கள். இருந்தாலும் எங்கள் வட்டாரத்தில் எத்தனை எத்தனையோ வகைத் தொழிலாளர்கள் இருந்தார்கள். அவர்கள் எல்லோரும் என் தோழர்களின் பெற்றோர். அவர்களை எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது.

என் தோழன் அமன் என்பவனின் தகப்பனார் துர்ஸுன் பாய் - அகா பேனாக் கத்திகள் தயாரித்தார். அவர் மனைவி அமனின் சிறு வயதிலேயே இறந்துவிட்டாள். அவர் மறுமணம்



செய்து கொள்ளவில்லை. எனவே அமன் ஒரே மகனாக வளர்ந்தான். ஆபித் என்ற பெயருள்ள இரண்டு பையன்கள் எங்களிடையே இருந்தார்கள். ஒருவனை "நாய்க்குட்டி ஆபித்" என்றும் மற்றவனைச் "சீலைப்பேன் ஆபித்" என்றும் பட்டப் பெயர்களால் அழைத்தோம் நாங்கள். "நாய்க்குட்டி ஆபி"தின் தகப்பனார் ஜாஹித் - அகா பழைய சாமான்கள் வாங்கி விற்பவர். "சீலைப்பேன் ஆபி"தின் தகப்பனார் ரஸூல்காஜி - அகா வாள் உறைகள் செய்பவர். ஹுஸ்னிபீயின் தகப்பனார் அமன்பீ தோல் சாமான்கள் தயாரிப்பவர். அவர் குதிரைக் கழுத்துப்பட்டைகளும் நுகங்களும் செய்பவர்.

ஸலீஹ் என்பவரின் தகப்பனார் யூனுஸ் - அகா, பாடகர். துராபாயின் தந்தை ஜியாமத் - அகா பருத்தி வியாபாரி. அப்துல்லாவின் தகப்பனார் அஜீஸ்-அகா மண்ணெண்ணெய் வியாபாரி. ஒரு பெரிய பீப்பாயை வண்டியில் ஏற்றிக் கொண்டு தெருத்தெருவாகப் போய் மண்ணெண்ணெய் விற்றார். வண்டி, குதிரை, பீப்பாய், மண்ணெண்ணெய் - எதுவுமே அவருக்குச் சொந்தம் அல்ல என்று சொல்லவே தேவையில்லை. அவர் நொபேல் கம்பெனியின் வேலையாள், அவ்வளவுதான்.

புலாத்ஹோஜாவின் தகப்பனார் விற்பனை ஏஜெண்டு. நாட்டு எல்லையின் இரு புறங்களிலும் உள்ள வெவ்வேறு நகரங்களுக்கு அவர் பயணம் செய்வார். சில வேளைகளில் நீண்ட காலம் கண்ணிலேயே பட மாட்டார். புலாத்ஹோஜா தாயின் வயிற்றில் ஆறு மாதக் கருவாக இருந்தபோது கருப்பையோடு இணைந்து அங்கேயே தங்கிவிட்டானாம் - காஷ்காரில் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருந்த தகப்பனார் வரும்வரை. அவர் ஐந்து, ஆறு ஆண்டுகளுக்குப் பின் திரும்பி வந்தாராம். தகப்பனார் திரும்பி மூன்று மாதங்கள் கழிந்ததும் புலாத்ஹோஜா பிறந்தானாம், ஜனங்கள் பேசிக்கொண்டார்கள்.

நாங்கள் யூல்தாஷ் என்பவன் வீட்டில் குழுமுவது வழக்கம். அவன் வீட்டில் பெரியவர்கள் யாரும் கிடையாது. தாயார் வெகு காலத்துக்கு முன்பே இறந்து போனாள். செம்மானாயிருந்த தகப்பனார் பிறகு நோய்ப்பட்டுக் காலமாகிவிட்டார்.

எங்கள் வட்டாரத்தில் செம்மான் வேலை மீர் அஜீஸ் - அகா என்பவரும் செய்துவந்தார். நான்கூட வேலை பழகுவதற்காக

அவரிடம் அனுப்பப்பட்டேன். அவர் குறிப்பிடத்தக்க குடும்பத்தைச் சேர்ந்தவர். அவருடைய தகப்பனார் ஸலீம்பாய்-ஸூபி எங்கள் வட்டாரத்தில் குடியேறியது முதல் கசாப்புக் கிடங்கிலிருந்து எலும்புகளைக் கொண்டுவந்து அவற்றை வேக வைத்துக் கொழுப்பு எடுப்பார். ஆனால் ஒரு காலத்தில் அவர் யாக்கூப்பேக்கிடம் படைவீரராக இருந்தார். காஷ்கார் கிளர்ச்சியின் போது ஒரு சீனப் பெண்ணை வெற்றிச் சின்னமாகக் கவர்ந்து வந்தார். குதிரைச் சேணத்தின்மேல் ஏற்றி அவளை கொண்டுவந்து, இஸ்லாம் மார்க்கத்தை ஏற்கச் செய்து, பிறகு மணந்து கொண்டார். அவளுடைய சீனப் பெயரை பஹ்ரீபூவி என்று மாற்றினார். பஹ்ரீபூவியின் மூன்று புதல்வர்களில் இளையவர் மீர்அஜீஸ் - அகா.

என் அண்டை அயலார் எல்லாரையும் நினைவு வைத்துக் கொண்டிருக்கிறேனா?... அடத் தூ, எல்லாரிலும் முக்கியமானவர் களை அனேகமாக மறக்கத் தெரிந்தேன். ஆனால் காலந்தான் எப்படி மாறுகிறது! அந்தக் காலத்தில் அவர்கள் முதல்வர்களாக, உண்மைப் பணக்காரர்களாக இருந்தார்கள். தொழிற்சாலைச் சொந்தக்காரர் கரீம்-கோரி, மெழுகு வர்த்தகர் யாக்கூப்கவாக், வர்ண வர்த்தகர் அப்துல்லாஹாஜி ஆகியோர் இவர்கள். மசூதியில் எல்லாருக்கும் முன்னே நிற்பார்கள் இவர்கள்! எங்கள் வட்டாரத்தின் பக்கத்தில் இரண்டு மசூதிகள் உண்டு - ஒன்று திக்கான்லி மஜாரிலும் மற்றது குர்கான்தாகியிலும். இவற்றில் எந்த எந்த மசூதிக்கு எந்த எந்தப் பிரமுகர்கள் போனார்கள் என்பதுதான் நினைவில்லை. ஒவ்வொரு மசூதியையும் சேர்ந்த பள்ளிக்கூடம் உண்டு. இமாம்களே ஆசிரியர்கள். திக்கான்லி மஜாரில் ஷம்ஸீதோம்லாவும் குர்கான்தாகியில் ஹஸன்பாயும். நான் குர்கான்தாகியில், ஹஸன்பாயிடம் படித்தேன். அவர் குரானிலிருந்து பொறுக்கிய பகுதிகள் கொண்ட "ஹப்தியாக்" முறைப்படி அல்ல, "உஸ்தாதி - அவ்வல்" என்ற நவீனப் பாடப் புத்தகப்படிச் சொல்லிக்கொடுத்தார். மற்றவர்களைவிட எவ்வளவோ விரைவில் எழுதப் படிக்கக் கற்றுத் தந்துவிட்டார் அவர்...



## அத்தியாயம் 2
## கூட்டுப் புலவு

எனக்கு வினையாக முடிந்த இந்த விவகாரத்தைத் திட்டமிட்டவன் யூல்தாஷ்.

லைலாக் மசூதியின் பிரதான வாயில் முகட்டின் கீழ் ஆல்ச்சிக் வைத்து விளையாடிக் கொண்டிருந்தோம். எனக்கு வெற்றி மேல் வெற்றி கிடைத்துக் கொண்டிருந்தது. என் லேசான மேலங்கியின் பைகளும் கைநுனிகளும் இடுப்புக் குட்டையும் வென்று பெற்ற ஆல்ச்சிக்குகளால் நிறைந்துவிட்டன. வெற்றியால் நான் இன்ப வெறி கொண்டுவிட்டேன். அடுத்தபடி கிடைத்த வெற்றிப் பொருளைச் சட்டை மார்புக்குள் மறைத்துக்கொண்டு, "ஆகா, கோட்டைவிட்டீர்களா! வெற்றி எனக்கே!" என்று மகிழ்ச்சி பொங்கக் கூவினேன்.

என் அதிர்ஷ்டத்துக்கு முடிவையே காணோம். அந்த வேளையில்தான் வந்து சேர்ந்தான் யூல்தாஷ். தன் காலிக்கோ மேலங்கியின் சிக்குப் பிடித்த தலைப்பால் மூக்கைத் துடைத்துக் கொண்டே வந்து விளையாட்டைப் பார்த்தான். பின்பு, ஏதோ விருப்பம் இல்லாதவன்போல, "பையன்களா, எல்லோரும் சேர்ந்து கூட்டாகப் புலவு தயாரிப்போமா?" என்றான்.

எல்லோரும் அக்கணமே அவன் பக்கம் திரும்பினார்கள்.

"தயாரிப்போம், தயாரிப்போம்!" என்று கத்தினார்கள். என் அதிர்ஷ்டம் என் ஒருவனைத் தவிர யாருக்கும் மகிழ்ச்சி ஊட்டவில்லை என்பது தெளிவாயிருந்தது.

யூல்தாஷ் முகத்தைச் சுளித்தான்.

"எங்கே?" என்றான்.

"எங்கே வேண்டுமானாலும்! ரீஸ்க்கி - ஹல்பீயின் பழைய வீட்டு முகப்பில் தயாரிப்போமே!" (ரீஸ்க்கி - ஹல்பீ பள்ளி உதவி ஆசிரியர்)

"சரி" என்று யார் யார் என்ன கொண்டுவர வேண்டும் எனப் பங்கிடலானான் யூல்தாஷ். ஹுஸ்னிபீ சமையல்காரனாகத் தெரிந்தெடுக்கப்பட்டான். பாத்திரம், கரண்டி, உப்பு, மிளகாய், தண்ணீர் ஆகியவை கொண்டு வருவது அவன் பொறுப்பு ஆயிற்று. அரிசியும் காரட்டும் தானே கொண்டுவருவதாக யூல்தாஷ் ஏற்றுக் கொண்டான். இறைச்சி கொண்டுவரும் பொறுப்பு வெகுளி அப்துல்லா மேல் விழுந்தது. கொழுப்பு கொண்டுவருவதாக நான் வாக்களித்தேன். மற்றச் சாமான்கள் - அப்படி அனேகமாக எதுவும் மிச்சம் இல்லை என்றாலும் - கொண்டுவரும் பொறுப்பு தந்திரக்காரன் புலாத்ஹோஜாவிடம் ஒப்படைக்கப்பட்டது.

நாங்கள் கலைந்தோம். ஆட்டத்தில் வென்ற பொருள்களைச் சுமந்து கொண்டு நான் கொழுப்பு எடுத்துவர வீட்டுக்குப் போனேன்.

அம்மா அடுக்களையில் இருந்தாள். தந்தூர் எனப்படும் கோட்டையடுப்பில் பரங்கிக்காய்ப் பணியாரம் சுட்டுக் கொண்டிருந்தாள் அவள். நான் ஆல்ச்சிக்குகளை என் மூலையில் கொட்டினேன். உணவுப் பண்டங்களும் வீட்டுச் சில்லறைச் சாமான்களும் எங்கள் தாழ்வான பழைய வீட்டின் பின்புறம் உக்கிராணத்தில் இருந்தன. அதற்குப் பின் வராந்தா வழியாகப் போக வேண்டும். வராந்தாவில் என் நடுவுள்ள தங்கை இளையவளைச் சீராட்டிக் கொண்டிருந்தாள். நான் ஒரு காரியமும் இல்லாதவன் போன்ற தோற்றத்துடன் அவளைக் கடந்து சென்றாலும் நான் எங்கே போகிறேன் என்று அறிய அவள் ஆசைப்படுவாள், காவல் நாய்போலக் கூச்சல் கிளப்புவாள். எனவே நான் தந்திரமாகக் கையாள நேர்ந்தது.

"ஷபாக், உன் பெரிய பந்து எங்கே?" என்று அவளிடம் கேட்டேன்.

"என் பொம்மைகள் இருக்கும் இடத்தில். ஏன்?"

"அங்கே காணவில்லையே, அதனால் கேட்டேன்."

"அட நீ ஒன்றுமற்றுப் போக. நீதான் எடுத்திருப்பாய். இப்போதே கொடுத்துவிடு!"

நான் வன்மப் புன்னகையுடன் நின்று கொண்டிருந்தேன்.



அவள் தங்கையை ஒருவிதமாகப் படுக்கப் போட்டுவிட்டு, என்னைப் பார்த்துச் சீறி, தன் பொம்மைகள் இருந்த இடத்துக்கு ஓடினாள். நான் உக்கிராணத்துக்குள் பாய்ந்து, பாத்திரத்திலிருந்த கொழுப்புத் துண்டை வெளியே எடுத்துப் பாத்திரத்தை மூடியிருந்த துண்டுக் காகிதத்தில் வைத்துச் சுற்றி இடுப்பில் செருகிக்கொண்டேன். முக்கிய வேலை முடிந்துவிட்டது. விறகு வைத்திருந்த சவுக்கைக்கு அமைதியாகப் போனேன். வெங்காயக் கிடங்கறைக்கு மேலே உட்கார்ந்திருந்தது என் சாம்பல் கோழி. நான் ஓசைப்படாமல் அருகே போய் அதன் ஒரு சிறகைத் தூக்கினேன். கோழி முட்டை இட்டுவிட்டு அடை காத்துக் கொண்டிருந்தது என்பது தெரிந்தது. ஒப்படைத்த பொறுப்புக்கும் அதிகமாகச் செய்து காட்ட அருமையான வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. கோழியை விரட்டினேன். அது கொக்கரித்துக் கொண்டு ஓடிவிட்டது. முட்டையைத் தொப்பிக்குள் வைத்துக் கொண்டு வெளியே அவசரமாகப் புறப்பட்டேன். இப்போது ஓர் அபாயம் மட்டுமே எஞ்சியிருந்தது: அடுக்களை அருகாகப் போக வேண்டியிருந்தது. அம்மா அடுப்படியில் வேலையாய் இருப்பாள் என்ற நம்பிக்கையில், உலாவுபவன் போன்று படலை நோக்கி நடந்தேன். அட பாவமே! வேதனைப்படும் தோற்றமும் கண்ணீர் மல்கும் விழிகளுமாக, புகையை அகற்றக் கையை வீசி ஆட்டியபடி கதவருகே நின்று கொண்டிருந்தாள் அம்மா.

"அட நீ பிஞ்சிலேயே வெம்பிப் போக! மறுபடி வெளியே சவாரியா?" என்று கத்தினாள்.

நான் பணிவுடன் நின்று புயல் அடங்குவதற்குக் காத்திருந்தேன்.

"ஓடுவதே குறியாய் இருக்கிறாயே, உருப்படாக் கட்டை! வா இங்கே, அடுப்பை ஊதி எரியவிடு சற்றே. கண்ணே குருடாகி விடும்போலப் புகைகிறது!" என்று இரைந்தாள் அம்மா.

வேறு வழியில்லாமல் நான் அடுப்பருகே போய் ஊதி எரிய விடுவதில் முனைந்தேன். புகை கண்களைக் காந்திற்று. குல்லாய்க்கு அடியில் முட்டை இங்குமங்கும் உருண்டது. தருணம் பார்த்து உருண்டு வெளியே வரவோ, குஞ்சு பொரிக்கவோ அது முயல்வது போல இருந்தது. அடுக்களையில் தகிக்கும் வெக்கை. கடைசியில் அடுப்பு தழல் வீசி எரிந்தது. அதற்குள் என் வயிற்றிலும் ஒரு காலிலும் ஏதோ கசிவதை உணர்ந்தேன். வெப்பத்தில் உருகிய

கொழுப்பு அது! கொழுப்புத் தாரை அடர்த்தியாகி வயலுக்குப் பாயும் மடை நீர்போலக் குபுகுபுவென்று பெருகலாயிற்று. எனக்கு எரிச்சல் மண்டியது, அச்சமும் உண்டாயிற்று. காற்சட்டை நனைந்துவிட்டது. உருகிய கொழுப்பு தரையிலும் சொட்டத் தொடங்கியது. இதை எல்லாம் அம்மா கவனிக்கிறாளா என்று பார்ப்பதற்காகத் திரும்ப நினைத்தேன். அதற்குள் என் தலையில் விழுந்தது பேரிடி.

"நீ சின்ன வயசிலேயே படக்கென்று போய்விட! ஓகோகோ என்று தடி மரமாய் வளர்ந்திருக்கிறாய். கலியாணம் ஆகியிருந்தால் இதற்குள் நாலு குழந்தைகளுக்குத் தகப்பனாயிருப்பாய். துணியை நனைத்துக் கொண்டிருக்கிறாயே, அதிலும் பாத்திமாவுடையவும் ஸுஹ்ரியுடையவும் பொருள்கள் அடக்கம் செய்யப்பட்டிருக்கும் இந்தப் புனிதத் தலத்தில்! அட நீ ஒன்றுமற்றுப் போக!" என்று மரக் குழவியை ஆட்டிக் கொண்டு கூப்பாடு போட்டாள் அம்மா.

சட்டென்று அவள் கூச்சலை நிறுத்திவிட்டு என்னை நிலைக்குத்திட்டு நோக்கினாள். என் தொப்பிக்கு அடியில் இருந்த முட்டை உடைந்து மஞ்சட்கருவும் வெண்கருவும் ஒன்று கலந்து என் பொருத்து வழியாக வலது கன்னத்தில் வழிந்தன. குழவியால் என்னை அடித்தபோது நறுக்கென்ற நொறுங்கொலி அம்மா காதில் பட்டிருந்தது. தான் என் மண்டையைப் பிளந்து விட்டதாகவும் என் மூளைதான் இப்படிக் கசிகிறது என்றும் இப்போது அவள் எண்ணிவிட்டாள். மேலும் கீழும் பார்த்துக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. நான் அவள் அருகாக நழுவி வெளியேறி முகப்பை நோக்கிப் பாய்ந்தேன். அம்மா ஏதோ கத்தினாள். தங்கையின் வன்மக் கீச்சொலியும் அவள் கூச்சலுடன் சேர்ந்து கொண்டது. ஆனால் நான் அவற்றைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. நொடிப்போதில் நான் தெருவில் வெகு தொலைவில் இருந்தேன்.

மூன்றாவது மூலை திரும்பியதும் நான் நின்று என் நிலைமையைச் சீர்தூக்கிப் பார்த்தேன். எவ்வளவு மோசமாய் இருக்க முடியுமோ அவ்வளவு மோசம் ஆகியிருந்தது அது. பையன்களிடம் போவதற்கு என்னிடம் எதுவும் இல்லை. வீடு திரும்பவும் என்னால் முடியாது. கொழுப்பில் மூன்றில் ஒரு பகுதிக்கு மேல் காணவில்லை என்பதை அம்மா இதோ தெரிந்து



கொள்வாள், அப்புறம் என் பாடு ஆபத்துதான். நான் எங்கே போவது? புகலின்மையும் ஏக்கமும் என்னை ஆட்கொண்டன. இந்த உலகத்தில் எனக்கு ஒதுங்கிடமே கிடையாது!

அருகிலிருந்த சுற்றுச் சுவற்றை விரலால் நோண்டியபடி நின்றேன். சுவற்றின் மறுபுறம், வீட்டில் வழக்கமான வாழ்க்கை நடந்து கொண்டிருந்தது. அமைதியான குரல்கள் கேட்டன. "ஐயோ, அத்தை!" என்று எவளோ பெண் கத்தினாள்.

இதைக் கேட்டதும் எனக்குச் சட்டென ஓர் எண்ணம் உதித்தது. ஸாக்பானில் என் அத்தை இருக்கிறாளே! உடனே இந்த விஷயம் ஏன் என் மனதில் படவில்லை?

உண்மையாகவே ஸாக்பான் வீதியில் தன் கணவருடன் வசித்து வந்தாள் என் அத்தை. அத்திம்பேர் மெய்மயிர்த்தோல் வினைஞர். நான் அவர்கள் வீட்டுக்கு எப்போதாவதுதான் போவேன். ஆனால் அவர்கள் என்மேல் உயிராய் இருந்தார்கள். அவர்களுக்குக் குழந்தைகள் கிடையாது. வீட்டில் எப்போதும் நிசப்தமும் ஒழுங்கும் நிலவும். எல்லாம் கச்சிதமாக, துப்புரவாக இருக்கும். அக்கம்பக்கத்துப் பையன்களைக்கூட அங்கே எனக்குத் தெரியாது. எனவே ஒரே அலுப்பாய் இருக்கும். ஆனால் அவர்கள் வீடு இருக்கிறதே, காட்சிச் சாலைதான்! அங்கே இல்லாத பொருளே கிடையாது. உலகில் உள்ள வஸ்துக்களை எல்லாம் அங்கே காணலாம்!

வலிய இரும்பு உகிர்கள் கொண்ட மூன்று வேட்டைப் பறவைகள்: காடை வேட்டைப் பருந்து, கவுதாரிவேட்டைப் பருந்து, குறும்பருந்து. சண்டைச் சேவல், வான்கோழி, சாதாரணச் சேவல், ஆனால் அதன்மேல் ஏறிச் சவாரி செய்யலாம்போல அவ்வளவு பெரியது, பருத்தது. அதன் முதுகு ஊதாச்சாயல் கொண்ட பசிய நிறம். விலாக்கள் கறுப்பு. கொண்டை தீ நாக்கு போலச் சிவந்தது. வில்லோ மிலாறுகளால் வனைந்த கூண்டில் வசித்தது கேக்ளிக் என்ற பட்சி. பரங்கித் தோடு அடியில் வைத்த வலையில் காடை வாழ்ந்தது. பாடும் பறவைகளில் வானம்பாடி, தேன் சிட்டு, மைனா ஆகியவை இருந்தன.

வீட்டில் மூன்று நாய்கள் இருந்தன. ஒன்று ஓநாய் வேட்டை நாய் (இது வெறுமே ஆடம்பரத்துக்காகவே வளர்க்கப்பட்டது. அத்திம்பேர் அதனுடன் வேட்டையாடப் போவதே இல்லை).

இன்னொன்று சிறு வீட்டு நாய். இதற்கு என்னைக் கண்டாலே ஆகாது. மூன்றாவது வீட்டுக் காவல் நாய். இது வாயிலருகே இருந்த பழைய நாய்க்குடிலில் வசித்தது. புஸுபுஸுத்த புஹாராப் பூனை ஒன்றுடன் அவை மூன்றும் அமைதியாக வாழ்ந்து வந்தன. நான் போன தடவை அத்தை வீட்டுக்கு வந்திருந்தபோது பூனை ஐந்து அல்லது ஆறு குட்டிகள் போட்டிருந்தது.

வீட்டு முகப்புத் தோட்டத்தில்தான் எத்தனை வகை வகையான மலர்ச்செடிகள் பூத்துக் குலுங்கின! அரளியும் ரோஜாவும் இரவு ராணியும் இன்னும் விதம்விதமான பூச்செடிகளும். எல்லாவற்றையும் நினைவுபடுத்திக் கொள்ளக்கூட முடியாது... ஒவ்வொரு செடியையும் அத்திம்பேரும் அத்தையும் கண்ணின் மணிபோல் காத்து வந்தார்கள். தங்கள் வளர்ப்புப் பிராணிகளிடம் இருந்து பூந்தோட்டத்தைக் காப்பாற்ற அவர்களுக்கு எப்படி முடிந்தது என்பது எனக்கு விளங்காப் புதிராகவே இருந்தது.

எப்பேர்ப்பட்ட தின்பண்டங்கள் கொடுத்து உபசரித்தார்கள் அவர்கள்!...

வீடிழந்த துன்ப வாழ்க்கைக்குப் பதில் திருப்தி நிறைந்த இந்த வாழ்க்கை வாழலாமே என்று நினைத்தபோது எனக்கு இவை எல்லாம் நினைவு வந்தன. அதை எண்ணுகையிலேயே எனக்கு நாவில் நீர் ஊறிற்று. பக்கத்திலிருந்த ஓடையில் ஒருவிதமாக உடம்பைக் கழுவிக் கொண்டேன். பின்பு ஸாக்பான் வீதிக்குப் புறப்பட்டேன். வழியில் எதிர்ப்பட்ட அக்கறைக்கு உரிய விஷயங்களையும் காட்சிகளையும் கவனித்துப் பார்ப்பதற்காக அடிக்கொரு தரம் நின்றேன். புதிய, நேர்த்தியான வாழ்க்கையைக் கற்பனையில் அனுபவித்து மகிழ்ந்தவாறு சென்றேன்.

அத்தையும் அத்திம்பேரும் நான் எதிர்பார்த்ததுபோலவே மகிழ்ச்சியோடு என்னை வரவேற்றார்கள்.

"அட என் கண்ணே, வா, உள்ளே வா! எப்படி வளர்ந்து விட்டான் பாரேன். என் கண் பட்டுவிடாமல் இருக்க வேண்டுமே. எப்படி வந்தாய், மகனே, உள்ளே வா! அண்ணாவே மறு உயிர் எடுத்து எங்கள் வீட்டுக்கு வந்துவிட்டதுபோல் இருக்கிறது. இன்றைக்கு என் கண் துடித்தது காரணமாகத்தான்" என்று கனிந்தவளாக என்னை உபசரித்தாள் அத்தை.



நான் கூச்சத்துடன் தலையைக் குனிந்து கொண்டு, அவர்களுக்காக மிகவும் ஏங்கிப் போய்விட்டேன் என்றும், சில நாட்கள் அவர்களுடன் இருக்க வந்திருக்கிறேன் என்றும் சொன்னேன். இதைக் கேட்டதும் அத்தைக்கு உச்சி குளிர்ந்து விட்டது. அத்திம்பேருக்கும் அப்படியே.

அவர் என் தலையைத் தடவினார். "சபாஷ்! எங்களை நினைத்துக் கொண்டாயே. அருமை! இன்றைக்கு யூல்-பாஷா (இது ஒரு பெரிய ஈ) அறையில் ஓயாமல் சுற்றிச் சுற்றி பறந்தது. எந்த விருந்தாளி வரப்போகிறார் என்று நினைத்தேன். அந்த விருந்தாளி நீயேதான்! ஈ பறந்தது நல்ல சகுனம் ஆயிற்று. நல்ல சகுனம், சபாஷ், மகனே!" என்றார்.

அன்பு மொழிகளைப் பொழிந்தவாறு அவர்கள் என்னை வீட்டுக்குள் இட்டுச் சென்றார்கள். நான் இதனாலெல்லாம் ஒரேயடியாகச் சொக்கிப்போய், நான் வந்ததற்காகக் கூறிய காரணத்தை நானே நம்பிவிட்டேன்.

எனக்கு சுவர்க்க வாழ்க்கை தொடங்கியது. ஆனால் சுவர்க்கத்தில் வசிப்பது சலிப்பூட்டுவது என்பதை எனக்கு முன்பே எத்தனையோ பெயர் கண்டிருந்தார்கள். நான் இந்த உண்மையை இரண்டாம் நாள் நடுவில் புரிந்து கொண்டேன். அத்திம்பேரின் எல்லா வளர்ப்புப் பிராணிகளிடமும் எனக்கு உள்ள உறவை அதற்குள் தெளிவுபடுத்திவிட்டேன். வீட்டு நாயை இரண்டு தடவை படபடப்பு அடைந்து குரைத்துத் தீர்க்கும்படிச் சீண்டினேன். காவல் நாய்க்கு அஜீரணம் ஏற்படும்படி இரை ஊட்டினேன். பிரமாண்டமான சேவல் மேல் ஏறிப் பூந்தோட்டத்தைச் சுற்றிச் சவாரி செய்ய முயன்றதில் அதன் மிக அழகிய சில இறகுகளை உதிர்த்துவிட்டேன். தாயும் மகளுமான இரண்டு பூனைகளுக்கும் வீட்டில் அவற்றின் உண்மையான இடம் எது என்பதைப் புரிய வைத்தேன். பூக்களை நான் முகர்ந்த ஆர்வத்தில் அவை தம் நறுமணத்தில் பாதிக்கு மேல் இழந்துவிட்டன.

வெளியே போக அனுமதி கேட்டேன். அத்திம்பேர் சில்லறைச் செலவுக்காக எனக்கு மூன்று கோப்பெக்குகள் கொடுத்தார். இது அற்பத் தொகை அல்ல. வண்டிக்கு அடியில் அகப்பட்டுக் கொள்ளாதிருக்க முயலும்படியும், -அப்போது நாள்தோறும்

மும்மூன்று கோப்பெக்குகள் கொடுப்பதாகவும் வாக்களித்தார் அத்திம்பேர். ஆக, புதிய பையன்களை அறிமுகம் செய்து கொள்ளப் புறப்பட்டேன். இந்த வட்டாரம் எங்களதுபோல ஜன நெருக்கம் உள்ளதாக இல்லை. ஆனாலும் பையன்கள் நிறைய இருந்தார்கள். அவர்களும் மொத்தத்தில் எங்களைப் போலவே விளையாடிப் பொழுது போக்கிக் கொண்டிருந்தார்கள். எனவே நான் சிரமமின்றி அவர்களுடைய ஆட்டத்தில் கலந்து கொண்டேன். இரண்டு நாட்கள் நாங்கள் முற்றுகைப் போர் விளையாட்டு ஆடினோம். பின்பு அம்பு எய்தோம், ஆல்ச்சிக்குகள் வைத்து விளையாடினோம். ஆனால் இம்முறை எனக்கு அதிர்ஷ்டம் இல்லை.

மூன்றாம் நாள் காலையிலிருந்தே நாய்களை ஏவிச் சண்டையிடச் செய்யத் தீர்மானித்தோம். இதற்காக இரண்டு தெரு நாய்களைப் பிடித்தோம். அவற்றில் ஒன்று ஒரே பயந்தாங்கொள்ளி. முதலாவது வாய்ப்பு கிடைத்ததுமே அது கம்பி நீட்டிவிட்டது. அத்திம்பேரின் காவல் நாயைக் கொண்டு வந்து பெருமை அடித்துக் கொள்ளலாம் என்று அப்போது நான் முடிவு செய்து, அதை ஒருவரும் அறியாமல் வெளியே இட்டு வந்தேன். ஆரம்பத்தில் என் ஆதரவை உணர்ந்து அது துணிவுடன் பாய்ந்து தாக்கிற்று. ஆனால் சமீபத்தில் அனுபவித்த வயிற்றுக் கோளாறு அதன் பலத்தையும் தன்னம்பிக்கையையும் வெகுவாகக் குலைத்து விட்டது போலும். அது தோல்வியடைந்து கடிபட்ட காலுடன் போர்க் களத்திலிருந்து திரும்பி வந்துவிட்டது. அதன்பின் தன் ஆயுள் முழுவதும் அது நொண்டிற்று என்று நினைக்கிறேன்.

காவல் நாய் மேல் எனக்கு இரக்கமாய் இருந்தது. இப்படி நேரும் என்று நான் எண்ணவே இல்ல. இதை அத்திம்பேருக்குத் தெரியாமல் எப்படி மறைப்பது என்று மண்டையை உடைத்துக் கொண்டேன். ஆனால் இப்போதும் அதிர்ஷ்டம் என் பக்கம் இருந்தது. அத்திம்பேரின் நண்பர்கள் நகருக்கு வெளியே முலாம்பழத் தோட்டத்துக்குப் போய், பழங்களைப் பறித்த உடனேயே தின்பதற்காக அழைத்தார்கள். அதே கையோடு, ஈத் பண்டிகை நாட்களில் தாம் பார்க்க வேண்டியிருந்த உறவுகாரர் களையும் பார்த்துவிட்டு வருவது என்று அத்திம்பேர் தீர்மானித்தார். வேட்டை நாயையும் காடை வேட்டைப் பருந்தையும் உடன் இட்டுச் சென்றார். பறவைகள் பிடிப்பதற்கான



நீண்ட பிடி வைத்த வலையையும் எடுத்துக் கொண்டார். பாவம்! காவல் நாய் தன் குடிலுக்குள் முடங்கிக் கிடந்தது. நானும் அதை முதுகால் மறைத்துக் கொண்டு நின்றேன். எனவே அதன் காயத்தை அத்திம்பேர் கவனிக்கவில்லை. புறப்படுவதற்கு முன் அவர் மூன்று புஹாராத் தன்காக்களை (வெள்ளி நாணயங்களை) என்னிடம் கொடுத்தார்.

“பட்சிகளுக்குத் தீனி ஊட்டு. அவற்றைப் பட்டினி கிடக்க விடாதே. நான் வரத் தாமதமானால் வேண்டிய தீனி வாங்கு. இந்தா” என்றார்.

எனக்குப் பெருமை பிடிபடவில்லை. நான் உண்மையாகவே பெரியவனாக ஆகிவிட்டேன். சீக்கிரம் எனக்குப் பதினான்கு வயது ஆகிவிடும். முக்கியமான பொறுப்பு என்னிடம் ஒப்படைக்கப்படுகிறது. அதிலும் எவையோ அற்பப் பட்சிகள் அல்ல, பருந்தும் குறும்பருந்தும் போன்ற வலிய வேட்டைப் பறவைகள். நான் பறவைக் கூடத்துக்குப் போனேன். பருந்தும் குறும்பருந்தும் வெவ்வேறு மூலைகளில் அமர்கொம்புகளில் தலைகளை உள் இழுத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தன. அவற்றுக்கு அத்திம்பேர் என்ன இரை கொடுத்தார் என்பது எனக்குத் தெரியும். ஆனால் என் மூளையில் ஓர் எண்ணம் உதித்தது. அவற்றின் எச்சம் ஒரே வெள்ளை நிறம். பால்போல வெண்மையானது. ஒருவேளை இவற்றுக்குப் பால் பண்டங்கள் உண்ணக் கொடுக்க வேண்டுமோ? வெறும் பால் உதவாது, மிகவும் நீர்த்தது அது. ஆனால் புளித்த பால்? அதாவது தயிர்? ஒருவேளை, இவற்றுக்கு ஏற்ற உணவு அதுதானோ? ஊட்டிப் பார்க்க வேண்டும். இதுதான் இவற்றுக்கு ஏற்ற உணவு, சந்தேகமே இல்லை. இதுவரை ஏன்தான் ஒருவரும் இதைப் புரிந்து கொள்ளவில்லையோ?

அத்தைக்குத் தெரியாமல் சமையலறையிலிருந்து தயிர்க் கலயத்தை எடுத்துக் கொண்டு கடை வீதிக்குப் போனேன். இரண்டு கோப்பெக்குகளுக்குக் கலயம் நிறையத் தயிர் கிடைத்தது. வீட்டில் அதை இரண்டு கிண்ணங்களில் ஊற்றி ஒவ்வொரு பறவைக்கும் ஒவ்வொரு கிண்ணத்தை வைத்தேன். அவை தீனியை அசட்டையாகப் பார்த்துவிட்டு உடனே முகத்தைத் திருப்பிக் கொண்டன. வேறு என்ன, உயர் சாதி மலைப் பறவைகள் ஆயிற்றே, எவையோ அற்பப் பட்சிகள் அல்லவே! பசியாய்

இருந்தாலும் ஆட்களுக்கு எதிரே உணவைத் தொட மாட்டா. கோழியாய் இருந்தால் தன் கீழ்மையை உடனே காட்டியிருக்கும். வெட்கமில்லாமல் அக்கணமே இரைமேல் பாய்ந்திருக்கும். இவையோ - அப்படிச் செய்ய மாட்டா.

பறவைக் கூடத்திலிருந்து வெளியே வந்தேன். இரண்டொரு மணி நேரம் பொறுத்து மறுபடி அங்கே போனேன். கர்வம் கொண்ட பறவைகள் அமர் கொம்புகளிலிருந்து இறங்காமல், உணவிலிருந்து முகத்தைத் திருப்பிக் கொண்டு இன்னமும் அப்படியே உட்கார்ந்திருந்தன. எனக்கு லேசாகக் கோபம் வந்தது. உள்ளம் என்னவோ குருவி உள்ளம், மிடுக்குக்கு மட்டும் குறைச்சல் இல்லை! வேட்டைப் பறவைகள்தாம், பிரமாதம்! நான் இவற்றுக்கு முழு மரியாதை காட்டினேன். வெளியார் இல்லாமல் தனிமையில் சாப்பிட விரும்புகின்றன போலும் என்று நினைத்து வெளியேகூடப் போனேனே. இவையோ, உதைக்க வேண்டும்! தொடக்கூட இல்லை! பறவைக்கூட மூலையில் அத்திம்பேரின் பூத்தையல் கையுறைகள் தொங்கின. பறவைகளை அமர்கொம்புகளில் உட்கார வைக்கும்போது அவர் அவற்றை அணிந்து கொள்வார். நான் கையுறைகளை அணிந்து கொண்டேன். குறும்பருந்தை எடுத்து முழங்கால்களுக்கு இடையே அழுத்திக் கொண்டு வெள்ளிக் கரண்டியால் அதற்குத் தயிர் ஊட்டலானேன். குறும்பருந்து வயிறு முட்ட இரை எடுத்தாயிற்று என்று தெரிந்ததும் அதை மறுபடி அமர்கொம்பில் உட்கார்த்திவிட்டு வேட்டைப் பருந்தை எடுத்துக் கொண்டேன். அதுவும் நன்றாகச் சாப்பிட்டது.

"இப்போது எல்லாம் சரி ஆகிவிட்டது. ஒருவன் அசையாமல் ஒரே இடத்தில் உட்கார்ந்திருந்தால் எப்படிக் களைத்துப் போய் விடுவான் தெரியுமா? வயிறாரச் சாப்பிட்டால் போதிய பலம் வரும், அமைதியாக உட்கார்ந்திருக்கலாம். இப்போது இஷ்டம் போல உட்கார்ந்திருங்கள். வயிறு நிறைந்திருக்கிறது, வருத்தம் இல்லை" என்று அவற்றிடம் சொன்னேன், பிறகு வெளியே போனேன்.

இவ்வாறு இன்னும் இரண்டு நாட்கள் அத்தைக்குத் தெரியாமல் பருந்துகளுக்குத் தயிர் ஊட்டினேன். குறும்பருந்து எனக்கு மிகவும் பிடித்துப் போய்விட்டது. அதற்கு அடர்ந்த தயிர் ஆடையை ஊட்டினேன். இப்போது எனக்கு வேலை நிறைய இருந்தபடியால்



நான் அனேகமாக வெளியே போகவே இல்லை. அத்தை என்னைப் பார்த்து உள்ளூற மகிழ்ந்து போனாள். அவள் நல்லியல்புடன் புன்னகை பூப்பதைக் கவனிக்காததுபோல நான் நடித்தேன்.

மூன்றாம் நாள் காலையில் நான் பறவைக் கூடத்துக்குள் போனவன், இரண்டு வேட்டைப் பறவைகளும் அமர் கொம்பிலிருந்து இறங்கி, சிறகுகளைச் சிலுப்பிக் கொண்டு லேசாகப் படபடப்பதைக் கண்டேன்.

"சபாஷ்! அமர்கொம்பிலேயே ஓயாமல் உட்கார்ந்திருக்க முடியுமா என்ன! அலுத்துப் போகுமே" என்றேன்.

காலை உணவாக மறுபடி தயிரையே உட்கொண்டன பறவைகள். மதியத்தில் அவற்றுக்கு இறைச்சிப் பணியாரம் கொடுக்கத் தீர்மானித்தேன். இடைவிடாமல் இறைச்சியற்ற உணவையே சாப்பிட்டு அவை புஷ்டியான உணவுக்கு அலந்து போயிருக்கும். ஆனால் மாலையில் மறுபடி பறவைக் கூடத்துக்குள் போனதும் என் கண்களையே என்னால் நம்ப முடியவில்லை! குறும்பருந்து சிறகுகளைச் சுருட்டிக் கொண்டு கால்களைப் பரத்தியவாறு மல்லாக்க விழுந்து இறந்து கிடந்தது. வேட்டைப் பருந்தும் அதே கிடையில் கிடந்தது. அது இன்னும் மூச்சுவிட்டுக் கொண்டிருந்தது, ஆனால் நெடுநேரம் தாக்குப்பிடிக்காது என்பது தெளிவாய் இருந்தது... எனக்குக் கிலி பிடித்துவிட்டது. அத்திம்பேருக்கு என்ன சமாதானம் சொல்லுவேன்? தன் பறவைகள்மேல் அவருக்கு உயிர் ஆயிற்றே. இவை எதனால்தான் செத்துத் தொலைந்தனவோ? தயிரினாலா? அழகுதான்! எனக்குந்தான் இறைச்சி பிடிக்கும். ஆனாலும் எத்தனை நாட்கள் வெறும் தயிரையே சாப்பிட்டுக் கடத்தியிருக்கிறேன்! அதுவும் அரை வயிற்றுக்கு! இப்படியும் விபத்து நேர வேண்டுமா? அத்திம்பேருக்கு என்னதான் சொல்லுவேன்? அவருக்கு எவ்விதச் சமாதானமும் கூற என்னால் முடியாது என்பதைப் புரிந்து கொண்டேன். இந்த நகரத்தில் என் வாழ்வு முடிந்துவிட்டது. எல்லாம் தொலைந்தது. நேரம் கடந்துவிடுமுன் வெளியேறிவிட வேண்டும். கால் போன திக்கில் நடையைக் கட்டிவிட வேண்டியதுதான். சின்ன வயதில் அம்மா சொன்ன பழங்கதைகளில் வரும் இளைஞர்கள்போல. அந்தக் காலம் ஒருவேளை இவ்வளவு மோசமாக இல்லை போலும். நான் தனியன். ஆக்கங் கெட்டவன் என்ற உணர்வினால் எனக்கு அழுகை வரும்போல்

இருந்தது. ஆனால் அழுவதோ கூடாது, அத்தை கவனித்து விடுவாள்.

பறவைகளின் தீனிக்காக அத்திம்பேர் கொடுத்திருந்த பணத்தில் இரண்டு தன்காக்களும் ஐந்து கோப்பெக்குகளும் மீதம் இருந்தன. அவற்றை இடுப்பில் செருகிக் கொண்டு வாயிலுக்குப் போனேன். கூரை வேய்ந்த நடைபாதையில் புறாக்கள் இருந்த கூண்டு தொங்கிற்று. இந்தப் பட்சிகள் மேல் எனக்கு மிகுந்த பிரியம். சற்று நேரம் அவற்றை வருத்தத்துடன் பார்த்துக் கொண்டிருந்தேன். கொஞ்சம் யோசனை செய்தேன். சட்டென ஒரு முடிவுக்கு வந்து கூண்டைக் கொக்கியிலிருந்து கழற்றித் தலையில் வைத்துக் கொண்டு வெளியேறினேன். வீதி அனேகமாக வெறுமையாய் இருந்தது. வீட்டிலிருந்து விரைவில் அப்பால் போய்விடும் நோக்கத்துடன் வேகமாக நடந்தேன். அத்தை என் மனக்கண்முன் தோன்றினாள். நான் கிளம்பியபோது அவள் பூனைகளுக்காக இறைச்சிப் பொங்கல் தயாரித்துக் கொண்டிருந்தாள். நான் இல்லாததைக் கண்டதும் அவள் என்ன செய்வாள்? கட்டாயம் அழுது புலம்புவாள். இந்த எண்ணங்களை விரட்டுவதற்காக நான் பிட்டத்தில் அடித்துக் கொண்டேன். இடையில் பணமும், காற்சட்டைக்குள் செருகிய அங்கித் தலைப்பும் தன்மேல் புறாக்களின் கூண்டுமாக, கதைகளில் வரும் நாயகன்போல தொலைதூரத்துக்கு நடந்தேன், நடந்தேன்- நகருக்கு வெளியே.

'விம்மியவாறு நான் நடப்பேன்
வெகுதொலை செல்லும் பாதையிலே,
செம்மு துயர்ச் சோலையில் நீ
தேம்பியவாறு இருப்பாய்.

இரு சிறு கரும்புறாக்கள் நாம்,
ஏலாத குஞ்சுகள் போன்றோம்.
பிரிவு நமக்கிடையினிலே
முடிவற்ற பெருவழி போலும்.'

ஐயோ என் ஏக்கமும் தாகம்
எரித்திடும் நண்பகல் வெயிலும்,
நொய்யென வழியில் பறக்கும்
நுண்கொசு எங்ஙனம் சொல்லும்?



வெந்துயர் வெப்பத்தைப் பற்றி
வேதனைப் பாட்டு நான் புனைவேன்.
இந்த வழியில் பறக்கும்
கொசு இதை என்ன அறியும்?

அந்தோ என்னிடம் கேளாதே,
அறிஞரிடம் கேட்டறிவாய்,
அந்தமில் வழியில் நடக்கும்
அகதிகள் நாம் படும் துன்பம்."

## அத்தியாயம் 3
# சந்தை

**நா**ன் கால் போன திக்கில் நடந்தேன். கால்கள் அடிக்கடி இங்கும் அங்கும் போயின. ஆதலால் மண் வீடுகளில் நான் நெடுநேரம் சுற்றி வந்தேன். முடிவில் நகரிலிருந்து நேரே வெளிச் செல்லும் சாலையை அடைந்தேன். அதற்குள் இருட்டலாயிற்று. சாலையின் இரு மருங்கிலும் வளர்ந்திருந்த மரங்களின் நிழல்கள் ஒன்று கலந்தன. பகலில் அவை குளுமை தந்தன. இப்போதோ வெட்ட வெளியைக் காட்டிலும் மரங்களின் அடியில் அதிகப் புழுக்கமாய் இருந்தது. சாலை வெறுமை ஆயிற்று. நேரங்கடந்து எதிரெதிரே வந்த இரண்டு வண்டிகள் வசவு களுடன் ஒன்றையொன்று விலகிச் சென்றன. யாரோ உழவன் நொண்டிக் கொண்டே அருகாகப் போனான். அவன் என்னை முந்திவிட்டான் - வீடு திரும்பும் அவசரம் போலும். நானும் இராத்தங்குவது பற்றி நினைக்க வேளை வந்துவிட்டது. அவ்வப்போது எவையேனும் வீடுகளின் சுற்றுச்சுவர்கள் சாலைவரை நீண்டிருக்கக் காணப்படும். அவற்றுக்குள் விருந்தோம்பல் இன்றிக் குரைக்கும் நாய்கள். வெட்ட வெளியிலேயே இரவைக் கழிக்கத் தீர்மானித்தேன். அங்கே உண்மையில் குளுமையாக இருந்தது. எனக்குச் சாப்பாடோ புறாக்களுக்கு இரையோ எடுத்து வரவில்லை என்பதை இப்போது தான் நினைத்துக் கொண்டேன். காலைவரை பொறுத்திருக்க வேண்டும். அத்தையின் சூடான ரொட்டிகளையும் பாழாய்ப் போகிற பறவைகளுக்கு நான் ஊட்டிய தயிரையும்கூட வருத்தத்துடன் நினைவுகூர்ந்தேன். புறாக்களின் கூண்டை ஒரு புதருக்குள் நுழைத்தேன். பக்கத்திலேயே மேலங்கியை விரித்துப் படுத்தேன். விண்மீன்கள் பதித்த கரு வானம் எனக்கு நேர் மேலே பரந்திருந்தது. முதல் தடவையாக அது எனக்கு அவ்வளவு பெரிதாகத் தென்பட்டது. விண்மீன்களோ, எண்ணத் தொலையாதபடி அத்தனை நிறைய இருந்தன. அவற்றை எண்ண முயன்றவாறே உறங்கிப்போனேன்.



சூரியன் என்னை எழுப்பிற்று. அது அப்போதுதான் தொடுவானிலிருந்து கிளம்பி நேரே என் கண்களில் ஒளியைப் பாய்ச்சியது. படுக்கை கரடுமுரடாய் இருந்தபடியால் உடம்பு லேசாக வலித்தது. ஆனால் மூளை தெளிவாக, சுறுசுறுப்பாக இருந்தது. கசங்கிய மேலங்கியைப் போட்டுக்கொண்டு புறாக் கூண்டை எடுத்துக் கொண்டு மேலே வழி நடக்கலானேன்.

எவ்வளவு நேரம் இப்படி நடந்தேனோ தெரியாது, சாலைக்கு இடப்புறமும் வலப்புறமும் குடியிருப்பு வீடுகள் தென்படலாயின. அச்சாபாத் என்பது அந்தச் சிற்றூரின் பெயர் என அப்புறம் தெரிந்துகொண்டேன். நான் நின்று நிதானிப்பதற்குள் பல்வேறு வயதினரான அழுக்கடைந்த பையன்களின் கும்பல் ஒன்று எதிரே வரக் கண்டேன். அவர்கள் என்னைச் சூழ்ந்து கொண்டு ஏற இறங்க நோட்டமிட்டபடி என்னைப் பற்றிக் கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளத் தொடங்கினார்கள். இந்தக் கருத்துக்கள் நட்புறவில் வெவ்வேறு தரமானவை. எனது மேலங்கியைப் பற்றிய பாராட்டுரையிலிருந்து தொடங்கி, அழையா இடத்துக்கு நான் போகாமல் இருக்கும் பொருட்டு என்னை அடித்து நொறுக்க வேண்டும் என்னும் யோசனையில் முடிந்தன அவை. அவர்கள் ஓர் இருபது பெயர். சிலர் என்னைப்போல ஒன்றரை மடங்கு உயரம். மற்றவர்கள் என் இடுப்புவரை வந்தார்கள் – இந்த மாதிரி நான்கு பெயரை ஒரே அறையில் வீழ்த்தி விடலாம். இப்போதோ இதைப் பற்றி எண்ணவே முடியாதிருந்தது.

எதிர்பாராவிதமாக அவர்களிடமிருந்து வந்தது வியாபார யோசனை.

"புறாக்களை விலைக்குக் கொடு" என்று கட்டைக் குரலில் சொன்னான் எல்லாரிலும் உயரமான பையன். அவன்தான் அவர்களுடைய தலைவன் போலும். அவன் போட்டிருந்த செம்பழுப்புக் குல்லாய் கிட்டத்தட்ட நடுவரை கிழிந்திருந்தது. எனவே அவன் தலை தூரப்பார்வைக்கு வெடித்த முலாம்பழம் போல் இருந்தது.

"முடியாது. இவை விற்பதற்காக இல்லை" என்று கூடியவரை கண்டிப்பாகச் சொன்னேன்.

"ஆ, அப்படியா, விற்பதற்காக இல்லையோ?" என்று அடித் தொண்டையில் முழங்கினான் செம்பழுப்புக் குல்லாய். என்னைப்

பதம் பார்ப்பதற்கு இப்போது வேளை வந்துவிட்டது என்பது போல் வைரத்துடன் ஒலித்தது அவன் குரல். கும்பல் இன்னும் நெருக்கமாக என்னைச் சூழ்ந்தது. செம்பழுப்புக் குல்லாய் சற்று யோசித்துவிட்டு, "அப்படியானால் மாற்றாகக் கொடு!" என்றான்.

"எதற்கு?" என்று கேட்டேன். என் உயிரைக் கூடியவரை உயர்ந்த விலைக்கே கொடுப்பது என்று தீர்மானித்துவிட்டேன்.

உடனே அவர்கள் உரக்கச் சலசலக்கத் தொடங்கி அவரவர் கைகளில் இருந்தவற்றை என் முன்னே நீட்டினார்கள். விலை மதிப்புள்ள பொருள் எதுவும் என் கண்ணில் படவில்லை. என்றாலும் புறாக்களிடமிருந்தோ நான் எப்படியும் பிரிய வேண்டியிருந்தது (அவர்கள் அவற்றை என்னிடமிருந்து வெறுமே பிடுங்கிக் கொள்வார்கள் என்று உறுதியாக எண்ணினேன்), ஆகவே ஒன்றுமில்லாததைவிட இவை மேலாக இருந்தன. நிமிட நேரத்திற்கெல்லாம் அவர்கள் புறாக்களுடன் போய்விட்டார்கள். நானோ கைகள் நிறையப் பொருட் குவியலுடன் நின்றேன். கிராதி விளிம்புகள் மூன்று, மரக் கிலுகிலுப்பை ஒன்று, விளையாட்டுத் தொட்டில்கள் இரண்டு, ஓட்டை விழுந்த தம்பட்டம் ஒன்று - இதன் தோலும் விளிம்பும் எதனாலோ செந்நிறம் பூசப்பட்டிருந்தன - மர மண்வெட்டி, சவைப்பதற்கேற்ற கந்தகம் இரண்டு துண்டுகள் முதலியவை அவற்றில் இருந்தன. இந்தப் பண்டமாற்றில் ஏமாந்தவன் நானோ, அவர்களோ, ஆண்டவனுக்கே வெளிச்சம். ஆனால் இப்போது என் சுமை அநேக மடங்கு கனமாகிவிட்டது என்பது மட்டுமே உண்மை. எல்லாவற்றையும் எப்படியோ ஒரு மூட்டையாகக் கட்டி முதுகின் மேல் போட்டுக் கொண்டு நான் மேலே நடந்து, வேறு எந்த நிகழ்ச்சிகளும் இன்றி அவ்வூரைக் கடந்து சென்றேன்.

ஊர்ப்புறத்தை ஒட்டியிருந்த மரங்கள் வெகு நேரத்துக்கு முன்பே பின்தங்கிவிட்டன. நாற்புறமும் விரிந்து பரந்திருந்தது நடு நடுவே திட்டுக்கள் கொண்ட வெளி. முட்புதர்கள் அதில் அடர்ந்திருந்தன. இங்கும் அங்கும் உவர் மண் மேடுகள் தென்பட்டன. என் கால்கள் புழுதியில் புதைந்தன. மேலேயோ, மதிய வெயில் பொசுக்கிற்று. பசியும் தாகமும் என்னை வாட்டி வதைத்தன. எது அதிகம் என்று எனக்கே தெரியவில்லை. தூரத்தில் தனி மரம் ஒன்று தென்பட்டது. நிழலைச் சீக்கிரம் அடைவதற்காக நான் முடிந்தவரை நடையை விரைவு படுத்தினேன். மரத்தின் அருகே நான் நெருங்கிவிட்டபோது எதிர்ப்புறத்திலிருந்து அதே மரத்தை நோக்கி மண்வெட்டியும் தோளுமாக ஓர் உருவம் வரக் கண்டேன். அந்த உருவத்தில் ஏதோ எனக்கு அறிமுகமானதாகத் தோன்றியது. நாங்கள் இன்னும் கிட்டத்தில் வந்ததும் - என்ன ஆச்சரியம்! - அது என் நண்பன் அமன்பாய் என அடையாளம் தெரிந்து கொண்டேன். எங்கள் வட்டாரத்தைச் சேர்ந்த அதே அமன்பாய். இவனுடைய தகப்பனார் துர்ஸுன்-பிச்சாக்சி தாமே தயாரித்த கத்திகளை விற்று வந்தார்.நாங்கள் இருவரும் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தோம். வெக்கையையும் அலுப்பையும் மறந்து ஒருவரை ஒருவர் எதிர் கொண்டு ஓடினோம். அந்தப் பழைய ஜித் மரத்தின் அடியில் சந்தித்தோம்.

இரண்டு வாரங்களுக்கு முன்பு அமன்பாயை அவன் தகப்பனார் கிராமத்திலுள்ள உறவினர்களிடம் அனுப்பியிருந்தார் - அவனை நாட்கூலிவேலையில் அமர்த்தும்படி. இப்போது நாட்கூலி வேலை முடிந்துவிட்டது. அமன்பாய், சுமார் நான்கு மணங்கு எடையுள்ள மண்வெட்டியைத் தோளில் சுமந்தவாறு கால்நடையாக வீடு திரும்பிக் கொண்டிருந்தான். நான் வீட்டை விட்டு ஓடிய சங்கதி எதுவும் அவனுக்குத் தெரியாது. கிராதி விளிம்புகளைக் கண்டதும், நானும் வராட்டி தட்டிக் கூலி வேலை செய்ய அனுப்பப் பட்டிருப்பதாக நினைத்துவிட்டான். இருவரும் மரத்தடியில் உட்கார்ந்தோம். நான் என் துன்பக் கதையை அவனுக்குக் கூறினேன்.

செய்திகள் பரிமாறிக்கொண்டபின், பட்டினியாய் இருப்பதை இருவரும் நினைவுபடுத்திக் கொண்டோம். சொல்லி வைத்தாற் போல ஒரே சமயத்தில் அண்ணாந்து பார்த்தோம். ஆனால் அந்தோ, மரத்தில் பழங்களே இல்லை.

"இது இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை காய்க்கும் வகை போலிருக்கிறது. அடுத்த வருஷம் மறக்காமல் இங்கே வர வேண்டும்" என்று நஞ்சு தோய்ந்த குரலில் சொன்னேன்.

"நல்ல முட்டாள் அடா நீ! இது ஸரத்தான் என்ற நாலாவது மாதம் ஆயிற்றே, மறந்துவிட்டாயா? இந்த மாதத்தில் பழங்கள் மெக்காவுக்கு போய்விடும், அங்கே அவற்றின் கொட்டைகள்

மேல் 'அலீப்' என்ற முதல் எழுத்து பொறிக்கப்பட்டிருக்கும்! விரைவில் அவை திரும்பிவரும்" என்றான் அமன்.

அவன் சொன்னது உண்மைதான். நான் தவறு செய்து விட்டேன். ஆனால் எங்களிடம் தின்பதற்கு எதுவும் இல்லை. என்னிடமோ அமனிடமோ உணவு பண்டம் ஒரு பொருக்குகூட இல்லை.

"கோக்-தெராக் இங்கிருந்து அப்படி ஒன்றும் ரொம்ப தூரம் இல்லை. அது பெரிய நகரம்... சந்தையும் அங்கே மிகப் பெரியது!" என்று தயக்கத்துடன் சொன்னான் அமன்.

"போவோமா?"

"நான்தான் வீட்டுக்குப் போகிறேனே..."

"போவோம்! என்னிடம் பணம் இருக்கிறது. தவிர எத்தனை சாமான்கள் பார்! விற்போம்!" என்றேன்.

"என்னிடமுந்தான் பணம் இருக்கிறது. நான்தான் வேலை செய்து சம்பாதித்தேனே."

"அதுதானே! போவோம் வா. நாளை வீடு திரும்பு! இல்லாவிட்டால்... என்னுடன் வாயேன், ஊம்?"

அமன் பேசாதிருந்தான். அவன் மனதுக்குள் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. என் யோசனை அவனுக்குக் கவர்ச்சி உள்ளதாகப் பட்டது. வருங்காலப் பயணம் பற்றியும் எங்களுக்கு நேரவிருக்கும் வளமான வாய்ப்புகள் பற்றியும் நான் பிரமாதமாக வருணித்தேன். எப்போதாவது என்னை ஓரக் கண்ணால் பார்த்தபடி அவன் காது கொடுத்துக் கேட்டான். பின்பு திடீரென்று துள்ளிக் குதித்தான்.

"ஆகா, சரி! கொடு கையை! சத்தியம் செய், எல்லாம் ஆளுக்குப் பாதி ஊம்?" என்றான்.

நான் சந்தோஷமாகச் சத்தியம் செய்தேன்.

இருவரும் சாமான்களை ஆளுக்குப் பாதியாகப் பங்கு போட்டுக் கொண்டோம். பணத்தையும் கணக்கிட்டுப் பாகம் பிரித்துக் கொண்டோம் (நான் அமனை விடப் பணக்காரனாய் இருந்தேன். நாட்கூலி வேலையில் அவன் சம்பாதித்தது எல்லாம் சற்றுக் குறைய ஒரு தன்காதான்). பின்பு நடக்கலானோம். பொழுது சாய்வதற்குள் கோக்-தெராக் நகரை அடைந்து சாயாக் கடையில் தங்கினோம். அதிர்ஷ்டம் எங்கள் பக்கம் இருந்தது. மறுநாள் வெள்ளிக்கிழமை. சந்தை கூடும் நாள். காலையில் சந்தைக்குப் புறப்பட்டோம்.

சந்தை என்றால் அதுதான் சந்தை, மெய்யாகவே சொல்லுகிறேன்! அடே அப்பா! சந்தைகளுக்கெல்லாம் சந்தை இது! ஈரானிலோ தூரானிலோ, மெக்காவிலோ மெதீனாவிலோ, மைமானாவிலோ மைஸாரவிலோ, இஸ்தாம்புலிலோ மஸான்தரானிலோ, கீழேயோ மேலேயோ, வலப்புறமோ இடப்புறமோ, எங்குமே இந்த மாதிரிச் சந்தையைக் காண ஒருவனுக்கு வாய்க்காது. இங்கே கடை வரிசைகள் எத்தனை, சரக்குகள் எவ்வளவு ஏராளம், சந்தைக்கு வந்த மக்கள்தாம் எத்தனை வகைவகையானவர்கள் என்பதை எல்லாம் வருணித்து மாளாது. வியாபாரிகளின் முகங்கள்தாம் எவ்வளவு தந்திரம் நிறைந்தவை - உலகம் முழுவதையும் அவர்கள் ஏற்கனவே ஏய்த்துப் பழகிவிட்டவர்கள் போல! அப்புறம் அவர்களுடைய உடைகள்! வானவில்லின் எல்லா நிறங்களும். ஒவ்வொரு நிறத்துக்கும் இரண்டிரண்டு பிள்ளைகளும் பேரப் பிள்ளைகளும் போல் இருந்த வண்ணச் சாயல்களும் அந்த உடைகளில் காணப்பட்டன. ஒவ்வொரு வண்ணச் சாயலுக்கும் என்ன பெயர் கொடுப்பது என்றே தெரியவில்லை, அத்தனை விதம் விதமானவை! கண்களில் பல நிறங்களும் ஒளியும் பளிச்சிட்டன. காதுகளில் ஹோவென்ற இரைச்சலும் கணகணப்பும் தடதடப்பும் - பயங்கர வழக்கு விசாரணைக்குப் பின் மக்கள் திரள் கலைந்துபோவது போல. "தீர்க்கதரிசி வரலாறு" என்ற நூலிலோ "மந்திர வித்தைக்காரி" என்ற கதையிலோ இம்மாதிரிச் சந்தை வருணிக்கப்படவில்லை. இதுபோன்ற சந்தை உலகில் எங்குமே இதற்கு முன் கூடியது கிடையாது.

வாருங்களேன், எல்லாவற்றையும் வரிசையாகப் பார்வையிடுவோம்! இதோ வாசனைச் சாமான்கள், சில்லறைச் சாமான் கடைகளின் வரிசை வியாபாரிகள் தங்கள் சரக்குகளைத் தரைமேலேயே பரப்பி வைத்திருந்தார்கள். பழஞ் சாக்குகள், முரட்டு இரத்தினக் கம்பளங்கள், கைத்தறித்துணித் துண்டுகள், சிவப்பு, நீல, பச்சைத் துணித்துண்டுகள், எல்லாவற்றையும் ஒட்டுச்

சேர்த்துத் தைத்துப் பந்தல்கள் அமைத்துக் கொண்டிருந்தார்கள் அவர்கள். உங்களுக்கு என்ன என்ன வாங்க ஆசையோ, உலகம் படைக்கப்பட்ட நாள் தொடங்கி இன்றுவரை அழகுச் சாதனங்களும் வாசனைப் பொருள்களும் தயாரிப்பவர்கள் என்னவெல்லாம் தயாரித்தார்களோ அவை எல்லாம் இங்கே வாங்கலாம். பேன்களையும் தெள்ளுப் பூச்சிகளையும் ஒழிப்பதற்கான பாதரசக் களிம்பு வேண்டுமா? கொழுப்பைப் பாதரசத்துடன் கலந்து அரைத்துத் தயாரித்ததாம் இந்தக் களிம்பு. அல்லது சொறியைக் குணப்படுத்தும் இந்தாவு எண்ணெய் வேண்டுமா? இஞ்சி, பேதி இலை, அல்லது அக்கோனீத் என்னும் நச்சுச் செடியின் இலை தேவையா? அல்லது கண்படாமல் காப்பதற்கான வெண் புள்ளிகள் கொண்ட கரு மணி மாலை வேண்டுமா? அல்லது வயிற்று வலி மருந்து உருண்டைகள் வேண்டுமா? பஞ்சு வைத்த போர்வை தைப்பதற்கான பரு ஊசியோ, தாடி சீவும் சீப்போ, காற்சட்டைகளின் உள்ளே கொடுத்துத் தைப்பதற்கேற்ற நாடாக்களோ வேண்டுமா? அல்லது "ஹலீலான்-ஜங்" என்னும் மருந்துப் பூண்டு வேண்டுமா? (இந்தப் பூண்டு எந்த நோயைக் குணப்படுத்துமோ தெரியாது. ஆனால் உங்களுக்கு என்ன வியாதி என்பது தெரியாவிட்டால் இதுதான் ஏற்ற மருந்து.) எல்லா விதக் காயங்களுக்கும் கட்டிகளுக்கும் போடத் தக்க மருந்துப் பிளாஸ்திரி, புஹாராச் சவையல் கந்தகம், கிராம்பு, மருந்து பக்வீட் - எது வேண்டுமோ கிடைக்கும் இங்கே. ஆண்டுதோறும் கூடும் புகழ் பெற்ற சைபீரிய இர்பீத் சந்தை கெட்டது போங்கள்!

இந்தப் பொருள்களை எல்லாம் சேகரித்து, வகைப்படுத்தி அழகாக பரப்பி வைத்திருப்பவர்களைப் புகழ்ந்து பாராட்டுவதுதான் நாம் செய்ய வேண்டியது...

இதோ இன்னொரு கடை வரிசை. ஒருபுறம் குயவர்கள். மறுபுறம் சோப்பு விற்பவர்கள். குயவர்கள் கடைகளில் சுட்ட களிமண்ணால் செய்த அழகு அழகான பாத்திரங்களின் பெரும் பெரும் குடும்பங்கள் உங்களுக்காக காத்திருக்கின்றன. குடங்கள், கலயங்கள், கோப்பைகள், தட்டுகள் முதலியவை. ஒவ்வொரு வகைப் பாத்திரங்களும் இரட்டைப் பிள்ளைகள் அல்லது அடுத்தடுத்துப் பிறந்த சகோதரர்கள் போல் ஒன்றையொன்று ஒத்திருக்கின்றன. உங்களுக்குப் பெரிய பேஸின் வேண்டுமா



அல்லது சின்னஞ்சிறு பேஸினா அல்லது பிரமாண்டமான சால் வேண்டுமோ? இதோ, இப்போதுதான் சூளையிலிருந்து எடுத்தது. பாலைப் பிரை குத்துவதற்கேற்ற தயிர்க் கலயம் வேண்டுமா? அல்லது நீண்ட குறுங்கழுத்துள்ள கூஜா வேண்டுமா? இவை எல்லாம் உங்களுக்காகக் காத்திருக்கின்றன. ஒரே ஆவலாய்க் காத்திருக்கின்றன. சுண்டிப் பாருங்கள், களி பொங்கக் கணீர் என ஒலிக்கும்.

சோப்புக் கடைகளில் வட்டச் சோப்பும் "யஹ்னாக்" ரகச் சோப்புக்களும் மெழுகுவத்திகளும் அடுக்கி வைக்கப் பட்டிருக்கின்றன. கடைக்காரர்களுக்குமுன் தொங்கு பைகளில் காய்ச்சிக் கட்டியாக்கிய கொழுப்புத் துண்டுகளும் மிருகங்களின் உள்ளுறுப்புகளும் நிறைத்து வைத்திருக்கின்றன. ஆயிரமாயிரம் பச்சை ஈக்கள் நொய்யென்று மொய்க்கின்றன. இங்கே ஒரு ராத்தல் சோப்பு வாங்க வேண்டும் என்றால் முதலில் மூக்கைக் கைக்குட்டையால் கட்டிக்கொள்ள வேண்டும் அல்லது சட்டைக் கைக்குள் புதைத்துக் கொள்ள வேண்டும். சில சோப்புக் கடைக் காரர்கள் வாங்குபவர்களை உபசரிப்பதற்காகத் தேநீர்க் கோப்பையும் ரொட்டியும் கைகளில் வைத்துக் கொண்டு நிற்கிறார்கள். ஆனால் இங்கே தேநீராவது ரொட்டியாவது! ஏற்கனவே சாப்பிட்டது வாந்தியாக வெளியேறிவிடாமல் வயிற்றில் தங்கியிருந்தால் அதுவே பெரிய காரியம். என்னைக் கேட்டால், கெட்டுப்போன கறிப்பொங்கல் போலக் கடுமையாக அடிக்கும் இந்தக் கவிச்சை முகர்வதைவிட ஆயுள் முழுவதும் சோப்பே இல்லாமல் இருப்பது மேல் என்பேன்.

ஆனால் இவை சந்தையின் புகழ்பெற்ற கடை வரிசைகள் அல்ல. "பீத் பஜார்" - அதாவது "பேன்பிடித்த சந்தை" - உலகம் முழுவதிலும் பிரசித்தி பெற்றது. நமக்கு வேண்டியது, வேண்டாதது எல்லாமே இங்கே கிடைக்கும். இராணுவக் காற்சட்டைகள், ஒன்றுக்கொன்று பொருந்தாத தடித்தோல் ஜோடுகள், பஞ்சு வைத்துத் தைத்த பருத்த மேலங்கிகள் (ஏழே ஆண்டுகள் மட்டுமே பயன்படுத்தப்பட்டவை. ஒரே கஷ்டம் என்ன என்றால் அவை எந்தத் துணியில் தைத்தவை என்று இப்போது கண்டு பிடிக்க முடியாது!). குல்லாய் (ஒரு வகையில் மிகவும் மதிப்புயர்ந்த குல்லாய். ஏனென்றால், வயதைக் கொண்டு பார்த்தால் காஸ்பியன் கடலுக்குக் கிழக்கே உள்ள பிரதேசம் முழுவதிலும் இருக்கும்

எல்லாக் குல்லாய்களுக்கும் முதுகுரவனாக விளங்கத் தக்கது ஆயிற்றே இந்தக் குல்லாய்!). முழங்கைகள் வரை வரும் குட்டைக் கைகள் வைத்த கிழவிச் சட்டை - மல்யாஹான் காலத்தது. பல நிறத் துண்டுத் துணிகள் (கைதேர்ந்த தையல்காரி இவற்றைக் கொண்டு என்னதான் தைக்க மாட்டாள்!) - எது வேண்டுமானாலும் இங்கே காணலாம். அல்லது, ஒருவேளை உங்களுக்குக் குதிரைக் கவிசனை வேண்டுமோ? செத்த குதிரை மேலிருந்த கழற்றப்பட்டதுதான் என்றாலும் இது இன்னும் கொஞ்ச காலத்துக்குத் தாங்கும். அல்லது உயர் ரக ஆட்டுத்தோல் ஸ்லிப்பர்கள் வேண்டுமா? ஆகா கிடைக்குமே. இவற்றைப் போட்டுக் கொள்ளலாம் - அடித்தோலும் குதியும் புதிதாகத் தைத்துக் கொள்ள வேண்டும், மேற்பகுதிக்குச் சரியானபடி வண்ணம் பூச வேண்டும், அவ்வளவுதான்! பாதங்களில் சுற்றிக் கொள்வதற்கான துணிப்பட்டிகள் தாம் எத்தனை வகை! இஷ்டம்போலப் பொறுக்கி எடுத்துக் கொள்ளலாம். இவற்றைக் கோவணமாகவும் பயன்படுத்தலாம்..

எல்லாவற்றையும்விட அக்கறைக்கு உரியவை இந்தச் சாமான்களை எல்லாம் விற்பனை செய்யும் வியாபாரிகளின் முகங்கள்தாம். இவர்கள் முகங்கழுவி ஒரு வாரத்துக்கு மேலேயே ஆகியிருக்கும். தாடிகள் பிறந்தது முதலே மழி கத்தியைக் கண்டறியாதவை. ஆயினும் முகங்கள் என்னவோ பளபளக்கின்றன. நீங்கள் சரக்கை நோட்டமிட்டு விலை கேட்க வேண்டியதுதான் தாமதம், இவர்கள் முகங்களில் ஒளி படர்கிறது - நேற்றுத்தான் அழுது புதைத்துவிட்டு வந்த தங்கள் அருமை நண்பனின் பிணம் உயிர் பெற்று வந்துவிட்டதைப்போல. முதலில் கட்டாயமாக முகமன் கூறிக் கைகுலுக்கிய பின்பே விலையைச் சொல்வார்கள். அமெரிக்கா என்ற ஓர் இடம் உலகில் இருப்பதாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். இதுதான் அந்த அமெரிக்கா போலும்!

வேடிக்கை என்ன தெரியுமா? இங்கே, "பீத் பஜாரில்" தான் எங்கள் வட்டாரத்தைச் சேர்ந்த ஹுஸ்னிபாய் என்பவனை நாங்கள் சந்தித்தோம்! இரைச்சலாலும், பல் வண்ணங்களாலும், பொருள்களின் செழிப்பாலும் மதிமயங்கியவர்களாக, முதலில் விற்பதா வாங்குவதா என்று தீர்மானிக்க முடியாமல் நாங்கள் வெகு நேரம் சுற்றி அலைந்து விட்டபின் அவனைக் கண்டோம்.



ஹுஸ்னிபாய் துண்டுத் துணிகள் விற்றுக் கொண்டிருந்தான். துண்டுத் துணிகள் என்றால் வெறும் சிறு துண்டுகள் அல்ல, ஓர் அல்லது ஒன்றரை அடி நீளமுள்ள பகட்டான துணிகள், சீட்டித் துணித் துண்டுகள். ஒரு பெரியதான துணி விற்கப்படும் போது கடைசியில் இம்மாதிரித் துண்டுகள் மிஞ்சுவது வழக்கந்தான். பெரிய வியாபாரிகள் இவற்றைக் கூவி விற்கும் சில்லறை வியாபாரிகளுக்கு மலிவாக விற்பனை செய்வார்கள். சில்லறை வியாபாரிகள் தொங்கு பைகளில் பல்வேறு நிறங்களும் கோலங்களும் கொண்ட துணி விளிம்புகள் வெளித் தெரியும்படி வைத்தவாறு சந்தைகளுக்கு எடுத்துச் சென்று விற்பார்கள். இந்தத் துணித் துண்டுகளுக்கு ஏகப்பட்ட கிராக்கி. மிக மலிவான சீட்டித் துணிகூட ஓர் அர்ஷின் - இரண்டேகால் அடி - பதினேழு கோபெக்குகள் விலை! ஏழைகளுக்கு இந்த விலை கட்டுப்படி ஆகாது. முழுதும் ஒரே வகைத் துணியால் உடைகள் தைத்துக் கொள்ள அவர்களுக்கு முடியாது. அதற்காகத்தான் துணித் துண்டுகள் வாங்கி, சட்டைக்கைகளும், மேலங்கிகளுக்கு அடியில் தெரியும் காற்சட்டைப் பகுதிகளும் தைத்துக் கொள்கிறார்கள். எஞ்சிய பகுதிகளுக்கு முரட்டுக் கைத்தறித் துணியைப் பயன்படுத்துவார்கள்.

இந்த ஹுஸ்னிபாய் எப்போது முதல் சில்லறை வியாபாரி ஆனான் என்பது எங்களுக்கு விளங்கவில்லை. ஆனால் அவனோ, இரண்டு தொங்கு பைகளில் செம்மச் செம்ம நிறைந்த துணித் துண்டுகளும் கையில் அளவுகோலுமாக அனுபவசாலியான வியாபாரிபோல வளைய வந்தான்.

"பாப்ளின் வேண்டுமா, பூப்போட்ட சிவப்புச் சீட்டித் துணி வேண்டுமா, புள்ளிபோட்ட சீட்டித்துணி வேண்டுமா, 'ரோஹ்தான் - பதான்' வேண்டுமா, அருமையான மல் துணி வேண்டுமா, காலிக்கோ வேண்டுமா, உறைத்துணி வேண்டுமா, 'சைத்தான் தோல்' துணி வேண்டுமா? தாராளமாக வாங்குங்கள், சந்தோஷமாகத் தைத்துப் போட்டுக் கொள்ளுங்கள்!" என்று தொண்டை கிழியக் கத்தியவன், எங்களைப் பார்த்துவிட்டான். இமாம்கள் ஹஸனையும் ஹுஸேனையும் உயிரோடு எதிரே வரக் கண்டவன்போல மலைத்துப்போனான்.

"அடே, நீங்களா? எங்கிருந்து வந்து சேர்ந்தீர்கள் இங்கே?... அப்பா குதிரைக் கழுத்துப் பட்டைகளைச் சந்தையில் விற்று

வரும்படி என்னிடம் சொன்னார். என்னால் இது முடியாது என்று சொல்லிவிட்டேன். என் சித்தப்பா இருக்கிறாரே, சில்லறை வியாபாரி, அவர் மாதிரிச் சுற்றித் திரிந்து வியாபாரம் செய்ய எனக்கு வெகு காலமாகவே ஆசை. துணித் துண்டுகள் வாங்க அப்பா எனக்குப் பணம் கொடுத்தார். சையது - பயில்வான் சந்தைக்குப் புறப்பட்டான், நானும் அவனோடு வந்துவிட்டேன்... பாருங்கள், எப்பேர்ப்பட்ட சரக்குகள் என்று! யூஸுப் தாவீதவின் கடையில்கூட இந்த மாதிரிச் சரக்கு கிடைக்காது! ரூபிளுக்கு மூன்று உருப்படி!" - இப்படிப் பெருமை அடித்துக் கொண்டவன் சட்டென நினைவுபடுத்திக் கொண்டு, "ஆமாம், நீங்கள் இங்கே என்ன செய்கிறீர்கள்? அமன், நீ கிராமத்திலிருந்து வருகிறாயா?" என்றான். பின்பு என் கதை அவனுக்கு நினைவு வந்துவிட்டது. "நீ இருக்கிறாயே, நல்ல ஆள்தான் போ! ஜிப்ஸிகளிடம் பாடம் கேட்டாயா என்ன? ஒரு வாரத்துக்கு மேலே எங்கே காடு வாழ்சாதியாகச் சுற்றித் திரிகிறாய்? பாவம், உன் தாயார் எங்கெல்லாம் உன்னைத் தேடினாள் தெரியுமா? சௌக்கியமாக இருக்கிறேன் என்று தகவல் கொடுத்தால் செத்துப்போய்விட மாட்டாயே! நல்ல வேளையாக உன் அத்திம்பேர் வந்து உன் அம்மாவைத் தேற்றினார். தம் வீட்டில் நீ ஐந்து நாட்கள் தங்கியிருந்ததாகவும் அப்புறம் கப்ளான்பேக்கில் மற்றோர் அத்தை வீட்டுக்குப் போயிருப்பதாகவும் சொன்னார். இலையுதிர் காலம் வரை வயல் வேலையில் நீ ஒத்தாசை செய்யப்போகிறாய் என்றார்... இங்கே எப்படி வந்து சேர்ந்தாய் நீ! அத்திம்பேரிடமும் புளுகினாயா? தாயாரை ஒரு நடை போய்ப் பார்த்துவிட்டு வாயேன், மடையா! அவள் ஆறுதல் அடைந்துவிட்டாள் என்றாலும் உன்னை நினைத்து அழுகிறாளே..."

"கொஞ்சம் பாடுபட்டுச் சம்பாதிக்கிறேன், உடைகளைச் சீர்படுத்திக் கொள்கிறேன், அப்புறம் திரும்புகிறேன்."

"ஆமாமாம். சீர்தான் படுத்திக் கொள்வாய்! இதையும் பறி கொடுத்து விட்டு நிற்பாய்?"

"அடேடே, ரொம்பத்தானே பேசாதே.. என்னிடமும் இருக்கிறது சரக்கு. இதோ!"

"ஓகோ! மெய்யாகவேதானா? இதை எல்லாம் எங்கே சேகரித்தாய்? காக்கைக் கூட்டைச் சூறையாடினாயா?"

இப்போது அமன் குறுக்கிட்டான். "சரி, சரி! சச்சரவிட்டது



போதும். ஏற்கனவே வெக்கை சகிக்க முடியவில்லை. நம் வட்டாரத்தில் புதிய செய்திகள் என்ன, அதைச் சொல்லு" என்றான்.

"அட அங்கே என்ன புதுச் சேதிகள் இருக்க முடியும்?.. ஆமாம், உங்களுக்குத்தான் இன்னும் தெரியாதே" - ஹுஸ்னிபாய்க்கு உற்சாகம் பிறந்துவிட்டது. "அங்கே என்ன நடந்தது தெரியுமோ? ரொட்டிக்காரன் ஜலீல் தீனிப்புல்லை மசூதி முகட்டின் மேல் போட்டிருந்தான். அதிலே தீப்பிடித்துவிட்டது. தீயணைக்கும் படையினர் வந்தார்கள். ஆகா, எவ்வளவு அருமையாக இருந்தது என்கிறாய்! இன்னும் புலாத்ஹோஜா இருக்கிறானே, அவன் அண்ணனுடைய ரிவால்வரை எடுத்துக் காவல்காரனுடைய நாயைச் சுட்டுவிட்டான். மீர்ஷாப் அவனை ஒரு நாள் சிறையில் வைத்திருந்தார். இரண்டு போலீஸ்காரர்களும் மச்சாலவ் தானேயும் வந்தார்கள்! எல்லோரும் அவரவர் வீடுகளில் பதுங்கிவிட்டார்கள். நானும் ஸலீஹும் மீர்-அஜீஸ்-அகா வீட்டு முன்மாடத்திலிருந்து பார்த்தோம். மச்சாலவ் சொன்னார் (இங்கே ஹுஸ்னிபாய் மச்சாலவைக் கோரணி செய்தவாறு மாற்றுக்குரலில் பேசினான்): 'ஸே, ஸே, மோஸம். படு மோஸம். சைபீரியா போவாய் நீ..." புலாத்ஹோஜாவின் அண்ணனோ அரைகுறை ருஷ்ய மொழியில் கெஞ்சிக் கூத்தாடினான், நிறையக் கைக்கூலி கொடுத்தான். அப்புறந்தான் அவர்கள் போனார்கள். புலாத்ஹோஜா விடுதலை செய்யப்பட்டான். அண்ணன் அவனைச் சக்கை சாறாக விளாறினான் என்று சொல்லவே வேண்டியதில்லை. ஆனால் புலாத்ஹோஜா இப்போது வீறாப்பு பேசுகிறான்: அவன் யாருக்கும் பயப்படுவதில்லையாம், போலீஸாரிடமோ, மச்சாலவிடமோ, காவல்காரன் கூர்-ரஹீமிடமோ அவனுக்கு பயம் இல்லையாம். 'இஷ்டப்பட்டால் எல்லாரையும் ரிவால்வரால் சுட்டுத் தள்ளிவிடுவேன்' என்கிறான். நாங்கள் அவனை இரண்டு போடு போட்டோம், அவனோ உங்களையும் சுட்டுத் தள்ளிவிடுவேன் என்கிறான்..."

"அப்படியா? உதைக்கிறேன் பயலை, திரும்பியதுமே" என்றேன் நான்.

"கட்டாயம் உதைப்பாய். முதலில் திரும்பு" என்று கேலி செய்தான் அமன்.

"டேய் ஹுஸ்னிபாய், வீடு திரும்பியதும் அம்மாவிடமும் தங்கைகளிடமும் நான் ரொம்பக் கேட்டதாகச் சொல்லு. என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று சொல்லு. பொறு, இந்தா, இந்த ஐந்து கோப்பெக்கை யூல்தாஷிடம் கொடு. அவனுக்கு நான் தர வேண்டும். நல்லது, நாங்கள் எங்கள் காரியத்தைப் பார்க்கிறோம். விடை கொடு!" என்றேன்.

"போய் வாருங்கள்!" என்றான் ஹுஸ்னிபாய். மறு வினாடியே அவன் உரக்க முழங்கியது எங்களுக்குக் கேட்டது: 'பாப்ளின் வேண்டுமா, பூப்போட்ட சீட்டித் துணி வேண்டுமா..."

புறாக்களுக்காக எனக்குக் கிடைத்த பொருள்களையும் அவற்றோடு அமனின் மண்வெட்டியையும் விற்பனைக்காக அடுக்கி வைக்க நாங்கள் தீர்மானித்தோம். எங்களைச் சுற்றி வாங்குபவர்கள் ஏராளமாகக் கூடிவிட்டார்கள். எங்கள் சாமான்கள் மளமளவென்று விற்றுப் போகும் என நாங்கள் நினைத்தோம். ஆனால் கூடியவர்கள் எல்லோரும் வெறுமே வேடிக்கை பார்க்க வந்தவர்கள். சாமான்களின் விலைகளில் கூட அவர்கள் அக்கறை காட்டவில்லை. அவை எதற்குப் பயன்பட முடியும் என்பதில்தான் அக்கறை அவர்களுக்கு. பற்பல நையாண்டி யோசனைகளை அவர்கள் கூறினார்கள். ஒரு மணி நேரம்போலத் தொல்லைப்பட்ட பின் அமனுடைய மண்வெட்டியையும் என் மர மண்வாரியையும் ஒருவிதமாக விற்றோம். இது கூட, தாமாகவே முன்வந்த தரகர்களின் உதவி இல்லாமல் நடக்கவில்லை.

வாங்க வந்தவர்களுடன் அரை மணி நேரம் பேரம் பேசிய பிறகு அவர்கள் கேட்ட விலைக்கு, அதாவது மண்வெட்டியை அரை ரூபிளுக்கும் மர மண்வாரியை (கோடை காலம் ஆதலால்) ஒன்றரைத் தன்காவுக்கும் விற்க நாங்கள் இசைந்தோம். அதற்கு அப்புறமும் இந்தத் தரகர்கள் "கையடித்துக் கொடுப்போமா?" என்றார்களே பார்ப்போம்!

அமன் பணத்தை இடுப்புக் குட்டையில் சுருட்டி முடிந்து கொண்டான். மற்றச் சாமான்களை விற்பது இப்போது அவசியமாயிருந்தது. விளையாட்டுத் தொட்டில்களையும் கிலுகிலுப்பையையும் நான் அமனிடம் கொடுத்தேன். தம்பட்டத்தையும் கிராதிவிளிம்புகளையும் நானே வைத்துக்



கொண்டேன். அமன் கிலுகிலுப்பையைக் கிலுக்கினான், நான் தம்பட்டத்தை அடித்தேன் - வாங்குபவர்களைக் கவர்ந்து இழுப்பதற்காக. எங்களையே போன்று குந்தல் அணிந்த ஏழைச் சிறுவர்களின் கூட்டம் அக்கணமே எங்களைச் சூழ்ந்து கொண்டது. இலவச வேடிக்கை பார்க்கக் குழுமினார்கள் இவர்கள். ஓர் ஒடிசல் பையனுக்குக் கிலுகிலுப்பை மிகமிகப் பிடித்துப்போயிற்று. அவன் ஓர் உழவனின் மகன். அமன் அவனுடைய கழுத்துப்பட்டையைப் பற்றிக்கொண்டு, அவனுடைய மறுப்பைப் பொருட்படுத்தாமல் இரண்டு தர்பூஸ் பழங்களும் ஒரு முலாம்பழமும் கிலுகிலுப்பைக்கு மாற்றாக வாங்கிக் கொண்டே விட்டான். நான் அவனைப் பார்த்துக் கண்ணடித்தேன் - சபாஷ், நீ கைராசிக்காரன் என்ற அர்த்தத்தில். இதன்பிறகு நாங்கள் தம்பட்டத்தை விற்றோம். கருஞ்சிவப்புக் குதிரைமேல் ஏறிச் சந்தையில் சுற்றி வந்த அழகிய மீசையுள்ள ஓர் இளைஞன் அதை வாங்கிக் கொண்டான். ஒரு தன்கா விலை கொடுத்தான் அவன். அப்புறம் கிடைத்தாள் ஒரு "குருட்டு" வாடிக்கைக்காரி. கஸாக்கியக் கிழவி அவள். ஒரு கோழி, முட்டைகள், தயிர்க் கட்டி உருண்டைகள், சாமை ஆகியவற்றை விற்க வந்திருந்தவள்.

"அடாடா, என் கண்களா, இந்தத் தொட்டில்களை எனக்குத் தாருங்கள். சந்தையிலிருந்து குழந்தைகளுக்குப் பரிசாக எடுத்துப் போகிறேன். பேரக் குழந்தைகள் சந்தோஷப்படுவார்கள்!" என்றாள்.

"கிராதி விளிம்புகள் இல்லாமல் தொட்டில்கள் தனியாக விற்கப்பட மாட்டா" என்று கண்டிப்பான குரலில் சொன்னான் அமன்.

"அடாடா, என் கண்களா, கிராதிவலை இல்லாமல் விளிம்புகளை வைத்துக் கொண்டு நான் என்ன செய்வேன்?..."

தலையை ஆட்டிக் கொண்டே அவள் அப்பால் போகப் புறப்பட்டவள், திரும்பி வந்தாள்.

"சரி, அப்படியே ஆகட்டும். வாங்கிக் கொள்கிறேன். குழந்தைகள் விளையாடுவார்கள். என்ன விலை கேட்கிறீர்கள்?" என்றாள்.

நாங்கள் வெகு நேரம் பேரம் பேசினோம். முடிவில் இருபது முட்டைகளும் ஒரு குல்லாய் நிறையச் சாமையும் ஒட்டகத்

தயிர்க்கட்டி உருண்டைகள் பத்தும் பெற்றுக் கொண்டு சாமான்களை அவள் தலையில் கட்டினோம். சாமான்களைக் கொடுத்து விலையும் பெற்றுக் கொண்ட பின் பறவைகள் போல லேசாகிவிட்டதாக உணர்ந்தோம்.

"அப்பா, களைத்துப் போய்விட்டேன். ஏதாவது சாப்பிட வேண்டும், இல்லையா?" என்று சோம்பல் முறித்துக் கொண்டே சொன்னான் அமன்.

"போவோம். என்ன சாப்பிடுவது?"

"மலிவாய் இருக்க வேண்டும், வயிறும் நிறைய வேண்டும். அதுதான் முக்கியம்."

"அப்படியானால் தினைக் கஞ்சி குடிப்போம்!"

இரண்டு கோப்பெக்குகள் கொடுத்து இரண்டு மக்காச்சோள ரொட்டிகள் பரங்கிக்காய்க் கறியுடன் வாங்கிக் கொண்டு சூடான உணவுப் பண்டங்கள் விற்கும் பகுதிக்குப் போனோம். அங்கே பல விதப் பண்டங்கள் விற்பனைக்குத் தயாராய் இருந்தன: தணலில் வாட்டிய கல்லீரல் (கல்லீரல் கொஞ்சம் கவிச்சடித்தது என்பது உண்மையே. ஆனால் இம்மாதிரி அற்ப விஷயங்களை யார் பொருட்படுத்துகிறார்கள்?), உருளைக்கிழங்கு ஸமோஸா, சேமியா, அரிசிக் குறுநொய்ப் பொங்கல், கறித் துறுவல், கோதுமைக் கஞ்சி, தினைக் கஞ்சி முதலியன. பெரிய பெரிய அண்டாக்கள் நிறைய உணவுப் பண்டங்கள், சாப்பிடுவோரை எதிர்பார்த்துக் காத்திருந்தன. சாப்பிடுபவர்கள் வந்து குத்திட்டு உட்கார்ந்தார்கள், சமையல்காரர்கள் கரண்டிகளால் கஞ்சியைக் கிண்ணங்களில் ஊற்றிச் சற்று வணக்கத்துடன் அவர்களுக்குக் கொடுத்தார்கள். ஒரு கிண்ணத்தில் சேமியாவுடன் ஏதோ கறுப்பாக மிதந்தது. "இது என்ன, ஈயா?" என்று கேட்டார் சாப்பிட வந்த நாசூக்குக்காரர். "அட நீங்கள் ஒன்று! ஈயாம்! சேமியாவில் ஈ எங்கிருந்து வரும்? கருகிப்போன வெங்காயம் அல்லவா இது?" என்று பதிலளித்து, சட்டெனக் கிண்ணத்தில் விரலை விட்டுக் "கருகிப் போன வெங்காயத்தை" எடுத்து வாயில் போட்டுக் கொண்டான் சமையல்காரன். "இப்போது நிம்மதியாகச் சாப்பிடுங்கள்" என்றான்.

"இங்கே மலிவு, துப்புரவாயும் இருக்கிறது" என்று எண்ணி, நாங்களும் ஆளுக்கு ஒரு கிண்ணம் சேமியா வாங்கிக்



கொண்டோம். ஒரு கிண்ணம் சேமியாவின் விலை மூன்று கோப்பெக்குகள். ஆனால் நாங்கள் இரண்டு கிண்ணங்கள் ஐந்து கோப்பெக்குகளுக்குத் தரும்படிப் பேரம் பேசி இரட்டை மகிழ்ச்சியுடன் சாப்பிடத் தொடங்கினோம். நன்றாயிருந்தது! சேமியா கொஞ்சம் ஊசிப் போயிருந்தது, ஆனால் முறுமுறுவென்று இருந்த மக்காச் சோள ரொட்டியோடு சேர்த்துத் தின்பதற்குப் பாலாடைபோல ருசியாய் இருந்ததாகவே எங்களுக்குப் பட்டது. அமன் கிண்ணத்தை உயர்த்திப் பிடித்தவாறு, பெரிய பாம்புக்கூட்டம் கலவரம் அடைந்துவிட்டது போன்ற உரத்த சீறல் ஒலியுடன் சேமியாவைக் கிண்ணத்திலிருந்து உறிஞ்சி உறிஞ்சித் தின்றான். நானும் மும்முரமாக முயன்றேன். இருவரும் இடது கையால் அடிக்கொரு தரம் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டோம்.

சாப்பாட்டை முடித்துக் கொண்டு ஒரு தர்பூஸ் பழத்தையும் தின்றுவிட்டு நாங்கள் இனிமையாகச் சோம்பல் முறித்தோம். முட்டைகள், சாமை, தயிர்க்கட்டி உருண்டைகள், மிஞ்சிய மக்காச்சோள ரொட்டித் துண்டுகள் ஆகியவற்றை என் இடுப்புக் குட்டையில் மூட்டை கட்டினோம். மூட்டையையும் முலாம் பழத்தையும் நான் எடுத்துக் கொண்டேன். தர்பூஸ் பழத்தை அமன் தூக்கிக் கொண்டான். மேலே எங்கு போவது?

அமனுக்குப் புதிய எண்ணம் தோன்றிவிட்டது. எங்கள் பணம் அவன் இடுப்பில் இருந்தது. இப்போது கணிசமான தொகை - சுமார் இரண்டு ரூபிள் சேர்ந்திருந்தது. இந்த ரூபிள்கள் அவனை நிம்மதியாய் இருக்க விடாமல் அடித்தன. கொழுப்பு சேர்வது செம்மறிக் கடாவுக்கு மட்டுமே கெடுதல் அல்ல என்று ஜனங்கள் சொல்வது உண்மைதான். அமன் அதற்குள்ளாகவே ஜமீன்தார் மகன்போல மிடுக்கு பண்ணத் தொடங்கிவிட்டான்.

"கால்நடைச் சந்தையைச் சுற்றிப் பார்க்கலாம் வா" என்று என்னை அழைத்தான்.

"எதற்காக?"

"என் பங்குப் பணத்துக்கு ஆட்டுக்கடா வாங்கி நகரத்துக்கு ஓட்டிப் போகிறேன்."

"உனக்கென்ன, மூளை புரண்டுவிட்டதா? உன் வயிற்றுப் பாட்டுக்கே வழியைக் காணோம், ஆட்டுக் கடாவுக்கு எப்படித்

தீனி போடுவாய்? அல்லது உன் தகப்பனார் நீ ஆட்டுக்கடாவை வீட்டுக்கு ஓட்டிவருவாய் என்று ரொம்பத்தான் காத்துக் கொண்டிருக்கிறாரோ?" என்றேன்.

ஆனால் என் சொற்கள் தம்பட்டத்தில் பட்ட பட்டாணிபோல அவனிடமிருந்து துள்ளி விழுந்துவிட்டன. என்னை இழுத்துக் கொண்டு கால் நடைச் சந்தைக்குப் புறப்பட்டான். முலாம் பழத்தையும் தர்பூசையும் வாயிலில் கட்டணம் வசூலிப்பவனிடம் வைத்துவிட்டு மூட்டையை உடன் எடுத்துக் கொண்டோம் - அதை யாரிடமும் நம்பி ஒப்படைக்க எங்களுக்கு மனம் இல்லை. சந்தையின் மற்றப் பகுதிகள் பயங்கர நீதிமன்றத்தின் முன்னறை போல் இருந்தன என்றால், கால்நடைச் சந்தையில் இந்த பயங்கர நீதி விசாரணையே நடந்து கொண்டிருந்தது. பாவம் கால்நடைகள் இதைப்பற்றி என்ன நினைத்தனவோ, அறியேன். ஆனால் இறுதி நாள் வந்துவிட்டது என்றே அவையும் எண்ணியிருக்கும். ஒரு புறம், பத்து பத்தாக ஒரே கயிற்றில் பிணைக்கப்பட்டிருந்த ஆட்டுக் கடாக்கள் வாய் ஓயாது கத்திக் கொண்டிருந்தன. மறுபுறம் வெள்ளாடுகளும் குட்டிகளும் ஓலமிட்டுக் கொண்டிருந்தன. சற்று தூரத்தில் பசுக்களும் இளங்கன்றுகளும் மூன்று வயதுக் கன்று களும், எருதுகளும், உழவு மாடுகளும் மாவென்று அலறிக் கொண்டிருந்தன. இன்னும் அப்பால் இருந்தது குதிரைத் தாவணி. அங்கே குதிரை வியாபாரிகள் அப்பாவி உதவாக்கரைக் குதிரைகளைச் சவாரிப் புரவிகள் என்று சொல்லி விற்றுக் கொண்டிருந்தார்கள். இதற்காக அவர்கள் முதலில் குதிரைகளை இரக்கமின்றிச் சவுக்கால் விளாறி ஆற்றுக்கு விரட்டினார்கள். ஸகார்லிக் என்னும் இந்த ஆறு சற்று தூரத்தில் ஓடுகிறது. மக்கள் கூட்டம் முன்னும் பின்னும் போய்வந்த வண்ணமாய் இருந்தது. பெரும்பாலும் இவர்கள் வாங்கி விற்பவர்கள். கட்டிப்போட்ட குதிரைகளின் அருகே விற்பவர்களும் வாங்குபவர்களும் ஒருவரை ஒருவர் திட்டிக் கொண்டோ, பேரம் செய்து கொண்டோ அல்லது வெறுமே உரக்கப் பேசிக் கொண்டோ நின்றார்கள். பெரிய செம்மறி மந்தைகளின் சொந்தக்காரர்கள் ஒரு பக்கத்தில் இருந்தார்கள். அவர்களில் இருவர் பெஷாகாச் பணக்காரர்கள், தாஷ்கந்த்காரர்கள். மற்றவர்கள் கஸாக்குகள். நமுதா நீளங்கிகளும் நமுதாத் தொப்பிகளும் அணிந்த இவர்கள் ஒருவர் கையில் ஒருவர் அடித்து, பேரம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு நடுவிலும் தரகர்கள் நடமாடினார்கள். "வாங்குங்கள், பாய் -



அத்தா, வாங்குங்கள்!" என்றோ, "விற்றுவிடுங்கள், பாய் - அத்தா, விற்றுவிடுங்கள், இதுதான் சரியான சமயம்!" என்றோ வியாபாரிகளை அடிக்கொரு தரம் ஊக்கப்படுத்திக் கொண்டிருந்தார்கள் இவர்கள். தரகர்களின் கண்கள் பளிச்சிட்டன, கைகள் நடுங்கின. பின்னே என்ன, இங்கே ஆதாயத்துக்கு வழி இருந்தது, நூற்றுக்கணக்கான ரூபிள்களுக்குப் பேரங்கள் குதிர்ந்தன, பல நூறு கால்நடைகள் கைமாறின...

மாடுகளின் அலறல், குதிரைகளின் கனைப்பு, ஆடுகளின் கத்தல் ஆகியவற்றின் பேரரவத்தில் மனிதக் குரல்கள் அமுங்கிவிட்டன. சூரியன் உச்சத்துக்கு வந்துவிட்டது. வெக்கை தாங்க முடியவில்லை. காற்றில் புழுதிப் படலம் கலையாமல் மிதந்தது. வியர்வை, சிறுநீர், சாணம், ரோமம் இவற்றின் சுள்ளென்ற நெடிகள் அடித்தன. இவை எல்லாவற்றுக்கும் நடுவே, தண்ணீர்க்காரன் நீர்நிறைந்த தோற்பையைத் தோளில் தொங்கவிட்டுக் கொண்டு இரண்டு மட் குவளைகளும் கைகளுமாக மெதுவாக நடந்தான்.

"தருமத் தண்ணீர்! தருமத் தண்ணீர்!" என்று முழங்கினான் அவன். பரமார்த்தமாக இவ்வாறு உபசரித்து, வேண்டியவர்களுக் கெல்லாம் குடிநீர் பருகக் கொடுத்தான். தண்ணீருக்காகப் பணம் கொடுக்க விரும்பியவர்கள் தண்ணீர்க்காரனின் கையிலிருந்த குவளையில் காசைப் போட்டார்கள். விருப்பம் இல்லாதவன் காசு கொடுக்கவேண்டாம். தண்ணீர்க்காரன் அவனைப் பார்க்கவே இல்லை.

"குளிர்ந்த மோர் வேண்டுமா மோர்" என்று கத்தித் திரிந்தார்கள் இரண்டு வாண்டுகள் - என்னையும் அமனையும் விடச் சின்னவர்கள். அவர்கள் கையிலிருந்த வாளியில் மோருக்கு மேல் மிதந்தன அழுக்கடைந்த பனிக்கட்டித் துண்டுகள். பனிக்கட்டி இவர்களுக்கு எங்கே கிடைத்ததோ?

பீத் பஜாரின் நெரிசலுக்கும் பரபரப்புக்கும் நாங்கள் ஏற்கனவே பழக்கமாயிருந்தோம். ஆனால் இந்தக் கூச்சலும் கொந்தளிப்பும் எங்களுக்குத் திகைப்பூட்டின. நாங்கள் நடந்து திரிந்தோம். பேரம் பண்ணுபவர்களின் அருகே நிற்போம், அவர்களுடன் ஏதேனும் ஒட்டகத்தின் பற்களைப் பிடித்துப் பார்ப்போம், ஏதேனும் குதிரையின் நடையையும் நிலையையும் கூர்ந்து நோக்குவோம், பல நிற எருதின் விலையைப் பேசுவோம். அமன் ஆட்டுக்கடா வாங்கும் யோசனையை மறந்துவிட்டான் என்று நினைத்தேன்.

சந்தையின் கிழக்குப் பகுதியில் சச்சரவு ஏற்பட்டிராவிட்டால் அவன் இப்போதும் அதை நினைவுபடுத்திக் கொண்டிருப்பான். சச்சரவின் அரவம் கூதிர்கால மழைப்புயலுக்கு முன் அதிரும் இடி முழக்கம்போல மெதுவாகவே எங்களை எட்டியது. ஆனால் கடைசியில் எட்டியே விட்டது.

"உர் ஷெஷெந்தி!" (அடி இவனை!) என்று கஸாக்கிய மொழியில் எவனோ கூச்சலிட்டான்.

"கிஸ்ஸாவூர், கிஸ்ஸாவூர்" (ஜேப்படித்திருடன்)!

"சந்தையில் திருடன்!"

ஊதல்கள் கீச்சிட்டன. கஸாக்கும் உஸ்பேக்குமான இரண்டு போலீஸ்காரர்கள், ஒரு கையில் வாளை ஓங்கிக் கொண்டும் மறு கையால் நீலநிறமான கம்பளிக் காற்சட்டையைப் பிடித்துக் கொண்டும் இடறியவாறு அந்தப் பக்கம் ஓடினார்கள். நாங்கள் அவர்கள் பின்னே ஓடி, உடனேயே அவர்களை முந்திவிட்டோம். கூட்டத்தின் நடுவில் யாரைக் கண்டோம் தெரியுமா? சொன்னால் நம்ப மாட்டீர்கள். அமன் எனக்குச் சாட்சி: எங்கள் வட்டாரத்தின் அண்டையில் உள்ள கூகிர்மாச் வட்டாரத்தைச் சேர்ந்த, எங்கள் இருவருக்கும் நன்கு தெரிந்த திருடன் ஸுல்தான் நடுவே நின்று கொண்டிருந்தான்! ஆனால் இங்கே அவன் திருடனாக அல்ல, திருட்டுக்கொடுத்தவனாக நடித்தான்! ஆம், ஆம், தொழிற்கூட உதவி மேஸ்திரிபோல் காணப்பட்ட எவனோ அப்பாவி இளைஞனின் கழுத்தைப் பிடித்துக் கொண்டு, உயர் குடியினனுக்கு உரிய சீற்றமும் கண்ணீரும் விழிகளில் பொங்க, கூட்டத்தின் நடுவில் நிமிர்ந்து நின்றான் ஸுல்தான்.

"முஸல்மான்களே! என் பணம் திருட்டுப்போனபோது இந்த ஆள் பக்கத்திலேயே வளைய வந்து கொண்டிருந்தான்... நான் இவனைச் சந்தேகிக்கிறேன்!" என்று அழுகைக் குரலில் சொல்லி, மார்பில் ஒரு கையால் அடித்துக் கொண்டான்.

வெள்ளைத் துணிபோல வெளிறிப்போன இளைஞன் உடம்போடு நடுங்கினான்.

"ஆண்டவனே, என்னை அவதூறிலிருந்து காப்பாற்று! ஆண்டவனே, எப்பேர்ப்பட்ட சங்கடத்தில் மாட்டிக் கொண்டு விட்டேன்!" என்று முணுமுணுத்தான்.



இதற்குள் அருகே வந்துவிட்ட கஸாக்கியப் போலீஸ்காரன், "உன்னிடம் எவ்வளவு பணம் இருந்தது?" என்று ஸுல்தானிடம் கேட்டான்.

"ஐந்து கோப்பெக்குகள் குறைய எட்டு ரூபிள்களும் நான்கு தன்காக்களும். வர்ணக் கோடுகள் போட்ட சணல் மணிபர்ஸில் வைத்திருந்தேன். என் வெள்ளி மோதிரமும் அதில் இருந்தது. 'ஓ, அலி!' என்ற சொற்கள் பொறித்தது அது. நான் ஏழைச் செம்மான்... ஒரு நோஞ்சல் ஆடு வாங்கலாம் என்று வந்தேன்!"

இவ்வாறு சொல்கையில் கூட்டத்தைச் சுற்றி நோட்டமிட்டுக் கொண்டிருந்த அவன் கண்களில் நானும் அமனும் பட்டு விட்டோம்.

"இதோ, இந்தப் பையன்களும் நேரே கண்டார்கள்!" என்றான் அவன்.

என் பக்கத்தில் நின்று கொண்டிருந்த அமனுக்கு எதிர்பாராமையால் புரைகூட ஏறிவிட்டது. அவன் ஐயோ என்று கூவி, பின்னே நகர்ந்து, ஆட்களின் முதுகுகளுக்குப் பின் மறைந்து விட்டான். என்னாலோ இடத்தைவிட்டு நகரவே முடியவில்லை.

"உன்னிடம் எவ்வளவு பணம் இருந்தது?" என்று இளைஞனிடம் கேட்டான் போலீஸ்காரன்.

"என்னிடமும்... வர்ணக் கோடுகள்போட்ட சணல் மணிபர்ஸ்... பணம்... பணம் ஐந்து கோப்பெக்குகள் குறைய எட்டு ரூபிள்களும் இரண்டு தன்காக்களும். நானும் ஆடு வாங்கவே வந்தேன், சத்தியமாக."

"இதிலே எந்த விதச் சாட்சிகளும் தேவையில்லை. எங்கே, வாருங்கள் இரண்டு பேரும் பஞ்சாயத்துத் தலைவரிடம். அங்கே விஷயத்தைத் தெளிவுபடுத்திக் கொள்வோம். கூட்டம் கலையட்டும்!" என்றான் உஸ்பேக் போலீஸ்காரன்.

அவர்கள் போய்விட்டார்கள். நான் அவர்களைத் தொடர வில்லை. நான் அமனைத் தேடுவதற்கு விரைந்தேன். அவனோ, கிலி கொண்டு ஆட்டையும் என்னையும் எல்லாவற்றையும் அடியோடு மறந்துவிட்டு, கண்காணாமல் மறைந்துவிட்டான். பொழுது சாயும் தறுவாயில்தான் நான் அவனைக் கண்டு பிடித்தேன். அவனுடைய பேடித்தனத்தையும் அறிவீனத்தையும்

சக்கைச் சாறாகப் புரட்டி எடுத்தேன். அவனோ திகிலிலிருந்து இன்னும் விடுபட்டபாடில்லை.

"விவகாரம் எப்படி முடிந்தது?" என்று கேட்டான்.

"எப்படி முடிந்ததா? நல்லவேளைதான் நீ கம்பி நீட்டினாய். நீ ஜேபடித் திருடனுக்கு உடந்தையாய் இருந்தாயாம், போலீஸ் காரர்கள் உன்னைத் தேடுகிறார்கள்" என்றேன்.

"மெய்யாகவா? இப்போது நாம் என்ன செய்வது?"

"என்ன செய்வது? என்ன செய்வது?" என்று அவனைக் கோரணி செய்தேன். "ஒரு காரணமும இல்லாமல் நழுவி ஓடினாயே, அப்போது நினைத்திருக்க வேண்டும், என்ன செய்வது என்று. உன்னால் முலாம்பழமும் தர்பூஸும் கட்டண வசூல்காரனிடம் தங்கிவிட்டன!" என்றேன்.

அவன் சற்று நிம்மதி அடைந்தான்.

"எங்கே இராத் தங்குவது?" என்று கேட்டான்.

நாங்கள் அனேகச் சாயாக்கடைகளுக்குப் போய்ப் பார்த்தோம். கடைக்காரர்களும் குதிரை வியாபாரிகளும் கூவி விற்போரும் எல்லாவற்றிலும் நிறைந்திருந்தார்கள். குந்துவதற்குக்கூட இடம் இல்லை.

"நாம் எங்கேதான் போவது?" என்று மறுபடி கேட்டான் அமன்.

"பயப்படாதே. ஏதாவது வழி கண்டுபிடிப்போம்... பொறு, வழி கண்டுபிடித்துவிட்டேன் போலிருக்கிறது. போன வருஷம் என் சித்தாப்பாவும் இங்கே சந்தை நாளில் வந்திருந்தார். சாயாக் கடையில் தங்களுக்கு இடம் கிடைக்கவில்லை என்றும் எவளோ கிழவியின் வீட்டில் தங்கியதாகவும் சொன்னார்... அவள் கஸாக்கிய மாது என்று நினைக்கிறேன்... வேடிக்கையான பெயர் அவளுக்கு... ஆ, நினைவு வந்துவிட்டது: யக்ஷீ கிஸ் (நல்ல நங்கை!) அவள் வீடு சந்தையிலிருந்து வெகு தூரம் இல்லை. அவள் கூடாரத்தில் வசிக்கிறாளாம். சாராயம் காய்ச்சி விற்கிறாளாம். போவோமா அவளிடம்!"

நாய்களால் துரத்தப்படும் நரிபோல இங்குமங்கும் மிரண்டு மிரண்டு பார்த்துக்கொண்டிருந்த அமன் பேசாமல் என் பின்னே நடந்தான்.



## அத்தியாயம் 4
# இரவுக் கூட்டாளிகள்

கிழவி யக்ஷீ கிஸின் கூடாரத்தை நாங்கள் அதிகச் சிரமம் இன்றிக் கண்டுபிடித்துவிட்டோம். ஸகார்லிக் ஆற்றின் இடது கரையில், கிட்டத்திலேயே இருந்தது அது. கூடாரத்தைச் சுற்றிலும் தரை துப்புரவாகப் பெருக்கி மெழுகப்பட்டிருந்தது. பக்கத்தில் விசாலமான மண் திண்ணைமேல் முரட்டுக் கம்பளம் விரித்திருந்தது. கூடாரத்தின் அருகில் தாழ்ந்த அடுப்பு அமைந்திருந்தது. மூடியற்ற கொப்பரை அதன்மேல் வைக்கப் பட்டிருந்தது. பக்கத்திலேயே வெண்ணெய் எடுக்கும் பெரிய மரத் தொட்டி இருந்தது. சற்று தூரத்தில், கரடிவேட்டைச் சூலங்கள் இரண்டு தரையில் நாட்டப்பட்டு அவற்றில் ஒரு கயிறு இழுத்துக் கட்டப்பட்டிருந்தது. கயிற்றில் பிரம்பு உறிகளில் தொங்கின மூன்று, நான்கு மண் கிண்ணங்களும் - பாலும் பாலாடையும் நிறைந்தவை போலும் - இரண்டு சுரைக் குடுக்கைகளும் - இவற்றில் தயிர் வைத்திருக்கும். இவை எல்லாவற்றுக்கும் நடுவே துள்ளி விளையாடிக் கொண்டிருந்தது ஒரு கன்றுக்குட்டி. பல நிறக் கிழக் காவல் நாய் பாதி பட்டுப்போன வில்லோ மரத்துடன் கட்டப்பட்டிருந்தது. குத்திருமலை ஒத்த அசட்டையான குரைப்புடன் அது எங்களை வரவேற்றது. இந்தக் குரைப்பைக் கேட்டதும் கிழவி கூடாரத்துக்கு உள்ளிருந்து வெளியே வந்தாள். அவளுக்கு அறுபது வயது இருக்கும். வாரப்படாத நரையோடிய கேசத்தின்மேல் நெற்றியை மூடியபடி சிறு வண்ணத் தலைக்குட்டை கட்டியிருந்தாள். இடுப்பில் பழைய கம்பளி லேஞ்சியை வார்போலக் கட்டிக்கொண்டிருந்தாள். பின்னல் நுனிகளில் ஐந்தாறு வெள்ளி ரூபிள்களும் அரை ரூபிள்களும் அலங்காரமாகத் தொங்கின.

"ஸலாம் ஷேஷே" என்றேன் நான் ("ஷேஷே" என்றால் கஸாக்கிய மொழியில் "தாய்")

பதில் முகமன் கூறுவதற்குமுன் அவள் நாயைத் தெளிவான

ஒலிப்பற்ற எவையோ சொற்களால் "ஷப்தச் அப்த்ரஸ்குர்" என்று அதட்டினாள். நாய் குரைப்பை நிறுத்தியது. கிழவி திண்ணையைக் காட்டினாள்.

"வாருங்கள் இளைஞர்களே, இப்படி உட்காருங்கள்" என்றாள்.

நான் கண் சாடை காட்டவும் அமன் எங்கள் மூட்டையைக் கிழவியிடம் நீட்டினான்.

"சந்தையிலிருந்து உணவுப் பண்டங்கள் உங்களுக்காக" என்றேன் நான்.

"அட வேண்டாமே. எதற்காகச் சிரமப்படுகிறீர்கள்?" என்று வெளிக்குச் சொன்னாளே தவிர, மூட்டையை வாங்கிக் கூடாரத்துக்குள் கொண்டுபோனாள் கிழவி. சிறிது நேரத்துக்குப் பின் திரும்பி வந்தாள்.

"சொல்லுங்கள் தம்பிகளா. சாராயம் குடிக்கப் போகிறீர்களா அல்லது இறைச்சிக்கறி தயாரிக்கவா?" என்று கேட்டாள்.

"வேண்டாம் ஷேஷே, நாங்கள் குடிக்கவும் போவதில்லை, இறைச்சிக்கறியும் தயாரிக்க வேண்டாம். முட்டைப் பொரியல் செய்து தாருங்கள். நீங்கள் இடம் கொடுத்தால் இரவுப் போதை இங்கேயே கழிக்கிறோம்."

"நல்லது. ஆண்டவன் உலகம் விசாலமானது, வானத்திலும் தரையிலும். இது கோடைகாலம். எங்கே இஷ்டமோ படுத்து உறங்குங்கள். இரண்டு பேருக்குமாக ஒரு தன்கா கொடுங்கள்" என்றாள் கிழவி.

"ஐயோ ஷேஷே, எங்களிடம் இருப்பது எல்லாம் அரைத் தன்காதானே!" என்றேன்.

"உஸ்பெக் பையன்கள் படு தந்திரக்காரர்கள்! போனால் போகிறது இராத் தங்குங்கள். இன்று சந்தை நாள். வாடிக்கைக் காரர்கள் வருவார்கள், பணக்காரப் பிள்ளைகள். ஒரே கொம்மாளமாக இருக்கும்."

அடுப்பு மூட்டி, வராட்டிகளைப் போட்டாள். நானும் அமனும் மேலே எங்கே போவது என்று ஆலோசனை செய்தவாறு உட்கார்ந்திருந்தோம். விரைவில் கிழவி முட்டைப் பொரியலையும் புதிதாக மாவு பிசைந்து சுட்ட இரண்டு ரொட்டிகளையும் மண்



தட்டில் வைத்து எடுத்து வந்தாள். நாங்கள் ஆளுக்கு ஒரு குவளை தண்ணீர் எடுத்துக் கொண்டு சாப்பிடலானோம். முட்டைப் பொரியல் அபார ருசியாய் இருந்தது. அமன் ரொட்டித் துண்டு களால் தட்டைத் துடைத்துத் தின்னத் தொடங்கினான். அதற்குள், தங்கள் இடிச் சிரிப்பாலும் கூச்சல்களாலும் சுற்றுப்புறத்தை அதிரச் செய்தவாறு கூடாரத்திற்குள் வந்தார்கள் ஐந்து ஆட்கள். முன்னே நடந்தான் நெடிய இளைஞன். அவனது இடது தோள்மேல் இருந்தது ஆட்டின் பாதி உடல். வலது கையில் சிறு மூட்டை. ரொட்டிகளும் வெங்காயமும் காரட்டும் அதில் இருந்தன போலும். முஸ்லிம் மதப்பள்ளி மாணவன் போலத் தோன்றிய மற்றொருவன் ஆட்டுத் தாடியும் அழுக்குத் தலைப் பாகையுமாக அடுத்தாற்போல் வந்தான். மரியாதையும் நயப்பாங்கும் மெலிந்த முகத்தில் ததும்ப, ஜாக்கிரதையாக அடி வைத்து நடந்தான் அவன். இரண்டு லேசான மேலங்கிகள் அணிந்திருந்தான். ஒன்று குட்டையால் இடுப்பைச் சுற்றி உள்ளே இறுக்கப்பட்டிருந்தது. மற்றது அதற்குமேல் அணியப்பட்டிருந்தது. இவர்கள் பின்னே.. பின்னே வந்தான், ஜேபடி திருடன் ஸுல்தான்! அவன் காற்சட்டைகள் மடக்கிவிடப்பட்டிருந்தன. இடுப்புக் குட்டை தும்பு போல முறுக்கப்பட்டிருந்தது. கோடுபோட்ட மேலங்கியின் கழுத்துப்பட்டை திறந்திருந்தது. அழுக்குக் குல்லாய் விளிம்பு மடக்கப்பட்டிருந்தது... அவன் முகத்தில் இருந்த துடுக்கான, வெற்றிச் செருக்கு ததும்பிய தோற்றம் அவனை அறியாதவனுக்குக்கூட வயிற்றைக் கலக்குவதாக இருந்தது. அவனைக் கண்டதுமே எஞ்சிய இருவரை நான் மறந்தே போனேன். ஏதோ ஒரு வகையில் ஸுல்தானை ஒத்திருந்தார்கள் அவர்கள். அப்புறம் அவர்களைக் கவனமாகப் பார்த்தபோது ஒருவனுக்குக் கண்ணில் பூ விழுந்திருந்ததையும் மற்றவனுக்கு ஒரு கை இரண்டாவதை விட நீளமாயிருந்ததால் வலது தோள் இடது தோளைக்காட்டிலும் உயர்ந்திருந்ததையும் கண்டேன்.

வந்திருப்பவர்கள் யார் என்று கண்டுகொண்டதும் ரொட்டித் துண்டு அமனுடைய தொண்டையில் சிக்கிக்கொண்டது போலும். கண்கள் பிதுங்கிவிடும்போல என்னை நோக்கி பரக்க விழித்தான். திண்ணையை விட்டு ஒதுங்கிவிட வேண்டும் என்று நான் சைகையால் உணர்த்தினேன். பரட்டென்று அதிலிருந்து பாய்ந்து விட்டான் அமன். நாங்கள் ஆற்றின் கரையோரத்துக்கு நகர்ந்து,

காவல் நாய் கட்டியிருந்த வில்லோ மரத்தடியில் பதுங்கினோம். அந்த நோஞ்சல் நாயோ சுற்றும் நடப்பதைச் சற்றும் கவனிக்காமல் அசட்டையாய் இருந்தது.

"வணக்கம், ஷேஷே! இன்று ராத்திரி நாங்கள் உன் விருந்தாளிகள்! கேட்டாயா?" என்று முழங்கினான் ஸுல்தான்.

பின்பு சுற்றிலும் கண்ணோட்டியவன் எங்களைப் பார்த்துவிட்டான்.

"ஆகா, அட போக்கிரிகளா! நீங்களும் இங்கே இருக்கிறீர்களா? இங்கே என்ன செய்கிறீர்கள்? எங்கே, இப்படி வாருங்கள்!" என்றான்.

திண்ணைக்குத் திரும்புவது தவிர நாங்கள் வேறு எதுவும் செய்வதற்கில்லை. இதற்குள் ஸுல்தான் தன் நண்பர்களுடன் அங்கே வசதியாக உட்கார்ந்துவிட்டான். கிழவி அழுக்கு மேஜைத் துணியில் ரொட்டிகளைச் சுருட்டி எடுத்து வந்து திண்ணை நடுவில் வைத்தாள். பிறகு பெரிய மரக் கோப்பையை எடுத்துக் கொண்டு, "அரிசிச் சாராயம் சாப்பிடுகிறீர்களா, சாமைச் சாராயமா?" என்று ஸுல்தானிடம் கேட்டாள்.

"எது நல்லதோ அதையே கொடுங்கள்!"

கிழவி கூடாரத்துக்குள் போனாள்.

"கால்நடைச் சந்தையில் நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?" என்று ஸுல்தான் எங்களிடம் கேட்டான்.

அமன் தரையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"சும்மாதான் இப்படி, ஸுல்தான் அகா... சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தோம்" என்றேன் நான்.

"அப்படியா! சரியான இடந்தான் சுற்றிப் பார்ப்பதற்கு" என்று கண்களைச் சுரித்தான். "உங்களை என்னிடம் வேலை பழக வைத்துக் கொள்ளலாமோ, ஊம்? நீங்கள் ஒருவேளை, இதற்கு ஏற்றவர்களாய் இருக்கலாம்! இதோ இவன் இருக்கிறானே" என்று மோவாயால் அமனைச் சுட்டி, "இவன் கூரை வழியே வீட்டுக்குள் ஏறிக்குதிக்கத்தான் லாயக்கு. ரொம்ப பாங்கற்றவன், ஜேபடி வேலைக்குச் சரிப்பட மாட்டான்!" என்றான்.



வாய்விட்டுச் சிரித்தான். அவனுடைய சிரிப்பைப் பயன்படுத்திக் கொண்டு நான் பேச்சை மாற்ற முயன்றேன்.

"ஸுல்தான்-அகா, அந்தச் சச்சரவு எப்படி முடிந்தது?" என்று கேட்டேன்.

"ஹோ-ஹோ, உனக்குத் தெரியாதா என்ன? வேடிக்கையான கதை, இல்லையா?" - அவன் தன் நண்பர்களைப் பார்த்தான். அவர்கள் ஆமாம் என்று தலையாட்டினார்கள். - "இன்று காலை நாங்கள் சாயாக்கடையில் உட்கார்ந்திருந்தோம். என் திருட்டுப் பணத்தைச் சுத்தப்படுத்த, அதாவது சொந்தக்காரனின் சம்மதத்துடன் எடுத்துக் கொள்ள என்னால் முடியும் என்று வீரியம் பேசினேன், புரிந்ததா பையா? அவர்கள் பந்தயம் வைத்தார்கள். தோற்பவன் கூட்டாளிகள் எல்லோருக்கும் தன் செலவில் சாராயம் வாங்கித் தர வேண்டும் என்று தீர்மானித்தோம். ஆயிற்றா, நான் கால்நடைச் சந்தைக்குப் போனேன். பார்க்கிறேனோ, ஒரு அசமத்தன் போய்க் கொண்டிருந்தான். அவன் பணப்பையை உருவினேன், பணத்தை எண்ணிப் பார்த்தேன், என்னிடமிருந்து இரண்டு தன்காக்களையும் வெள்ளி மோதிரத்தையும் அதில் போட்டேன், பணப்பையை மறுபடி அவன் சட்டைப்பைக்குள் செருகிவிட்டேன். அப்புறம் நான் ஆடிய நாடகத்தைத்தான் நீ பார்த்தாயே! போலீஸ்காரர்கள் எங்களை பஞ்சாயத்துத் தலைவர் முன் இட்டுவந்து பணத்தை மறுபடி எண்ணினார்கள். நான் சொன்னபடியே இருந்தது. ஆகவே பணப்பை என்னிடம் கொடுக்கப்பட்டது. சன்மானப் பணமாக ஒன்றரைத் தன்கா என்னிடம் வாங்கிக் கொண்டார்கள், அவ்வளவுதான். சாமர்த்தியமான வேலை, இல்லையா?"

"சாமர்த்தியமான வேலைதான்" என்று சிரமத்துடன் முனகினேன். "அந்த ஆள்... அசமந்தன் என்ன ஆனான்?" என்று கேட்டேன்.

"ஹ-ஹா, சிறையில் தள்ளிவிட்டார்கள் அவனை, வேறு என்ன? கிடக்கிறது, கவலைப்படாதே. நான் அவன்மேல் இரக்கம் கொண்டு போலீஸ்காரனுக்கு ஒரு ரூபிள் லஞ்சம் கொடுத்து இந்த மடையனை விடுவித்தேன். எனக்கு அவன்மேல் காட்டம் எதுவும் இல்லை என்று சொன்னேன். அவன் எப்படிப் பூரித்துப் போனான் என்று நீ பார்த்தால் சொல்லுவாய். ஹ-ஹ-ஹா... என்னைத் தழுவிக் கொண்டான்... முத்தமிட்டான்... ஹெ-ஹே."

நண்பர் குழாம் முழுவதும் கடகடவென்று சிரித்து மகிழ்ந்து போயிற்று.

"சரியான வீரர்போல நடந்து கொண்டீர்கள் நீங்கள்" என்றேன் நான்.

"அப்படிச் சொல்லு" என்று என்னை ஓரக்கண்ணால் பார்த்துப் பல் இளித்தான் ஸுல்தான்.

கிழவி இறைச்சியை நறுக்கி வேகப் போட்டாள். அடுப்பிலிருந்து கிளம்பிய இளநீலப் புகை எடையற்ற போர்வை போல எங்களைப் போர்த்தது. சூரியன் அஸ்தமிக்கலாயிற்று. மேற்கே கடைசி மேகங்கள் நெருப்பாய்த் தகதகத்தன. அருகே மெல்லொளி செய்தது ஆறு. இந்தக் கும்பல் மட்டும் இல்லாமல் இருந்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்! அவர்கள் எங்களை மறந்துவிட்டவர்கள் போலத் தங்களுக்குள் ஏதோ அரட்டையடித்துக் கொண்டிருந்தார்கள் என்பது உண்மையே. ஸுல்தான் முழங்கையை ஊன்றியவாறு பாதி படுத்த நிலையில் இருந்தான். நெட்டையன் திண்ணை அருகே நின்று கொண்டிருந்தான், முல்லாபோல் இருந்தவன் திண்ணைமேல் மண்டியிட்டு அமர்ந்து கைகளை மார்பின்மேல் சேர்த்து வைத்துக் கொண்டு, ஸுல்தான் நெட்டையனிடம் பேசுவதை மிகுந்த சிரத்தையுள்ளவன் போன்ற தோற்றத்துடன் கேட்டுக் கொண்டிருந்தான். மற்ற இருவரும் எதிரெதிரே சப்பணம் கொட்டி உட்கார்ந்து தீப்பெட்டியை எறிந்து பிடித்துப் பொழுது போக்கிக் கொண்டிருந்தார்கள்.

இதற்குள் கிழவி சாராயம் நிறைத்த இரண்டு சுரைக் குடுக்கைகளையும் வர்ணம் பூசிய சில மரக் கோப்பைகளையும் கொண்டு வந்து வைத்தாள். பூஸா என்னும் இவ்வகைச் சாராயம் சூடாக்கிக் குடிக்கப்படுவதுதான் வழக்கம். ஆனால் கிழவி கொண்டுவந்த சாராயம் பகல் முழுவதும் வெயிலில் வைத்திருந்ததால் தானே சூடேறியிருந்தது. ஆகவே மறுபடி சூடாக்கத் தேவை இருக்கவில்லை. தவிர சாராயத்தைக் குவளையில் ஊற்றுவதற்கும் தனிப்பட்ட விதிகள் உண்டு: ஊற்றும்போது அது கட்டாயமாக வடிகட்டப்பட வேண்டும். நெட்டையன் தன் இடுப்புக் குட்டையை உடனே அவிழ்த்துப் பிரித்து உதறி, குவளைமேல் பரப்பி இறுக்கிக்கொண்டு சாராயத்தை ஊற்றினான். பின்பு



வடிகட்டிய சாராயத்தை ருசி பார்த்துவிட்டுக் குவளையை ஸுல்தானிடம் நீட்டினான்.

"எல்லோருக்கும் ஊற்றிக் கொடு" என்றான் ஸுல்தான்.

நெட்டையன் மற்ற இருவருக்கும் குவளைகளில் ஊற்றிக் கொடுத்துவிட்டு ஸுல்தானைக் கேள்விக் குறியுடன் பார்த்தான்.

"பையன்களை இப்போதைக்கு விட்டு வை. முல்லாவுக்கு ஊற்றிக்கொடு!" என்றான் ஸுல்தான்.

முல்லா கையை மறித்தவாறு நளினமாக மறுத்தான்:

"என்ன நீங்கள், என்ன நீங்கள்! குடியுங்கள் நீங்களே. நாங்கள் குடிப்பதில்லை. ஆண்டவன் கட்டளை என்ன என்றால்..."

"இந்தா, கட்டிவை உன் ஆண்டவன் கட்டளையை. எப்போது முதல் நீ குடிப்பதில்லை, ஊம்? வேசி வீட்டில் எங்கள் குவளைகளில் மிச்சம் இருந்ததை எல்லாம் குடித்து வெறி கொள்ளவில்லையா நீ?" என்று அச்சுறுத்தும் குரலில் சொன்னான் ஸுல்தான்.

"இல்லை, குடிப்பது உண்டுதான், ஆனால்... அதாவது... விஷயம் என்ன என்றால்... நாங்கள் சபதம் செய்திருக்கிறோம்."

"ச-பதமா? உன் சபதத்துக்கு ஏதேனும் மதிப்பு உண்டா? நீ யார் என்பதை எண்ணிப் பார்! ஸாலார் பக்கத்தில் நடந்த தானியச் சந்தையில் நான் மட்டும் குறுக்கிட்டிருக்காவிட்டால் கூட்டம் அங்கேயே உன்னைத் தீர்த்துக் கட்டியிருக்குமே! இல்லை, நீ யார் என்பதை எண்ணிப் பார்த்தாயா? திருட்டுக்கு உடந்தையாய் இருக்கக்கூட லாயக்கில்லாதவன் ஆயிற்றே நீ! திருடன் கிழவன் ஆனால் மசூதித் தொண்டன் ஆகிவிடுவான், வேசி கிழவி ஆனால் பேய்களை மந்திரம் போட்டு விரட்டத் தொடங்கிவிடுவாள் என்று சொல்வார்களே, அது மெய்தான். ஆளைப் பாரப்பா, சபதம் செய்தானாம்! ஒருவேளை இந்தக் காரணத்தால் நீ மௌல்வி ஆகிவிட்டாயோ, சீடர்களைத் தேடக் கிளம்பினாயோ? அட சே, குடியடா!"

முல்லா நடுங்கும் கையால் குவளையை எடுத்துக் கொண்டான்.

"குடித்துவிட்டு மதுப்பாட்டு பாடு. ஊம், ஆரம்பி, தீர்க்கதரிசியின் வழித் தோன்றலே!"

முல்லா முகத்தைச் சுளித்துக் கொண்டு சாராயத்தைப் பருகினான்.

எங்களைக் குடிக்கும்படி யாரும் விசேஷமாக வற்புறுத்தவில்லை.

பூஸா நிறைந்த சுரைக் குடுக்கைகள் ஒன்றன்பின் ஒன்றாகக் கொண்டு வரப்பட்டன. அரைகுறையாக வெந்த இறைச்சிக் குழம்பையும் கிழவி கொண்டு வந்து வைத்தாள். வெறியாட்டம் சூடுபிடித்துவிட்டது. முல்லா தலைப்பாகையைப் பிரித்து இடுப்பில் வரிந்து கட்டிக் கொண்டான். சாராயம் வேண்டாம் என்று மறுக்காதது மட்டும் அல்ல, தானே கேட்டுக் கேட்டு வாங்கிக் குடிக்கலானான் அவன். மற்றவர்கள் கோரியபடி ஏதோ அர்த்தமற்ற பாட்டைக் குடி மயக்கக் குரலில் பாட வேறு செய்தான்:

"ஓடிற்று மலையடியில் என் குதிரை
சாடிற்று, பாய்ந்தது சாகும்வரை
கண்டுவிட்டேன் பல வீரர்களை, களி
கொண்டிசைப்பேன், ஓடு, என் பரியே!
ஆ, மதுப்பாட்டு, இசைப்பேன் மதுப்பாட்டு!..."

கூட்டாளிகளுக்கு வர வர வெறி ஏறிக் கொண்டு போயிற்று. எல்லோரும் ஒரே நேரத்தில் பேசினார்கள். மற்றவர்கள் பேச்சை ஒருவரும் காதில் போட்டுக் கொள்ளவில்லை. நான் மெல்ல எழுந்து திண்ணையிலிருந்து இறங்கி அமனைச் சைகை காட்டி அழைத்தேன். இதை ஒருவரும் கவனிக்கவில்லை. கிழவியிடம் சிறு கம்பள விரிப்பும் தலையணையும் கேட்டுப் பெற்றுக் கொண்டு கூடாரத்துக்குப் பின்னே படுத்துக் கொண்டோம். களைத்துச் சோர்ந்து போயிருந்தோம், ஆயினும் எங்களால் வெகு நேரம்வரை உறங்க முடியவில்லை. திண்ணைமேல் குடிகாரர்களின் ஆரவாரம் வரவர அதிகரித்தது. வேறொரு கும்பலும் இந்தக் கும்பலுடன் சேர்ந்து கொண்டது. ஒரு சமயம் அவர்கள் எல்லாரும் சேர்ந்து பாடினார்கள். மறுசமயம் ஒருவரை ஒருவர் கூச்சலிட்டுத் திட்டிக் கொண்டு சிரித்தார்கள். சமீபத்தில் நாங்கள் பார்த்த கால்நடைச் சந்தையை நினைப்பூட்டியது அந்தக் கூச்சல்.



அப்புறம், பகலில் சந்தையில் நடந்தது போலவே, சச்சரவு தொடங்கிவிட்டது. அவர்கள் எவனையோ பிடித்து அடித்தார்கள். அவன் உதவி, உதவி என்று கத்தினான். கெஞ்சினான், அழுதான்:

"ஆண்டவன் சத்தியம், என்னிடம் இருப்பது எல்லாம் இவ்வளவுதான். இன்னும் பணம் என்னிடம் இருந்தால் பெரிய இமாம் என்னைத் தண்டிக்கட்டும்!"

"காற்சட்டை இடுப்பில் தேடிப் பாரடா கீழ்மகனே!"

அவர்கள் முல்லாவைக் கொள்ளையடித்தார்கள். நாங்கள் திகிலால் நடுநடுங்கியவாறு கூடாரத்தின் பின்னே படுத்திருந்தோம். எல்லாவற்றுக்கும் பழகிவிட்ட கிழவியோ, ஒன்றுமே நடக்காதது போல விருந்தாளிகளுக்கு இடையே நடமாடினாள், பாத்திரங்களை அப்புறப்படுத்தினாள், சாராயம் கொண்டு கொடுத்தாள்.

நாங்கள் எப்போது உறங்கினோமோ அறியேன். விலாவில் யாரோ இடிக்கவே திடுக்கிட்டு விழித்தேன். இன்னும் இருட்டாக இருந்தது, ஆனால் வான விளிம்பு லேசாக வெளிறத் தொடங்கியது. என் அருகே நின்று கொண்டிருந்தான் முல்லா. அவன் தலையில் மறுபடியும் தலைப்பாகை இலகியது. அது அவசர அவசரமாகக் கட்டிக் கொள்ளப்பட்டிருந்தது. தலைக்கு நாளைவிட இன்னும் அழுக்காகி இருந்தது. கன்னத்தில் பலத்த அடி தழும்பிட்டிருந்தது. ஒரு கண் தணல்போலச் சிவந்திருந்தது.

"எழுந்திரு மகனே, எழுந்திரு! அவர்கள் எல்லோரும் உறங்கிக் கொண்டிருக்கும்போதே நாம் தப்பி ஓடிவிட வேண்டும். என்னை எப்படி அடித்து நொறுக்கியிருக்கிறார்கள், பார்த்தாயா? தவிர என் பணத்தை எல்லாம் சுரண்டிப் பறித்துக் கொண்டு விட்டார்கள், மூக்குப் பொடி வாங்குவதற்குக்கூட காசு மிச்சம் வைக்கவில்லை. உங்களுக்கும் இதே விபத்து நேர்ந்துவிடக் கூடாது. எழுந்திரு மகனே, சீக்கிரம்..." - இப்படி முணுமுணுத்தவன், முகம் சுளித்தான். "ஐயோ, மண்டையிடி பொறுக்க முடியவில்லை. பழுத்த தர்பூஸ் பழம்போல அதிர்கிறது" என்று அங்கலாய்த்தான்.

நான் அமனை எழுப்பினேன். நாங்கள் துள்ளி எழுந்து ஆற்று நீரில் முகங்கழுவி மேலங்கித் தலைப்புக்களால் துடைத்துக் கொண்டோம்.

"ஐயா எங்கே போக விரும்புகிறீர்கள்?" என்று முல்லாவின் காதோடு கேட்டேன்.

"ஆ, பரம்பொருளின் உறைவிடம் மாட்சி மிக்கது. உலகத்தில் இடம் நிறைய. எங்கே திரும்பினாலும் புனித மெக்காவுக்கே போய்ச் சேர்வோம்... ஆனாலும்... ஆனாலும்... மேலே போவோம், கினகிராக்-தெப்பே மலைக்கு."

நாங்கள் கூடாரத்திற்கு அப்பால் போய்விட்டோம், அதற்குள் கிழவி யக்ஷீகிஸ் எங்கள் முன் தோன்றினாள்.

"அடே கண்களே, எங்கே நழுவப் பார்க்கிறீர்கள்? காசைக் கொடுங்கள் முன்னே!"

அமன் ஒரு தன்கா எடுத்துக் கொடுத்தான்.

"இந்தா ஷேஷே. அரைத் தன்கா இராத் தங்கியதற்கு. பாக்கி ரொட்டிக்கும் முட்டைப் பொரியலுக்கான எண்ணெய்க்கும். சரிதானா?"

அவள் முல்லாவைப் பார்த்தாள்.

"சரிதான், சரிதான்... இந்த ஊருக்கு வந்தால் இங்கே வாருங்கள். உபசரிக்கக் காத்திருக்கிறேன்" என்றாள்.

நாங்கள் நடையைக் கட்டினோம்.



## அத்தியாயம் 5
# முல்லாவும் பிணமும்

ஒரு மூன்று மணி நேரம் நடந்தபின் தேப்-குஜார் என்ற இடத்தை அடைந்தோம். பொழுது நன்றாக விடிந்துவிட்டது. மளிகைக்காரக் கிழவன் அப்போதுதான் கடையைத் திறந்தான். வழிச் செலவுக்கு வேண்டிய சாமான்களை அவனிடம் வாங்கிக் கொண்டோம்: உப்பு ஒரு ராத்தல், உலர்ந்த ஆப்ராகாட் பழங்கள் இரண்டு ராத்தல்கள், மக்காச்சோள மாவு ரொட்டிகள் ஆறு, நூல், ஊசி, கொழகொழத்த இரண்டு முலாம்பழங்கள் ஆகியன. இவை எல்லாம் பதினான்கு கோப்பெக்குகளுக்குள் அடங்கி விட்டன. எட்டு கோப்பெக்குகள் நாங்கள் கொடுத்தோம், பாக்கியை முல்லா கொடுத்தான். எங்களை ஓரப் பார்வையாகப் பார்த்துவிட்டு மேலங்கியின் ஓரத்தையலைப் பிரித்து உள்ளிருந்து பணத்தை எடுத்தான். கொஞ்சம் பணம் அவனிடம் எஞ்சியிருந்தது எனத் தெரிந்து கொண்டோம்.

மேலே நடந்து விரைவிலேயே பசிய பள்ளத்தாக்கை அடைந்தோம். பாதையின் வலப்புறம், மலையடிவாரத்தின் அருகே ஓடியது தெளிந்த நீரோடை. முதிர்ந்த பாப்ளார் மரத்தின் அடியில் ஓடை ஓரமாக உட்கார்ந்து முலாம்பழத்தைக் கூறு போட்டு ரொட்டியுடன் சாப்பிடத் தொடங்கினோம். முல்லா தன் முலாம் பழத்தைத் தின்றபடியே அவ்வப்போது என்னையும் அமனையும் நோட்டமிட்டான். முடிவில் அவனுக்குப் பேச்சு கிளம்பிற்று.

"என் அலங்கோலத் தோற்றத்தைக் காண்கிறீர்கள், குழந்தைகளே. அதிர்ஷ்டம் எப்பேர்ப்பட்ட மனிதனை உங்களிடம் அனுப்பியிருக்கிறது என்பது உங்களுக்குத் தெரியாது." - அவன் பெருமூச்செறிந்து தலையை ஆட்டினான். "உங்களுக்குத் தெரியாது, அல்லவா?" என்றான்.

அமன் வாய் நிறைய முலாம்பழத்தைத் திணித்துக் கொண்டிருந்தபடியால் பேசாதிருந்தான். நானோ, பட்டும் படாமலும் "ஹ்ம்" என்று சொல்லி வைத்தேன். எங்களுக்குத்

தெரியாதுதான், ஆனாலும் ஏதோ கொஞ்சம் உணர்கிறோம் என்று அதற்கு அர்த்தம் செய்து கொள்ளலாம்.

"இல்லை, உங்களுக்குத் தெரியாது" என்று முன்னைவிட அதிகத் துயரத்துடன் பெருமூச்சு விட்டான் முல்லா. அப்புறம் விருப்பம் இல்லாதவன்போல இன்னொரு துண்டு முலாம்பழத்தை ரொட்டியுடன் சவைத்து விழுங்கி விட்டுப் பேச்சைத் தொடர்ந்தான். "நான் மிகப் பழைய, மிகப் புகழ் பெற்ற வம்சத்தில் பிறந்தவனாக்கும்... ஆம், ஆம், மிக மிகப் புனிதமான புகாரா நகரத்தைச் சேர்ந்தவன்!... என் முன்னோர்கள் தாஷ்கந்த் நகருக்குக் குடி பெயர்ந்தபோது, தாஷ்கந்த் நகரம் முழுவதுமே இன்பப் பெருக்கால் களி துள்ளிற்று! ஆமாம் என் குழந்தைகளே, எங்கள் பாட்டனார்களும் கொள்ளுப்பாட்டனார்களும் மாண்பு மிக்க மௌலானாக்கள்! பாட்டனார்கள் வரை போவானேன்? காலஞ் சென்ற என் தகப்பனார் மிகப் பெரிய மனிதராய் இருந்தார். அவர் "குஃப்" என்க வேண்டியதுதான், ஆறு எதிர்முகமாகப் பாயத் தொடங்கும். "ஸுஃப்" என்றாரோ, குருடன் பார்வை பெற்றுவிடுவான்! ஆமாம்.. அவர்மேல் நம்பிக்கை இல்லாதவர்கள் அனேகமாகக் கிடையாது. என்னுடைய துரதிர்ஷ்டம்தான், அவர் அவ்வளவு சிறு வயதில் இறந்துபோனார்."

இவ்வாறு சொல்லி மீண்டும் சோகப் பெருமூச்சுவிட்டு, இடுப்புக்குட்டை நுனியால் கண் ஓரத்தைத் துடைத்துக் கொண்டு முன்போன்ற அதே விருப்பற்ற தோற்றத்துடன், கணிசமாகப் பெரிய இன்னொரு முலாம்பழத் துண்டைச் சவைத்து விழுங்கினான் முல்லா.

"அப்புறம் தாய் வழியில் - தாய் வழியில் மட்டும் என்ன, நாங்கள் ஆண்டவனுக்கு நெருங்கியவர்களாய் இருக்கவில்லையா? என் தாயார் இப்போதுகூடத் தன் மதபக்திக்குப் பெயர் போனவள் ஆயிற்றே. அவளால் செய்ய முடியாததே எதுவும் இல்லை! மந்திரம் போட்டுக் காதல் வசியம் செய்வாள். தம்பட்டத்தை வைத்து கொண்டும், அடுப்பில் ஏற்றிய புது மண்பாத்திரத்தை வைத்துக் கொண்டும் குறி சொல்லுவாள்! அவளுக்குத் தெரியாத சக்தியுள்ள மந்திரங்களே உலகத்தில் கிடையாது!" - இங்கே அவன் பேச்சை நிறுத்திவிட்டு என்னையும் அமனையும் கூர்ந்து நோக்கினான். "குழந்தைகளே, இது உங்களுக்குப் படிப்பினையாக இருக்கட்டும்: சின்ன வயதிலிருந்தே



பெரியவர்களிடம் கற்றுக் கொள்ள நான் விரும்பவில்லை. வெகு காலம் தாழ்த்தே சுதாரித்துக் கொண்டேன். விளைவு என்ன, பாருங்கள்: மாபெரும் மௌலானாக்களின் வம்சத்தில் பிறந்த என்னை எவர்களோ அற்பக் கயவர்கள் அடிக்கத் துணிந்து விட்டார்கள் - அவ்வளவு இழிநிலைக்கு வந்துவிட்டேன் நான்!"

அவன் மறுபடியும் இடுப்புக் குட்டையால் கண் ஓரத்தைத் துடைத்தான். கண்ணீர்ப் பெருக்கைத் தேக்கி நிறுத்த முயல்பவன் போலச் சிறிது நேரம் அங்கே ஏதோ நோண்டிக் கொண்டிருந்தான். இதில் அவனுக்கு முழு வெற்றி கிடைத்துவிட்டது. ஏனென்றால் சிறு கண்ணீர்த் துளிகூட மேற்பரப்பில் காணப்படவில்லை. முயற்சி பலித்துவிட்டதால் மகிழ்வடைந்து அவன் மறுபடி எங்களை நோக்கி, கம்பீரமாகச் சொன்னான்:

"துரதிர்ஷ்டம் என்னைக் கடுமையான சோதனைகளுக்கு உட்படுத்திற்று. ஆனால் இப்போது நான் மெய் வழியில் செல்லத் தொடங்கிவிட்டேன். என் முன்னோர்களின் மூதறிவை அல்லா எனக்குத் திரும்ப அருளிவிட்டார். மந்திரங்களாலும் தொழுகைகளாலும் நான் மக்களின் நோய்களைக் குணப்படுத்துகிறேன். பிரார்த்தனைக் காகிதங்களாலும் நோய் தீர்க்கிறேன். இது என்ன, தெரியுமா உங்களுக்கு?"

எனக்குத் தெரியும். ஆனால் அமன் தனக்குத் தெரியாது என்று மரியாதையாக ஒப்புக் கொண்டான். முல்லாவின் சொற்கள் அவன் மனதில் பெருத்த பதிவை ஏற்படுத்திவிட்டன என்று தெரிந்தது.

"ஒரு காகிதத் துண்டில் நான் பிரார்த்தனை எழுதுவேன். அப்புறம் அதைத் தண்ணீரிலோ தேநீரிலோ அரைத்துக் கலக்கி நோயாளிக்குக் குடிக்கக் கொடுப்பார்கள்... ஆயிற்றா. தவிர, வசீகரணம் செய்யவும் வசீகரணத்தைப் போக்கவும் வேண்டிய சாதனங்களை நான் அறிவேன். உண்மையில் மாபெரும் மௌலானாக்களின் வழிவந்தவனை அல்லா தன் கருணைக்கு ஆளாக்காமல் விட்டுவிடுவதில்லை!"

"நீங்கள் மதப் பள்ளியில் படித்தீர்கள், இல்லையா, முல்லா?"

"மௌலானாக்களின் மகனுக்கு மதப்பள்ளி எதற்காக? நான் வீட்டில்தான் கற்றுக் கொண்டேன். மந்திரங்கள் எழுதிய கவசங்களும் ரட்சைகளும் தயாரிக்க மதப் பள்ளியில் கற்றுத் தருகிறார்களா என்ன? நானோ, பிரார்த்தனைகள் மட்டுமே அல்ல,

மாபெரும் பெயர்கள்கூட எழுத அறிவேன்! நீங்களே பார்ப்பீர்கள். பல கிராமவாசிகள் என்னைப் பின்பற்றுபவர்கள். சிலர் என்னை "மௌலானா-பாதுஷா" என்றும் வேறு சிலர் "ஓதுவார்-தலைவர்" என்றும் இன்னும் சிலர் "முல்லா-அகா" என்றும் அழைப்பார்கள். அடே, என் முழுப் பெயர் என்ன என்பதே உங்களுக்கு இன்னும் தெரியாதே..." - அவன் நெடுமூச்சு இழுத்தான், விழிகளை உருட்டினான், "முல்லாமுஹம்மது ஷரீஃப் பின்னி முல்லாமுஹம்மது லத்தீஃப் இப்னி கவ்ஸில் ஆஜம்!" என்று ஒரே மூச்சில் கடகடவென்று ஒப்பித்துவிட்டு மறுபடி அப்பாடா என்று மூச்சிழுத்தான். அமன் ஆவென்று வாயைத் திறந்தவாறு அதிசயத்துடன் அவனைப் பார்ப்பதைக் கண்டேன். உள்ளதைச் சொன்னால், முல்லாவின் முழுப் பெயர் எனக்கும் வியப்பு ஊட்டாமல் இல்லை. இவ்வளவு நீளப் பெயரை இதற்கு முன் நான் கேட்டதே கிடையாது. ஆனாலும் தலைக்குநாள் திண்ணைமேல் நடந்த நாடகத்தை என்னால் மறக்கவே முடிய வில்லை. ஜேபடித் திருடன் ஸுல்தானுக்கு இந்த முல்லா ரொம்பத் தானே இச்சகம்பேசி அடி வருடினான்.

"நல்லது. அல்லாவே என்னை உங்களிடம் அனுப்பியிருக்கிறார் என்பதை இப்போது நீங்களே காண்கிறீர்கள்" என்று பேச்சைத் தொடர்ந்தான் முல்லா. "நீங்களே என்னோடு கூட்டு சேர்ந்து வேலை செய்ய வேண்டும். மற்றவர்களுக்கு முன்னே என்னை "ஹஜரத்" (அருளாளர்) என்று அழைக்க வேண்டும். நான் உங்களை என் சீடர்கள் என்று அழைப்பேன் - இஸ்லாம் மதக் கோட்பாடுகளையும் உங்களுக்குக் கற்பிப்பேன்! இதற்கு நீங்கள் ஒப்பினால் இலையுதிர் காலத்துக்குள் நம்மிடம் பணம் ஒன்றுக்குப் பத்தாகப் பெருகும், நல்ல துணிமணிகளும் செருப்பு ஜோடுகளும் கிடைக்கும், எல்லாம் வேண்டிய அளவு பெறலாம், திகட்டத் திகட்டச் சாப்பிடலாம், தவிர கௌரவத்துடன் ஊர் திரும்பலாம். என்ன சொல்கிறீர்கள், சம்மதமா? அப்படியானால் நினைவு வைத்துக் கொள்ளுங்கள்: ஒருவரும் பக்கத்தில் இல்லாத போது என்னை 'முல்லா-அகா' என்றோ 'ஷரீஃப்ஜான்-அகா' என்றோ நீங்கள் அழைக்கலாம். ஆனால் மற்றவர்களுக்கு எதிரே 'ஹஜரத்' என்று மட்டுமே அழைக்க வேண்டும்! கிடைக்கிற பணம், சாமான்கள், இவற்றை நான்காகப் பங்கிடுவோம். எனக்கு இரண்டு பங்குகள், உங்களுக்கு ஆளுக்கு ஒரு பங்கு. கொடுத்த வாக்கை



மீறுபவன் புனித மெக்கா பக்கம் திரும்பவே முடியாதவன் ஆவானாக! ஆமென்!"

நாங்கள் மெக்கா பக்கம் திரும்பி நின்று கொண்டு சத்தியம் செய்தோம். அப்புறம் தொழுகை படிக்க நேரம் ஆகிவிட்டது என்று முல்லா சொன்னான். நாங்கள் முழந்தாள் படியிட்டுக் குனிந்து நிமிரத் தொடங்குவதற்குள் பாதையில் புழுதிப் படலம் கிளம்பக் கண்டோம். புழுதிப் படலம் வர வர எங்களை நெருங்கிற்று. முடிவில் குதிரைச் சவாரி செய்பவனின் நிழலுரு படலத்தினூடாகத் தெரிந்தது. அவன் குடியானவன்போலக் குதிரைச் சவாரி செய்வதைத் தொலைவிலேயே கண்டு கொண்டோம். அவனுடைய மேலங்கி விளிம்புகள் காற்றில் பறந்தன. குல்லா பின் மண்டைப் பக்கம் சரிந்தது. குதிரையின் உடம்பெல்லாம் நுரைத்திருந்தது. எங்கள் அருகே வந்ததும் சவாரிக்காரன் அதைச் சிரமத்துடன் நிறுத்தினான்.

"ஸலாம் அலேய்க்கும், முல்லா-அகா, எங்கே போகிறீர்கள்?"

நாங்கள் மரியாதையாக அவனுக்குப் பதில் வணக்கம் தெரிவித்தோம். எங்கள் பயணத் திட்டங்களை அவனிடம் விவரிக்கவில்லை. ஆனால் அவனது அக்கறை முற்றிலும் வேறு விஷயத்தில் இருந்தது.

"இஸ்லாம் மத விதிகளின்படி பிரேதத்தைக் குளிப்பாட்டி இறுதிச் சடங்கு செய்துவைக்கக் கூடிய யாராவது பக்திமான் உங்களில் இருக்கிறாரா?" என்று கேட்டான் அவன்.

முல்லா எங்களைப் பார்த்தான். நாங்கள் அவனுக்குத் தலை வணங்கினோம். பிறகு அவன் பெருமிதத்துடன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு கம்பீரமான தோரணையில் பதில் அளித்தான்:

"இருக்கிறார். நாம் எவ்வகையில் உதவ முடியும்? நாம் தாஷ்கந்த் நகரவாசி. மௌலானா வம்சத்தினர். மதப்பள்ளியில் கல்வி பயின்றோம். இப்போது விடுமுறை. எனவே, தூய காற்றைச் சுவாசிப்பதற்காக, கிராமம் கிராமமாகச் சுற்றி வருகிறோம். இவர்கள் எமது மாணவர்களில் இருவர்..."

சவாரிக்காரன் சந்தோஷம் காரணமாகச் சேணத்தில் இருப்பு கொள்ளாமல் தவித்தான். முல்லா தன் ஆடம்பரப் பேச்சை

முடிக்கும் வரை காத்திருக்கவே அவனுக்குப் பொறுமை இல்லை. சொர்க்கப் பூங்காவின் சுற்றுச் சுவரில் இரகசிய வழியைக் கண்டு விட்டவன் போலக் களி துள்ளினான் அவன்.

"ஆகாகா, பெரியோர்களே, ரொம்ப சந்தோஷம். ஆண்டவனே உங்களை அனுப்பியிருக்கிறான்! சீக்கிரம் போவோம்!..." - அவன் குதிரையைத் திருப்பினான். அப்புறந்தான் விஷயம் என்ன என்று விவரித்தான்.

"பெரியவரே, நாங்கள் கால்நடை மேய்ப்பர்கள். எங்கள் தங்கிடம் இங்கிருந்து கொஞ்ச தூரத்தில் இருக்கிறது. எங்கள் ஆட்களில் ஒருவன் நோய்ப்பட்டு இறந்துபோனான். அவனை முழுக்காட்டி, அவன் ஆன்ம சாந்திக்காகத் தொழுகை படிக்க யாரும் இல்லை. என்ன செய்வது என்று எங்களுக்குத் தெரியவில்லை... ஆகாகா, பெரியவரே, ஆண்டவரேதான் உங்களை அனுப்பியிருக்கிறான்... நல்லது, வாருங்கள் போவோம்!"

அமன் விரிப்பை மடித்து எடுத்துக்கொண்டான். சவாரிக்காரன் குதிரையிலிருந்து இறங்கி, முல்லாவைச் சேணத்தின்மேல் உட்கார வைத்தான். நாங்கள் மூவரும் நடந்தோம். வழி மிக நீண்டது. இரண்டொரு முறை நாங்கள் இளைப்பாறினோம். மலை ஒன்றின் உச்சியிலிருந்த தொலைவில் மேய்ப்பர்களின் தங்கிடத்தைக் கடைசியில் கண்ணுற்றோம். மண்சுவர் சூழ்ந்த பழைய கோட்டை. அதன் அருகே சில கூடாரங்கள்.

"அதுதான் எங்கள் தங்கிடம்! கூடாரங்கள் தெரிகின்றனவா? விரைவில் அங்கே போய்ச் சேர்ந்துவிடுவோம்!" என்றான் எங்கள் வழிகாட்டி.

நடுப்பகல் தறுவாயில் அங்கே போய்ச் சேர்ந்தோம். இந்த மேய்ப்பர்களின் ஊர் ஸ்தெப்பியின் நடுவில், இங்கிருந்து வெகு தொலைவில் இருந்தது. அவர்களுடைய குடும்பங்களும் கால் நடைகளும் இப்போது அங்கேயே இருந்தன. ஒரு மேய்ப்பன் நோய்ப்பட்டு விட்டான். அவன் நிலைமை மிகவும் மோசமானதும் ஒரு இருபது இளைஞர்களும் சில முதியவர்களும் அவனை இங்கே கொண்டுவந்தார்கள். அவனுக்கு அந்திமச் சடங்கு செய்துவைக்கக் கூடியவன் எவனும் ஸ்தெப்பியில் இல்லை. வழியிலேயே அவன் இறந்து போனான்.



நாங்கள் அருகே நெருங்கியதும் எல்லோரும் கூச்சலுடன் எழுந்து, மரியாதையைக் காட்டும் முறையில் கைகளை மார்புறச் சேர்த்து வணக்கம் கூறி வரவேற்றார்கள். "காலமானவன் எங்கே?" என்று மிடுக்குடன் கேட்டான் முல்லா. பிணம் கோட்டைக்குள் இருந்தது. கோட்டையின் உட்புறம் ஜமீன்தாரின் கால்நடைப் பட்டி போல இருந்தது. வெகு சில திறப்புக்கள் கொண்ட திண்ணிய சுவர்களும் இரட்டைக் கதவுகளும். முகப்பு வெளியின் நடுவே சிறு குளம் காணப்பட்டது. தரைக்கீழ் ஊற்றுக்களிலிருந்து தண்ணீர் அதில் நிறைந்ததுபோல் தோன்றியது. குளக்கரை பாசி படர்ந்திருந்தது. தண்ணீரில் கூடச் சில இடங்களில் பாசி தெரிந்தது. சில இளம் பாப்ளார் மரங்கள் குளத்தைச் சூழ்ந்திருந்தன. பழைய பாப்ளார் மரங்கள் வெகு காலத்துக்கு முன்பே வெட்டப்பட்டுவிட்டன. அவற்றின் அடிமரத் துண்டு களிலிருந்து வளர்ந்திருந்தன இள மரங்கள். கோட்டை பழங்காலத்தது. அச்சந்தருவது. பிணத்துக்கு ஏற்ற இடம்.

நானோ அமனோ வாழ்நாளில் ஒரு தரங்கூடப் பிணத்தை முழுக்காட்டியதில்லை என்று நீங்களே ஊகித்துக் கொண்டிருப்பீர்கள். நான் கோழை அல்ல. ஆனால் பிணங்கள் மேல் எனக்கு ஒரே பயம். செத்த பூனைகளைக்கூடப் பார்க்காதிருக்க முயல்வேன். எங்கள் வட்டாரப் பையன்கள் செத்த பூனைகளை எவ்வளவு வேண்டுமானாலும் வால்களைப் பிடித்துத் தூக்கிப் போகத் தயாராயிருந்தார்கள். நானோ, கிட்டத்திலேயே போக மாட்டேன். ஆனால் முல்லா, பிறந்தது முதல் பிணங்களை முழுக்காட்டுவது தவிர வேறு எந்த வேலையும் செய்யாதவன் போன்ற தோற்றத்துடன் துணிச்சலாக முன்னே நடந்தான். ஒவ்வோர் அடியிலும் ஏதோ முணுமுணுத்தான். அடிக்கடி முகத்தைக் கைகளால் தடவிக் கொண்டான். ஏதோ சுருக்கமான பிரார்த்தனையை ஜெபிப்பவன் போன்ற பாவனையுடன் "குஃப்-ஸுஃப்!" என்ற தனக்குப் பிடித்த சொற்களை உச்சரித்தவாறு பல்வேறு திசைகளில் திரும்பினான். நான் அவனைத் தொடர்ந்து சென்றேன். மந்திரங்களுக்குப் பதில் சர்வசாதாரணமான சொற்களை அவன் முணுமுணுப்பது என் காதில் விழுந்தது: "அப்பா, என்ன வெக்கை!... இறைச்சி வதக்கலும் புலவும் மட்டும் இப்போது கிடைத்தால் எவ்வளவு நன்றாயிருக்கும் குழந்தைகளே... குஃப்-ஸுஃப்! ஐயோ, நிறையப் பணம் அருள்... குஃப்-ஸுஃப்!"

ஆனால் அவன் ஒரு கை வீச்சால் நூறு பேய்களை விரட்ட உண்மையிலேயே வல்லவன் போலத் தோன்றியது.

பிறகு முல்லா அமனை அழைத்துச் சவச்சீலை கேட்டு வாங்கும்படிக் கட்டளையிட்டான். அமன் மேய்ப்பர்களைக் கேட்டான். அவர்கள் ஒரு நான்கு கெஜம் கைத்தறித் துணியைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். முல்லா மறுபடி அமனை அழைத்து ஏதோ உத்தரவிட்டான். அமன் அந்த உத்தரவைக் கூடியிருந்தவர்களுக்கு அறிவித்தான். எல்லோரும் கோட்டைக்கு வெளியே போய் விடும்படியும், அதன் பக்கத்திலேயே வராதிருக்கும்படியும் சொன்னான் அவன். முழுக்காட்டு முடியும் வரை உள்ளே பார்க்கக்கூடாது என்றும் பார்ப்பவர்களுக்கு ஆபத்து என்றும் எச்சரித்தான். எவனாவது உள்ளே பார்த்தால் அவனுக்குப் பயங்கரமான பாவம் சேரும் என்றும் விளைவாக அவன் மடிந்தபின் அடக்கம் செய்யப்படாமல் போவான் என்றும் ஹஜரத் கூறுகிறார் என்றான். இன்னும் பெரிய துன்பங்களும் நேரலாம் என்று அச்சுறுத்தினான்.

எல்லோரும் இடித்துத் தள்ளிக்கொண்டு வெளியே ஓடிவிட்டார்கள். நாங்கள் வாயில் கதவை மூடித் தாழ்ப்பாள் போட்டோம். முகப்பில் கிடந்த பெரிய கற்பாளத்தைத் தூக்கிவந்து ஆட்டங்கண்ட கதவுக்கு அண்டை கொடுத்தோம். முல்லா எங்களைப் பார்த்தான், நாங்கள் அவனைப் பார்த்தோம்.

"இப்போது என்ன செய்யப் போகிறோம்? நீங்கள் எப்போதாவது பிணத்தை முழுக்காட்டியது உண்டா?" என்று முல்லா கேட்டான்.

"கிடையாது" என்று ஒரே குரலில் சொன்னோம் நாங்கள்.

"நல்ல சங்கடந்தான்! நானும் முழுக்காட்டியதில்லை. ஆனால் பத்து ரூபிள்கள் கொடுக்க வேண்டும் என்று அவர்களிடம் பேசி வைத்துவிட்டேனே! முழுக்காட்டாவிட்டால், தொலைந்தது பணம்..." - அவன் ஒரு கணம் பேசாதிருந்துவிட்டு, "இதிலே ஐந்து ரூபிள்கள் நான் எடுத்துக் கொள்வேன், ஆளுக்கு இரண்டரை ரூபிள்கள் நீங்கள் எடுத்துக் கொள்வீர்கள்" என்று சந்தர்ப்பத்தை நழுவ விடாமல் நினைவுபடுத்தினான்.

"சரி. ஆனால் முழுக்காட்டை நீங்களேதான் நடத்த வேண்டும்" என்றேன் நான்.



முல்லா தலையை ஆட்டிவிட்டு, பிணம் கிடந்த அறைக்குப் போனான். நாங்கள் தயக்கத்துடன் அவன் பின்னே சென்றோம். பிணம் மல்லாக்கக் கிடந்தது. அதன் முகமும் வயிறும் பழைய மேலங்கியால் மூடப்பட்டிருந்தன. கால்கள் திறந்திருந்தன. முல்லா முன்னே அடி வைத்தவன் அக்கணமே பின்வாங்கினான். எனவே நானும் அமனும் அவன்மேல் மோதிக் கொண்டோம். உதடு வரை வந்த வசவைச் சிரமத்துடன் அடக்கிக் கொண்டு நாக்கைக் கடித்துக் கொண்டான் முல்லா. நான் இதைக் கவனித்தேன். என் திகில் இன்னும் அதிகம் ஆயிற்று. இறந்தவனின் புலப்படாத ஆவி அறைக்குள் நின்று எங்களைக் கவனிப்பதுபோல எனக்குத் தோன்றியது. மார்புக்குள் என் இருதயம் இரவுக் காவல்காரனின் அடிகட்டைபோல விரைவாக உரக்க அடித்துக் கொண்டது.

அமன் நுனிக்கால்களால் நடந்து முன்னே போய், பிணம் என் பார்வையில் படாமல் மறைத்தான். திடீரென அவன் பின்னே நகர்ந்து வீரிடத் தொடங்கியவன் யாரோ கழுத்தை நெரித்து விட்டதுபோல மௌனமாகித் தரையில் சாய்ந்தான். முல்லா துள்ளி விலகி வாயிலோடு ஒண்டிக் கொண்டான். நானோ, கிலியால் இடத்தை விட்டு அசையவே இயலாதவனாக, இறந்தவனை உற்றுநோக்கி, ஓவென்று அலறினேன். இறந்தவன் உயிர் பெற்றுவிட்டான்! ஆம், ஆம், கால்கள் அசைவற்றுக் கிடந்தன, ஆனால் முகத்தை மூடியிருந்த மேலங்கியை அசைத்தவாறு தலையைத் தூக்க அவன் முயன்றான்! இதுதான் அமனுக்குத் திகில் ஊட்டியது. கிலியால் அவன் உணர்வு இழந்துவிட்டான்...

என் இருதயம் வெடித்துவிடும்போல் இருந்தது. நான் ஓடுவதற்காகத் திரும்பியவன் சிற்றறையின் தரையில் நீண்டு கிடந்த அமனின் கை தடுக்கிக் குப்புற விழுந்தேன். விழும்போது நான் முல்லாமேல் இடித்து விட்டேன். அவனும் உறுதியின்றி நின்று கொண்டிருந்தான் ஆகையால் சரிந்து விழுந்தான். நாங்கள் எழுந்திருப்பதற்காகத் தட்டுத் தடுமாறினோம். முடிவில் நான் எப்படியோ எழுந்து நெருக்கிப் புகுந்து வாயிலுக்கு வெளியே போய் முகப்பு வெளியில் தாவிக் குதித்தேன். முல்லா என் பின்னே தவழ்ந்து வந்தான். நான் அறையைத் திரும்பிப் பார்த்தேன். பெருந்திகில் என்னைப் பற்றிக் கொண்டது. கரகரத்த குரலில் "ஆட்களே! ஆட்களே!" என்று வீரிட்டுக் கத்தினேன்.

என் கூச்சலைக் கேட்டு இறந்தவனின் இனத்தவர்கள் கலவரம் அடைந்து வாயில் கதவுகளை இடித்துத் திறக்க முயன்றார்கள். ஆனால் கனத்த கற்பாளம் அண்டை கொடுக்கப்பட்டிருந்ததால் கதவுகள் திறக்கவில்லை. பக்கத்தில் போய்க் கற்பாளத்தை அகற்ற வேண்டும் என்ற எண்ணம் அச்சம் காரணமாக எனக்குத் தோன்றவில்லை. தோன்றியிருந்தாலும் என்னால் அகற்ற முடிந்திருக்காது. முல்லாவோ, குளத்துக்குத் தவழ்ந்து போய் நாற்ற நீரால் முடிவின்றி முகங்கை கழுவிக் கொள்ளலானான். வெண்பனிபோல வெளிறி இருந்தான் அவன். எவையோ பிரார்த்தனைகளைப் படித்தவாறு முழு மூச்சாகத் தன்மேல் ஊதினான்.

முடிவில் சில ஆட்கள் கோட்டை மதிற்சுவர் ஏறி உள்ளே குதித்து, மற்றவர்களுக்குக் கதவுகளைத் திறந்துவிட்டார்கள். நடந்தது என்ன என்பதை நான் அவர்களுக்கு மூச்சுத் திணற விவரித்தேன். பயத்தால் அவர்களுடைய விழிகள் தெறித்துவிடும் போல ஆகிவிட்டன. ஆனால் இறந்தவன்மேல் அவர்கள் எங்களைக் காட்டிலும் உளமார்ந்த பரிவு கொண்டிருந்தார்கள். எனவே அச்சத்தை அடக்கிக் கொண்டு அறையை நோக்கி நடந்தார்கள். நான் மிகுந்த சிரமத்துடன் அவர்கள் பின்னே போனேன். அறை வாசலருகே நாங்கள் கூட்டமாகச் செறிந்தோம். அதற்குள் ஏதோ ஒன்று மேலங்கியை இழுத்துக் கொண்டு எங்களை நோக்கிப் பாய்ந்தது. எல்லோரும் கூச்சலிட்டார்கள். அதுவோ, காட்டுப்பூனை! அது அறைக்குள் போய்ப் பிணத்தின் தலையருகே உட்கார்ந்திருக்கிறது. நாங்கள் உள்ளே நுழைந்ததும் கலவரம் அடைந்து மேலங்கிக்கு உள்ளிருந்து வெளியே வர முயன்றிருக்கிறது. அதைக் கண்டுதான் பிணம் தலையைத் தூக்குகிறது என்று நாங்கள் நினைத்துவிட்டோம்...

பூனை கண்மூடிக் கண் திறப்பதற்குள் சுவற்றின்மேல் பாய்ந்து ஏறி மறைந்துவிட்டது. அதனுடன் ஒட்டிக் கொண்டிருந்த மேலங்கி சுவற்றின்மேல் தொங்கிற்று. பாவம், இறந்தவனின் இனத்தவர்கள் ஒருவரை ஒருவரும் எங்களையும் பார்த்தார்கள். பின்பு ஹோ-ஹோ-ஹோவென்று உரக்கச் சிரித்தார்கள். முல்லாவை வைத்துக் கொண்டு பார்த்தால், எங்கள் முகத்தோற்றத்தைக் கண்டு அந்த இழவு வேளையில்கூடச் சிரிப்பை அடக்குவதே முடியாது என்று எனக்கு நிச்சயமாகப் பட்டது.



எங்களை ஏற இறங்கப் பார்த்துவிட்டு, மேலும் மேலும் சிரித்தபடியே அவர்கள் மறுபடி வெளியே போய்விட்டார்கள். முல்லாவும் நானும் வாயில் கதவுகளை மறுபடி இழுத்துப் பூட்டிக் கற்பாளத்தை அவற்றின் மேல் சார்த்தினோம். அமனுக்கு என்ன நேர்ந்தது என்று கவனிப்பது அவசியமாயிருந்தது. அவன் இன்னும் சுய உணர்வுக்கு வரவில்லை. நாங்கள் அவனை அறையிலிருந்து தூக்கி வந்து குளத்தின் கரையில் உட்கார்த்தி, அவன் முகத்தில் தண்ணீர் தெளிக்கத் தொடங்கினோம். அப்போதுதான் அவன் உணர்வு அடைந்தான். முல்லா அவன்மேல் ஊதி, "இதோ... இதோ சொஸ்தம் ஆகிவிடும்... பொறு, பொறு... இதோ..." என்று ஏதோ மந்திரம் போடலானான். அமன் தானே செத்துப் பிழைத்தவன் போலத் தோற்றம் அளித்தான். நீலம்பாரித்து வெளிறிய முகத்தில் வெறித்து உருட்டி விழித்தன கண்கள். கைகள் முறிந்த கிளைகள் போலத் தொங்கின.

"எழுந்திரு, எழுந்திரு! விழித்துக் கொள்! என்ன இது, அழுக்கு அப்பிய குழந்தைபோல உட்கார்ந்திருக்கிறாய்? வெறும் பூனை அப்பா நீ பார்த்தது! இறந்தவன் கட்டைபோல விறைத்துக் கிடக்கிறான்!" என்றேன்.

அப்போதுதான் அமனுக்குப் பேச்சு வந்தது.

"இல்லை, எனக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது. நீங்களே எல்லாம் செய்து கொள்ளுங்கள்" என்று ஈனக் குரலில் சொன்னான்.

நான் முல்லாவைப் பார்த்தேன்.

"இஸ்லாம் மத விதிகளின்படி பிண முழுக்காட்டை மூன்று பேர் சேர்ந்தே செய்ய வேண்டும். இது உனக்குத் தெரியாதா என்ன?" என்றேன்.

எப்படியோ அவனை இணங்கச் செய்து கைகொடுத்துத் தூக்கி நிற்கவைத்தோம். பிறகு ஒருவரை ஒருவர் ஊக்கப்படுத்தியவாறு மறுபடி அறை வாசல் வரை போய் ஒருவர் மாற்றி ஒருவராக உள்ளே எட்டிப் பார்த்தோம். அப்புறம் நான் முல்லாவையும் அமனையும் நோக்கிக் கூறினேன்:

"வாருங்கள் வேலை தொடங்குவோம். இல்லாவிட்டால் ஆட்கள் பொறுமை இழந்து தாங்களே இங்கே வந்து

விடுவார்கள்..." - அவர்கள் இருவரும் பேசாதிருக்கவே, நான் மேலே சொன்னேன் : "முழுக்காட்டும் தலைமைப் பொறுப்பை ஹஜரத் ஏற்பார். நாம் இருவரும் தண்ணீரை ஊற்றுவோம். ஹஜரத் பிணத்தை நன்றாகத் தேய்த்துக் கழுவினால் ஆண்டவனின் பயங்கர நீதிமன்றத்தில் இது கணக்கில் எடுத்துக் கொள்ளப்படும். நமக்குப் பணம் வேண்டாம். அடக்கச் சடங்கில் கொடுக்கப்படும் துணித்துண்டு மட்டுமே போதும். சரிதானா?"

அமன் இசைவு தெரிவிக்கும் பாவனையில் தலை ஆட்டினான். ஆனால் முல்லா மறுத்தான்.

"ஆ அதுதான் இல்லை. சின்னவர்கள் உழைக்க வேண்டும், பெரியவர்கள் மரியாதை பெற வேண்டும். உடலை நீங்கள் தேய்த்துக் கழுவுங்கள், நான் நீர் ஊற்றுகிறேன். அதோடு உங்களுக்காகப் பிரார்த்தனையும் செய்கிறேன்" என்றான்.

"பிரார்த்தனை செய்ய எங்களுக்கும் முடியும். உங்கள் பிரார்த்தனையை உங்களுக்கே வைத்துக் கொள்ளுங்கள். ஒப்புக் கொண்டுவிடுங்கள் முல்லா. மரியாதையாக இசையுங்கள். இல்லாவிட்டால் நான் இறந்தவனின் இனத்தாரை அழைத்து ஒரு விஷயத்தை அவர்களிடம் சொல்லுவேன்..."

"சரியான வார்த்தை" என்றான் அமன்.

முல்லா வகையற்ற எரிச்சலுடன் எங்களைப் பார்த்தான்.

"இப்படிச் சூழ்ச்சி செய்யத் திட்டம் இட்டிருக்கிறீர்களா? கூட்டாளிகள் இப்படித்தான் நடந்து கொள்வார்களோ? நல்லது, போவோம். நான் பிணத்தில் கால்களைப் பிடித்துக் கொள்கிறேன், நீங்கள் தலையைப் பிடித்துக் கொள்ளுங்கள், தூக்கிப் போவோம்."

"அதுதான் இல்லை, முல்லா. கால்பக்கம் நாங்கள் பிடித்துக் கொள்வோம், தலைப்பக்கம் நீங்கள்!"

வெளியே உள்ளவர்களுக்குக் கேட்காதபடி இரகசியக் குரலில்தான் நாங்கள் வாதம் செய்தோம். வாயில் கதவுகளுக்கு வெளியே இருந்த எவனுக்காவது எங்கள் பேச்சு காதில் விழுந்திருந்தால், நாங்கள் கெட்ட ஆவிகளை விரட்டுவதற்காகத் தீவிரமாக மந்திரம் போடுகிறோமாக்கும் என்று அவன்



எண்ணியிருப்பான். ஆனால் ஒருவரும் உற்றுக் கேட்கவில்லை. இறந்தவனை எடுத்துச்செல்லப் பாடை கட்டுவதில் ஆட்கள் முனைந்திருந்தார்கள்.

நாங்கள் இன்னும் வெகுநேரம் சச்சரவிட்டிருப்போம். ஆனால் திடீரென்று அமனுக்கு ஒரு யோசனை உதித்தது.

"இருங்கள். ஒரு நாலைந்து கஜ நீளக் கயிறு கிடைத்தால் நன்றாய் இருக்கும்" என்றான்.

"உனக்கு எதற்குக் கயிறு?"

"எனக்கு ஒரு யுக்தி தோன்றியிருக்கிறது, அதற்குத்தான்!... போ, தேடு."

நாங்கள் சவுக்கைகளில் துருவித் தேடினோம். எங்கள் அதிர்ஷ்டம், ஒரு சவுக்கையில் பழைய கவணையில் கட்டியிருந்தது கம்பளிக் கயிறு, சுமார் ஏழு அல்லது எட்டு கஜ நீளம் உள்ளது. அதை அறுத்து எடுத்துக் கொண்டு சவ அறைக்குத் திரும்பினோம். முல்லா கைகளைத் தேய்த்தபடி ஏதோ முணுமுணுத்துக் கொண்டு பக்கத்தில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தான். தன் சொந்த யோசனையால் ஏற்பட்ட மகிழ்ச்சியில் அமனுக்குத் துணிச்சல்கூட வந்துவிட்டது. உறுதியாக அடி வைத்து அறைக்குள் போய் முல்லாவை அழைத்து சவத்தின் கால்களை உயர்த்தும்படி கூறினான். முல்லா சற்று சண்டித்தனம் செய்தான். அப்புறம் பிணத்துக்கு முதுகைக் காட்டியவாறு நின்று வலிப்பு வந்தவன் போல உடலை நெளித்து, எருக்குழி வண்டுகள் ஒரு பத்தை விழுங்கிவிட்டவன்போல முகத்தை சுளித்துக் கொண்டு, இறந்தவனுடைய பாதங்களைப் பற்றித் தூக்கினான். அமன் சட்டென அவற்றின் அடியில் கயிற்றை நுழைத்து, சுருக்கிட்டு, சவத்தின் கணுக்கால்களுக்கு மேலே இழுத்து இறுக்கினான். அமன் கட்டளையிட்டதும் நாங்கள் மூவரும் கயிற்றின் மறு நுனியைப் பிடித்துக் கொண்டு பிணத்தைக் குளத்துக்கு இழுத்துப் போனோம்.

"எப்படி என் யோசனை? அருமையானது, அல்லவா? இப்போது இதைத் தலைகீழாகக் குளத்தில் விட்டு ஒரு மூன்று தடவை அலசுவோம், அவ்வளவுதான்! இது சுத்தம் ஆகிவிடும்!" என்று குளத்தை நெருங்கியதும் சொன்னான் அமன்.

"ஆண்டவன் அருள்க! உண்மையிலேயே இவன் சுத்தம் ஆகி விடுவான்!" என்றான் முல்லா.

நாங்கள் மேற்கொண்டு எதுவும் பேசாமல் கயிற்றைப் பிடித்துக் கொண்டு பிணத்தைத் தண்ணீரில் இறக்கிக் குளத்தின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்கு இழுத்து அதை அலசத் தொடங்கினோம். இந்த வேலை எங்களுக்குச் சுவையாய் இருந்ததால் மூன்று தடவைகள் அல்ல, பத்து தடவைகளுக்குக் குறையாமல் அலசினோம். தேர்ந்த பிணமுழுக்காட்டி எவனும் தன் வேலையை இதைவிட நேர்த்தியாகச் செய்திருக்க மாட்டான் என்ற முழு நம்பிக்கையுடன் கடைசியில் அலசுவதை நிறுத்தினோம். இப்போது பிணத்தை வெளியே எடுக்க வேண்டியிருந்தது. கயிற்றை மெல்ல மெல்ல இழுக்கத் தொடங்கினோம். ஆனால் அது எதிர்பாராவிதமாக விறைப்பாயிற்று. பிணம் மேற்கொண்டு அசையவில்லை. அடித்தளத்துடன் ஒன்றிவிட்டதுபோல ஆகிவிட்டது. நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம். அமன் மறுபடி வெளிறிப் போனான். முல்லாவோ, "உதவி செய், ஆண்டவனே, காப்பாற்று, ஆண்டவனே" என்று ஜெபித்தவாறு கயிற்றை மேலும் மேலும் இழுத்தான். நான் என் வசமின்றியே வெளி வாயில் பக்கம் நோக்கினேன்.

"உதவிக்கு ஆட்களை அழைப்போமா?" என்று கேட்டவன், அது என்ன அசட்டுத்தனமான கேள்வி என்பதை அக்கணமே உணர்ந்தேன்.

"மூடா, உனக்கு என்ன மதி மயங்கிவிட்டதா? உனக்கு ஆட்கள் எப்படி உதவுவார்கள், தெரியுமோ?.... கத்துவதில் செலவிட நினைத்த சக்தியைக் கயிற்றை இழுப்பதில் ஈடுபடுத்து" என்றான் அமன். நாங்கள் பாப்ளார் அடிமரத்தில் கால்களை ஊன்றியவாறு மறுபடி இழுக்கலானோம். அதற்குள் வாயில்கதவு தட்டப்பட்டது. முல்லா கயிற்றை விட்டுவிட்டான்.

"சற்றுப் பொறுங்கள்! நாங்கள் இன்னும் இடுப்புவரை கூடக் கழுவி ஆகவில்லை. கழுவியதும் நாங்களே கூப்பிடுகிறோம்!" என்று கத்தினான்.

அவன் மறுபடி கயிற்றைப் பிடித்துக் கொண்டான். நாங்கள் இழுத்தோம். ஆனால் அந்துப் பூச்சி அரித்து நைந்து போயிருந்த



கயிறு சடக்கென்று அறுந்துவிடவே நாங்கள் மூவரும் பின்னே சரிந்தோம். தாமதிக்க நேரமோ இல்லை. பொழுது சாயும் தறுவாய் ஆகிவிட்டது.

"முல்லா! உடைகளைக் களையுங்கள். குளத்தில் இறங்க வேண்டியிருக்கும்! ஐந்து ரூபிள்கள் சும்மா கிடைத்துவிடுமா உங்களுக்கு?" என்றேன்.

முல்லாவின் உடம்பெல்லாம் பச்சை பாரித்துப் போயிற்று.

"அட நாய்க்குட்டி! உனக்கும் இதேபோன்ற முழுக்காட்டு கிடைக்குமாக, அதுவும் சீக்கிரத்தில்! உடை களையும் எண்ணமே எனக்கு இல்லை. என்ன சொல்கிறாய், ஊம்?" என்றான்.

"சொல்கிறேன். ஆனால் உங்களிடம் அல்ல. இதோ வாயிலுக்குப் போகிறேன், அங்கே..."

நான் வாக்கியத்தை முடிப்பதற்குள் முல்லா வசவும் திட்டுமாக உடை களையத் தொடங்கினான். துணிச்சல் அடைந்துவிட்ட அமனும் அவன் பின்னே நீரில் இறங்கினான். இருவரும் அடித்தளத்தைத் துழாவலானார்கள். முடிவில் பிணத்தின் கால்கள் நீருக்கு மேல் தெரிந்தன. அதன் தலை பாப்ளார் வேர் வளைவில் மாட்டிக் கொண்டிருந்தது. எங்கள் கயிற்று நுனியை கால்களில் இருந்த அறுந்த பகுதியுடன் முடிந்தான் அமன். முல்லாவும் அமனும் கரையேறினார்கள். நாங்கள் மறுபடி இழுக்கத் தலைப்பட்டோம். முடிவில் பிணம் அசைந்து கொடுப்பதாக உணர்ந்தோம். நெறுநெறுவென்ற ஓசையும் வேறு ஏதோ விந்தையான பயங்கர ஒலியும் கேட்டன. பிணம் மேற்பரப்புக்குத் துள்ளி வந்தது. நாங்கள் மறுபடி தரையில் விழுந்தோம். பரபரப்புடன் எழுந்து பார்க்கிறோமோ, அப்பாவிப் பிணம் தலை இல்லாமல் மிதக்கக் கண்டோம்!

இந்தக் கோரத்தைப் பார்த்து நாங்கள் அயர்ந்துபோய் உட்கார்ந்துவிட்டோம். இனி என்ன செய்வது? அப்போது முல்லா எதிர்பாராவகையில் உண்மை வீரத்தைக் காட்டினான். அவன் மறுபடி குளத்தில் இறங்கி, கையால் நீருக்குள் வேர்களுக்கிடையில் துழாவி, முகத்தை ஒரேயடியாகச் சுளித்துக் கொண்டு அறுந்த தலையை வெளியே எடுத்தான். நானும் அமனும் மறுபக்கம் திரும்பிக் கொண்டோம். எங்களுக்குக் குமட்டல் எடுத்தது. முல்லாவோ, எங்கள் சாமான்களில் தேடி, நாங்கள் வாங்கியிருந்த

நூலையும் ஊசியையும் எடுத்துக் கொண்டான். உடலைக் குளத்திலிருந்து வெளியேற்றும்படி எங்களுக்கு கட்டளை இட்டான். பின்பு தலையை உடலுடன் பொருத்தித் தைக்கத் தொடங்கினான்! இந்த வேலையில் தான் கைதேர்ந்தவன் என்று அவன் மெய்ப்பித்தான். நூலை ஆறாக முறுக்கி மளமளவென்று லாவகமாகத் தையல் போட்டான். சற்றுநேரத்தில் தலை அதன் இடத்தில் பொருந்திவிட்டது... இப்போது அவன் பாவங்கள் எல்லாவற்றையும் மன்னிக்க நான் தயாராய் இருந்தேன். துணியைப் பிரிக்கச் சொல்லி ஒரு நொடியில் சவச்சீலை தைத்துவிட்டான். பிணத்தின் உடல் மூடப்பட்டது. ஆனால் துணித்துண்டு நீளம் போதவில்லை. கால்கள் திறந்திருந்தன. எங்கள் கயிறு இறுக்கிய பதிவுகள் அவற்றில் தெரிந்தன. அப்போது நாங்கள் எங்கள் பயணப் பையைச் சட்டெனக் காலி செய்து அதிலிருந்த சாமான்களை இடுப்புக் குட்டையில் கட்டிக் கொண்டோம், பையால் பிணத்தின் கால்களை மூடி, சவச்சீலையுடன் அதைச் சேர்த்துத் தைத்துவிட்டோம்.

அமன் உடைகளை அணிந்து கொண்டான். முல்லாவும் அவ்வாறே செய்து, தலைப்பாகையை மறுபடி கட்டிக் கொண்டு, மேலங்கியைச் சரிப்படுத்திக் கொண்டான். பின்பு வெள்ளிக் கிழமைத் தொழுகை படிப்பவன் போன்ற தோற்றத்துடன் பிணத்தின் பக்கத்தில் நின்று கொண்டு எனக்குச் சைகை காட்டினான். நான் கற்பாளத்தை அப்புறப்படுத்தினேன். பாவம், சித்திரவதை செய்யப்பட்ட இறந்தவனின் இனத்தவர்கள் அழுது அரற்றுவதற்கு ஏற்கனவே தயாராயிருந்தார்கள். வாயிலுக்கு வெளியே அப்போதுதான் மிலாறுகளால் பின்னி நீண்ட கட்டைகளுடன் இணைக்கப்பட்டிருந்த பாடை வைத்திருந்தது. கட்டைகள் வண்டி நுகத்தடிகள் போலிருந்தன. அவற்றில் இரண்டு குதிரைகள் பூட்டப்பட்டிருந்தன.

இறுதிச் சடங்கில் கலந்துகொள்ள இருந்தவர்கள் கோட்டைக்குள் பாய்ந்து வந்தார்கள். அவர்கள் பிணத்தைச் சூழ்ந்து கொண்டு முறைப்படி ஒப்பாரி வைக்கத் தொடங்கினார்கள். சந்தர்ப்பத்துக்கு ஏற்ப ஓலமிட்டார்கள். சிலர் துக்கத்துடன் சவச்சீலையை வருடினார்கள். எவனோ ஒருவன், தலை இருந்த இடத்தைத் தடவினான் - உடனேயே ஆச்சரியக் கூக்குரலிட்டான். பிணம் மல்லாக்கக் கிடந்தது. ஆனால் முகம் இருக்க வேண்டிய இடத்தில் பின்மண்டை இருந்தது!

நான் கல்லாய்ச் சமைந்து போனேன். முல்லா அறுந்த தலையை அவசரத்தில் முகம் கீழாக வைத்துத் தைத்துவிட்டான்!

இனத்தாரின் கும்பல் அனைத்தும் அக்கணமே ஓலமிடுவதை நிறுத்திவிட்டு முல்லாவின் அருகே குழுமி அவனையும் எங்களையும் நெட்டித் தள்ளத் தொடங்கிற்று.

"ஏய், அவன் முகம் ஏன் கீழ் நோக்கி இருக்கிறது?" என்று ஒருவன் கேட்டான்.

முல்லா வெளிறிப்போய் நின்று கொண்டிருந்தான், ஆனால் அப்போதும் மனங்கலங்கவில்லை.

"அல்லாவின் சித்தம் அப்படி. வாழ்நாளில் இவன் நிறையப் பாவங்கள் செய்திருப்பான். அதனால்தான் அல்லா இவன் தலையைத் திருப்பிவிட்டார்!" என்று விதிக்குத் துயரத்துடன் முடிவணங்குபவன் போன்ற பாவனையில் கைகளை விரித்தான்.

நான் அச்சத்தால் நடுநடுங்கினேன் என்றாலும் முல்லாவின் கலங்கா மனவுறுதியையும் அவனுடைய சமயோசித புத்தியையும் வியந்து பாராட்டினேன். பலர் முகங்களில் ஆத்திரத்துக்குப் பதில் குழப்பம் தென்பட்டதைக் கண்டதும் விபத்து விலகிவிட்டது என்றுகூட நினைத்தேன். அதுதான் பிசகு! வெயிலில் கறுத்த இந்த மேய்ப்பர்கள் எளிதில் எதையும் நம்பிவிடும் வெகுளிகள் அல்ல என்பது விரைவில் தெளிவாயிற்று.

"எங்கே, சவச்சீலையைத் தையல் பிரிப்போம்!" என்று ஒருவன் கத்தினான். அவ்வளவுதான். முல்லாவின் சட்டைக்கையை விடாது பிடித்துக்கொள்ள மறக்காமல் கூட்டத்தினர் எல்லோரும் மறுபடி பிணத்தின் பக்கம் திரளாகச் சென்றார்கள். துணித் தையலைப் பிரித்ததுமே கழுத்தில் போட்டிருந்த தையல் வெளியே தெரிந்தது. அப்போது அவர்கள் எல்லாரும் ஒரு மொத்தமாகப் போட்ட கூப்பாட்டில் பழைய கோட்டைச் சுவர் அக்கணமே தகர்ந்து விழுந்துவிடும்போல் இருந்தது. கூட்டம் முழுவதும் முல்லாமேல் பாய்ந்தது. எங்களை அவர்கள் கணப்போது கவனிக்காமல் விட்டுவிட்டார்கள். நாங்கள் திகிலால் எல்லாவற்றையும் மறந்துவிட்டு, அவர்கள் கைகளுக்கும் கால்களுக்கும் இடையே புகுந்து நழுவி,

நீர்ப்பாசியிலிருந்து தவளை துள்ளுவதுபோல் முகப்பிலிருந்து துள்ளி வெளியே ஓடினோம். சில ஆட்கள் எங்களைத் துரத்திக் கொண்டு வந்தார்கள். ஆனால் இந்த மேய்ப்பர்கள் தங்கள் வாழ்க்கையின் பெரும் பகுதியைக் குதிரைச் சவாரியிலேயே கழித்தவர்கள். சொந்தக் கால்களால் ஓடுவதில் இவர்களுக்கு லாவகம் பற்றாது. எங்களுடன் இவர்கள் போட்டி போடுவது எங்கே? விரைவிலேயே எங்களுக்கும் அவர்களுக்கும் இடையே தூரம் கணிசமாக அதிகரித்தது. ஆனால் அவர்களுக்குக் குதிரைகளின் நினைவு வந்துவிடலாம். வந்தால் நாங்கள் தொலைந்தோம். இத்தகைய சந்தர்ப்பங்களில் ஆளுக்கு ஒரு பக்கமாக ஓடுவதே மேல். வட்டாரப் பையன்களின் இந்த மூதறிவை நான் வெகுகாலமாகவே பெற்றிருந்தேன். "இடப்புறம் ஓடு!" என்று அமனிடம் சொல்லிவிட்டு நான் வலப்புறம் ஓடினேன். துரத்திவந்தவர்களின் ஓட்ட வேகம் மட்டுப்பட்டது. அவர்கள் வரவரப் பின்தங்கினார்கள். ஓடும்போதே நான் முல்லாவைப்பற்றி நினைத்தேன். அவனுக்கு என்ன நேர்ந்திருக்கும்? உயிர் பிழைத்தால் எப்போதாவது சந்திப்போம். இல்லாவிட்டால் - ஆண்டவனே, அவன் ஆன்மா சாந்தி அடைவதாக...



## அத்தியாயம் 6

# ஓடிப்போனவனுக்கு நேர்ந்த விந்தை நிகழ்ச்சிகள்

அமன் எந்தப் பக்கம் ஓடினானோ எனக்குத் தெரியவில்லை. நான் தூரத்தில் தெரிந்த நாணல் புதர்களை நோக்கி ஓடினேன். என் உள்ளுணர்வு என்னை ஏமாற்றிவிடவில்லை. புதர்களின் ஊடே சென்றது குறுகிய ஒற்றையடிப்பாதை. அது விரைவில் வடிகால் ஒன்றில் போய் முடிந்தது. நான் வடிகாலில் குதித்து ஒருபுறம் ஊர்ந்து போய் ஒடுங்கிக் கிடந்தேன். துரத்திவந்தவர்களின் கனத்த அடியோசைகளும் ஓட்டத்தினால் மூச்சுத் திணறும் குரல்களும் என் காதுக்கு எட்டின. அவர்கள் நாணல்களுக்கு இடையே சற்று தூரம் ஓடியபின் இது வீண் வேலை என்று தீர்மானித்துத் திரும்பிப் போய்விட்டார்கள். காலடியோசைகளும் குரல்களும் தூரத்தில் சென்று அடங்கின. ஆனாலும் எச்சரிக்கையாக நான் இன்னும் சிறிது நேரம் அசையாமல் கிடந்தேன். இதற்குள் இருட்டத் தொடங்கிற்று. பரிச்சயம் அற்ற அந்த இடத்தில், இருட்டில் யார்மீது மோதிக் கொள்வோம் என்று தெரியாத நிலையில் இரவைக் கழிப்பது எனக்குக் கொஞ்சமும் உவப்பாய் இல்லை. நான் மறுபடி மேலேறி ஒற்றையடிப் பாதையை அடைந்தேன். அது நாணல்களின் ஊடாக வளைந்து வளைந்து சென்றது. ஓர் இடத்தில் என் கால்களுக்கு அடியே நளுக்கிட்டது. எல்லாவற்றுக்கும் சிகரம் வைத்தாற்போலப் புதைசேற்றில் வேறு மாட்டிக் கொண்டு விடுவேனோ என்று விலவிலத்துப் போனேன். ஆனால் ஒற்றையடிப்பாதையில் மறுபடி உலர்ந்த தரை வந்தது. அது படிப்படியாக மேலே ஏறுவதை உணர்ந்தேன். திடீரென்று நாணல்கள் முடிந்துவிட்டன.

சற்று தூரத்தில் சில மரங்கள் வளர்ந்திருந்தன. நான் அவற்றை நோக்கிப் போனவன் சாலையை அடைந்தேன். இது என்ன சாலை, எங்கே இட்டுச் சென்றது என்பது எனக்குத் தெரியவில்லை. இந்த வழியாக நாங்கள் முன்பு நடக்கவில்லை என்பது மட்டும் எனக்கு

நிச்சயமாக நினைவு இருந்தது. நடந்திருந்தால் இருட்டில்கூட [illegible] அடையாளம் கண்டுகொண்டிருப்பேன். சுற்றுமுற்றும் பார்வையை செலுத்தியபின் நாணல்களுக்கு முதுகைக் காட்டியவாறு [illegible] எதிர்த்திசையில் நடக்கலானேன். தொடக்கத்தில் குதிரைக் குளம்பொலிகள் கேட்பதுபோல எனக்கு ஓயாமல் பிரமை உண்டாயிற்று. நான் அச்சத்துடன் இங்குமங்கும் பார்த்தேன். இந்தப் பாதை மேய்ப்பர்கள் தங்கிடங்கள் வழியாகப் போகவே இல்லை என்று எனக்கு நம்பிக்கை உண்டாயிற்று. இந்த எண்ணம் எனக்கு ஆறுதல் அளித்தது. இருட்டில் மேலும் மேலும் நடந்தேன். கால்களுக்கு அடியில் புழுதி மெதுவாக மூச்சுவிட்டது. வானில் சுடர்ந்தன விண்மீன்கள். அமன் எங்கே ஓடியிருப்பான், மேய்ப்பர்கள் அவனைப் பிடித்துவிட்டார்களோ ஒருவேளை என்று எண்ணமிட்டேன். முல்லாவுக்கு என்ன நேர்ந்திருக்கும் என்று நினைக்கவே எனக்கு பயமாய் இருந்தது. இப்படி எவ்வளவு தூரம் நடந்தேனோ தெரியாது. எனக்கு முன் சில விளக்குகள் தெரிந்தன. அவை தொடுவானை ஒட்டியிருந்த விண்மீன்கள் என்று முதலில் எண்ணினேன். ஆனால் இது தவறு என்பதை விரைவில் புரிந்து கொண்டேன். அது ஒரு குடியிருப்பு, கணிசமாகப் பெரியதுகூட.

வீதி வழியே சிறிது தூரம் நடந்தபின் விளக்கொளி நிறைந்த கட்டிடம் ஒன்றைக் கண்டேன். ஒரு சீரான குரல்களின் ரீங்காரம் அதிலிருந்து வந்தது. அது மசூதி. கடைசி மாலைத் தொழுகை அங்கே நடந்து கொண்டிருந்தது. நான் அதற்குள் மெதுவாக நுழைந்து தொழுகை படிப்பவர்களுக்கு நடுவே ஓசைப்படாமல் மண்டியிட்டு அமர்ந்தேன். அதற்குள் தொழுகை முடிந்து விட்டது. எல்லோரும் வெளியே போகத் தொடங்கினார்கள். நான் மட்டும் சுவற்றில் சாய்ந்தவாறு உட்கார்ந்திருந்தேன். இமாமும் ஸூஃபியும் என்னைச் சந்தேகத்துடன் பார்த்தார்கள். (இந்த மசூதியில் நமுதாத் துணியையும் தொழுகை விரிப்புக்களையும் தலைக்கு நாள்தான் யாரோ திருடிப் போய் விட்டார்கள் என்று அப்புறம் தெரிந்து கொண்டேன்.)

"என்ன மகனே, வெகு நேரமாக உட்கார்ந்திருக்கிறாயே? தொழுகை முடிந்துவிட்டதே" என்றார் ஸூஃபி.

"அத்தாஜான். நான் வெளியூர்க்காரன், கொஞ்சம் வழி தவறி விட்டேன். நீங்கள் அனுமதித்தால் காலைவரை மசூதியில்



இருந்துவிட்டுப் போகிறேன்" என்று முறையிடும் குரலில் சொன்னேன்.

இமாம் பேச்சில் குறுக்கிட்டார்.

"எங்கிருந்து வருகிறாய், மகனே?"

"பெரியவரே, நான் தாஷ்கந்த்வாசி."

"ஓ, அப்படியா? இந்த வட்டாரத்தில் என்ன செய்கிறாய்? இங்கே எப்படி வந்தாய்?"

முல்லாவின் சொற்களை நான் நினைவுபடுத்திக் கொண்டேன்.

"நான் மதப்பள்ளி மாணவன். இப்போது விடுமுறை. ஆகவே வேலை செய்து சம்பாதிப்பதற்காகக் கிராமங்களில் சுற்றி வருகிறேன்" என்றேன். இங்கேயும் பிணத்தை முழுக்காட்டும் வேலை செய்ய நேர்ந்துவிடுமோ என்று பெருமூச்சுடன் எண்ணினேன்.

"எந்த மதப்பள்ளி மாணவன் நீ? உன் ஆசான் யார்?"

சங்கடத்தில் மாட்டிக் கொண்டோம் என்று புரிந்து கொண்டேன். தாஷ்கந்தில் எதற்காவது பஞ்சமில்லை என்றால் மதப்பள்ளிக்குத்தான். இடறி விழுந்த இடமெல்லாம் மதப்பள்ளி, எதிர்ப்படுபவர்கள் எல்லாம் ஆசான்கள். ஆனாலும் எனக்கு எந்த ஆசானையும் தெரியாதே. கதை கட்டுவதற்கோ, நேரம் கடந்துவிட்டது.

"அந்தப் பெரிய மதப்பள்ளி இருக்கிறது அல்லவா, அதுதான் அந்த முல்லா ஆசானாய் இருக்கிறாரே, அவர்தான், பெயர் பெற்ற முல்லா..."

இமாம் வாய்விட்டுச் சிரித்தார்.

"அப்படிச் சொல்லு, மதப்பள்ளி மாணவா. நீ எங்கே கல்வி பயின்றாய் என்பதைத் தெரிந்து கொண்டேன். மதப்பள்ளியில் அல்ல, புளுகுச் சாலையில். கிடக்கட்டும், என்னோடு வா. ஆமாம், உன் வயிறு எப்படி இருக்கிறது? ஓலமிடவில்லையா அது?"

நான் கூச்சத்துடன் தலை கவிழ்ந்து தொழுகை விரிப்பை நோக்கினேன்.

"புரிகிறது... அதற்கென்ன, போவோம் வா. எங்களுக்கு ஒரு சிறு உதவி செய், சாப்பாட்டுக்கு வகை கிடைத்துவிடும்."

நான் என்ன வேலை செய்ய வேண்டியிருக்கும் என்று ஊகிக்க முயன்றவாறு இமாமின் பின்னே சென்றேன். அவர் முதலில் சாப்பிட ஏதாவது கொடுப்பாரா என்பது பற்றியே முதன்மையாக எண்ணமிட்டேன். தணலில் சுட்ட இரண்டு மக்காச்சோளக் கொண்டைகளும் மண் கிண்ணத்தில் கொஞ்சம் உளுத்தங் கஞ்சியும் கொண்டுவந்து கொடுத்தார் இமாம். நான் அவக்கையுடன் அவற்றைத் தின்பதில் முனைந்தேன். அவர் பின் கட்டுக்குப் போனார். சற்று நேரம் பொறுத்து அவர் வெளியே வந்தார். கோடரியும் பெரிய கத்தியும் முறுக்குக் கயிறும் அவர் கைகளில் இருந்தன. இதைக் கண்டதும் நான் விதிர்விதிர்த்துப் போய் வேட்டை நாய்களைக் கண்ட மான்போல ஓடிவிட எத்தனித்தேன். இமாம் கேலியாகச் சிரித்தார்.

"நீ என்ன தம்பி? பயப்படாதே. கழுத்தைச் சீவிவிட மாட்டேன். விஷயம் என்ன தெரியுமா? என் காளைமாடு மட்டுமீறித் தின்று நோய்ப்பட்டுவிட்டது. எந்த நேரத்திலும் அது மண்டையைப் போட்டுவிடலாம். இவற்றை எல்லாம் எடுத்துக் கொண்டு தொழுவத்தின் பக்கத்தில் படுத்துக் கொள் - இந்தா பருத்தித் துணிப் போர்வை. கோடரி, கத்தி, கயிறு, இவற்றைத் தலைமாட்டில் வைத்துக் கொள். தூங்காமல் விழிப்புடன் இரு. காளைமாடு மூச்சுத் திணறுவது காதில் பட்டதும் அதன் குரல் வளையில் கத்தியைச் செருகிவிட்டு வந்து என்னை எழுப்பு. புரிந்து கொண்டாயா? தூங்கி மட்டும் போய்விடாதே. இல்லாவிட்டால் காளை பாவியாக மரிக்கும். அந்தக் குற்றம் உன்னைச் சாரும்!" என்றார்.

"புரிந்து கொண்டேன், பெரியவரே! கொஞ்சம் தேநீர் கிடைக்குமா?" என்றேன்.

"அரைக்கால் ராத்தல் தேயிலை விலை ஐந்து கோப்பெக்குகள். உனக்குத் தேநீர் எதற்கு, ஓடையில் நீர் ஏராளமாயிருக்கும்போது? ஓடை வரை போகச் சோம்பலாய் இருந்தால், இதோ கை கழுவுவதற்காகக் குடத்தில் தண்ணீர் வைத்திருக்கிறது. அதிலிருந்து எடுத்துக் குடிக்கலாம்..."

நான் மனத்தாங்கல் கொள்ளவில்லை. கொடுத்த வேலை அளவு மீறிக் கடினமாய் இல்லை என்பதில் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாயிருந்தது. இமாம் மறுபடி பின்கட்டுக்குப் போய்விட்டார். நான் பருத்திப் போர்வையை விரித்துப் படுத்து வானத்தைப் பார்வையிடலானேன். இளங்காற்று வீசிற்று. வீட்டின் அருகேயும் சுற்றுச் சுவரை ஒட்டியும் இருந்த மரங்கள் அசைந்தாடின, சலசலத்தன. தொழுவத்தில் இருந்த கால்நடைகள் எப்போதாவது அசைந்தவாறு செருமின. எனக்கு நேர் மேலே இருந்த மூன்று பெரிய விண்மீன்கள் மீது நான் பார்வையை நாட்டினேன். விழிகளை அப்புறம் இப்புறம் திருப்ப எனக்கு அச்சமாய் இருந்தது. தலையற்ற முண்டத்தின் நிழல் மெதுவாக என்னை நெருங்குவதையோ, அல்லது பக்கத்துக் கிளைகள் எதிலேனுமிருந்து அறுபட்ட கருந்தலை என்னை நோக்குவதையோ காண நேரிடலாம் என்று எனக்குத் தோன்றியது... ஏற்கனவே நடுநிசி ஆகிவிட்டது. காலமானவன் தன் பிணத்துக்கு இழைக்கப்பட்ட தீங்குகளுக்குப் பழி வாங்க இதை விடத் தகுந்த சமயத்தைத் தெரிந்தெடுக்க முடியாது. உடம்பை ஒரேயடியாகக் குறுக்கிக் கொண்டு முடிந்தவரை குறைவான இடத்தை வியாபித்தவாறு படுத்திருந்தேன். ஆனால் காலமானவன் அன்று நான் பட்டதைவிடக் குறைவாகத் தொல்லைப்படவில்லை. எனவே மிகவும் களைத்துப் போயிருந்தான் போலும். என்னிடம் அவன் வரவேயில்லை. நான் உறங்கிவழிவதை உணர்ந்தேன். ஏதோ திடீரென்று ஏற்பட்ட சத்தத்தால் விழித்துக் கொண்டேன். பொழுது புலரும் தறுவாய். தொழுவத்தில் எதுவோ தரையில் பொத்தென்று விழுந்து ஈழை இழுக்கத் தொடங்கிற்று.

"அட சனியனே, தூங்கிப் போய்விட்டேன் போலிருக்கிறதே" என்று நினைத்து சிடுக்கு விழுந்த கயிற்றைத் தூக்கிக் கொண்டு காளையை "நீ செத்துத் தொலை!" என்று திட்டினேன்.

ஆனால் நான் திட்டியது வீண் என்று ஓடும்போதே எண்ணினேன். தொழுவத்தின் இருட்டில் ஏதோ ஒரு மிருகம் கால்களை உதைத்துக் கொண்டிருந்தது. அப்படியானால் இன்னும் உயிரோடிருக்கிறது என்று தெரிகிறது என்று மகிழ்வுடன் நினைத்து, கைதேர்ந்த கசாப்புக்கடைக்காரன் போல் (கசாப்புக் கிடங்கிற்குப் பையன்களான நாங்கள் அடிக்கடி போய்ப் பார்ப்பது வழக்கம்), மாட்டின் கொம்புகள் இருக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றிய இடத்தில் இடது கையை நீட்டி,

வலது கையால் கத்தியை வீசினேன். காளையோ ஏற்கனவே சாகும் நிலையில் இருந்தது, எனவே நான் பயப்படுவதற்கு ஒன்றும் இல்லை. என் வெறுங்கை இலக்குத் தப்பிவிட்டது. நான் விலங்கின் நெற்றியில் கையை ஊன்றிக் கொண்டேன். ஆனால் கத்தி வேகத்துடன் நேரே அதன் குரல்வளையில் பாய்ந்தது. குருதி தாரையாகப் பீச்சி அடித்து என் தலைமுதல் கால்வரை நனைத்து விட்டது. பாவம் அந்தப் பிராணி கடைசி முறையாக பெரிய கொதிகலத்தின் குழாய்போல உரக்க மூச்சுவிட்டது. பின்பு திணறியவாறு கால்களை இழுத்து உதைத்தது. அப்புறம் எல்லாம் அடங்கிப் போயிற்று.

காளை சாகும் தறுவாயில் தம்மை அழைக்கும்படி இமாம் சொல்லியிருந்தார். ஆனால் நானே காரியத்தைச் செவ்வனே நிறைவேற்றிவிட்டேன். காலை ஆவதற்கு இன்னும் நேரம் இருந்தது. எனவே நானும் இமாமும் தூங்குவதே சரி என்று முடிவு செய்தேன். ஒரு பெரிய கவலை எனக்கு விட்டுவிட்டது. நான் விரிப்பில் படுத்து அக்கணமே அயர்ந்த இனிய, நிம்மதியான உறக்கத்தில் ஆழ்ந்துவிட்டேன். அந்தோ, விழிப்பு எனக்கு எத்தகைய அதிர்ச்சியைக் கொடுத்தது! விலாவில் பயங்கரமான உதை படவே என் தூக்கம் கலைந்தது. எனக்கு என்ன நேர்ந்தது என்பதைக் கலவரம் காரணமாக இன்னும் உணராமலே கண்களைத் திறந்தேன். சாக்குப்பை போலத் தொங்கிய மேலங்கி அணிந்து கைக்கு ஒன்றாக இரண்டு பிரமாண்டமான மண்கட்டி களை வைத்துக் கொண்டு அருகே நின்றார் இமாம். அவர் முகம் ஒரேயடியாகக் கோணியிருந்தது. கண்கள் தெறித்து விழுந்துவிடும்போல் உக்கிரமாக உருட்டி விழித்தன. நான் எழுந்திருப்பதற்குள் அவர் பெரு வலிமையுடன் மண்கட்டியால் என் மண்டையில் அடித்தார். எனக்குக் கொடிய வலியும் மனத்தாங்கலும் உண்டாயின.

“இது என்ன பெரியவரே! ஏழை அகதிப் பையனை எதற்காக அடிக்கிறீர்கள்? உபகாரம் செய்ததற்கா? ஐயோ அம்மா, ஐயோ, ஐயோ, ஐயோ!...'' என்று வீரிட்டேன். கண்ணீர் என் விழிகளிலிருந்து பொங்கிப் பெருகியது.

“அட, பாழாய்ப் போகிறவனே!" என்று கத்தி இரண்டாவது மண்கட்டியையும் என் தலையில் போட்டு உடைக்க முற்பட்டார் அவர். ஆனால் இம்முறை நான் எச்சரிக்கையாக விலகிவிட்டேன்.



எனவே அடி முதுகுக்குக் கீழேதான் பட்டது. "அட, நாசமாய்ப் போகிறவனே!'' என்று எச்சிலைத் தெறித்தவாறு தம் சொற்களாலேயே மூச்சுத் திணற இரைந்தார் இமாம். "நீயும் உன் உபகாரமும் மண்ணாய்ப்போக! அட பாவி, கயவாளிப் பயலே, உன் அப்பனுக்குச் செய் இந்த மாதிரி உபகாரம்! சைத்தான் மகனே, உன் கழுத்தையே அறுத்துக் கொண்டிருந்தால் மேலாயிருக்குமே! என் கழுதையின் குரல்வளையை அறுத்து விட்டாயே, படுபாவி! கொன்றுவிட்டாயே என் கழுதையை! கழுதையை! கழுதையை!" - ஒவ்வொரு தரம் "கழுதை" என்று சொல்லும்போதும் அவர் மொத்திய மொத்தில் நான் வலி பொறுக்க முடியாமல் கலியாண எக்காளம்போல ஊளையிட்டேன். “எங்கிருந்துதான் வந்து சேர்ந்தாய் நீ எனக்கு வினையாக?'' - பரிதாபம் பொங்கிய இந்தக் கேள்வியைத் தொடர்ந்து விழுந்தது இன்னொரு மடாரடி. “இந்தக் கழுதையைப் புனித புஹாரா நகரத்தில் அல்லவா வாங்கினேன்! ஆ-ஆ-ஆ!" - இந்த நினைவு வந்ததும் இன்னொரு தரம் மட்டென்று என் பிடரியில் ஒரு போடு போட்டார் இமாம். “மூன்று தங்க ரூபிள்கள் விலையாகக் கொடுத்தேனே!" - இதற்கும் நான் அடி வாங்கி ஈடுகட்ட நேர்ந்தது. “ஐயோ, எப்பேர்ப்பட்ட கழுதை அது, எப்பேர்ப்பட்ட கழுதை! ஐயையோ!" - தமது சோகத்தின் அடையாளமாக அவர் என்னைப் பலங்கொண்ட மட்டும் புடைத்து நொறுக்கலானார். பலமோ அவரிடம் நிறைய இருந்தது.

நடந்தது என்ன என்பதைப் புரிந்து கொள்வது கஷ்டமாயில்லை. தரையில் புரண்டு கொண்டிருந்த கழுதையை நோயுற்ற காளை என்று இருட்டில் தப்பாக எண்ணி, அதன் கழுத்தை அறுத்துவிட்டேன் நான். காளையோ இதற்குள் இயல்பாக மரணம் அடைந்துவிட்டது. மழமழப்பான பக்கங்களும் குறுகிய கழுத்தும் உள்ள குடத்துக்குள் விழுந்து விட்ட சுண்டெலிபோல நான் ஒரே கிலியுடன் நாற்புறமும் மிரண்டு மிரண்டு பார்த்தேன். அடியும் உதையும் முடியுமென்றே தோன்றவில்லை. ஓடித் தப்புவது அவசியமாய் இருந்தது. தொழுவத்தின் முகட்டில் சார்த்திவைக்கப்பட்டிருந்த ஏணி அப்போது என் கண்ணில் பட்டது. இறந்த கழுதையின் சேணமும் பின் வார்ப்பட்டையும் முகட்டின் மேல் உலர்வதற்காக நிமிர்த்துப் போடப்பட்டிருந்தன. இமாமின் கைகளுக்கு அடியில் சடக்கெனக் குனிந்து நழுவி ஏணியை நோக்கிப் பாய்ந்து,

படியேறும் நாய்போலப் பரபரவென்று அதன்மேல் ஏறினேன். இமாம் என்னை விரட்டிக்கொண்டு வந்தார். ஆனால் அதற்குள் நான் முகட்டின் மேல் ஏறிவிட்டேன். ஏணியைக் காலால் உதைத்துத் தள்ளிவிடப் போனேன். அதற்குள் பழிவாங்கும் வெறி என்னை ஆட்கொண்டுவிட்டது. என்னை வதைத்த இமாமுக்கு ஓர் அடியாவது திருப்பிக் கொடுக்கத் தீர்மானித்தேன். சேணத்தைச் செந்தூக்காகத் தூக்கி இமாமைக் குறிவைத்து எறிந்தேன். ஆனால் சேணங்கூட, தன் எஜமானனைக் கொன்றதற்கு என்னை மன்னிக்க விரும்பவில்லை போலும். இந்த வாய்ப்பையே அது எதிர் பார்த்திருந்தது போலும். விழும்போது அதன் பின்வார்ப்பட்டை என் கழுத்தில் மாட்டிக் கொண்டு என்னையும் கீழே இழுத்தது. முகட்டிலிருந்து நான் சேணத்தின்மேல் விழுந்தேன் ஆகையால் பிரமாதத் தீங்கு எதுவும் எனக்கு ஏற்படவில்லை. தவிர, நான் பட்டிருந்த அடியில் என் உடம்பில் புடைபடாத இடம் எதுவுமே பாக்கி இல்லை. பயப்பட எனக்கு நேரமும் இல்லை. தரையில் விழுந்ததுமே இமாமின் கைகளில் மாட்டிக் கொண்டேன்.

முன்னிலும் அதிக வெறி கொள்ளும் நிலையில் அவர் இருந்தார் என்றால், இந்த வாய்ப்பை அவர் நழுவ விடவில்லை என்று நீங்கள் உறுதியாக நம்பலாம். காளையின் கால்களைக் கட்டுவதற்காக முந்திய இரவு எனக்குக் கொடுத்திருந்த கயிற்றை எடுத்து எட்டாக மடித்து என்னைக் கண்தலை தெரியாமல் விளாறத் தொடங்கினார் அவர். கடைசியில் அவருக்கும் மூச்சு முட்டிவிட்டது போலும். களைத்து இரைத்தவாறு அடிப்பதை நிறுத்தினார்.

நான் அழைப்புக்காகக் காத்திருக்கவில்லை. தாவிக் குதித்து மறுபடி ஏணியை நோக்கிப் பாய்ந்தேன். எப்படியோ தத்தித் தாவி ஏறி முகட்டை அடைந்து ஓட்டமெடுத்தேன். என் நற்காலம், பெரும்பாலான அக்கம்பக்க வீடுகளின் முகடுகள் ஒன்றையொன்று நெருங்கியிருந்தன. திரும்பிப் பார்த்தேன். இமாமும் மேலே ஏறி என்னை விரட்டிக் கொண்டு வரக் கண்டேன். குடல் தெறிக்க ஓடினேன். சில இடங்களில் குறுகிய இடைவெளிகள் குறுக்கிட்டன. நானோ துரத்தப்படும் கோழிபோல அவற்றைத் தாண்டி, மேலே ஓடினேன். இமாமுக்கும் எனக்கும் நடுவே சில முகடுகளே இருந்தன. என் நற்காலம், தளரக் கட்டியிருந்த அவருடைய சராய் ஓட்டத்தில் நெகிழ்ந்து



நழுவத் தொடங்கிற்று. இது அவர் கால்களுக்குத் தளை பூட்டியது. நான் மறுபடி திரும்பிப் பார்த்தபோது அவர் மட்டுமீறி இரையெடுத்த தாரா போலத் தத்தக்கபித்தக்க என்று ஓடி வந்து கொண்டிருந்தார். முடிவில் அவர் நின்றுவிட்டார். ஆயினும் என் விமோசனம் இன்னமும் தொலைவிலேயே இருந்தது. ஏனெனில் எங்கள் ஓட்டத்தின் சத்தத்தால் ஈர்க்கப்பட்ட குடியிருப்புவாசிகள் பலர் அங்கும் இங்கும் தென்படலாயினர். என் தோற்றம் மிகவும் சந்தேகிக்கத் தக்கதாக இருந்தது. அறுபட்ட கழுதையின் இரத்தம் என் மேல் காலெல்லாம் தெளித்திருந்தது என்பதை மறந்துவிடாதீர்கள். அடிபட்டதும் விழுந்ததும் என் அழகை அதிகப்படுத்திவிடவில்லை. மேலெல்லாம் புழுதி; அழுக்கு இரத்தக் கறைகள், கிழிந்து தொங்கிய உடை... நான் சுற்று முற்றும் பார்வை செலுத்தி, அபாயமற்ற திக்கைத் தெரிந்தெடுத்து ஓர் அடி முன்னே வைத்தவன்... எங்கோ பாதாளத்தில் விழுந்து விட்டேன்!

நிதானத்துக்கு வந்ததும், இது ஒரு சமையலறைக் காளவாய் அடுப்பின் புகைபோக்கி என்று கண்டுகொண்டேன். புகைபோக்கி செங்குத்தாக மேலே சென்றது. நான் நேரே அதற்குள் இறங்கி அடுப்பருகே விழுந்துவிட்டேன். கால்களை மடக்கி மார்போடு சேர்த்தவாறு உருண்டையாக அங்கே சிக்கிக் கொண்டேன். அடுப்பின் உட்புறம் பந்துபோல உருண்டையானது. அங்கே, முகட்டின்மேல் என்னை விரட்டியவர்கள் நான் போன சுவடு தெரியாமல் மறைந்துவிட்டதைக் கண்டதும் ஒரேயடியாகப் பேயறைந்தவர்கள்போல நின்று விட்டார்கள். ஏதோ கெட்ட ஆவிதான் தங்களுக்குத் தோற்றம் அளித்திருக்கிறது என்று அவர்களுக்கு உறுதிப்பட்டுவிட்டது. உயிர்த்து எழுந்த மரித்தவன் என்றா, புனித யேசு என்றா, காஃப் மலையிலிருந்து குறுகிய விடுமுறையில் வந்த அப்துரஹ்மான் - பரீயின் படைவீரர்களில் ஒருவன் என்றா, என்னை யார் என்று அவர்கள் நினைத்தார்களோ அறியேன். "ஆண்டவனே, காப்பாற்று!" "கடவுளே, இந்தப் பேயை விரட்டு!" என்று ஓலமிட்டு முகடுகள் மேலிருந்து வீட்டு முகப்புகளில் அவர்கள் திரும்பக் குதித்தது மட்டுமே எனக்குக் கேட்டது.

எனது எதிர்பாராச் சிறையிலிருந்து விடுபட முயன்றேன். என் இடது கை விலாவுடன் நசுங்கிச் செயலற்றுக் கிடந்தது. வலது

கையை மட்டுமே நான் ஓரளவு அசைக்க முடிந்தது. ஆனால் அதனால் பயன் எதுவும் இல்லை - நீண்ட நேர முயற்சிக்குப் பின் நான் வலது கையை முழுவதும் விடுவித்துக் கொண்ட பிறகுங்கூட, உடம்பைக் கொஞ்சங்கூட நிமிர்த்த என்னால் முடியவில்லை. இவ்வாறு செய்வதற்குத் தலையைத் துண்டாக அப்பால் எடுத்து வைப்பது அவசியமாயிருந்தது. தலை இன்னும் எனக்குப் பயன்படலாம் என்று நினைத்தேன். உடம்பை நேராக்காமல் ஒரு காலையாவது உடலின் அடியிலிருந்து விடுவிப்பது நடவாது. காலை விடுவித்துக் கொள்ளாமலோ, வெளியேற முயலவே முடியாது. யாரிடமிருந்தாவது உதவி கிடைக்கும் என்றும் எண்ணுவது வீண். மாறாக, என் நல்ல காலம்தான் சமையலறை வெறுமையாய் இருந்தது. நான் செய்யக் கூடியது எல்லாம் இருட்டும்வரை காத்திருப்பதுதான். அப்போது அக்கம்பக்கத்தில் ஒருவரும் இருக்கமாட்டார்கள். அடுப்பின் விளிம்பை உடைக்க அப்பொழுது முயலவேண்டும். நான் வெளியேறுவதற்கான ஒரே வழி இதுவே.

சமையலறையில் இருள் சூழ்ந்தது. வெளியே அப்போதுதான் மாலை மங்கும் நேரமாயிருக்கும். புகைபோக்கி அடியில் உடலை அசைக்க முடியாமல் பட்ட சித்திரவதையால் முடிவில் நான் பொறுமை இழந்தேன். போதாக்குறைக்குப் பசியும் தாகமும் வேறு என்னை வாட்டி வதைத்தன. அடுப்பு விளிம்புச் சுவரை உடைப்பது என்று தீர்மானித்தேன். அந்த வேளையில் சமையலறைக் கதவு அன்று முதல் தடவையாகத் திறந்தது. எவளோ ஒரு மாது உள்ளே வந்தாள். எனக்கு அருகில் சிறு அடுப்பை அவள் மூட்டினாள். அவள் வேலையில் முனைந்திருந்த போது நான் அருகிலிருந்த காளவாய் அடுப்பின் மூடியை - அதை நான் முன்பே கவனித்து வைத்திருந்தேன் - வலது கையால் எடுத்து என் சிறையின் திறப்பை மூடினேன். பெண்பிள்ளை எதையும் கவனிக்கவில்லை. நானோ, உடம்பெல்லாம் நடுங்க, நெஞ்சு பதற்றத்தால் படபடக்க, மூச்சை அடக்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். எங்கள் வட்டாரத்தைச் சேர்ந்த துணி வியாபாரி கரீம்கரா வீட்டுச் சுவர்க்கடிகாரத்தை விட உரக்க அடித்துக் கொண்டது என் இதயம். அந்த மாதுக்கு அது எப்படிக் காதில் படாமல் போயிற்றோ ஆச்சரியந்தான். ஆனால் அவள் தன் வேலையில் ஈடுபட்டிருந்தாள், அதோடு மெல்லிய குரலில் பாடிக் கொண்டும் இருந்தாள்.



வாசனைகளிலிருந்தும் சமையலறையில் கேட்ட ஒலிகளிலிருந்தும் அவள் உளுத்தம் பொங்கலோ அல்லது அது போன்ற ஏதேனுமோ சமைக்கிறாள் என்று ஊகித்தேன். முதலில் என்னை அம்புபோல துளைத்தது பொரித்த வெங்காயத்தின் மணம். பிறகு மசாலைத் தாளிதத்துடன் வதங்கிய இறைச்சி பாத்திரத்தில் சீறியது. மொட்டுபோலக் கூம்பியிருந்த என் பசி இப்போது செழித்து வளர்ந்த ரோஜாப்பூபோல மலர்ந்து விட்டது. எனக்கோ இந்த ரோஜாவினால் கிடைத்தது எல்லாம் முட்கள்தாம். அப்புறம் அவள் பாத்திரத்தில் உளுந்தைக் கொட்டிய ஓசை கேட்டது... அட பாழும் உளுந்து! எங்கேதான் அது விளைந்ததோ, எந்தப் பாறைகளில் பயிராயிற்றோ, எவ்வளவு நேரந்தான் வேகும்! இதைச் சைத்தான் வாரிக் கொண்டு போக, அது மலர வேகவே மாட்டேன் என்றது. வீட்டுக்காரி செட்டு பண்ணாமல் விறகுகளை மேலும் மேலும் செருகிக் கொண்டே போனாள். பக்கத்து அடுப்பின் சூடு கொஞ்சங் கொஞ்சமாக என் காளவாய் அடுப்புக்குப் பரவிற்று. விரைவில் என் வலது விலா நெருப்பாய்க் கொதிக்கலாயிற்று. கம்பியில் கோத்த இறைச்சித் துண்டு தணலில் வாட்டப்படும்போது என்ன பாடு படும் என்பதை நான் புரிந்து கொண்டேன் அப்பொழுது. என் உடம்பெல்லாம் மரத்துப் போயிருந்தபடியால் என் கால்கள் வாட்டல் இறைச்சி கோத்த கம்பிகள் போலவும் அவற்றில் கோக்கப்பட்டு நான் வாட்டப்படுவது போலவும் எனக்குத் தோன்றியது. ஆனால் என் நிலைமையைவிட இறைச்சியின் பாடு சுளுவானது, ஏனென்றால் அதன் ஒரு விலா வதங்கியதும் அது மறுபுறம் புரட்டப்படும். என்னாலோ எது செய்தாலும் திரும்ப மட்டும் அறவே முடியவில்லை. சூடு என் கல்லீரல் வரை புகுந்து விட்டது. நான் கத்த வாயெடுத்தேன். அதற்குள் பெண்பிள்ளை நாவைச் சப்புக் கொட்டியவாறு பொங்கலை ருசி பார்த்துவிட்டு, "தயாராகிவிட்டது" என்று சொல்லிக் கொண்டாள். நான் விழிகளில் நீர் மல்க அல்லாவுக்கு நன்றி செலுத்தினேன். வீட்டுக்காரி தணலை அடுப்பிலிருந்து அகற்றினாள். பொங்கலை இரண்டு பெரிய தாம்பாளங்களில் எடுத்துப்போட்டு, ஒரு தாம்பாளத்தைப் பாத்திரத்துக்குள் வைத்து மூடினாள். மற்றத் தாம்பாளத்துடன் வெளியேறினாள். அடுப்பு நெருப்பு அவிந்தது. காளவாய் அடுப்புச் சுவர் சூடு தணியலாயிற்று. ஆனால் என் வயிற்றிலோ நெருப்பு ஸ்தெப்பிவெளி நெகிடிபோல

மூண்டெரிந்தது. பெண்பிள்ளை வெளியே போனதும் நான் மூடியைத் திறந்து தாராளமாக மூச்சுவிட்டேன். அப்புறம் பாத்திரத்தைக் கைநீட்டி எடுக்க முயன்றேன். என் முயற்சி பலிக்கவில்லை. கலவரத்துடனும் வதைபட்டவாறும் மேற்கொண்டு நடப்பதை எதிர்பார்த்துக் காத்திருந்தேன்.

கடைசியில் சமையலறைக் கதவு மறுபடி கிரீச்சிட்டது. யாரோ நுனிக்கால்களால் நடந்து அடுப்பை நோக்கி வந்தார்கள். நான் அப்படியே உறைந்துபோனேன். ஆனால் வந்தவன் - அவன் ஆடவன் - காளவாய் அடுப்பின் மேல் அமைதியாக உட்கார்ந்து கொண்டு ஏதோ மெட்டைச் சீழ்க்கை அடிக்கலானான். சங்கீதம் அருமையானதுதான், இல்லையென்று நான் சொல்லவில்லை. எனக்கும் சங்கீதம் மிகவும் பிடிக்கும். அதிலும் வயிறார சாப்பிட்டபின் தெருவில் யாரேனும் பையன் முதுகில் சவாரி செய்யும்போது சில வேளைகளில் எனக்கே பாட விருப்பம் உண்டாகும். சீழ்க்கை அடிப்பதும் சில சமயங்களில் பயனுள்ளது. உதாரணமாக, தாயாரால் இளைய குழந்தை களைக் கவனித்துக் கொள்வதற்காக வீட்டுக்குள் அடைக்கப் பட்டிருக்கும் தோழனை அழைப்பதற்கு அது உதவும். வெற்றாய் இருப்பதன் காரணமாகவே வயிறு இராணுவ அணிவகுப்பில் வாத்தியக்கோஷ்டிபோல இசைத்துக் கொண்டிருக்கும்போது எவனோ அயலானின் துடுக்கான சீழ்க்கையைக் கேட்பதில் என்ன இன்பம் ஏற்பட முடியும்? அதிலும் அந்தப் பாழாய்ப்போகிற துடுக்கன் நம் தலைமேல்போல ஏறி உட்கார்ந்து, நம் மூக்குக்கு முன்னே கால்களை ஆட்டுகையில் அவனுடைய சீழ்க்கையைக் கேட்க வேண்டும் போலத்தான் இருக்குமோ?.. வேறு வழி இல்லாமையால் நான் இதை எல்லாம் விருப்பின்றியே சகித்துக் கொண்டு ஓசை காட்டாமல் குந்தியிருந்தேன்.

கொஞ்ச நேரம் கழித்து முந்திய மாது வந்தாள் - காலடி ஓசையிலிருந்து அவளை நான் அடையாளம் தெரிந்து கொண்டேன். அவளும் அடுப்பை நோக்கி வந்தாள். என் தலைக்குச் சுமார் இரண்டு அடி மேலே உதடுகளை சப்புக் கொட்டும் ஒலி கேட்டது. அவர்கள் முத்தம் இட்டுக் கொண்டார்கள் போலிருக்கிறது.

"ரொம்ப நேரம் காக்க வைத்து விட்டேனோ?" என்று இனிமை சொட்ட வினவினாள் பெண்பிள்ளை. அவள் குரலில் இருந்த



இனிப்பை முட்டை ஹல்வாவில் கலந்தால் சர்க்கரையே தேவைப் படாது, அப்படித் தேன் கசிந்தது அதில். "ஆனால் என் கணவன்" என்று பேச்சைத் தொடர்கையில் இனிய ஷர்பத்தில் இறைச்சிக் குழம்பு சிந்திவிட்டது போல அவள் குரல் சட்டென மாறியது. "என் கணவன் - அவன் நாசமாய்ப் போக - பேரேடுகளை வைத்துக் கொண்டு வெகுநேரம் உட்கார்ந்திருந்துவிட்டான் - ஏதோ வேறு நேரமே கிடைக்காது போல! கணக்குச் சீட்டுகளை மறுபடி மறுபடி கூட்டிச் சரிபார்த்தான். இதற்கு முடிவே வராது என்று நினைத்தேன்! அரும்பாடு பட்டு அவனை உறங்கப் பண்ணினேன், அப்புறம்..."

"அட பரவாயில்லை, என் கண்ணே" என்று அவள் பேச்சை இடைமறித்தான் ஆடவன். "ஒன்றை மட்டும் நீ கவனி. அவன் நம்மைச் சந்தேகிக்கிறானா என்று பார், ஊம்? ஒருவேளை நீ வாய் தவறி ஏதேனும் சொல்லிவிட்டாயோ? இன்றைக்கு நான் மூன்று கோப்பெக்குக்குப் பொடி வாங்க அவன் கடைக்கு வந்தேன். என்ன செய்தான் தெரியுமோ? ஓநாய்போல என்னை வெறித்துப் பார்த்தான், என் பொடிச் சிமிழில் பாதிகூட நிரம்பாதபடி அவ்வளவு கொஞ்சமாகப் போட்டான்! மற்றக் கடைகளிலோ, மூன்று கோப்பெக்குக்குச் சிமிழ் நிறையப் பொடி தருகிறார்கள்."

"இல்லை, பொதுவாகவே அவன் பேராசைக்காரன். நீங்கள் நம்பவே மாட்டீர்கள். அவ்வளவு கருமி, பணந்தான் அவனுக்கு எல்லாம். என்னை அவன் ஏறெடுத்தும் பார்ப்பதில்லை. தனக்கு மனைவி இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, அவனுக்கு ஒன்றுதான்..."

"அட தொலைகிறான், அவனைச் சைத்தான் பிடித்து ஆட்ட. சாப்பிடுவதற்கு ஏதாவது கிடைக்குமா?"

காரியக்காரன் இந்த ஆள், ஆடவனுக்கு எது முக்கியம் என்பதைத் தெரிந்து வைத்திருக்கிறான் என்று பொறாமையுடன் எண்ணினேன். வீட்டுக்காரி பரபரத்தாள், பாத்திரத்தைத் திறந்து வெள்ளைத் தட்டில் மீன்போல உளுத்தம் பொங்கல் தாம்பாளத்தை வெளியே எடுத்தாள். ஆடவன் ஆவலுடன் அதன் மேல் பாய்ந்தான். காளவாய் அடுப்பு மேலிருந்து இறங்கி, சிற்றடுப்புக்கு முன்னே மண்டியிட்டு உட்கார்ந்தான். தாம்பாளம்

இப்போது நேரே என் எதிரே இருந்தது. ஆடவன் அவுக்கு அவுக்கென்று பொங்கலை விழுங்கலானான். பெண்பிள்ளையோ கோழிபோல லேசாகக் கொத்த மட்டுமே செய்தாள். இறைச்சித் துண்டுகளை ஆடவன் முன்னே நகர்த்துவதும் பலவிதக் காதல் மொழிகள் பகர்வதுமாக இருந்தாள். ஆடவன் சுருக்கமாகப் பதிலளித்தான் - அவன் வாய்தான் பொங்கலால் நிறைந்திருந்ததே.

இனி இதைத் தாங்க முடியாது என்று உணர்ந்தேன். காளவாய் அடுப்பிலிருந்து கையை வெளியே எடுத்துத் தாம்பாளத்தில் நீட்டினேன். அப்போது ஆடவன் பெண்பிள்ளையைப் பார்த்துக் கொண்டிருந்தான், அவளும் அவனை நோக்கிக் கொண்டிருந்தாள் என்று சொல்லவே வேண்டாம். தாம்பாளத்திலிருந்து அள்ளிய பொங்கலை நான் ஓசையின்றி, அவக்கையால் மூச்சு திணற விழுங்கிவிட்டு மறுபடி கையை வெளியே நீட்டினேன். இம்முறையும் ஒருவரும் இதைக் கவனிக்க வில்லை. ஆனால் தாம்பாளம் காலியாகத் தொடங்கிற்று. ஆடவன் ஒரே நேரத்தில் இரண்டு வேலைகளைச் சமாளித்துக் கொண்டிருந்தான் ஆயினும், கடைக்கண்ணால் எதையோ நோட்டமிட்டுவிட்டான் போலிருக்கிறது.

"இந்தா, உன் கை எங்கே?" என்று கலவரத்துடன் காதலியிடம் கேட்டான்.

"இதோ" என்று உடனே நீட்டினாள் காதலி.

காதலன் உற்றுப் பார்த்தான். ஆனால் இருட்டில் ஒன்றும் தெரியவில்லை போலிருக்கிறது. நான் அசையாதிருந்தேன். ஆடவன் முன்னிலும் விரைவாகச் சாப்பிடுவதில் முனைந்தான். இதோ தாம்பாளம் அறவே காலியாகிவிடும் என்று நான் புரிந்து கொண்டேன். அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் நொடி நேர வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு மறுபடி தாம்பாளத்தில் கையை விட்டேன். ஆனால் ஆடவன் விழிப்பாய் இருந்தான். அவன் என் கையை லபக்கென்று பிடித்துக் கொண்டு, "இந்தா, பொறு! இது யாருடைய கை? எங்கே? இது என் கை, இது உன் கை. அப்படியானால் இந்தக் கை யாருடையது?" என்று சீறினான்.

பெண்பிள்ளை விலவிலத்துப் போனாள். என்றாலும் வாய்க்குள் தேம்பினாள். அவர்களுக்குள் சொந்த விவகாரங்கள் மட்டும் இல்லாதிருந்தால் நான் இறுதித் தொழுகை படிக்க



நேர்ந்திருக்கும். இப்போதோ, எனக்கு அச்சமே உண்டாகவில்லை. ஆடவன் என் கையை இழுத்து என்னைக் காளவாய் அடுப்புக்கு உள்ளிருந்து வெளியேற்ற முயன்றான். எனக்குக் கொடிய வலி உண்டாயிற்று. ஆனாலும் பேசாதிருந்தேன். நான் விரும்பிய விடுதலை முடிவில் கிடைத்தது! என் முதுகுத்தண்டு இரண்டு தரம் உரக்கச் சடசடத்தது. காளவாய் அடுப்புச் சுவர் விளிம்பு பெயர்ந்து விழுந்தது. அப்புறம் நான் வெளிவந்துவிட்டேன். கால்கள் மரத்துப் போயிருந்ததால் நிற்பதே எனக்கு அரும்பாடாய் இருந்தது. இந்த ஆள் என் உடம்பைக் கொஞ்சம் பிடித்துவிடவும் செய்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்!

"நெருப்புப் பெட்டி இருக்கிறதா?" என்று என் கையை விடாமலே பெண்பிள்ளையிடம் கேட்டான் அவன்.

அவள் நடுங்கும் கைகளால் உள்சட்டையைத் தொட்டுத் தடவி, நெருப்புப் பெட்டியை எடுத்து ஒரு குச்சியைக் கிழித்தாள். அக்கணமே வீரிட்டு, குச்சியை நழுவவிட்டுவிட்டாள். அவர்கள் என்னை நல்ல பகலில் பார்த்திருந்தாலே அரண்டு போயிருப்பார்கள். இருட்டிலோ, அவர்களுக்குச் சரியான கிலி பிடித்திருக்கும் என்று நினைத்துக் கொண்டேன்: என் கந்தல் உடைகள் உலர்ந்த இரத்தக் கறையும் அழுக்கும் படிந்திருந்தன. போதாக்குறைக்குப் புகைக்கரி அப்பி நான் நீக்ரோ போலக் கறுத்திருந்தேன். கெட்ட ஆவிகள் வேறு விதமாகத் தோற்றம் அளிக்க முடியும் என்றால் அவற்றை எப்படிக் கற்பனை செய்து கொள்வது என்றே எனக்கு விளங்கவில்லை. மாதின் பற்கள் திகிலால் கடகடவென்று அடித்துக் கொண்டன. ஆனால் ஆடவன் துணிவுள்ளவன். தீப்பெட்டியைக் காதலியிடமிருந்து வாங்கி ஒரு குச்சியைக் கிழித்தான்.

"யார் நீ?" என்று கேட்டான்.

வந்தது வரட்டும் என்று நான் துணிந்துவிட்டேன்.

"நீ யாராம்?" என்று பதிலுக்குக் கேட்டேன்.

"கேட்டதற்குப் பதில் சொல்!"

"நீ சொல்லு கேட்டதற்குப் பதில்!"

"இந்தா, அப்பனே, உயிர் தப்பும் நம்பிக்கை இன்னும் இருக்கிறதா உனக்கு?"

"உனக்கு இருக்கிறதா உயிர் தப்பும் நம்பிக்கை?"

"அட கடவுளே!"

"அட கடவுளே!"

பெண்பிள்ளை எங்கள் பேச்சில் குறுக்கிட்டாள்.

"கேள், அன்பா. யார் நீ? காளவாய் அடுப்பில் என்ன செய்து கொண்டிருந்தாய்? ஒருவேளை நீ.. கெட்ட ஆவியோ? அல்லது... கிறுக்கனோ? கோபித்துக் கொள்ளாதே. இருண்ட இரவில் பிறத்தியார் அடுப்பில் ஏன் புகுந்தாய்?" என்று நடுங்கும் குரலில் கேட்டாள்.

"இவன் மட்டும் எதற்காக இரவில் பிறத்தியார் அடுப்பில் புகுந்தானாம்? ஊம்?"

ஆடவன் நெருப்புப் பெட்டியை எறிந்துவிட்டுச் சட்டைக் கைகளை உறுதியுடன் மடக்கிவிட்டுக்கொள்வதை நான் கண்டேன். வெட்டுவதற்காக ஆடு மாடுகள் கொண்டு வரப் பட்டதும் கசாப்புக்காரன் இப்படித்தான் செய்வது வழக்கம். நான் பழைய தந்திரத்தைக் கையாண்டேன்.

"காப்பாற்றுங்கள்!"

"நீ என்ன செய்ய நினைக்கிறாய்?" என்று சட்டென என் வாயைப் பொத்தினாள் பெண்பிள்ளை.

"நான் செய்வதற்கு என்ன இருக்கிறது? உதவிக்கு ஆட்களை அழைக்கிறேன்."

இதைக் கேட்டதும் இளைஞன் சமாதானத்துக்கு வர முடிவு செய்தான்.

"சரி, கிடக்கிறது. நல்லபடியாய்ப் போய்விடு. நட வெளியே!" என்றான்.

"நான் எங்கே போவதாம்? எனக்குப் பசிக்கிறது."

"காலைச் சுற்றிக்கொண்டுவிட்டான், பாம்புப் பயல்" என்று சிடுசிடுத்தான் ஆடவன். பெண்பிள்ளை ஒரு வார்த்தை பேசாமல் சமையல் அறைக்கு வெளியே போய், பொரித்த கொழுப்புத் துண்டுகள் வைத்த இரண்டு மெல்லிய ரொட்டிகளுடன் அரை



நொடியில் திரும்பினாள். நான் ரொட்டிகளைக் கைக்கடியில் இடுக்கிக் கொண்டேன்.

"இப்போது ஒழி இங்கிருந்து" என்றான் ஆடவன்.

"ஆ அதுதான் மாட்டேன். முதலில் கழற்று கொஞ்சம் பணம்!"

அவன் இருட்டில் மூச்சுத் திணறச் செருமியதைக் கேட்டதும் வன்மத்தால் இவன் இதோ வெடித்துவிடுவான் என்று நினைத்தேன். பிறகு அவன் தணிந்த குரலில் நீண்ட வசை மாரி பொழிந்தான். இந்த வசைப் பொழிவில் அவன் தன் உளம் முழுவதையும் ஈடுபடுத்தியது தெரிந்தது. முடிவில் அவன் சட்டைப் பையில் கை விட்டு அதில் இருந்த பணத்தை வெளியே எடுத்தான். நான் அதை எண்ணாமல் வாங்கி முடிந்து கொண்டேன். இதற்கு அப்புறம்தான் நான் வெளியேற திருவுளம் கொண்டேன். பெண் பிள்ளை என்னை வெளிவரை கொண்டுவிட்டு, எல்லாவற்றையும் இரகசியமாக வைத்திருப்பேன் என்று மூன்று தரம் சத்தியம் செய்யச் சொன்னபின் விடை கொடுத்தாள். நான் உளமாரச் சத்தியம் செய்துகொடுத்தேன். வீதியில் சற்று தூரம் போனதும் முதலில் ரொட்டிகளைத் தின்றேன். பின்பு இருண்ட தெரு வழியே நடந்தேன். எங்கே இருக்கிறோம் என்றுதான் எனக்குத் தெரியவே தெரியாதே. ஒரு தெரு என்னை இன்னொரு தெருவில் கொண்டு விட்டது. அது விசாலமான மைதானத்தில் கொண்டு சேர்த்தது. அது சந்தைத் திடல்போல் காணப்பட்டது, ஆனால் இப்போது அது வெறுமையாய் இருந்தது. நான் ஒரு மூலையில் படுத்து இரண்டு செங்கல்களைத் தலைக்குயரம் வைத்துக் கொண்டு அக்கணமே அகாதத்தில் விழுந்துவிட்டவன்போல உறக்கத்தில் ஆழ்ந்தேன்...

அந்தோ, இந்தப் பாழும் நகரத்தில் நான் எப்போதுமே துர்ப்பாக்கியத்தின் முகத்தில்தான் விழிக்க வேண்டும் என்பது விதி போலும். இரண்டே நாட்களுக்குள் அங்கே நான் பட நேர்ந்த துன்பங்கள்தாம் எத்தனை! இப்போது நினைத்துப் பார்க்கும்போது நம்பக்கூட முடியவில்லையே! சுருங்கச் சொன்னால், விலாவில் யாரோ உதைக்கவே விழித்துக் கொண்டேன்...

விடிந்துவிட்டிருந்தது. கம்புகளும் கைகளுமாகச் சில ஆட்கள் என்னைச் சூழ நின்றார்கள்.

"இது அவன்தான்!" என்று கத்தினான் ஒருவன்.

"அவனேதான்!"

"ஆனால் ரொம்பச் சின்னவனாய் இருக்கிறானே!" என்று சந்தேகத்தைக் கிளப்பியது ஒரு குரல்.

"அட நீ இவனை உற்றுப் பார்! அவனேதான்!"

"யார் இந்த அவன்?" என்று அழாதகுறையாகக் கேட்டேன் நான்.

ஆட்கள் என்னை மறுபடி உதைத்து எழுந்திருக்கும்படிக் கட்டளையிட்டார்கள். நான் வெகு சிரமத்துடன் எழுந்தேன். என் உடம்பெல்லாம் ஓய்ந்து வந்தது. இதோ உடம்புத் துண்டு துண்டாகச் சிதறி விழுந்துவிடும் என்று தோன்றியது. ஆட்கள் என் கைகளைப் பின்கட்டாகக் கட்டிச் சந்தை வழியே இழுத்துச் சென்றார்கள். கழிகளையும் சாட்டைகளையும் என் தலைக்கு மேலே ஓங்கி ஆட்டிக் கொண்டு நடந்தார்கள்.

" 'எனக்கு அவமானம், நான் ஓர் ஆளைக் கொன்றுவிட்டேன்' என்று கத்து!" எனப் பின்னாலிருந்து எவனோ உத்தரவிட்டான்.

நான் வாய்விட்டு அழுது புலம்பினேன்:

"ஒருவனையும் நான் கொல்லவில்லை!"

இதற்குள் ஜனங்கள் ஓடி வந்தார்கள். இரண்டு சிறுவர்கள் சிறு டமாரத்தில் கம்புகளால் அடித்துக் கூட்டம் சேர்த்தார்கள். இதோ உணர்வு இழந்துவிடுவேன் என்று நினைத்தேன். பல நிற மேலங்கியும் மழித்த தலையில் குல்லாவும் அணிந்திருந்த ஒருவர் திடீரென்று கூட்டத்தின் நடுவிலிருந்து வெளியே வந்தார்.

"முஸல்மான்களே! இவ்வளவு சின்னப் பையனால் கொலையுண்ட வெளியூர்க்காரர் போன்ற அவ்வளவு பெருத்த மனிதரைக் கொலை செய்திருக்க முடியும் என்று நீங்கள் எண்ணுகிறீர்களா? அதிலும் எங்கே, சாயாக் கடையில்! இவன் இன்னும் பச்சைப் பாலகன்! இவன் கொலைகாரர்களின் கூட்டாளியாய் இருந்தால், இந்தக் கோலத்தில் இவனை அவர்கள் இங்கே விட்டிருக்க மாட்டார்கள்..." என்று சொல்லிக் கொண்டு போனார் அந்த மனிதர்.



கூட்டம் ஆமோதிக்கும் பாவனையில் சலசலத்தது. என்னைப் பிடித்துக் கொண்டிருந்தவர்கள் மௌனமாய் இருந்தார்கள்.

அந்த நல்லவர் பேச்சைத் தொடர்ந்தார்: "இந்தப் பையன் இத்தகைய கோலத்தில் இருப்பதற்கும் காரணம் தெளிவாய் இருக்கிறது. இவன் நோயாளி. வலிப்பு வியாதிக்காரன். வலிப்பில் இந்த மாதிரி உடம்பெல்லாம் காயப்படுத்திக் கொண்டிருக்கிறான்... இந்த மாதிரிப் பயலைக் கூட்டாளியாக எந்தத் திருடன்தான் வைத்துக்கொள்வான்? திருடர்களுக்கு இரகசியங்கள் உண்டு. அரைப் பைத்தியமான இந்தப் பையனை நம்பி இரகசியங்களை ஒப்படைக்க எவன்தான் விரும்புவான்? நான் சொல்வது சரிதானே, முஸல்மான்களே?"

"சரிதான்! சரிதான்! பையனை விட்டுவிடுங்கள்!" என்று கத்தினார்கள் கூட்டத்தினர்.

இதற்குள் இன்னும் ஒருவன் கூட்டத்தை இடித்து விலக்கிக் கொண்டு நடுவுக்கு வந்தான். அவன் முகம் எனக்குத் தெளிவாய்த் தெரியவில்லை. கண்ணீர் என் விழிகளை மறைத்தது. நான் உண்மையில் அழவில்லை. கண்ணீர் தானாகவே ஊற்றெடுத்துப் பெருகியது.

"அட இந்தப் பையன் யார் என்று நான் அறிவேன்! கசாப்புக்காரன் அஷூரின் மகன் இவன்! தன் மகன் வீட்டை விட்டு ஓடிவிட்டதாகப் போன சந்தை நாளன்று அஷூர் சொன்னான்!" என்று கத்தினான் புது ஆசாமி.

"சரிதான்! பதினான்கு வயதுப் பையன் காணாமல் போய் விட்டதாக விளம்பரக்காரன் சந்தையில் அறிவித்ததை நானும் கேட்டேன்!"

"இவனை விடுங்கள்!"

என் தோளைப் பற்றியிருந்த கைகள் நெகிழ்ந்தன. சாக்கு மூட்டைபோலத் தரையில் விழுந்தேன்...

## அத்தியாயம் 7

# எழுபத்தொரு சொர்க்கங்கள்

**நா**ன் நல்ல ஆரோக்கியசாலி. என் கைகள் முற்றிலும் என் வசத்தில் இருக்கின்றன. கால்கள் நான் சொன்னபடிக் கேட்கின்றன. கண்கள் என் சித்தத்துக்குக் கீழ்ப்படிகின்றன. விருப்பம் இல்லாவிட்டால் அவலட்சணங்களை நான் பார்ப்பதில்லை. என் தாடைகளும் பற்களும் அரைவை இயந்திரம் போன்றவை. எதையும் மென்று துவையலாக்கிவிடும். ஆனாலும் என் உடம்பில் எனக்கு வசப்படாத ஓர் அங்கம் இருக்கிறது. அதைப் பணிய வைக்க என்னால் எவ்வகையிலும் முடியவில்லை. என் அதிகாரம் அதன்மேல் செல்லுவதில்லை. சில வேளைகளில் அது என் ஆட்சியிடத்துக்குள் கொள்ளைக் காரர் கூட்டம்போல அட்டூழியம் செய்கிறது. நான் இயன்ற வரையில் அதைச் சமாதானப்படுத்துகிறேன். நல்ல எண்ணங்களின் பட்டாளங்களை அனுப்புகிறேன். ஆனால் அவை இலக்கை அடைவதற்கு முன்பே சிதறி ஓடிவிடுகின்றன. பாழாய்ப் போன அந்தக் கலகக்கார உறுப்போ, திறை செலுத்தும்படித் துடுக்காகக் கோருகிறது. என்னிடம் இருக்கிறதோ இல்லையோ, அதற்குக் கொட்டி அளக்க வேண்டியிருக்கிறது!

இந்தக் கலகக்கார உறுப்புதான் வயிறு.

உங்களுக்கு இது தெரியாதா? அப்படியானால் நினைவில் இறுத்திக் கொண்டு எச்சரிக்கையாக இருங்கள். ஏனென்றால் வயிறு விஷயத்தில் வேடிக்கை கெடுதல். அது முரண்டத் தொடங்கி, கோருவதைப் பெறாவிட்டால், உங்கள் மேலதிகாரத்தைக் கவிழ்த்துவிடும். அப்புறம் அரசு முழுவதன் மீதும் ஆதிக்கம் செலுத்தும். ஒழுங்கு, நிம்மதி, மரியாதை விதிகள் எல்லாம் அத்துடன் தொலைந்தன என்று வைத்துக்கொள்ளுங்கள். ஏனெனில் அப்புறம் அதிகாரம் செலுத்துவது நீங்கள் அல்ல, அதுதான். எல்லா அங்கங்களும் அதன் உத்தரவுகளுக்கே கீழ்ப் படியும், உங்கள் உத்தரவுகளுக்கு அல்ல. இஸ்லாம் மத விதிகளால்



அனுமதிக்கப்படாத பொருள்களைக் கண்கள் நோக்கத் தொடங்கும். நேர்மையற்ற வழியில் பெற்ற வஸ்துக்களை எடுக்கக் கைகள் பேராசையுடன் நீளும். கால்கள் முற்றிலும் எதிர்பாரா இடங்களுக்கு இட்டுச் செல்லும். தலை, கயவர்களுக்கு முன் வணங்கும்...

நான் வசந்தகால மேகம்போலக் கண்ணீர் மாரி பொழிந்தவாறு, ஏதோ ஒரு பாட்டை, அர்த்தமற்ற ஏதோ கஜலைப் பாடுகிறேன். இந்தப் பாட்டை எவன்தான் புனைந்தானோ, எவன்தான் முதல் முறை பாடினானோ, ஆண்டவனே அறிவான்...

"பொங்குது அந்தோ, இக் கரிய விழிகளில்
புகலற்ற சோக நீர் ஊற்று.
மங்கலாய்க் காணும் உலகை அவை, கண்ணீர்
மல்கும் இமைகளின் ஊடாய்.

ஆயுள் முழுதும் அலைந்து களைத்திட்டேன்
ஆனந்தத்தை எதிர்பார்த்து.
பாய் தரை, ஓடு தலையணையாகப்
படுத்திருப்பேன் காலைவரையில்.

ஏங்கியது போதும் என் உளமே, உன்றன்
இருள் நீங்கும், பாடு விடியும்.
சங்கொளி சேர் மணி மண்ணில் புதைந்தே
என்றும் மறைந்திருக்காது.

ஆனால் இப்போதென்றன் தலைமேல் சுழலுது
அழுத்திடும் அரைவைத் திரிகை.
நானும் உணவுக்காய் அரைவைத் திரிகைபோல்
நாளும் சுழன்றிட வேண்டும்."

"போதும், இந்தத் துயர எண்ணங்களைக் கட்டி வை. ஆற்றுக்குப் போய்க் குளி. கோலத்தை ஓரளவு சீர்படுத்திக்கொள்" என்று சொல்லிக் கொண்டேன். இந்த நட்பார்ந்த யோசனையை நிறைவேற்றினேன். ஆற்றுக்குப் போய், தனியான இடத்தைத் தேடிக் கண்டு உடைகளைக் களைந்தேன்... சராய், சட்டை,

இடுப்புக் குட்டை, எல்லாவற்றையும் காரப் பூண்டால் சுத்தப் படுத்தி நன்றாகத் துவைக்க வேண்டும் - ஒரு தரம் துவைத்து அலசினால் போதாது! பின்பு மரக்கிளைகளில் காயப்போட வேண்டும். அப்புறம் நீரில் இறங்கி நீந்தி எல்லாக் கெட்ட நினைவுகளையும், சென்ற சில நாட்களில் எனக்கு நேர்ந்த எல்லாத் துன்பங்களையும் (அவற்றின் எண்ணிக்கை நாட்களின் தொகையைக் காட்டிலும் எவ்வளவோ அதிகம். பெருக்கிய கண்ணீரைக் காட்டிலும் அதிகம். ஒரு துளி கண்ணீருக்கு ஒரு துன்பம் வீதம் என்று சொல்லலாம்) ஆற்றோடு போக்கிவிட வேண்டும்.

இவை எல்லாம் செய்து முடிப்பதற்குப் புலவு தயாரிப்பதற்கு ஆகும் அவ்வளவு நேரம் பிடித்தது. அதற்குள் பசி கடுமையாக மூண்டது. துவைத்துக் காயப் போட்ட உடைகளை அணிந்து கொண்டு கையால் தேய்த்துச் சுருக்கங்களைப் பிரித்து, ஓரளவு பாங்காகத் தோற்றம் அளிக்க முயன்றேன். இவ்வளவு துன்பங்களுக்கிடையிலும் ஒரு சிறு நன்மை அடைந்திருப்பதை நினைவுபடுத்திக்கொண்டேன். வேற்றார் சமையல் அறையிலிருந்த காதலன் அவ்வளவு விருப்பத்துடன் எனக்குத் தந்த பணம் நினைவுக்கு வந்தது. இல்லை, அது கெட்டுப்போகவில்லை, நல்ல வேளையாக. சில வெள்ளி நாணயங்கள், சில செப்புக்காசுகள், எல்லாமாகக் கொஞ்சம் குறைய இரண்டு தன்காக்கள் இருந்தன. அப்புறம் என்ன, தொடங்குவதற்கு இது சொற்ப முதல் அல்லவே. எத்தனையோ பெயர் இதைவிடக் குறைவான முதலை வைத்துக்கொண்டு தொடங்கி இருக்கிறார்களே. அவர்கள் அத்துடனேயே இருந்துவிட்டார்கள் என்பது உண்மைதான். அது அவர்கள் பாடு. சந்தைக்குப் போய் ஆசைதீரச் சாப்பிடலாம், ஏதேனும் வாங்குவதென்றால் பிசகு பேரம் பண்ணலாம். குறைந்த விலைக்கு வாங்கலாம். ஏய்க்காவிட்டால் பிழைக்க முடியாது.

அன்று சந்தை நாள் அல்ல என்றாலும் சந்தைத் திடலில் விற்பதும் வாங்குவதும் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. ஆடுகள் கத்தின. குதிரைகள் கனைத்தன, ஒட்டகங்கள் முழங்கின. வியாபாரிகள் திட்டினார்கள். தரகர்களின் கைகள் தோன்றித் தோன்றி மறைந்தன. "என்ன, கையடித்துப் பேரத்தை முடிப்போமா!" என்ற தங்கள் பல்லவியை அவர்கள் விடாது பாடிக் கொண்டிருந்தார்கள். இந்த இரைச்சலுக்கும் நெரிசலுக்கும் இடையே, மழை நீரில் அடித்துச் செல்லப்படும் எறும்புபோலத் தன் வசமின்றித் திரிந்து அலைந்தேன் நான். வலப்புறம், இடப்புறம், பின்புறம், எங்கிருந்தாவது யாரேனும் உதைப்பார்களோ என்று சமீப அனுபவத்தின் காரணமாக ஓயாமல் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.



திடீரென்று சந்தையில் விந்தையான பரபரப்பு ஏற்பட்டது. ஆட்கள் கும்பல் கும்பலாக ஒரு புறம் விரைந்தார்கள். நகரத்திலிருந்து சந்தைக்கு வந்துகொண்டிருந்தது ஓர் ஊர்வலம். வெவ்வேறு நிறத் துணித் துண்டுகளை இணைத்துத் தைத்த "முகம்மதீ" சட்டைகள் அணிந்த ஏழு பக்கிரிகள் ஒருவர் பின் ஒருவராகப் பவனி வந்தார்கள். "அகமதீ" எனப்படும் தொப்பிகள் அவர்கள் தலைகளை மூடியிருந்தன. கரிய அல்லது நரைத்த சடைக்கற்றைகள் அவர்களுடைய இடுப்பு வரை தொங்கின. தோட்களின்மேல் அவர்கள் "முஸ்தஃபா" சால்வைகள் போர்த்திருந்தார்கள். கொளுத்தும் வெயிலில் ஆவேசம் கொண்டவர்கள்போலப் பாடிக் கொண்டு வந்தார்கள். வெறி கொண்ட ஒட்டகங்கள்போல அவர்கள் உதடுகள் நுரை கக்கின. அவர்கள் பாடினார்கள்:

"ஓ-ஓ-ஓ!
ஆட்கள் இரையும் சந்தையிலே
கேட்குது அகதிகளின் அழுகை,
அல்லாவே, ஓ அல்லாவே,
எல்லாமே மண் அல்லாவே.
பெற்றோர் இல்லா மதலைகளுக்கு
உற்றிடு துயரைக் கேட்டறிவாய்,
அல்லாவே, ஓ அல்லாவே,
எல்லாமே மண் அல்லாவே.
ஓ-ஓ-ஓ!

மண்வெட்டி அலகு போன்ற அகன்ற தாடியும் நேர்த்தியான தோற்றப் பொலிவும் உள்ள ஒரு பக்கிரி முன்னே வந்தார். அவர் தாம் தலைமைப் பக்கிரி. அவர் தோளில் தொங்கியது செப்புப் பாத்திரம். தூரப் பார்வைக்கு அது பளபளக்கும் பிரமாண்டமான கருவண்டுபோல் காணப்பட்டது. வலிய மரத்தடி ஒன்று அவர் கையில் இலங்கியது. அதன் மேல் பல நிறத் துணித் துண்டுகள் தொங்கின. கொஞ்சம் நெருங்கி விசாரித்ததில் வியப்பூட்டும் ஒரு

சேதி தெரியவந்தது. இந்தத் தடி நபிகள் நாயகம் முகம்மது அவர்களுடைய கைத்தடிக்கு ஒன்றுவிட்ட சகோதரி உறவாம்! சுற்றிலும் இருந்த மதபக்தர்களுக்கு இந்தச் சேதி வெகு காலமாகவே தெரியும் போலிருக்கிறது. கண்களில் நீர் மல்க அவர்கள் அந்தத் தடி அருகே போய் அதை முத்தமிட்டார்கள். அதில் புதிய வண்ணத் துணிகளை நம்பிக்கையுடன் கட்டினார்கள். தடியை ஏந்தி வந்த தலைமைப் பக்கிரிக்குக் காணிக்கைகள் சமர்ப்பிக்கப்பட்டன. அவர் தோளில் தொங்கிய கருஞ்செப்புப் பாத்திரம் இந்தக் காணிக்கைகளை ஏற்பதற்காகவே இருந்தது. ஜனங்கள் அதில் பணம் போட்டார்கள். ரொட்டிகள் போன்ற பிற பொருள்களைப் பின்னால் வந்த பக்கிரிகள் வாங்கிக் கொண்டார்கள். அப்பப்பா, காணிக்கை இருக்கிறதே, இது நுட்பமான விஷயம். இதிலே அசதி மறதியாக இருந்தோமோ, வந்தது ஆபத்து. தலைமைப் பக்கிரி புனித பஹாவுத்தீனின் பிரதிநிதியாக விளங்கும்போது அவருக்கு ஏழு ரொட்டிகள் காணிக்கை வழங்க வேண்டும். அவரே புனித ஹாவ்ஸுல்ஹஸனின் பிரதிநிதியாக வந்தால் ஏழு அல்ல, பதினொரு ரொட்டிகள் சமர்ப்பிக்கப்பட வேண்டும். ஹாவ்ஸுல்ஹஸனைத் தவறாக பஹாவுத்தீன் என்று நினைத்து விட்டோமோ - ஆண்டவனே காப்பாற்று - அந்தப் புனிதர் கோபங் கொண்டுவிடுவார், செலவெல்லாம் வீணாகிவிடும். விண்ணுலகில் விலைகள் எல்லாம் சந்தையைவிடக் கறாரானவை.

புனிதர்களின் உதவியோ மன்னிப்போ ஒருவனுக்குத் தேவைப் பட்டால் அவன் அதற்கு ஏற்றபடித் தாராளமாக விலை செலுத்த வேண்டும். கோழி, வெள்ளாடு, செம்மறிக் கடா அல்லது ஒட்டகங்கூடக் காணிக்கையாகச் செலுத்தப்படும். இதை எதிர் பார்த்தே பக்கிரிகளின் பின்னே வருவார்கள் யாலாவ்கஷ் எனப்படும் பணியாட்கள். அவர்கள் காணிக்கைகளைச் சேகரித்து, பிரம்புக் கூடு அமைந்த வண்டியில் வைப்பார்கள், அல்லது பின்னால் கட்டுவார்கள். சில வேளைகளில் பல் வகைப் பிராணிகளின் மந்தையே பக்கிரிகளின் பின்னே சேர்ந்துவிடும் - இயங்கும் மிருகக் காட்சி சாலை போல...

இன்று சந்தையில் இவ்வளவு பரபரப்பு ஏற்பட்டது காரணம் இல்லாமல் அல்ல. இந்தப் பக்கிரிகள், இறைச்சி உண்ணாத மிக மிகப் புனிதமான ஒரு மௌல்வியின் மடத்தைச் சேர்ந்தவர்கள்.



அந்த மடத்துக்கு ஜிப்ரீல் என்னும் தேவதூதர் அல்லாவிடமிருந்து கட்டளைகளை எடுத்துக்கொண்டு இரவில் வருவது உண்டாம். ஆகவே மௌல்வி ஆண்டவனுக்கு இணையாக வேலை செய்தார். அவருக்குச் செலுத்தப்பட்ட காணிக்கைகளில் பாதி ஆண்டவனுக்குச் சேர்ந்தன! இவ்வளவு வசதியான வாய்ப்பை பயன்படுத்திக் கொள்ளாமல் எப்படி இருப்பது? கொடுக்கப்படும் காணிக்கை பிற்பாடு பத்து மடங்காக, ஒருவேளை இன்னும் அதிகமாகக் கிடைக்கும் என்ற நம்பிக்கை இருக்கும்போது சிறு காணிக்கையை அல்லாவுக்குச் செலுத்தாமல் எப்படி இருப்பது? முதல்தரமான பேரம் ஆயிற்றே இது! எனவே தருணத்தை நழுவ விடாதிருக்க எல்லோரும் விரைந்தார்கள். பலத்தை எல்லாம் கொண்டு மற்றவர்களை இடித்துப் புகுந்து கொண்டு முன்னேறினார்கள். சவுக்கை வீசி ஆட்களை விலக்கி வழி செய்து கொண்டு பக்கிரிகளுக்கு முன்னே சென்ற போலீஸ்காரனின் குதிரைக்கு அடியே பாய்ந்தார்கள். இந்தப் போலீஸ்காரன் கொழுத்தவன். தன் குதிரையை விடப் பருமனாய் இருந்தான். நாய் பற்களால் கவ்விக் கொண்டிருக்கும் கயிறுபோன்ற துருத்திய மீசை வைத்திருந்தான். இடையில் தொங்கியது பிரமாண்டமான உடைவாள். அது அனேகமாகத் தரையைத் தொட்டுக் கொண்டு தொங்கி ஆடியது. அது குதிரையின் விலாவில் கட்டப் பட்டிருக்கிறதா அல்லது போலீஸ்காரனின் இடையிலா என்று சட்டென விளங்கக்கூட இல்லை.

இவை எல்லாவற்றையும், இவ்வளவு அருமையான சந்தர்ப்பத்தைக் கண்ட பின்பும் பேரத்தில் பங்கு கொள்ள மிக மிக அற்பமான பரிசுப் பொருள்கூட, புனிதத் தடியில் தொங்க விடுவதற்குப் பாங்கான துணித் துண்டுகூட இல்லாமையால் எனக்கு உண்டான மன வருத்தத்தை நீங்களே கற்பனை செய்து கொள்ளுங்கள்!... ஏமாற்றக் கண்ணீர் என் விழிகளில் ஊற்றெடுத்தது. அப்போது என் ஆன்மாவில் திடீரென ஒளி வீசியதுபோல் இருந்தது. வெப்பமூட்டப் பெற்ற மெழுகு போல் துவண்ட என் மேனி முழுவதிலும் நடுக்க அலை பரவிற்று. நான் கூட்டத்தில் பாய்ந்து ஆவேசத்துடன் இடித்துப் புகுந்து தலைமைப் பக்கிரியை நோக்கிச் சென்றேன். பெரியவர்களின் ஊடாக நழுவி எவருடைய கைக்கு அடியிலோ நுழைந்து எப்படியோ ஒரு விதமாகப் புனிதத் தடியை நெருங்கிவிட்டேன். அதைப் பிடித்திருந்த கையைப் பற்றிக் கொண்டு முழந்தாள்

படியிட்டு உரக்க அழத் தொடங்கினேன். தலைமைப் பக்கிரி நின்று, என்னைத் தூக்கி நிறுத்தி, தலையை வருடினார்.

"என்ன வேண்டும், என் குழந்தாய்? சொல்லு, நான் அல்லாவிடம் கேட்கிறேன்" என்று கனிவுடன் மொழிந்தார்.

அப்போது நான் நாக்குழற என் தாழ்மையான விண்ணப்பத்தைச் செய்துகொண்டேன். இந்தத் தெய்விகச் சங்கிலியில் என்னையும் ஒரு வளையமாக்கும்படி - புனிதத் துறவிகளின் சீடனாக என்னை ஏற்றுக்கொள்ளும்படி - வேண்டிக் கொண்டேன். அவ்வளவுதான். சுற்றியிருந்த கூட்டத்தில் கிளம்பிய ஆரவாரத்தையும் கூப்பாடுகளையும் அழுகையையும் வருணித்து மாளாது. தலைமைப் பக்கிரி நின்றதுமே சுற்றிலும் அமைதி குடி கொண்டது. எனவே என் வேண்டுகோள் பலருக்குக் கேட்டது. அவர்கள்தாம் இப்படி ஆரவாரித்தார்கள். தலைமைப் பக்கிரி இரண்டு கைகளையும் உயர்த்தி என்னை ஆசீர்வதித்த போது உழவர்களும் மாதர்களும் எப்படிப் புலம்பினார்கள்! அதை எழுத்தில் விவரிக்க முடியாது.

அப்புறம் நானோ! அந்த நிமிஷம் முதல் நான் சாதாரண மானிடன் அல்ல, வழக்கமான உலகத் துன்பங்களில் உழலும் அற்ப மனிதன் அல்ல, அல்லாவின் உயர்பெரும் நீதிமன்றத்தில் ஒரு பதவியில் அமர்த்தப்பட்டவன்! பொறுப்புமிக்க இந்தப் பதவியில் நான் இன்னும் வேலை தொடங்கவில்லைதான். ஆனாலும் இந்த வேலை என் மனதுக்குப் பிடித்தது என்பதை அதற்குள்ளாகவே உணர்ந்தேன். சாப்பிடவும் பருகவும் இனி வேண்டிய அளவு கிடைக்கும் என்பதைக் கண்டேன். நான் செய்ய வேண்டியது எல்லாம் "அல்லாவே, ஓ அல்லாவே" பாட்டை நன்றாக மனப்பாடம் செய்துகொள்வதும் வாயில் நுரை ததும்பப் பாடப் பழகிக்கொள்வதும்தான். பாட்டு உணவூட்டும் என்று ஜனங்கள் சொல்வது சரிதான். களி மிகுதியால் நான் அறிவு இழப்பதை உணர்ந்தேன். பக்கிரிகளுக்கு ஒரு பத்து அடி முன்னால் வெறுந் தலையுடன் நடந்தவாறு, என் அற்பச் சக்திக்கு இயன்ற அளவு உரக்க மூக்கால் பாடினேன்:

"ஓ-ஓ-ஓ!
குளம்புகள் ஒலிக்க வரும் குதிரை,
அல்லாவே, ஓ அல்லாவே.



கிளம்புவீர் மக்காள், காண்பீரே,
அல்லாவே, ஓ அல்லாவே.
யார் என் காதலி எனக் கேட்டால்,
அல்லாவே, ஓ அல்லாவே,
எல்லாமே மண், அல்லாவே."

உலக வாழ்க்கையை - துயரும் களியும் நிறைந்த, பலவிதச் சூழ்ச்சிகளும் துன்பங்களும் விபத்துக்களும் உள்ள வாழ்க்கையை - எல்லார் முன்னிலையிலும் துறந்துவிட்ட, கடவுள் பித்துக் கொண்ட சிறுவனான என்னைக் கண்டு சந்தை மக்களின் உள்ளங்களில் அல்லாவின்மீதும் அவரது தொண்டர்கள் மீதும் பக்தி பரவசம் மீண்டும் அலையடித்துப் பொங்கியது. காணிக்கைகள் ஆலங்கட்டி மழைபோலப் பொழியலாயின...

சந்தைக்கு வைக்கோல் ஏற்றிவந்து விற்றுவிட்டுத் திரும்பிய ஒட்டகக்காரர்களின் ஒட்டகங்கள்மேல் இரண்டு பேராக உட்கார்ந்துகொண்டு மாலையில் இஷான்பஜார் என்னும் இடத்துக்கு, மகாபுனிதரான மௌல்வியின் மடத்துக்குப் புறப்பட்டோம். அதை நெருங்க நெருங்கச் சூழ்நிலையின் புனிதத்தன்மை அதிகரித்தது. தேவதூதர்களின் கேளாத கானம் காற்றில் நிறைந்தது போன்று உணர்ந்தேன். இது இயல்பே. ஏனென்றால் தாஷ்கந்த், சீம்கந்த், ஸைராம் பிரதேசங்களுக்கு இந்த மடம் அனேகமாக மெக்காவிலுள்ள காபா என்னும் திருக்கோயில் போன்றது. இந்த நகரங்கள் எல்லாம் விண்ணிலிருந்து வரும் கிரணங்களால் ஒளியுறுத்தப்படுகின்றன என்றால் இஷான்பஜார் தனது ஒளிர்வால் விண்ணகத்தைப் பிரகாசிக்கச் செய்கிறது.

மடத்தை அடைந்ததும் நாங்கள் ஒட்டகங்களிலிருந்து இறங்கி, சாமான்களை இறக்கினோம். தலைமைப் பக்கிரி ஒட்டகக்காரர் களுக்குக் கூலி கொடுப்பதற்குப் பதிலாக அவர்களை ஆசீர்வதித்துப் பிரார்த்தனை படித்தார். இம்மாதிரி ஆசி ஒவ்வொன்றுக்கும் சில இடங்களில் ஒட்டகம் காணிக்கை தருவார்களாம். ஆகவே ஒட்டகக்காரர்கள் அடைந்த லாபத்தைக் கணக்கிடுவதே கஷ்டமாய் இருந்தது.

மௌல்வியின் வீடு தொழுகைக் கூடத்தை அடுத்திருந்தது. இந்தக் கூடத்தில்தான் அவர் ஸூஃபிகளுடன் தொழுகை

படிப்பது வழக்கம். பக்கிரிகளின் மடமும் அதை ஒட்டியே இருந்தது. முதலில் நாங்கள் தொழுகைக்கூடம் போனோம். எங்கள் தலைமைப் பக்கிரி கூடத்தின் வாயிலில் சிறு ஜெபம் படித்தார். பிறகு பக்கிரிகள் தாழ்வாரத்தில் வட்டமாக உட்கார்ந்தார்கள். அவர்களுடைய பணிவுள்ள சீடனான நானோ, காலணிகள் கழற்றிவைக்கப்படும் முன் நடையில், கைகளை மார்பில் தாழ்மையுடன் சேர்த்துக்கொண்டு தலை வணங்கி, தொண்டுக்குத் தயாராக நின்றேன். இதற்கிடையே பாட்டு தொடர்ந்தது. நாங்கள் கொண்டுவந்த காணிக்கைகளை ஸூஃபிகள் சிற்றறையில் வைத்தார்கள். இந்த அறைக்கு இரு வாயில்கள் இருந்தன - ஒன்று தொழுகைக்கூடத்தின் புறத்திலும் மற்றது மௌல்வியின் அந்தப்புரத்தின் புறத்திலும்.

முடிவில் பாட்டு நடுவே நின்றுவிட்டது. தொழுகைக் கூடத்தின் உள்ளிருந்து ஒயிலாக அடியெடுத்து வைத்து வந்தார் மகாபுனிதரான மௌல்வி. "நான் உன்மேல் அடி வைத்து நடக்கத் தான் செய்கிறேன். என்றாலும் நீ எனக்கு என்றும் நன்றி பாராட்ட வேண்டும்" என்று தரையிடம் சொல்லுபவர் போன்ற பாவனையுடன் அதை நோக்கியவாறு நடந்தார் அவர். தாம் நபிகள் நாயகம் முகம்மது அவர்களின் ஒன்பதாவது மனைவியான ஆயஷா-குபாரோவின் வம்சத்தவர் என்று அவரே சொல்லிக் கொண்டார் - இந்த விஷயம் அவருக்குத் தெரியாவிட்டால் வேறு யாருக்குத் தெரியும்? நீண்ட வெளிர் மஞ்சள் மேலங்கியும் தூய்ய வெள்ளைத் தலைப்பாகையும் கனத்த ஆட்டுத் தோலால் அழகுறச் செய்த காலணிகளும் அணிந்திருந்தார் அவர். ஆயிரத்துக்குக் குறையாத மணிகள் கொண்ட ஜெபமாலை அவர் கைகளில் திகழ்ந்தது. கண்களுக்கு மை தீட்டப்பட்டிருந்தது. நரையோடிய நீண்ட தாடி இழைய இழைய வாரி விடப்பட்டிருந்தது - ஒவ்வொரு மயிரையும் தனி உறையில் புகுத்த முடியும்போல. மங்கிய வெள்ளி நிறமான அழகிய மீசையிலிருந்தும், அளவுமீறி உளுந்து இரையாக ஊட்டப்பட்ட சேவலினுடையவைபோலச் சிவந்த கன்னங்களிலிருந்தும் உண்மையாகவே திவ்விய ஒளி பளிச்சிட்டது.

அனுபவமற்ற மற்றவர்கள் இதைக் கண்டார்களோ இல்லையோ அறியேன், ஆனால், அவருடைய இரு மருங்கிலும் ஆயிரத்து ஐநூறு தேவதூதர்கள் உடன் வந்த அருங்காட்சியை



நான் கண்ணாரக் கண்டேன். நாங்கள் எல்லோரும் எழுந்து அவருக்கு வணக்கம் செலுத்தினோம். மகாபுனிதர், நற்செயல்கள் செய்ய வேண்டும் என்னும் இறைவர் கட்டளையை எல்லோருக்கும் நினைவுறுத்திவிட்டு, முன்கார், நாக்கிர் இருவரும் (இறந்தவர்களைக் கல்லறைகளில் பூர்வாங்கமாக விசாரிக்கும் தேவ தூதர்கள் இவர்கள்) வந்தார்களா என்று கேட்டார். இதற்கு விடையாகத் தலைமைப் பக்கிரி தமது செப்புப் பாத்திரத்தில் சேர்ந்திருந்த காணிக்கைப் பணத்தை எல்லாம் மௌல்வியின் முன்றானையில் கவிழ்த்துக் கொட்டினார். செப்பு, வெள்ளி நாணயங்களும் காகிதப் பணமும் அதில் இருந்தன. நோட்டுக்களையும் ரூபிள்களையும் மகாபுனிதர் லேசான கையசைப்பால் மேலங்கிக் கைகளுக்குள் செலுத்திவிட்டு, "ஓ-ஓ, என் கைகள் செல்வ அழுக்கால் கறைபடாதிருக்குமாக! என் குழந்தைகளே; இது அழுக்கு நாய்கள்தாம் இவற்றைத் தேடித் திரியும்!" என்று கூறி செப்பு, வெள்ளி நாணயங்களைப் பக்கிரிகள் பக்கம் நகர்த்திவிட்டார்.

அப்புறம் அவர் பார்வை என்மேல் நிலைத்தது. "இந்தக் குழந்தை யார்?" என்று மிகவும் கனிவுடன் வினவினார்.

தலைமைப் பக்கிரி என்னைப் பற்றிச் சொல்லத் தொடங்கி, என்னை வானளாவப் புகழ்ந்தார். அப்போது மட்டும் நாங்கள் சொர்க்க வாசலில் இருந்தால், நுழைவுச் சீட்டு இல்லாமலே நான் உள்ளே புக அனுமதிக்கப்பட்டிருப்பேன் - அவ்வளவு பிரமாதமாக என்னைப் பாராட்டினார் தலைமைப் பக்கிரி. முதல் தடவை பசுந்தேநீர் பருகும்போது அவர் என்னைப் பற்றிய புகழ்ச்சியைத் தொடர்ந்தார். இந்தப் பையன், நிலையான வாழ்வுக்காகப் புவி வாழ்க்கையைத் துறந்தவரும் பேரானந்தத்தில் திளைப்பவருமான உண்மைப் பக்கிரி மஷ்ராப்தான் என்றார் அவர். என்னுடைய ஆனந்த பரவசத்தை அவர் வெகுவாக வருணித்தார். அது எல்லாப் புகழ்ச்சிக்கும் மேற்பட்டது என்றும் அதுபோன்ற ஆனந்தக் களிப்பு அனுபவமுள்ள துறவிகளுக்கும் கூட வாய்க்கக் கூடியது அல்ல என்றும் சொன்னார். இதைக் கேட்டதும் மகாபுனிதரான மௌல்வி பெருங் கருணை கூர்ந்து, சுட்டு விரலால் ஜாடை காட்டி என்னைத் தம் அருகே அழைத்தார். நான் மீண்டும் சிரம் தாழ்த்து வணங்கி அருகே போனேன். தம் ஆசிக் கரத்தால் அவர் என் நெற்றியை வருடினார்.

"அப்படியா சேதி! நீ இவ்வளவு பாக்கியசாலியா! அல்லாவின் கவனத்துக்கே ஆளாகிவிட்டாய் நீ. வானத்தைப் பார், என் மகனே!" என்றார்.

அப்போது அவர் விரல்களின் ஊடாக எழுபத்தொரு சொர்க்கங்களை நான் கண்டேன்...

சடங்கு முடிய வெகு நேரம் ஆயிற்று. தொழுகைக் கூடத்தின் மூலையில் துணித் துண்டுக் குவியல்களின் நடுவே தன்னந் தனியாகப் படுத்துக்கொண்டேன். நீண்ட நேரம் எனக்கு உறக்கம் பிடிக்கவில்லை. நான் பெற்ற அளவு நன்மை என் வயிறு அடைந்தது என்று சொல்ல முடியாது. என்றாலும் அதன் நிலைமையும் பொறுக்கக் கூடியதாகவே இருந்தது. வேறு ஒன்றும் இல்லாவிட்டாலும் அது பேசாதிருந்தது. சொர்க்க போகத்துக்கு நிகரான பல்வேறு விஷயங்கள் பற்றிய எண்ணங்கள் என் மூளையில் திரும்பத் திரும்ப வந்து கொண்டிருந்தன. சிற்றறையில் காணிக்கைகளுக்காக மூன்றாவது வாயில் இருக்கிறதா, மௌல்வி இன்று என்ன சாப்பிட்டார், கொழுக்கட்டைகளா புலவா, எந்த மனைவியுடன் இன்று தங்கியிருக்கிறார், பச்சைத் தேநீர் நிறைத்த கெண்டி அவர் தலைமாட்டில் இருக்கிறதா இல்லையா - இரவில் தாகம் எடுக்கும்போது பச்சைத் தேநீர் மிகவும் பயனுள்ளதாயிற்றே - இவ்வாறெல்லாம் சிந்தித்தபடியே தூக்கத்தில் ஆழ்ந்தேன்.

உறங்கியதும் நான் சொர்க்கத்திலோ நரகத்திலோ அல்ல. அதே தொழுகைக்கூடத்தில்தான் இருக்கிறேன் என்பதைக் கண்டேன். அங்கே குளிராய் இருந்தது. முழு நிசப்தம் நிலவியது. அவ்வப்போது வீசிய காற்றால் நான் புரண்டு புரண்டு படுத்தேன். அப்போது குளிரால் நடுங்கிய ஒரு நாய் திடீரென்று தொழுகைக் கூடத்துக்குள் வந்து முறையிடுவதுபோலச் சிணுங்கியது. அதைத் தேற்ற எனக்கு மிகுந்த விருப்பம் உண்டாயிற்று. ஆனால் எழுந்திருந்து அதன் பக்கத்தில் நெருங்க என்னால் முடியவே இல்லை. ஏனென்றால் நானேதான் இந்தச் சிணுங்கும் நாயாக இருந்தேன். என்மீதே உண்டான இரக்கத்தால் நான் நெடுநேரம் துன்பப்பட்டேன். காலையில் ஸூஃபிகள் என்னை எழுப்பும் வரை மெல்லிய குரலில் சிணுங்கியவாறு இருந்தேன்.

தொழுகைக் கூடத்தில் பிரார்த்தனைக்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. ஆட்கள் சிலர் சிலராக வந்து பெரிய வட்டமாக நின்றுகொண்டார்கள். நான் மளமளவென்று முகங்கை கழுவிக் கொண்டு அவர்களுடன் சேர்ந்து கொண்டேன். ஜெபமாலைகள் வைத்திருந்தவர்கள் பரபரவென்று மணிகளை உருட்டத் தொடங்கினார்கள். மற்றவர்கள் கிளர்ச்சியால் சிறிது நடுங்கியவாறு சுற்றுமுற்றும் பார்த்தார்கள். ஒரு சிலர் எங்கோ வெறித்தே நோக்கியவாறு நின்றார்கள். மாதர்களும் குழந்தைகளும் கிழவர்களும் கவலை தோய்ந்த ஆடவர்களும், அரைக் குருடர்களும் பக்கவாதம் வந்தவர்களும் மலடர்களும் வறியவர்களும் கடன்பட்டவர்களும் ஜாமீனில் விடுபட்ட குற்றஞ் சாட்டப்பட்டவர்களும் அவர்களில் இருந்தார்கள். மௌல்வி கூடத்தில் தோன்றியதுமே அவர்கள் எல்லோரும் உதவி கோரியும் விபத்திலிருந்து விடுதலை வேண்டியும் உரத்த குரல்களில் அபஸ்வரமாக ஓலமிட்டார்கள். மௌல்வி ஏதோ முணுமுணுத்து அவர்களுடைய தண்ணீர்ச் செம்புகளிலும் தேநீர்க் கெண்டிகளிலும் வேறு பலவித நீர்ப் பாத்திரங்களிலும் ஊதினார்.

தொழுகை முடிந்ததும் நான் பக்கிரிகளுடன் ஒரு விதமாகக் காலை உணவு சாப்பிட்டேன். நஜர்பேக் சந்தைக்குப் போகும்படி மௌல்வி அவர்களுக்குக் கட்டளையிட்டார். நானும் அவர்களுடன் போக ஆயத்தம் ஆனேன். ஆனால் மகாபுனிதர் என்னைத் தடுத்துவிட்டார்.

"நீ இரு, மகனே. நீ மிகவும் துடியான பையன். இங்கேயே முன்கட்டிலும் பின்கட்டிலும் உனக்கு வேலை இருக்கும்" என்றார்.

மறுத்துப் பேச நான் துணியவில்லை. ஆனால் உளம் சோர்ந்து போனேன். இவ்வளவு அருமையான, லாபகரமான பயணத்தை நழுவ விட வேண்டுமே! பக்கிரிகளின் ஊர்வலத்தில் கலந்து கொண்டு, சந்தையில் எத்தனையோ பொருள்களைக் கையாடலாமே! நெசவாளியின் கைகளுக்கு அடியில் நூல் நாழி போல வீட்டின் முன்கட்டுக்கும் பின்கட்டுக்குமாகப் பலிந்தாடுவதை விட வெளியே சுற்றி வருவது எவ்வளவோ இன்பமாய் இருக்குமே, பாடிப் பாடிப் பணம் சம்பாதிப்பதற்குப் பதில் களைத்துச் சலித்துப் போக வேண்டிவரும்...

பக்கிரிகள் போன பிறகு மௌல்வி என்னைத் தம் சிற்றறைக்குப் பரிவுடன் அழைத்தார்.

உள்ளே போனதுமே, தொண்டு செய்ய ஆயத்தமாய் இருக்கும்

தோற்றத்துடன், "அறிவில் சிறந்த என் ஆசானே, என்ன உத்தரவு இடுகிறீர்கள்?" என்று மெல்லிய குரலில் கேட்டேன். அவர் என் கையைப் பிடித்து வெள்ளைக் கோரைப் பாயில் அமர்த்தினார். நான் முழந்தாள் படியிட்டு அமர்ந்தேன். மௌல்வி பிறையிலிருந்து திருக்குரானை எடுத்து என் கையில் கொடுத்தார். தோல் அட்டை உறைபோட்ட புத்தகம் அது. நான் அதை மூன்று முறை முத்தமிட்டு, நெற்றியில் ஒற்றிக்கொண்டேன். மௌல்வி விழிகளைப் பாதி மூடியவாறு தொழுகை படித்து விட்டு, பின்வரும் சொற்களைத் திருப்பிச் சொல்லும்படிக் கட்டளை இட்டார்: "இன்னாருடைய மகனும் மகாபுனிதரான மௌல்வியின் விசுவாசம் உள்ள சீடனும் ஆன நான், எனது ஆன்மிக ஆசானின் எல்லாக் கட்டளைகளையும் மறுபேச்சின்றி நிறைவேற்றுவேன். என் தலைமேல் வாள் ஓச்சப்படினும் சரியே, அவருடைய கட்டளைகளிலிருந்து வழுவ மாட்டேன். எதையும் தவறாகப் பயன்படுத்த மாட்டேன். என் ஆன்மிக ஆசானின் நான்கு மனைவியரில் ஒவ்வொருவரையும் என் சொந்தத் தாய் போலக் கருதி மரியாதை செய்வேன். அவர்களை ஏறிட்டுப் பார்க்க மாட்டேன். இந்த வீட்டில் நான் கேட்கும் எந்த இரகசியத்தையும் எவருக்கும் தெரிவிக்க மாட்டேன். இந்த இரகசியத்துக்குப் பங்கம் வரும்படி நடந்துகொள்ள நான் நினைத்தால் நான் குருடன் ஆவேனாக, எனக்குப் பக்கவாதம் வருமாக, மேலெல்லாம் கொப்புளங்கள் வெடித்து நான் சாவேனாக! ஆமென்!"

மௌல்வியுடன் இதை முடிவுவரை சொன்னதுந்தான் பயங்கரமான பிரதிக்கினை செய்துவிட்டேன் என்பதை உணர்ந்தேன். எனக்கு அச்சம் உண்டாயிற்று. ஆனால் எதுவும் செய்வதற்கு இல்லை. சொற்களைத் திருப்ப முடியாதே! அந்தக் கணம் முதல், ஒரு தையலிலிருந்து மறு தையலுக்குப் போகும் ஊசிபோல முன்கட்டுக்கும் பின்கட்டுக்குமாக ஓடிச் சாடிய வண்ணமாய் இருந்தேன். சரியானபடி ஓய்வு கொள்ளக்கூட எனக்குத் துணிவு வரவில்லை. மனிதனுடைய நம்பிக்கைகள்தாம் எவ்வளவு ஏமாற்றம் நிறைந்தவை!

எல்லாவிதக் கட்டளைகளையும் எல்லாவித வேலைகளையும் நிறைவேற்றியவாறு நான் உழைத்தேன். ஒரு விஷயத்தில் மட்டும் பாழாய்ப் போகிற சைத்தான் என்னை நேர் வழியிலிருந்து பிறழ



வைத்தான். மகாபுனிதரின் இளைய மனைவி பதினேழு வயது இள நங்கை. சித்திரந் தீட்டிய மர ஸ்பூன் போல ஒரே அழகு அவள், மெய்யாகவே! அவளைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை என்னைப் பிடர் பிடித்து உந்தும். நான் சற்றைக்கு ஒரு தரம் கடைக் கண்ணால் பார்ப்பேன். மறுகணமே வெள்ளைக் கோரைப்பாயும் நான் திருக்குரானை முத்தம் இட்டதும் எனக்கு நினைவு வரும். மனிதகுல வைரியான சைத்தான் பேராசை பிடித்த மீனைப்போல என்னைத் தூண்டிலில் மாட்டிவிட்டான் என்று தோன்றும். நிம்மதி இழந்து தவிப்பேன். மறுபடியும் முன்னும் பின்னும் ஓடியவாறு வாய்க்குள் பாடுவேன்:

"ஒயிலார் அழகி ஜெபிஹோான்,
அல்லாவே, ஓ அல்லாவே..."

நாட்கள் ஒன்றன் பின் ஒன்றாக உருண்டோடின. ஒரு முறை மௌல்வி என்னை மறுபடி சிற்றறைக்கு அழைத்தார்.

"என் மகனே" என்று பரிவாக விளித்துக் கூறலானார்: "எங்களுக்காக நீ வெகுவாக உழைத்திருக்கிறாய். எங்கள் வீட்டு விவகாரங்கள் எல்லாவற்றையும் இப்போது நீ அறிவாய்... எத்தனை பெயரை நான் பராமரிக்க வேண்டியிருக்கிறது என்பதை நீயே காண்கிறாய்: மனைவிகள், குழந்தைகள், ஸூஃபிகள், வேலையாட்கள், உழவு வேலைக்காரர்கள் என்று ஏராளமானவர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்குச் சாப்பாடு போட வேண்டும், உடைகள் தர வேண்டும்... காணிக்கைகளை மட்டும் நம்பிக் கொண்டிருந்தால் நாம் எல்லோரும் பட்டினி கிடந்து மடிவோம், இல்லையா? நீ துடியான பையன், திறமை உள்ளவன். நான் உன்னைச் சோதித்துப் பார்த்தேன். எங்கள் இரகசியத்துக்கு நீ அர்ப்பிக்கப்பட்டிருக்கிறாய். பராக்குப் பார்த்துக் கொண்டு இராதே, மகனே. நீயும் பணம் சம்பாதிக்க வேளை வந்துவிட்டது... ஏதேனும் வேறு வழியில்... காணிக்கைகள் திரட்டுவது தவிர..."

மௌல்வி இப்படிப் புதிர் போட்டார்! "வேறு வழியில்" என்பதற்கு என்ன அர்த்தம்? நான் எண்ணி எண்ணி மூளையைக் குழப்பிக்கொண்டேன். எனது விளங்காமையை முகம் பிரதிபலித்தது போலும். ஏனெனில் மௌல்வி எனக்கு விளக்கத் தொடங்கினார் - ஜாடை மாடையாக, சுற்றி வளைத்து. முடிவில்

அவருடைய சொற்களின் பொருள் என் அறிவுக்கு எட்டிவிட்டது. "அப்படியா விஷயம்?" என்று எண்ணி அவரிடம் சொன்னேன்:

"நல்லது, குருவே! நான் கீழ்ப்படிகிறேன். என் ஆசானின் பொருட்டு என்னையே பலி கொடுக்கச் சித்தமாய் இருக்கிறேன்..."

மௌல்வி மனநிறைவுடன் முறுவலித்து என் தோளில் தட்டிக் கொடுத்து ஆசி கூறினார். அப்போது அவர் விழிகளில் தந்திரம் பளிச்சிட்டது. நானும் தேவையான துணிவு எனக்கு வந்து விட்டதை உணர்ந்தேன்.

மௌல்வி சட்டென எழுந்தார். "கொஞ்சம் இரு" என்று என்னிடம் சொல்லிவிட்டுப் பின்கட்டுக்குப் போனவர், சிறிது நேரத்தில் குட்டையில் முடிந்த துணி முடிச்சு ஒன்றுடன் திரும்பி வந்தார். அதில் பழைய சராயும் சட்டையும் குல்லாயும் அச்சிட்ட சீட்டித் துணி இடுப்புக் குட்டையும் இருந்தன.

"இந்தா, குழந்தாய், இவற்றை அணிந்துகொள். இந்த உடை என் காலஞ்சென்ற மகன் மின்யாகுத்ரத்துடையவை. போன கோடையில் அவன் குளத்தில் மூழ்கி இறந்துபோனான். அவன் ஆன்ம சாந்திக்குப் பிரார்த்தனை செய்" என்றார்.

"ஆமென், சொர்க்க சாம்ராஜ்யம் அவனுக்குக் கிட்டுமாக..."

"ஆண்டவன் அருள்க..."

மௌல்வியின் புதிய உத்தரவை எப்படி நிறைவேற்றுவது என்று நான் சிந்திக்கலானேன். ஆனால் வேட்டைக்காரனை நோக்கியே விலங்கு வரும் என்பது சரிதான் போலும். மறுநாள் நான் ஏதோ காரியமாகப் பக்கத்துக் கிராமத்துக்குப் போய்விட்டுத் திரும்பிவரும்போது இரண்டு வயது கிடாரிக் கன்று திடலில் விட்டாற்றியாக நிற்கக் கண்டேன். அது மந்தையிலிருந்து பின் தங்கிவிட்டதா, வழி தவறிவிட்டதா என்றெல்லாம் அதை விசாரிக்க நான் முற்படவில்லை. இடுப்புக் குட்டையை அவிழ்த்து அதன் கொம்பில் மாட்டி மெதுவாக அதை மடத்துக்கு இழுத்துச் சென்றேன். மௌல்வி பெரு மகிழ்வு அடைந்தார்.

"நீ மிக அருமையான பையன்! நீ முன்னுக்கு வருவாய்... அல்லாவேதாம் இந்த நல்ல மிருகத்தை உன்னிடம் அனுப்பினார். ஆனால் ஒன்று சொல்லு, வழியில் யாரும் உன்னைப் பார்க்க வில்லையே? பார்க்கவில்லையா? ஒருவருமே? அல்லா



காட்டாற்றினார்... சபாஷ், என் மகனே, சபாஷ். உனக்குக் கற்றுக் கொடுப்பதை நன்கு புரிந்துகொள், ஒருபோதும் சங்கடத்துக்கு உள்ளாக மாட்டாய் - இவ்வுலகிலும் சரி, மறு உலகிலும் சரி..." என்று கூறினார்.

மாலையில் கிடாரி வெட்டப்பட்டது. இறைச்சியும் கொழுப்பும் குதிரில் வைக்கப்பட்டன. தோலைப் பதனிடும்படியும் தமக்கு ஜோடுகள் தைக்கவும் மௌல்வி கட்டளையிட்டார்.

மறுநாள் நான் மீண்டும் பக்கத்துக் கிராமத்துக்கு அனுப்பப் பட்டேன். அப்பாவிக் கிடாரியின் சொந்தக்காரன் யார் என்பதை அப்போது தெரிந்து கொண்டேன். அவன் கிராமவாசி, நாடோடி வியாபாரி. அதற்குள் அவன் சுற்று வட்டாரம் முழுவதிலும் பெருங்கூச்சல் கிளப்பிவிட்டான். தன் உடைமையை எங்கும் தேடினான். கடைசியில் கிடாரியின் குளம்புத் தடங்களைக் கண்டு அவற்றைத் தொடர்ந்து சென்றான். கிடாரியையும் அதை ஏமாற்றியவனையும் வாய்க்கு வந்தபடி திட்டினான். அவனுக்கு இந்த உலகில் உள்ள எல்லா வியாதிகளும் துன்பங்களும் நேர வேண்டும் என்றும் நரகத்தில் எல்லாச் சித்திரவதைகளையும் அவன் அனுபவிக்க வேண்டும் என்றும் சபித்தான். நான் புதர்களின் மறைவில் அவனைத் தொடர்ந்தேன். அவன் ஒரேயடியாக வைது திட்டினான் - அதிலும் குளம்புத் தடங்கள் மறைந்ததும், திடீரென்று அவன் தலையை நிமிர்த்தி அக்கம் பக்கம் பார்த்தான். தடங்கள் எங்கே இட்டுச் செல்கின்றன என்று அவன் புரிந்துகொண்டான் போலும். அதைப் பின்பற்றி இன்னும் கொஞ்ச தூரம் சென்றான். ஆனால் அவனுடைய வசவுகளின் தொனி கணிசமாக மாறிவிட்டது. தன் கோபத்தை எல்லாம் அவன் இப்போது கிடாரியின்மேல் காட்டத் தொடங்கினான். மடத்துக்கு எதிரே வந்ததுமோ அவன் பேசுவதையே நிறுத்தி விட்டான். வாயிலையே குத்திட்டு நோக்கினான். என்னைத் தவிர வேறு யாருமே அவனைப் பார்க்கவில்லை (என்னையோ, அவன் கணக்கிலேயே எடுத்துக்கொள்ளவில்லை), என்றாலும் அவன் தலை வணங்கினான். பிரார்த்தனை செய்யும் பாவனையில் முகத்தைத் தடவினான், பின்பு திரும்பி நடக்கலானான். சில தாவடிகள் சென்றதும் அவன் ஒரே பாய்ச்சலாக ஓட்டம் எடுத்தான்.

என் முதல் வெற்றி மௌல்விக்கு மிகுந்த உற்சாகம் ஊட்டியது.

அவர் என்னைத் தம் சிற்றறைக்கு மறுபடி அழைத்துப் புது உபதேசம் செய்யலானார்.

"மகனே, வேறு வேலைகளையும் நீ மேற்கொள்ள வேலை வந்துவிட்டது. சந்தைக்குப் போ... பைகள், மணி பர்ஸுகள் என்ற அருமையான வஸ்துக்களும் உலகில் இருக்கின்றனவே! ரொக்கப் பணத்தைவிட மேலானது எது? எடுத்துச் செல்வது கஷ்டம் அல்ல, மறைப்பதும் சுலபம். ரொக்கப் பணம், மகனே, ரொக்கப் பணம்!" என்றார்.

ஜேபடித்திருடன் ஸுல்தான்கூட என்னை ஈடுபடுத்த முடியாத இந்தத் தொழிலை நான் உண்மையாகவே மேற்கொண்டிருப்பேன். ஆனால் ஒரு நிகழ்ச்சி இதற்குத் தடையாய் நேர்ந்தது. இந்த உரையாடல் நடந்ததற்கு அடுத்த நாள் மௌல்வி என்னை முகப்பு வெளியில் நிறுத்தி, "மகனே, ஒரு கழுதை பிடித்துக்கொண்டுவா. சீக்கிரம், எங்கிருந்தாலும் பிடித்துக்கொண்டுவா!" என்றார்.

நான் அவரை வியப்புடன் நோக்கினேன். அவருக்குக் கோபம் வந்துவிட்டது.

"என்ன பேந்தப் பேந்த விழிக்கிறாய்? ஒரு கழுதையைப் பிடித்துக் கொண்டுவந்து முற்றத்து முசுக்கட்டை மரத்தில் கட்டு என்கிறேனே!"

இவருக்குக் கழுதை எதற்காக? எவளேனும் மனைவிக்குச் சொறி சிரங்கு வந்துவிட்டதா? இவ்வாறு எண்ணமிட்டவனாக நான் கிராமத்துக்குப் போனேன். இரண்டு பூசணிக்காய்கள் கொடுப்பதாகப் பேசி அதே ஏழை வியாபாரியின் கழுதையை ஒரு மணி நேரத்துக்கு வாடகைக்குப் பிடித்தேன். இந்தக் கழுதை மேல் ஏறித்தான் "புருவச்சாயம் வேண்டுமா, சராய் நாடா வேண்டுமா?" என்று கூவிக்கொண்டே அவன் கிராமம் கிராமமாகச் செல்வது வழக்கம்.

கழுதையை இட்டு வந்து முசுக்கட்டை மரத்தில் நான் கட்டியதும், மௌல்வியின் கர்ப்பிணியான மூன்றாம் மனைவி மிகுந்த மகிழ்ச்சி அடைந்தாள். முற்றத்தைத் தெளித்துப் பெருக்கித் துப்புரவாக்கி, மரத்தடியில் கம்பளம் விரிக்கும்படி அவள் உத்தரவிட்டாள். இந்தக் காரியங்களை எல்லாம் நான் செய்து கொண்டிருக்கையில், இந்தக் கழுதைமேல் மௌல்வியின் மனைவி



காட்டிய மரியாதையும் கனிவும் எனக்குப் பெரு வியப்பூட்டின. ஏனெனில், நபிகள் நாயகத்தின் நெருங்கிய உறவினளான ஃபாத்திமாவின் வம்சத்தினள் அவள் என்று சொல்லிக் கொண்டார்கள். நான் விரிப்பு விரித்ததுமே அவள் என்னை வெளியே போகச் சொல்லிவிட்டு வாயிலை உட்புறம் தாளிட்டுக் கொண்டாள். இதனால் என் ஆவல் நெருப்பாய் மூண்டெரிந்தது. நான் தொழுகைக்கூடத்துக்குப் போய் முற்றத்தின் புறம் இருந்த சுவரில் உள்ள திறப்பு வழியாக இடுக்கை அடைத்திருந்த சித்திர வேலைப்பாடு உள்ள ஒரு குச்சியை அகற்றினேன். எல்லாம் நன்றாய்த் தெரிந்தது. மௌல்வியின் மனைவி கழுதையின் காது நுனிகளைக் கத்தரிக்கோலால் நறுக்கினாள். அவற்றிலிருந்து குருதி கசியத் தொடங்கிற்று. தான் கம்பளத்தின்மேல் பட்டு விரிப்பு விரித்து, தலையணையைப் போட்டுக்கொண்டு படுத்து, கழுதையைப் பார்த்து மகிழலானாள். இரத்தம் வடிந்த காதுகளில் ஈக்கள் மொய்த்தன. பாவம் கழுதை தலையை ஆட்டி, விடாது தொல்லை கொடுத்த ஈக்களை விரட்டிற்று. அது காதுகளை அடித்து முடிந்தவரை பலமாக உதறிற்று. ஒன்றோடொன்று அடித்துக்கொண்டது. மௌல்வியின் மனைவியோ இதைக் கண்டு களிபேருவகை அடைந்தாள்.

"அட என் கண்ணே!" என்று அவள் கனிந்தாள் - அதன் கழுத்தைக் கட்டிக்கொண்டுவிடுவாள் போல. "அட என் அழகு ராஜா! உன் காதுகள் தாம் எவ்வளவு ஒயிலாக அசைகின்றன. உனக்காக என் உயிரையே கொடுப்பேன்!'' என்றாள். மௌல்வியின் மற்ற மனைவிகளும் முற்றத்துக்கு வந்து இந்தக் காட்சியைக் கண்டு விஷச் சிரிப்பு சிரித்தார்கள். அவர்களில் ஒருத்தியைப் பார்த்து மூன்றாம் மனைவி சொன்னாள்: "பாருங்கள், அயிம்சாஹோன். இதன் காதுகள் எவ்வளவு அருமையாக அசைகின்றன, பாருங்களேன்! அட என் கண்ணே, என் செல்வமே, என் கழுதை ராஜாவே!"

சுவர் திறப்பு அருகே நின்றவாறு நானும் சத்தம் காட்டாமல் பொங்கி பொங்கி சிரித்தேன். கழுதையின் இடத்தில் எங்கள் மௌல்வி இருப்பதாக எண்ணிக்கொண்டேன். கருவுற்ற மனைவி மௌல்வியைக் காதல் மொழிகளால் கொஞ்சுகிறாள். அவரது கடிவாளம் கிணுகிணுக்கிறது. நுனிகள் கத்தரிக்கப்பட்ட பெரிய வெண் காதுகள் எல்லாத் திசைகளிலும் திரும்பி அசைகின்றன.

அவற்றின்மேல் ஈக்கள் திரள் திரளாக மொய்க்கின்றன... கற்பனைக் கண்களால் இவற்றை எல்லாம் நான் பார்த்துக் கொண்டிருந்தேன். கரிய விழிகளும் ஒயில் நடையுங்கூட மௌல்விக்கும் கழுதைக்கும் ஒரே மாதிரியானவை என்று நினைத்ததும் தாங்க முடியாமல் களுக்கென்று சிரித்துவிட்டேன். இதுதான் எனக்கு வினையாக முடிந்தது. ஒருவேளை அல்லா திடீரென்று நினைவுபடுத்திக் கொண்டு என் எண்ணங்களை அறிந்துவிட்டார் போலும். தம் விசுவாசமுள்ள ஊழியர்களை - எங்கள் மௌல்வியைக் காட்டிலும் விசுவாசம் மிக்கவரோ, இருக்கவே முடியாது! - சிந்தனையில் கூட இந்தமாதிரி எள்ளி நகையாடுவதை அனுமதிக்கக் கூடாது என்று அல்லா முடிவு செய்தார் போலும்! உண்மை எதுவோ, அறியேன். ஆனால், வாய்க்குள் சிரிக்க முயன்றவாறு சுவற்றுத் திறப்பின் அருகே நான் குலுங்கி நெளிந்து கொண்டிருக்கையில் பின்னிருந்து வந்த முக்கிய ஆபத்தை நான் புறக்கணித்துவிட்டேன். முதுகில் பலத்த குத்து விழுந்ததுந்தான் இதை உணர்ந்தேன்.

"அட சைத்தான் மகனே. இங்கே என்ன செய்கிறாய்?"

இவ்வாறு கேட்டவர் மகாபுனிதரான மௌல்வியேதாம். என்னுடைய குபீர்ச் சிரிப்பு அவர் காதில் பட்டிருக்கும். விஷயம் என்ன என்று பார்க்க வந்திருப்பார். தம்முடைய காதல் மனைவிகளை - எவர்களை நான் சொந்தத் தாயார்களாக மதிக்க வேண்டுமோ அவர்களை - நான் உற்றுப்பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டுவிட்டார். இது கொடும் பாவம், எவ்வகையிலும் மன்னிக்கத் தகாதது. இம்முறை நான் சில உதைகளோடு தப்பவில்லை. மௌல்வி என்னைச் சபித்தார். மடத்திலிருந்து விரட்டிவிட்டார்...

நான் வாயிலுக்கு வெளியே, பாதைக்கு வந்தேன். தனது கிடாரியை (இப்போது கழுதையையுங்கூட) இழந்துவிட்ட அப்பாவி வியாபாரி சமீபத்தில் இந்தப் பாதையில்தான் நின்று கொண்டிருந்தான். நானோ, புதர்களின் மறைவிலிருந்து கேலிச் சிரிப்புடன் அவனைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அதிர்ஷ்டம் எப்படி மாறி மாறி வருகிறது என்று எண்ணமிட்டேன். சில நிமிடங்கள் முன்பு வரை இந்தக் கோழிக் குடிலில் நான் மதிப்புள்ள சேவலாக வளைய வந்துகொண்டிருந்தேன். இப்போதோ அதற்குள் தலை காட்டவே என்னால் முடியாது!



தவிரவும், நான் சொர்க்கத்தை இழந்துவிட்டேன்! அதுவோ என் கைக்குள் இருந்தது. வாஸ்தவம், மடத்தில் என் வாழ்வு சொர்க்கத்துக்கு அவ்வளவாக ஈடாயில்லைதான். என்றாலும் வருங்காலத்தில் சொர்க்கபோகம் எனக்கு நிச்சயமாகக் கிட்ட இருந்தது! இப்போது என்ன ஆகும்? கால் போன போக்கில் அலைந்து திரிய வேண்டுமா? வானம் உயரமானது, பூமி கடினமானது. எங்கே போவதோ தெரியவில்லை. எனக்குப் பச்சாதாபம் உண்டாயிற்று. அறிவற்ற கயவன், வீடு வாசலற்ற நாடோடி, பாதரசத் துளி மழமழப்பான சாய் தளத்தில் உருண்டு ஓடுவதுபோல ஒரு நோக்கமும் இன்றி வெட்டியாக அலைந்து திரிபவன் என்று என்னையே நொந்துகொண்டேன். நான் மட்டும் சற்று அறிவும் அடக்கமும் உள்ளவனாக இருந்தால், வீண் சேட்டைகள் செய்யாமல் இருந்தால், ஒரு துன்பமும் அறியாமல் வீட்டோடு வாழ்ந்திருப்பேன். இப்போதோ? ஆனால், சென்றதோ மீளாது, போனதற்கு வருந்திப் பயன் என்ன?...

## அத்தியாயம் 8
# ஜமீன்தார் பட்ட பாடு

**நா**டோடி வியாபாரி கண்ணில் படாமல் தப்பவேண்டுமே கடவுளே என்று எண்ணியவாறு கிராமத்தைச் சுற்றிக் கடந்து போக முயன்றேன். தலைக்கு நாள் போலவே சாலை வழியே மெல்ல நடந்து, பொழுது சாயும் தறுவாயில் பேராற்றின் கரையை அடைந்தேன். பாறைகளில் தத்தி முழங்கியவாறு அது விரைந்து பெருகிக் கொண்டிருந்தது. நுரையால் அதன் பெருக்கு வெளேரென்று காட்சி தந்தது. அது என்ன ஆறோ, எனக்குத் தெரியவில்லை. எங்கே ஆபத்தின்றி இறங்கிக் கடக்கலாம் என்பதைப் பற்றியோ, கேட்கவே வேண்டாம். கரையோரமாக ஆற்றுப் பெருக்குக்கு எதிர்த்திக்கில் சிறிது தூரம் நடந்தேன். அப்புறம் பெருக்கையொட்டித் திரும்பினேன். அப்போது ஆற்றின் இரைச்சலின் ஊடே மனிதக் குரல்களும் குதிரைக் கனைப்பும் கேட்பதுபோல எனக்குப் பிரமை உண்டாயிற்று. சுற்றிலுமோ, ஒரு பூதரைக் காணோம். எதை எதிர்பார்க்கிறோமோ அல்லது அஞ்சுகிறோமோ, அதை எல்லாம் கொந்தளிக்கும் ஆற்றின் இரைச்சலில் கேட்கலாம்...

தனியே ஆற்றைக் கடக்க என்னால் முடியவில்லை, திரும்பவும் வகையில்லை. யாரேனும் சாலையில் வர மாட்டார்களா என்று காத்திருந்தேன். எங்கள் வட்டாரத்தில் நான் கேட்டிருந்த ஒரு பாட்டு அப்போது என் நினைவுக்கு வந்தது. ஏழை நாடோடிகளின் அந்தப் பாட்டு, இந்தச் சந்தர்ப்பத்துக்கு மிகவும் பொருந்தியது. விரைந்து சென்ற வெள்ளலைகளையும் நுரையினூடே துருத்திக் கொண்டிருந்த மழமழப்பான பருத்த பாறைகளையும் நோக்கி, அந்தப் பாட்டைப் பாடினேன்:

"கொந்தளிக்கும் ஆறு
குமிழ்த்துப் பொங்கும் பெருக்கு,
எந்த வகையில் கடப்பேன்,
நான் அறியேன் அம்மா!



நொய்ந்த நோஞ்சல் குதிரை,
நீண்ட வழிப் பயணம்!
என்றும் இலக்கைச் சேரேன்,
இதை அறிவேன் அம்மா!

தொத்தல் குதிரை பருக்கைக்
கல்லில் நடந்து துடிக்கும்
முற்றம் புழுதி என்றன்
மூச்சில் நிறையும் அம்மா!

ஆட்கள் பறிக்க மறந்து,
பழுத்திட்ட வெள்ளரியைக்
காட்டிலுமே மஞ்சள்
பாரித்திட்டேன் அம்மா!

ஏடி, பிறை நுதலி,
நிமிர்த்து புருவ வில்லை,
நாடும் என் உளத்தின்
மதுவை முற்றும் பருகு!

அந்தக் கரையில் ஒளிரும்
அழகி, உன்றன் வீடு.
எந்தன் உயிரும் வழங்க
வருந்தேன், உறுதி சொல்வேன்!

என்னை உங்கள் இடத்துக்கு
ஈர்த்ததுதான் எதுவோ?
இன்னும் அறியேன், வெறுமே
இரங்கி அழுவேன், அம்மா!

உன்றன் நுண்ணிடைதான்
ஒளிரும் வெண்மையாக -
துன்றும் ஆடை பட்டோ,
அன்றேல் சீட்டி தானோ?

விரையும் ஆற்றுக்கில்லை
இரவோ அன்றிப் பகலோ,
நுரைகள் சுழித்துப் பொங்க
இரையும் வெள்ளம், அம்மா!

என்னை விடவும் மேலோ,

உண்மையாகச் சொல்லு -
உன் உளம் கவர்ந்த
அந்த ஆண்மகன்தான்?

அக்கரையில் காண்பேன்
அருமையான கலசம்.
பொற்கலசம் கண்டு
பூரிப்பேன், அம்மா!

கையை நீட்ட மட்டும்
எனக்கு முடிந்திடாது -
பைய எடுத்து நீரால்
நிறைக்க இயலேன், அம்மா!

பொங்கி நுரைக்கும் பெருக்கை
நீந்திக் கடத்தல் கடினம்.
தங்கு தடை இல்லாத
வழியே எளிது, அம்மா!

வேண்டும் இதற்குத் துணிவு,
அற்ப விரைவு அல்ல
வேண்டும் தயக்கம் அற்ற
துணிவு ஒன்றே, கண்டாய்!

வீரம் வேண்டும் அன்பா,
நாடோடிக்கு, மதுவை
ஆரப் பருக விரும்பின்,
அடியொட்டக் குடிப்பாய்!"

பாடி முடித்ததும் எனக்கு உண்மையாகவே தாகம் எடுத்தது. முழங்காலளவு நீரில் நின்று இரண்டு கைகளாலும் சில மடக்குகள் இனிய ஆற்றுநீரை அள்ளிக் குடித்தேன். சில்லென்றிருந்தது, பற்கள் உதிர்ந்து விடும்போல. தலை நிமிர்ந்தவன், முதிய உழவன் ஒருவன் நோஞ்சல் குதிரை ஏறி ஆற்றுக்கு வரக் கண்டேன். நான் அவனை எதிர்கொண்டு ஓடி, அவன் மேலங்கியின் தலைப்பைப் பிடித்துக்கொண்டு, என்னையும் மறுகரை சேர்க்கும்படிக் கெஞ்சினேன்.

"நல்ல ஆள்தான்" என்று சிடுசிடுப்புடன் கூறி, குதிரையைக் காட்டி, "பார்த்தாயா, எப்படி எலும்புந்தோலுமாய் இருக்கிறது என்று? இப்போதுதான் குட்டி போட்டிருக்கிறது. தவிர சுமையும் கனம். இரண்டு ஆண்கள் இதன்மேல் சவாரி செய்வது வெட்கக்கேடு" என்றான்.

ஆனால் நான் விடாமல் மன்றாடவே அவன் சிடுசிடுப்புடன் இசைந்தான்.

அக்கரை சேர்ந்தபின், கலைந்த சுமையை அவன் சரிப்படுத்துவதற்குள் அந்த ஆற்றின் பெயரையும் அவனைப் பற்றிய விவரங்களையும் கேட்டு அறிந்தேன். அந்தக் கரைக்கு அருகே இருந்த கிராமத்தைச் சேர்ந்த முந்திரித் தோட்டக்காரன் அவன். என்னைப் பற்றிய அவசியத் தகவல்களை அவனும் விசாரித்து அறிந்துகொண்டான். நான் வீடின்றித் திரியும் அனாதை, சுற்றமோ இனமோ அற்றவன், தலை சாய்த்துப் படுக்கவும் வறட்டு ரொட்டித் துண்டு பெறவுங்கூடப் புகல் அற்றவன் என்று கேள்விப்பட்டதும் கிழவன் எனக்குச் சில யோசனைகள் கூறினான். கிராமத்தில் பிரதேச நிர்வாக அதிகாரி ஸரீபாய் என்பவன் இருப்பதாகவும் அவன் பிரபல ஜமீன்தார் என்றும் சொன்னான் கிழவன். ஜமீன்தாரின் ஆப்பிள் தோட்டம் ஆயிரம் ஏக்கருக்கும் மேல் விசாலமானது. எப்போதுமே அங்கே உழைக்கும் கரங்களுக்குத் தேவை உண்டு. இப்போதோ, ஆப்பிள் முதிரும் பருவம். எனவே இந்தத் தேவை இன்னும் அதிகமாய் இருக்கும். ஜமீன்தார் என்னை வேலைக்கு வைத்துக்கொள்ள மறுக்கமாட்டான் - நான் மலிவான கூலிக்கு இசைவேனே, அதனால். இன்றே இரவைப் பண்ணைக் கூலியாட்களுடன் கழிக்கலாம். தானே எனக்கு வழி காட்டுவான் - இதுவே அவன் தெரிவித்த தகவல்...

முதிய முந்திரித் தோட்டக்காரன் என்னை ஒரு சிறு மட்ட வீட்டுக்கு அழைத்துப் போனான். அதில் சுமார் இருபது பண்ணைக் கூலியாட்கள் இருந்தார்கள். எல்லோருமே கிழவர்கள், அல்லது மிகவும் வயதானவர்கள். நான் முறைப்படி அவர்களுக்கு வணக்கம் தெரிவித்தேன். அவர்கள் மகிழ்வுடன் என்னை ஏற்றுக் கொண்டார்கள். ஸரீபாயிடம் கூலி வேலை செய்ய விரும்புவதாக நான் சொன்னதும் அவர்களில் ஒருவன் கூறினான்:

"அடே மகனே. இங்கே நீ என்ன செய்யப் போகிறாய்? நீ இன்னும் இளையவன். வாழ்க்கை மதிப்புள்ளது. இங்கே உன்

வாழ்க்கை வீணே பாழாகிவிடும். நேரம் இருக்கும்போதே ஏதேனும் நல்ல ஊதியம் தரும் தொழிலைக் கற்றுக்கொள்" - இப்படிச் சொல்லிவரும்போதே என் முகத்தில் தென்பட்ட சோர்வைக் கண்டு, "அட ஒரு பத்து, பனிரெண்டு நாட்கள் வேலை செய்யலாம், பரவாயில்லை. உன் நிலைமையைச் சீர்படுத்திக் கொள். அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்." என்று நல்லியல்புடன் கூறினான்.

மண் குவளையில் ஒரு கரண்டி சோளக் கஞ்சி ஊற்றி இரண்டு ரொட்டித் துண்டுகளுடன் எனக்குக் கொடுத்தான். நான் அவற்றை நல்ல பசியுடன் சாப்பிட்டேன்.

அப்புறம் படுத்துக்கொள்வதற்கான இடத்தை எனக்கு அவர்கள் காட்டினார்கள். ஆப்பிள் வைப்பதற்கான இரண்டு காலிப் பெட்டிகளைக் கட்டிலாகவும் மரச்சீவல் குவியலைத் தலையணையாகவும் வைத்துக்கொண்டு படுத்தேன். படுக்கை அருமையாக அமைந்துவிட்டது. உறக்கமோ கரும்பாய் வந்தது. மௌல்வியின் தொழுகைக்கூடத்தைவிட இங்கே வெதுவெதுப்பாய் இருந்தது. தவிர, பலபலவென்று விடிவதற்குள் தங்கள் பிரார்த்தனைகளால் எழுப்பிவிட ஸூஃபிகளும் இங்கே இல்லை.

காலையில் ஜமீன்தாரிடம் போனேன். ஆரம்பத்தில் அவன் மேலுக்குக் கொஞ்சம் பிகு பண்ணிக்கொண்டான். ஆப்பிள்கள் செங்கற்கள் அல்ல, அவற்றைக் கையாளத் திறமை வேண்டும் என்றான். பின்பு கூலி விஷயத்தில் நன்றாகப் பேரம் பண்ணினான். மாத்துக்குச் சுமார் இரண்டேகால் மணங்கு ஆப்பிள்கள் கூலி என்று முடிவில் ஒத்துக்கொண்டான். இந்த ஆப்பிள்கள் முதிர்ந்தவையும் பிஞ்சுகளுமாகப் பலதரப்பட்டவையாக இருக்கும் என்று வேறு நிபந்தனை சேர்த்தான்! அறியாச் சிறுவன் என்று என்னை அவன் ஏமாற்றப் பார்க்கிறான் என்பது குருடனுக்குக் கூடத் தெரியக்கூடியதாக இருந்தது. எனக்குக் கடுங்கோபம் வந்தது. ஆனால் நான் அதை வெளிக்காட்டவில்லை. என்னிடமோ இழப்பதற்கு ஒன்றும் இல்லை. எனவே ஒரு நிபந்தனை போடத் தீர்மானித்தேன். சற்று யோசித்துவிட்டுச் சொன்னேன்:

"ஜமீன்தார் ஐயா, நாம் கூலி எல்லாம் பேசி முடிவு பண்ணிவிட்டோம். ஆனால் என்னிடம் உள்ள ஒரு குறையை



உங்களிடமிருந்து மறைக்க மனச்சாட்சி இடந்தர மாட்டேன் என்கிறது. இதை நான் சொல்லிவிடாவிட்டால் ஒப்பந்தம் இஸ்லாம் மத விதிகளின் பிரகாரம் செல்லுபடி ஆகாது... என்னிடம் ஒரே ஒரு குறைதான் உண்டு, என்றாலும்..."

"சரி, சரி, சொல்லித் தொலை. என்ன குறை உன்னிடம்? தூங்கும்போது துணிகளை நனைத்துக் கொள்கிறாயோ? வலிப்பு வருவது உண்டோ?"

"இல்லை, ஜமீன்தார் ஐயா, இதெல்லாம் கிடையாது. ஆனால் குழந்தையிலிருந்தே எனக்கு உள்ள கெட்ட பழக்கம் என்ன என்றால் சமயாசமயங்க்ளில் என் விருப்பம் இல்லாமலே பொய் சொல்லுவேன். என்னால் இதைத் தவிர்க்க முடியாது. அப்புறம் நீங்கள் என்னைக் கோபித்துக்கொள்ளக் கூடாது, ஜமீன்தார் ஐயா, சொல்லிவிட்டேன். கூலி நீங்கள் சொன்னபடியே கொடுக்க வேண்டும்!"

"அட, குட்டிப் பிசாசே! தந்திரக்காரன் நீ, பையா. நல்லது, வேலை செய்யப்போ. அடிக்கடி மட்டும் பொய் சொல்லாதே!..."

இந்த மாதிரி நான் ஜமீன்தாரின் பண்ணைக்கூலியாள் ஆகிவிட்டேன்! என் வேலை ரொம்பக் கடினம் அல்ல. ஆப்பிள் மரங்களுக்கு முட்டுக்கால் கொடுப்பது, விழுந்த ஆப்பிள்களைச் சேகரித்து உலர்த்துவது, ஜமீன்தாருக்குப் பணம் தேவைப்படும் போது, நன்கு முதிராத ஆப்பிள்களை வண்டியில் ஏற்றிக் கொண்டு தர்பாஜா அல்லது ஸரீ-அகாச்சுக்கு விற்கப் போவது, தோட்டத்தைப் பேணிப் பாதுகாப்பது - இவையே என் வேலை... இவை ஒன்றும் பிரமாதம் இல்லை. ஜமீன்தாரின் பாழாய்ப் போன சுபாவந்தான் தலை வேதனையாய் இருந்தது. இவ்வளவு மோசமான நச்சுப்பிடுங்கியை நான் அவனுக்கு முன்னும் அப்புறமும் கண்டதே இல்லை. இங்கே வேலைக்கு அமர வேண்டாம் என்று யோசனை சொன்ன முதிய பண்ணைக் கூலியாள் சரியாகவே கூறினான். ஏதேனும் காரியமாக ஸரீபாயிடம் போனால் அவனிடமிருந்து லேசில் விடுபட முடியாது என்பதை முன்கூட்டியே சொல்லிவிடலாம். ஒவ்வோர் அற்ப விஷயத்துக்குப் பிறகும் "அப்புறம் என்ன?" என்ற ஒரே கேள்வியைப் பன்னிப் பன்னிக் கேட்கும் படுமோசமான வழக்கம் அவனிடம் இருந்தது. உதாரணமாக நீங்கள் அவனிடம் வந்து,

"கந்தீல் ஆப்பிள் பழுத்துவிட்டது" என்று சொல்வதாக வைத்துக் கொள்வோம். இது புரியும் விஷயந்தானே என்கிறீர்களோ? ஆனால் அவனோ, "அப்புறம் என்ன?" என்பான். "ஆப்பிள்களைப் பறிக்க வேண்டும்" என்பீர்கள் நீங்கள். அவனோ, சாபத்தீடான அதே வெட்டிக் கேள்வியை மறுபடி கேட்பான், "அப்புறம் என்ன?" என்று. "விற்க வேண்டும்" என்று சொல்வீர்களாக்கும். அவ்வளவுதானே என்கிறீர்களா? அதுதான் இல்லை. அவனால் நிறுத்த முடியாது. "சரி, அப்புறம் என்ன?" என்பான். இதற்கு மட்டும் ஏதேனும் பதில் உங்களிடம் தயாராக இல்லையோ, சரியான ஆபாசத் திட்டு வாங்கிக்கட்டிக் கொள்வீர்கள். சில வேளைகளில் முதுகில் பளீரென்று சவுக்கடிகூடக் கிடைப்பது உண்டு.

வியப்பு அளிக்கும் விஷயம் என்ன தெரியுமா? இந்த மாதிரி ஆட்களுக்கு அடிக்கும் அதிர்ஷ்டந்தான்! அல்லாவிடம் பாவ புண்ணியப் பேரேடுகளில் சரியானபடி கணக்கு எழுதப் படுவதில்லை என்று நினைக்கிறேன். அதுதான் உலகத்தில் ஏற்படும் எல்லாக் குழப்பங்களுக்கும் மூல காரணம். நல்லதிர்ஷ்டமும் துரதிர்ஷ்டமும் உரியபடி கிடைக்க வேண்டியவர்களுக்கு அன்றி யார் யாருக்கோ வாய்க்கின்றன. ஏற்கனவே அப்பத்தின் மேல் நெய் மிதந்து கொண்டிருந்தது ஸரீபாய்க்கு. செல்வம் கணக்கில்லாமல் கொட்டிக் கிடந்தது. இது போதாது என்று சுவாலாச்சியைச் சேர்ந்த யூஸுஃப் - கந்தோரிடம் அவனுடைய பழத்தோட்டம், வீடு, அதிலுள்ள தட்டுமுட்டு சாமான்கள் எல்லாவற்றையும் வேறு ஏதோ சூதாட்டத்தில் ஜெயித்துவிட்டான்... இந்தப் பழத் தோட்டம், சிறப்பாக குளுகுளுவென்று காற்று வீசும் கொடி வீடு, ஸரீபாயின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுவிட்டது. ஆகவே அவன் நெடு நேரம் சிந்திக்காமல் ஓர் இளம் கிர்கீஸியப் பெண்ணை அங்கே இன்னொரு தாரமாக மணந்து கொண்டான். இப்போது அடிக்கடி அங்கே போய், பத்து, பதினைந்து நாட்கள் இருந்து விட்டு வருவான்...

இம்முறையும் ஸரீபாய் தன் கிர்கீஸிய மனைவியிடம் போயிருந்தான். இங்கேயோ, ஆப்பிள்கள் பழுத்துவிட்டன, உதிரவும் தொடங்கின. ஆனாலும் எஜமானின் உத்தரவு இல்லாமல் பறிப்பை ஆரம்பிக்க எவனும் துணியவில்லை.



இதற்கிடையே குதிரைகளின் தீனியும் தீர்ந்து போய்விட்டது. பண்ணையாட்கள் அரைப்பட்டினி கிடந்தார்கள். அப்படியும் ஜமீன்தாரிடம் போக ஒருவருக்கும் விருப்பம் இல்லை. அவனுடைய "அப்புறம் என்ன?" என்ற கேள்வி எல்லோருக்கும் அவ்வளவு கசப்பாயிருந்தது. ஆனால் போகாமல் வேறு வழியும் இல்லை. எனவே மாலையில் எங்கள் பொதுவீட்டில் நாங்கள் சீட்டுக் குலுக்கிப் போட்டோம் - ஜமீன்தாரிடம் யார் போவது என்று தீர்மானிப்பதற்காக. என் தலைவிதி, சீட்டு எனக்கு விழுந்து தொலைந்தது.

இது எனக்குக் களிப்பு ஊட்டியது என்று நான் சொன்னால் பெரும் பாவம் செய்தவன் ஆவேன். பாவங்களோ, ஏற்கனவே என்மேல் ஏராளமாய்ச் சுமந்திருக்கின்றன. ஸரீபாயுடன் நடக்கப் போகும் உரையாடலை எண்ணிப் பார்த்தபோதே எனக்குக் குப்பென்று வியர்த்துவிட்டது. ஆயினும் ஒன்றும் செய்வதற்கில்லை. மறுநாள் காலை எனக்கு ஒரு குதிரை தரப்பட்டது. அதில் ஏறிக் கொண்டு சுவாலாச்சிக்குப் புறப்பட்டேன். நடக்கப் போகும் உரையாடலை வழிநெடுக பலவிதமாக கற்பனை செய்து பார்த்தேன். ஜமீன்தாரின் "அப்புறம் என்ன?" என்ற முடிவற்ற கேள்விக்கு எப்படி எப்படிப் பதில் அளிப்பது என்று சிந்தித்தேன். திடீரென்று என் கற்பிதக் 'குறை' எனக்கு நினைவு வந்தது. வந்ததுமே எனக்கு உண்டான மகிழ்ச்சியில் கைகள்கூட அரிக்கத் தொடங்கிவிட்டன.

நான் போனபோது ஜமீன்தார் வெந்த ஆட்டுத்தலை இறைச்சியைத் தன் உளங்கவர்ந்த கொடிவீட்டில் உட்கார்ந்து தின்று கொண்டிருந்தான். நான் அவனிடம் அழைத்துச் செல்லப்பட்டேன். சந்தடி செய்யாமல் வாயில் அருகே உட்கார்ந்தேன்.

"ஊம்? என்ன காரியமாக வந்தாய்?" என்று கேட்டான்.

"சும்மாதான், ஜமீன்தார் ஐயா. உங்களுக்காக நாங்கள் எல்லோரும் ஏங்கிப் போனோம். உங்களைப் பார்த்து வரும்படி மற்றவர்கள் என்னை அனுப்பினார்கள்..."

"நல்லது, நல்லது, அருமையான ஆட்கள். ஆனால் வெட்டியாக உன்னை அனுப்பியிருக்க மாட்டார்களே. ஏதேனும் காரியம் இருக்கும். சொல்லு, அப்புறம் என்ன?"

நான் தலையைக் குனிந்து கொண்டு தரையைப் பார்த்தபடியே சொன்னேன்:

"அதுதான் வந்து... உங்கள் கத்தி இருக்கிறதே, தந்தப் பிடி வைத்தது, அது முறிந்து போயிற்று. அதைத்தான் உங்களிடம் சொல்ல வந்தேன்..."

"அப்படியா, அப்புறம் என்ன? எப்படி முறிந்தது அது? நாசமாய்ப் போகிற பயல்களா, என்னத்தை நறுக்கினீர்கள் அதைக் கொண்டு? வீட்டிலுள்ள மற்றக் கத்திகள் எல்லாம் தொலைந்து போய்விட்டனவா என்ன?"

"உங்கள் வேட்டை நாயின் தோலை உரித்தோம். அப்போது கத்தி எலும்பில் புகுந்து மாட்டி முறிந்து போயிற்று."

"என்ன? வேட்டை நாயின் தோலையாவது, உரிக்கவாவது? அதிலும் தந்தப் பிடி வைத்த கத்தியால்? த்தூ! எதற்காக உரித்தீர்கள் தோலை?"

"எங்களுக்கு நேரமில்லை ஜமீன்தார் ஐயா! நாய் செத்ததுமே அதன் தோலை உரிக்க வேண்டியிருந்ததே. இல்லாவிட்டால் தோல் கெட்டுப் போகுமே. அதனால்தான் வேறொரு கத்தியைத் தேட நேரம் இல்லை."

"நீங்கள் எல்லோரும் அடியோடு பாழாய்ப்போக! வேட்டை நாய் எதனால் செத்தது?"

"செத்த குதிரையின் மாமிசத்தை அளவுமீறித் தின்றுவிட்டது."

"அதற்குச் செத்த குதிரையின் இறைச்சியைக் கொடுத்தது யார்? அது கிடக்க, குதிரை சாக வேண்டிய காரணம் என்ன?"

"ஒருவரும் கொடுக்கவில்லை, ஜமீன்தார் ஐயா, அதுவேதான் தின்றது. குதிரையும் வேற்றாருடையது அல்ல, உங்களுடையதே தான். நெற்றியில் வெள்ளைச் சுட்டி போட்ட செம்பழுப்புக் குதிரை..."

ஜமீன்தார் கணப்போது திக்குமுக்காடிப் போனான்.

"டேய், பையா, முதலில் யோசி, அப்புறம் பேசு... நீ என்ன சொன்னாய், நெற்றியில் வெள்ளைச் சுட்டி போட்ட செம்பழுப்புக் குதிரை செத்துப் போய்விட்டதா? அல்லாவே, காப்பாற்றும்! அது எப்படியடா சாக முடிந்தது?"



"அது வேலைக்கு லாயக்கற்றது, அதனால்தான்."

"வேலைக்கு லாயக்கற்றதா? எந்த வேலைக்கு? என்னடா உளறுகிறாய்?"

"நான் ஒன்றும் உளறவில்லை. அது தண்ணீர் வண்டியை இழுக்க உதவாது என்று தெரிந்தது. அதை வண்டியில் பூட்டியதே இல்லை போலிருக்கிறது. இப்போது பூட்டினோம். அது தண்ணீர் வண்டியை இழுத்து வரும்போது சுமை தாங்க மாட்டாமல் செத்துப்போயிற்று..."

ஜமீன்தார் இருக்கைவிட்டுத் துள்ளி எழுந்து, "அட சுயவாளிப் பயலே, என்னடா கன்னா பின்னா என்று பிதற்றுகிறாய்? சுமை வண்டிக் குதிரைகள் அத்தனை இருக்கும்போது, பந்தய ஓட்டத்திற்காக நான் ஊட்டி வளர்த்த ஒரே குதிரையைத் தண்ணீர் வண்டியில் பூட்டும் யோசனை எவனுக்குத் தோன்றிற்று சொல்லடா, கடைத்தேறா ஜென்மமே!" என்று தொண்டையைப் பிடித்துக் கொண்டு கத்தினான். குப்பென்று இரத்தம் ஏறி அவன் முகம் சிவுசிவுத்தது. உதடுகள் துடித்தன.

"ஜமீன்தார் ஐயா, தீப்பிடித்த பிறகு பந்தயக் குதிரையா வண்டிக் குதிரையா என்று நிதானித்துப் பார்க்க நேரம் ஏது? கைக்கு அகப்பட்ட குதிரையை வண்டியில் பூட்டினோம். ஒரு வாளித் தண்ணீராவது கொண்டு வரட்டுமே என்று!"

நான் பேசிக் கொண்டிருக்கையில் ஜமீன்தார் தன் உணர்வு இன்றியே கையிலிருந்த ஆட்டு நாக்கை ஒரு துண்டு கடித்தான். ஆனால் தீ விபத்து பற்றிய என் சொற்கள் அறிவுக்கு எட்டியதுமே கபக்கென்று அதை விழுங்கவே அது தொண்டைக் குழியில் அடைத்துக் கொண்டது. அரும்பாடு பட்டு அதை உள்ளே செலுத்திவிட்டு, எருதுபோலத் துருத்திய விழிகளை என்மேல் நாட்டியவாறு ஒரு வார்த்தை பேசாமல் உட்கார்ந்திருந்தான். ஆட்டின் நாக்குக்குப் பதில் சொந்த நாக்கையே விழுங்கிவிட்டானோ என்று நான் பயந்துகூடப் போனேன். ஆனால் அவன் சற்று நேரத்துக்குப் பேச்சு இழந்துவிட்டான், அவ்வளவுதான். முடிவில் அவனுக்கு மறுபடி பேச்சு வெடித்துக் கிளம்பிற்று.

"நீ... உனக்கு என்ன, கிறுக்கு பிடித்துவிட்டதா? தீப்பிடித்துக்

கொண்டது என்றாயே, என்ன அர்த்தம் அதற்கு? எங்கே பிடித்துக் கொண்டது தீ? எதனால் பிடித்துக் கொண்டது?..."

"நான் நல்ல மூளையோடுதான் இருக்கிறேன், எஜமானே. நெருப்பு முதலில் குதிரை லாயத்தில் பிடித்தது. பாவம், எல்லாக் குதிரைகளும் தீக்கு இரை ஆகிவிட்டன."

"என்ன... என்ன.. என்ன காரணத்தால் குதிரை லாயத்தில் நெருப்பு பற்றியது?"

"அறியேன். மற்றவர்களும் இப்படித்தான் நினைக்கிறார்கள் என்று எண்ணுகிறேன். அதாவது களஞ்சியத்தில் பிடித்த நெருப்புதான் குதிரை லாயத்துக்குப் பரவி இருக்க வேண்டும்."

"அட என் அல்லாவே! எத்தகைய பேரிடி என்மேல் விழுந்து விட்டது! களஞ்சியத்தில் நெருப்பு மூளும்படி எதுவும் இல்லையே! கோதுமையும் அரிசியும் கொழுப்பும் துணிகளும் தாமே இருந்தன! அவை தாமே பற்றி எரியக் கூடியவை அல்லவே!"

"பொறுங்கள் எஜமான், பூராவும் சொல்ல விடுங்கள். பண்ணை வீட்டிலிருந்து நெருப்பு களஞ்சியத்துக்குத் தாவிற்று. அங்கிருந்து குதிரை லாயத்துக்குப் பரவிற்று. இப்படியாக ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குப் போயிற்று..."

"அப்படியானால் வீடும் எரிந்து போயிற்றா?"

"வீடு சாம்பலாகிவிட்டது, களஞ்சியமும் குதிரை லாயமும் வெந்து போய்விட்டன, குதிரைகள் நெருப்பில் மடிந்தன, செம்பழுப்புக் குதிரை செத்துப் போயிற்று, கத்தி முறிந்து போய்விட்டது..."

"ஓ-ஓ-ஓ! அட துன்பமே! ஐயோ, நான் எதுவுமே அறியாமல் உட்கார்ந்திருக்கிறேனே! ஓ-ஓ-ஓ... ஆமாம், வீடு எதனால் தீப்பிடித்துக் கொண்டது? ஊம்?"

"மெழுகுவர்த்தியால், எஜமான், மெழுகுவர்த்தியால்."

"மெழுகுவர்த்தியாவது ஒன்றாவது? உனக்கென்ன மூளை அறவே பிசகிவிட்டதா? என் வீட்டில் எங்காவது மெழுகுவர்த்திகள் எரிவது உண்டா? நான் தாஷ்கந்திலிருந்து அத்தனை விளக்குகள் வாங்கிவந்தேனே ... அவை எல்லாம் எங்கே போய்விட்டன? ஊம்? எங்கே போய்த் தொலைந்தன?



மண்ணெண்ணெய் பீப்பாய்க் கணக்கில் வாங்கி, ஒரு வருஷம் பூராவுக்கும் சேமித்து வைத்திருந்தேனே! மெழுகுவர்த்திகளை ஏன் ஏற்றினீர்களாம்?"

"எஜமான், ஆளைப் பேசவே விடமாட்டேன் என்கிறீர்களே! ஒருவர் இறந்துபோனபின் அவர் சவத்துக்கு மேலே மண்ணெண்ணெய் விளக்கு ஏற்றுவதை எங்காவது கண்டதுண்டா?"

இதைக் கேட்டதும் ஜமீன்தார் ஒரேயடியாக முடங்கிவிட்டான். என் புளுகுகளால் அவன் மூளை அடியோடு குழம்பிப் போய் விட்டது, எந்த உலகில் இருக்கிறோம் என்பதே அவனுக்கு விளங்க வில்லை என்பது தெரிந்தது. இதற்கிடையே நான் குழந்தைக்கு விளக்குவதுபோல அளந்து கொண்டு போனேன்.

"உங்களுக்குத் தெரியாதா எஜமான், பிணத்துக்கு மேலே ஏற்றுகிற விளக்குக்கு விட்டில் பூச்சி பறந்து வரவேண்டும். இல்லாவிட்டால் இறந்தவரின் ஆவி எதற்குள் புகும்? அதற்காகத் தானே கோப்பையில் தண்ணீர் நிரப்பி ஆப்பிள் கிளையை அதிலே வைப்பார்கள். விட்டில் பறந்து வந்து முதலில் கிளை மேல் உட்கார்ந்து களைப்பாறும், அப்புறம் சுற்றிப் பறக்கத் தொடங்கும்..."

ஜமீன்தாருக்குப் பேசத் திராணி இல்லை. கையசைப்பால் என்னைப் பேசாதிருக்கும்படி ஜாடை காட்டிவிட்டு, "யார்... யார் இறந்து போனது?" என்று ஈன சுரத்தில் வினவினான்.

நான் உடனே கைகளால் முகத்தைப் பொத்திக்கொண்டு உரக்க ஒப்பாரி வைத்து, அழுகைக்கு இடையே சொன்னேன்:

"உங்கள் இளைய மகன், ஐயோ! பூரிபாய்வச்சா... ஓ-ஓ-ய்யோ... மரத்தில் ஏறி... ஐயையோ.. பறவைக் குஞ்சைப் பிடிக்கப் போனார்.. ஆ-ஆ-ஆ... ம..மரத்திலிருந்து... வி..விழுந்து... இறந்து போனார்... ஒரே ஒரு தரம்... மட்டும்... 'அப்பா!' என்று கத்தினாராம்..."

ஜமீன்தார் நான் சொன்னதை முடிவுவரை கேட்டானோ இல்லையோ, தெரியாது. தேநீர்க் கோப்பையால் மண்டையில் அடித்துக்கொண்டான். கோப்பை உடைந்து போயிற்று. அடிபட்ட இடத்திலிருந்து இரத்தம் தேயிலைத் துணுக்குகளுடன் கன்னப் பொருத்தில் வழிந்தது. அவன் தாடியைப் பிய்த்துக்

கொண்டு கோவெனக் கதறி அழுதான். நான் அவனோடு கூடி அழுதேன். முடிவில் இருவரும் அடங்கினோம். ஜமீன்தார் உட்கார்ந்து துயரம் ததும்ப அசைந்தாடினான்.

எல்லைமீறிச் சென்றுவிட்டோம். ஏதாவது ஆறுதல் அளிக்கக் கூடியதாகக் கதைக்க வேண்டும் என முடிவு செய்தேன்.

லேசான விம்மலுடன், ஆனால் களி பொங்கும் முகத்துடன் சொன்னேன்: "ஐயோ, எஜமானே. உங்கள் மகன் மாண்டுபோனார், வீடு சாம்பலாகி விட்டது, குதிரைகள் வெந்துபோயின, வேட்டை நாய் மண்டையைப் போட்டுவிட்டது, இருந்தாலும்..."

ஜமீன்தார் என்னை வெறுப்புடன் நோக்கினான். எனவே நான் ஆறுதல் அளிக்கும் விஷயத்துக்கு விரைவில் வரும்பொருட்டு இந்த அவலப் பேச்சை நடுவிலேயே விட்டுவிட்டேன்.

"இருந்தாலும் அல்லா உங்களுக்கு அபரிமிதமாகப் பரிசு வழங்குவானாக! ஜமீன்தார் ஐயா, ஒரு நல்ல சேதி கொண்டு வந்திருக்கிறேன். அது எல்லாத் துயரங்களிலும் உங்களைத் தேற்றும்!" என்றேன்.

"உஹ்" என்ற சீறல் ஓசை அவனிடமிருந்து வெளிப்பட்டது.

"அடியோடு நாசமாய்ப்போக உன் நல்ல சேதி! இன்னும் என்ன சேதி கொண்டு வந்திருக்கிறாய், உருப்படாத பயலே, சொல்லித் தொலை!" என்றான்.

"உங்கள் நடுவுள்ள மகள் அதல்-அபா அழகான ஆண் மகவைப் பெற்றெடுத்திருக்கிறாள். எந்தச் செல்வமும் அந்தக் குழந்தைக்கு ஈடாகாது!" என்றேன்.

"என்ன - அ?" என்று பொங்கினான் ஜமீன்தார். அவன் கண்கள் பிதுங்கிவிட்டன. "எந்த அதல்-அபா?" - கணநேரம் பேசாதிருந்த பின் அவன் எருதுபோல எக்காள முழக்கம் இட்டான்: "என் மகளுக்கு இன்னும் கலியாணம் ஆகவில்லையே!"

நான் தோள்களைக் குலுக்கினேன்:

"நாங்களுந்தாம் ஒரே ஆச்சரியம் அடைந்தோம். ஆனால் அல்லா திருவுளம் கொண்டால் கலியாணம் ஆகாத கன்னி களுக்குக் கூடப் பிள்ளை வரம் அருள முடியுமே! ஆனால்



குழந்தை இருக்கிறதே, ஜமீன்தார் ஐயா, அதுதான் உங்கள் பேரப்பிள்ளை, என்ன அழகு தெரியுமா?" - நொடிநேர இடைவெளி விட்டு, அடக்கத்துடன் பேச்சைத் தொடர்ந்தேன்: "பாதல் தெரியும் அல்லவா? அவன்தான், உங்கள் வண்டிக்காரன்? அவனை அப்படியே உரித்து வைத்திருக்கிறது..."

இதை ஜமீன்தாரால் தாங்க முடியவில்லை. அவன் உணர்விழந்து தரை விரிப்பில் சாய்ந்தான். நானும் நேரத்தை வீணாக்க விரும்பாமல் உடனே குதிரையேறிக் கம்பி நீட்டினேன். இவ்வளவு நல்ல சேதிகளுக்குப் பரிசு ஒரு சாட்டையடியோடு நிற்காது. இந்தப் பரிசுக்கு மெய்யாகவே நான் ஏற்றவன்தான். தன்னடக்கம் காரணமாக இதை ஏற்காமலே விட்டுவிடத் தீர்மானித்தேன்.

நான் பண்ணை வீடு திரும்பிய ஒரு மணி நேரத்தில் ஸரீபாயும் தன் வெண் மஞ்சள் குதிரைமேல் ஏறி அங்கே வந்து சேர்ந்தான். இடைக்குட்டை கட்டிக் கொள்ளாமையால் அவனுடைய மேலங்கி நுனிகள் காற்றில் படபடத்தன. ஒரு கண்ணால் வானையும் மறு கண்ணால் தரையையும் நோக்கியவாறு அவன் சவாரி செய்தான். "நம் தலையில் என்ன விபத்து விடியுமோ" என்று எண்ணி நான் ஒளிந்துகொண்டேன். ஜமீன்தாரின் வீட்டார் அவனுடைய அழுகையையும் புலம்பலையும் கேட்டு ஏதோ துன்பம் நேர்ந்துவிட்டது என்று முடிவு செய்து அழுது அரற்றியவாறு அவனை எதிர்கொண்டார்கள். ஸரீபாய் குதிரை மேலிருந்து இறங்கினான். அலறல்களும் துயரத் தழுவல்களும் தொடங்கின, அந்தச் சமயத்தில் வெளிவாயிலிலிருந்து எல்லோருடனும் சேர்ந்து அழுவதற்காகப் பாய்ந்து வந்தான் சளிமூக்கன் பூரிபாய் - ஜமீன்தாரின் இளைய மகன். "அப்பா" என்று வீரிட்டுத் தகப்பனிடம் ஓடினான் அவன். ஸரீபாய் தொப்பென்று தரையில் உட்கார்ந்துவிட்டான். இது தோற்ற மயக்கமா அல்லது ஆவிதான் தென்படுகிறதா என்று அவனுக்குப் பிடிபடவில்லை. அப்புறம் எல்லாம் விளங்கிவிட்டது. குதிரைகள் பத்திரமாய் இருக்கின்றன, வேட்டை நாயும் உயிரோடு இருக்கிறது, பண்ணை வீடு தீக்கிரையாகவில்லை, தந்தப் பிடி வைத்த கத்தி கூட விலை மதிப்புள்ள மற்றப் பொருள்களோடு சேதமின்றி வைக்கப்பட்டிருக்கிறது என்பவற்றை அவன் தெரிந்து கொண்டான்.

என்னை எல்லோரும் மும்முரமாகத் தேடினார்கள். நான் அவர்களுக்குக் கடுக்காய் கொடுத்துவிட்டு அன்று முழுவதும் தலைமறைவாய் இருந்தேன். ஆனால் அடுத்த நாள் நான் அகப்பட்டுக் கொண்டேன். ஆட்கள் என்னைக் கட்டி இழுத்து வந்து ஜமீன்தார் முன்னே நிறுத்தினார்கள். முதல் காரியமாக எனக்கு இருபது சவுக்கடிகள் கிடைத்தன (இவற்றைப் பெறாமல் தப்பவே நான் முயன்றேன்). பிறகு ஜமீன்தார் மூச்சுத் திணற, முகத்தைக் கோணிக்கொண்டு, "ஏனடா நாய் மகனே, இது என்ன ஏமாற்று வித்தை?" என்று கேட்டான்.

இம்முறை நான் உண்மையாகவே விம்மினேன் - எனக்கு உடம்பெல்லாம் கடுமையாக வலித்தது.

"ஆரம்பத்திலேயே நான் உங்களிடம் சொல்லியிருந்தேனே, ஜமீன்தார் ஐயா (விம்மல்), நான் சில வேளைகளில், (விம்மல்) பொய் பேசுவது உண்டு என்று! இந்த வழக்கம் (விம்மல்) குழந்தைப் பருவம் முதலே எனக்கு உண்டு என்று நான்தான் உங்களை எச்சரித்திருந்தேனே, எஜமான் (விம்மல்)!"

"அப்படியா. இதோடு முடிந்ததா உன் புளுகு?"

"இல்லை, ஜமீன்தார் ஐயா, முடியவில்லை..."

"முடியவில்லை என்றால், நீ எல்லாப் பொய்யும் சொல்லித் தீர்ப்பதற்குள் நான் குடும்பத்தை இழந்து வீடு அற்றவன் ஆகி விடுவேன். தொலை இங்கிருந்து! நீ பிஞ்சிலேயே கருகிப் போவாயாக! வயிறு நிறைய உணவில்லாமல் வாழ்நாள் முழுவதும் தவிப்பாயாக! விரட்டுங்கள் இந்தப் புளுகனை!"

ஆட்கள் என்னைக் கட்டவிழ்த்து வெளியே துரத்தப் பார்த்தார்கள். ஆனால் நானோ, என் கூலியைக் கணக்குத் தீர்த்துக் கொடுக்கும்படிக் கூக்குரல் இட்டேன். ஒரு மாதமும் ஒன்பது நாட்களும் நான் ஜமீன்தார் வீட்டில் வேலை செய்திருந்தேன். ஜமீன்தார் கையை வீசி ஆட்டி என் கணக்கைத் தீர்க்கும்படி கட்டளையிட்டான். சில்லறைச் செலவுகளுக்காகக் கொடுக்கப்பட்ட இருபத்திரண்டு கோப்பெக்குகளைப் பிடித்துக் கொண்டான். பூச்சி அடித்த ஆப்பிள் பழங்கள் சுமார் ஒரு மணங்கு ஒரு கோணிச் சாக்கில் எனக்குத் தரப்பட்டன. ஆனால்



இது கூட எனக்குத் திருப்தி அளித்தது. மூட்டையை அப்படியே ஒரு விதமாகத் தோள்மேல் தூக்கிக் கொண்டு மறுபடி சாலையில் நடந்தேன்.

## அத்தியாயம் 9

# ஆட்டு மந்தையை ஓட்டினோம்

மறுபடி நடை!...

மீண்டும் அலைச்சல், மீண்டும் நாடோடி வாழ்க்கை!... வேற்றுப் பறவைக் கூட்டிலிருந்து விழுந்துவிட்ட குயில் குஞ்சு நான். இப்போது விதி என்னை எங்கு இட்டுச் செல்லும்? எங்கே கொண்டுபோய்ச் சேர்க்கும்?

ஜமீன்தாரை நாசமாய்ப் போகும்படி ஆயிரந்தடவை சபித்தேன். இந்த வகையில் சம்பளம் வாங்கிக்கொள்ள இசைந்ததற்காக என்னையே நொந்து கொண்டேன். ஆப்பிள்களின் சுமையால் நெளிந்தவாறு தளர்நடை நடந்தேன். "ரொக்கப் பணம், மகனே, ரொக்கப் பணம்! எடுத்துப் போவது லேசு, மறைத்து வைத்துக்கொள்ளச் சௌகரியம்..." என்று மகாபுனிதரான மௌல்வி என்னிடம் சொன்னாரே, அது சரியான வார்த்தை. இந்தச் சனியன் பிடித்த இழவை மறுபடி கண்ணிலேயே படாதபடி எங்கேனும் மறைத்து வைக்க எனக்குச் சம்மதந்தான். ஆனாலும் ஒரு மாதம் உழைத்துச் சம்பாதித்ததை இப்படி வீணாக எறிந்துவிட வருத்தமாய் இருந்தது.

இதற்குள் சாலை மலைப்பாங்கான இடம் வழியே சென்றது. மணம் வீசும் ஸ்தெப்பிப் புற்கள் சுற்றிலும் எங்கும் தளதளவென்று வளர்ந்திருந்தன. தொடுவானில் அஸ்தமனச் செவ்வொளி பெருகியது. கிழக்கேயிருந்து இருள் படர்ந்தது. குன்றுகளின் பக்கத்துச் சரிவுகள் கறுப்பாய்த் தோற்றம் அளித்தன. தொலைவில், சாலையிலிருந்து ஒரு புறம் விலகி இருந்த கூடாரத்தைக் கண்டு அதை நோக்கி விரைந்தேன். கூடாரத்தின் பக்கத்தில் ஒருவரும் இல்லை. அவிந்து கறுத்த அடுப்பும் வெற்றுப் பாத்திரமும் மட்டுமே இருந்தன. நாய்களோ, கால்நடைகளோ இல்லை. கூடாரத்தின் கதவைத் தட்டினேன். "யார் அங்கே?" என்ற கம்மிய குரல் உள்ளிருந்து கேட்டது. "ஆண்டவனின் விருந்தாளி" என்றேன். வீட்டுக்காரர்கள் எட்டிப்பார்த்தார்கள்.



என்னையும் என் மூட்டையையும் சந்தேகத்துடன் நோக்கினார்கள், யாரோ திருடன் களவாடிய பொருள்களுடன் வந்திருக்கிறான் என்று எண்ணினார்கள் போலும். ஆயினும் உள்ளே வர அனுமதித்தார்கள். நான் என் மூட்டையை அவிழ்த்து வீட்டுக் குழந்தைகளுக்கு ஆளுக்கு ஒரு பழம் கொடுத்ததும் அவர்களுடைய மனநிலை ஒரேயடியாக மாறிவிட்டது. பூச்சி வைத்த ஆப்பிள்களை எந்தத் திருடனும் மூட்டை கட்டித் தன் முதுகில் சுமந்துகொண்டு வரமாட்டானே! பாத்திரத்தில் சுட்ட பாதி ரொட்டி எனக்கு முன் வைக்கப்பட்டது. நான் அதைச் சுவைத்தேன். களைப்பினால் எனக்கு உணவு செல்லவில்லை. தலையணைக்குப் பதில் ஆப்பிள் மூட்டையைத் தலைக்கடியில் வைத்துக்கொண்டு படுத்தேன். உடனே உறங்கி விட்டேன்.

ஸரீ-அகாச் போவதற்குச் சுருக்கு வழி எது என்று காலையில் வீட்டுக்காரர்களிடம் கேட்டுக்கொண்டு மறுபடி மூட்டையைச் சுமந்தவாறு புறப்பட்டேன். நடுப்பகலில் அங்கு போய்ச் சேர்ந்தேன். களைப்பு மிகுதியால் நிற்கக்கூட எனக்கு வலுவில்லை. என் போதாத காலம், அன்று சந்தை நாள். சுற்று வட்டாரங்களிலிருந்து ஆட்கள் எல்லா வகைப் பண்டங்களையும் கொண்டு வந்திருந்தார்கள். எனவே நான் என்னதான் பாடுபட்டும் என் ஆப்பிள்களைச் சீந்துவார் இல்லை.

ஆப்பிள்கள் என் முதுகின்மேல் அல்ல, தரையில் கிடந்தன என்பதே எனக்கு நிதி கிடைத்தாற்போல் இருந்தது. "வாருங்கள், வருந்த மாட்டீர்கள்! சல்லிசான விலைக்குக் கொடுத்துவிட்டுப் போய்விடுவேன்! வாருங்கள்! இந்த ஆப்பிளைத் தின்றால் ரொட்டியே வேண்டாம்! தோட்ட விளைச்சலை மதிப்பிடத் தெரிந்தவர்களுக்கு மட்டுமே விலைக்குக் கொடுப்பேன்! வாருங்கள், வருந்த மாட்டீர்கள்!" என்று கத்தினேன்.

கொஞ்சங் கொஞ்சமாக எப்படியோ அவற்றை விற்றேன். அப்புறம் காசுகளை எண்ணிப்பார்த்தபோது ஆறு தன்காக்களும் ஐந்து கோப்பெக்குகளும் இருந்தன. இவ்வளவு பணம் கிடைக்கும் என்று நான் நினைக்கவே இல்லை!

பணத்தோடு சந்தையில் சுற்றி வருவதே இன்பம். கண்ணில் பட்டது, நாக்கில் உதித்தது எதையும் தேவைப்பட்டால்

வாங்கலாம் என்று தெரியும்போது நாம் எல்லாவற்றையும் மதிப்பிடும் விதமே வேறு. எவனோ இளைஞனிடம் ஓர் இரும்புத் தொட்டியைச் சுமார் பத்து நிமிடங்கள் பேரம் பேசினேன். ஆனால் மிகமிகக் குறைந்த விலைக்கு அதைக் கேட்டேன், அவனிடம் கடுமையான திட்டு வாங்கிக் கட்டிக் கொண்டேன். வெல்வெட் கழுத்துப் பட்டை வைத்த மேல்கோட்டு ஒன்றை வெகு நேரம் பேரம் பேசினேன். முடிவில் போட்டுக்கொண்டு கூடப் பார்த்தேன். அது எனக்கு மட்டும் அல்ல, என் வருங்காலக் குழந்தைகளுக்கும் - அவர்கள் எத்தனை பெயராய் இருந்தாலும் சரி - சேர்த்துத் தைக்கப்பட்டதுபோல் அவ்வளவு விசாலமாய் இருந்தது. என் உயரமும் பருமனும் என்ன என்பதை விற்பவன் ஆரம்பத்திலிருந்தே நன்றாகப் பார்த்திருந்தான். மேல்கோட்டின் அளவோ அவனுக்குத் தெரிந்ததுதான். இருந்தாலும் அவன் என் மேல் சள்ளுப்புள்ளென்று விழுந்தான்.

அப்புறம் நான் கால்நடைச் சந்தைக்குப் போனேன். எதுவோ என்னை அங்கே ஈர்த்தது. மதப்பள்ளி மாணவனின் தலைப்பாகை போல முறுக்கிய கொம்புகளும் செங்குத்தான நெற்றியும் கொண்ட பெரிய செம்மறிக்கடா ஒன்றை விலை கேட்கத் தொடங்கினேன். அதற்குள் ஏதோ தெரிந்த முகம் என் முன்னே பளிச்சிட்டது. கவனித்துப் பார்த்தேன். ஒரே கயிற்றில் இணைத்த செம்மறிக்கடாக்களின் மந்தையின் அருகில் நின்றான் ஓர் இளைஞன். கஸாக்கிய மேல் கோட்டும் உள்வெளியாகத் திருப்பப்பட்ட மென்மயிர்த் தொப்பியும் அணிந்திருந்தான் அவன். நுனி பருத்த தடி ஒன்று அவன் கையில் இலகியது. என்ன இது, என் நண்பர்களில் எவனும் இந்த மாதிரி உடை அணிவது கிடையாதே. அப்படியும் இந்த முகம் எனக்கு மிக மிகப் பழக்க மானதாகத் தோன்றியது. புழுதியிலும் வெயிலிலும் அடிபட்டு நமுதாபோலப் பழுப்பேறியிருந்தது அந்த முகம். புழுதி படிந்த இமைமயிர்களுக்கு அடியே தெரிந்த பழுப்பு விழிகளும் பழக்க மானவையாகத் தோன்றின. போதாக்குறைக்கு அவை தாமும் என்னை நம்பிக்கையோடு நோக்கின...

"அமன்!" என்று வீரிட்டு அவனிடம் தாவினேன். அவனும் என்னைவிட உரக்கக் கத்திக்கொண்டு என்னை நோக்கிப் பாய்ந்து வந்தான். நாங்கள் தழுவிக் கொண்டோம், ஒருவர் தோள்மேல் ஒருவர் தட்டிக்கொடுத்தோம். பிறகு அக்கம் பக்கமாக உட்கார்ந்து



போட்டி போட்டுக் கொண்டு ஒருவரையொருவர் விசாரிக்கலானோம். மேய்ப்பர்களிடமிருந்து தப்பி ஓடியபோது பிரிந்தவர்கள்தாம், அப்புறம் நாங்கள் சந்திக்கவே இல்லையே. மற்றவருக்கு மேய்ப்பர்களின் வன்மத்திலிருந்து தப்ப முடிந்ததா என்றுகூட எங்களுக்குத் தெரியவில்லையே.

அமன் பிழைத்தது மறுபிழைப்புத்தானாம். மேய்ப்பர்கள் அவனை நெருங்கிவிட்டார்களாம். அதற்குள் ஒரு மேய்ப்பன் புதிய குதிரைச் சாணத்தில் வழுக்கி விழுந்தானாம், அவன்பின் ஒருவன் அவன்மேல் இடறி விழுந்துவிட்டானாம். இருவரும் எழுந்திருப்பதற்குள் அமன் வெகு தூரம் முன்னே போய்விட்டானாம். அதன்பிறகு இந்த மேய்ப்பர்கள் கண்ணில் பட்டுவிடக் கூடாதே என்ற அச்சத்துடன் கிராமம் கிராமமாகச் சுற்றி அலைந்தானாம். முல்லாவின் கதி என்ன ஆயிற்று என்பதுபற்றி என்னைப் போலவே அவனும் ஒன்றும் கேள்விப்படவில்லையாம். உண்மையைச் சொன்னால் அவன் யாரையும் கேட்கவே இல்லை. வீடு திரும்ப ஆசை உண்டாயிற்றாம், ஆனால் வெறுங்கையோடு திரும்பத் தயங்கினானாம். சீம்கந்த் நகரில் இருந்த ஒன்றுவிட்ட சித்தப்பா வீட்டுக்குப் போக முதலில் முடிவு செய்தானாம். ஆனால் அவன் துரதிர்ஷ்டம், அவர் அதற்கு ஒரு மாதம் முன்பே காலமாகிவிட்டாராம். இந்த நிலையில் பணக்காரக் கால்நடைப் பண்ணைக்காரன் ஒருவனின் மந்தையை வழியில் கண்டானாம். பிடித்ததோ பிடிக்கவில்லையோ, அந்தப் பண்ணைக் காரனிடமே வேலைக்கு அமர்ந்துவிட்டானாம். இப்போது ஒரே சந்தோஷமாய் இருக்கிறானாம். பாங்கான உடையும் வயிறார உணவும் கிடைக்கின்றனவாம். வருஷத்துக்கு இரண்டு செம்மறிகளும் ஒரு வெள்ளாடும் மேய்ப்பர்களுக்குக் கூலியாம். ஆகவே, செம்மறிகள் இரண்டிரண்டு குட்டிகள் போட்டால், நாளடைவில் அமன்தானே பெரிய மந்தைக்குச் சொந்தக்காரன் ஆகிவிடலாம். இப்போது அவர்கள் தாஷ்கந்த் சந்தைக்கு மந்தையை ஓட்டிப்போவதாகவும், அங்கே வீட்டுக்குப் போய் அப்பனிடம் விவரங்களைச் சொல்லப் போவதாகவும் அவன் மகிழ்ச்சியுடன் கூறினான். ஸரீ-அகாச்சில் இன்று சந்தை நாளாய் இருப்பதால் தக்க விலை கிடைத்தால் ஆடுகளை இங்கேயே விற்றுவிடலாமே, தாஷ்கந்த் ஓட்டிப் போக வேண்டாமே என்ற எண்ணத்துடன் தங்கிவிட்டதாகச் சொன்னான்.

எனக்கு அமன்மேல் பொறாமையாய் இருந்தது. இவனுக்கு எவ்வளவு நல்லதிர்ஷ்டம்! என்னைப் போலவோ, பூச்சி அரித்த ஆப்பிள்களைக் கூலியாகப் பெற? ஆப்பிள்களைப் பற்றி நான் அவனிடம் ஒன்றுமே சொல்லவில்லை. என் பணத்தை மட்டுமே அவனுக்கு காட்டினேன். சம்பாத்தியத்தில் பெருந்தொகையைச் செலவிட்டுவிட்டதாகவும் இல்லாவிட்டால் நானே ஆடுகளை வாங்கியிருக்கலாம் என்றும் கதை விட்டேன். சுருங்கச் சொன்னால் அவன் என்முன் பெருமை அடித்துக் கொள்ள நான் இடம் தரவில்லை. அவனுடைய வேலை எனக்கும் பிடித்திருக்கிறது என்றும், தவிர தாஷ்கந்த் திரும்பவும் வேளை வந்துவிட்டது என்றும் அப்புறம் ஜாடையாகக் கூறினேன். என்னையும் வேலைக்கு வைத்துக்கொள்ளும்படி தன் எஜமான் காதில் அவன் ஒரு வார்த்தை போட்டு வைத்தால் நன்றாய் இருக்கும் என்றும், நான் நாணயமாகவும் தன்னலம் இன்றியும் உழைப்பேன் என்றும் சொன்னேன். அமனுக்கு என் வேண்டுகோள் பிடித்துவிட்டது என்பதைக் கண்டேன். முதலாவதாக, என்னைச் சந்தித்ததில் அவனுக்கு உண்மையாகவே மகிழ்ச்சி, இரண்டு பேராக இருந்தால் அதிகக் குதூகலமாய் இருக்கும். இரண்டாவதாக, முக்கியமான சிபாரிசு செய்பவன் பாத்திரம் வகிப்பது அவனுக்கு உவப்பாய் இருந்தது.

புருவத்தை உயர்த்தி, "நல்லது! கோக்-தெராக் போய்ச் சேர்ந்ததும் எஜமானைக் கேட்கிறேன்" என்றான்.

ஆனால் விஷயம் இன்னும் நன்றாக முடிந்துவிட்டது. அவன் எஜமானிடம் கேட்கவே தேவைப்படவில்லை. மந்தையைப் பார்த்துக் கொள்வதில் மாலை வரை நான் அவனுக்கு ஒத்தாசை செய்தேன். அந்த வெள்ளிக்கிழமை ஸரி-அகாச்சில் வெள்ளாடுகளுக்குப் பலத்த கிராக்கி. அமனுடைய எஜமானன் தன் வெள்ளாடுகள் எல்லாவற்றையும் விற்றுவிட்டான். ஆனால் செம்மறியாடுகள் - ஓர் எழுபது உருப்படிகள் - எஞ்சியிருந்தன. மாலைத் தறுவாயில் மந்தைச் சொந்தக்காரன் புறப்படத் தயாராகிக் குதிரைமேல் ஏறி உட்கார்ந்துகொண்டு அவனிடம் சொன்னான்:

"உன் நண்பன் நல்ல பையனாகக் காண்கிறான். ஆடுகளும் அப்படி அதிகமாய் இல்லை. செம்மறிகளை ஓட்டிக்கொண்டு விடியற்காலையில் கோக்-தெராக் சந்தை வந்து சேருங்கள். நீங்கள் இரண்டு பேரும் சுலபமாகச் சமாளித்துவிடுவீர்கள். நான் முன்னே போகிறேன்."

நாங்கள் களிப்போடு இசைந்தோம். மார்பில் கையைச் சேர்த்து வைத்து மந்தைக்காரனுக்கு வணக்கம் தெரிவித்தோம். அவன் சவுக்கைச் சொடுக்கிக் குதிரையை விரட்டிச் சென்று விட்டான். நாங்கள் செம்மறிகளைக் கொட்டடைக்கு ஓட்டிப் பட்டியில் அடைத்துவிட்டுப் பொழுதுசாயும் வரை இளைப்பாறுவதற்காகப் படுத்தோம். நிலவு எழுந்ததுமே நாங்கள் கோக்-தெராக் புறப்பட்டோம்.

சீட்டியடித்தும் கூவியும் ஆடுகளை உசுப்பிக்கொண்டும், மந்தையை அடிக்கடி சுற்றிவந்து அது சிதறிவிடாமல் கண்காணித்துக்கொண்டும் நாங்கள் முன்னேறினோம். நாங்கள் சுமார் ஒரு மைல் கூடப் போயிருக்க மாட்டோம், அதற்குள்ளாகவே நாங்கள் செய்யப்போவது உல்லாச இரவு உலா அல்ல, சித்திரவதை நிறைந்த கடும் பயணம் என்பதை நான் புரிந்துகொண்டேன். "மட்டி, ஆடு மாதிரி" என்று நான் எத்தனையோ தடவைகள் சொல்லியிருக்கிறேன். ஆனால் நான் அப்படித் திட்டியவர்களில் எவருமே இந்தச் செங்குத்து நெற்றி அசமந்தங்களில் பாதி அளவுகூட முட்டாள் அல்ல என்பதை இப்போதுதான் கண்டேன். செம்மறி ஆட்டின் மடத்தனத்துக்கு எதையாவது நிகராகச் சொல்ல முடியுமானால் அது செம்மறி ஆட்டின் மூர்க்கம்தான். இந்த மாதிரி மூளையை வைத்துக்கொண்டு இத்தகைய மூர்க்க சுபாவத்தைப் பெற உலகில் தோன்றிய முதல் செம்மறி ஆடு மிகுந்த சிரமப்பட்டு முயன்றிருக்கும். என் கருத்துப்படி, இந்த இரண்டில் ஒன்றே தாராளமாகப் போதும். செம்மறி ஆடு ஒன்று மட்டுமே இருந்தபோது - தொடக்கத்தில் ஒரே ஒரு செம்மறிதான் இருந்திருக்கும் - இந்தப் பயங்கரமான குணச் சேர்க்கை அவ்வளவாகக் கருத்தை ஈர்த்திருக்காது. இன்றுவரை நிலைமை இவ்வாறே இருந்து வருகிறது. தனிச் செம்மறியாட்டை எப்படியாவது சரிப்படுத்திச் சமாளித்துவிடலாம். நாம் தனி ஆளாக இருந்து செம்மறிகள் நிறைய இருந்தாலோ, அவை சரியான சைத்தான்களாக மாறிவிடுகின்றன (சைத்தான் தலையில் ஆட்டுக் கொம்புகள் ஏன் இருக்கின்றன என்பது இப்போது எனக்குப் புரிகிறது.) நரகத்தில் பாவியை முழுச் செம்மறி

மந்தையைத் தனியாகச் சமாளிக்கும்படி விடுவதுதான் தண்டனை போலும்.

இவற்றை உண்மையில் சமாளிக்கவல்ல ஒரே பிரகிருதி மனிதனே அல்ல, வெள்ளாடுதான். இது தெரிந்த விஷயம். இதன் காரணம், வெள்ளாடு தன் மூர்க்க குணத்தால் செம்மறிகளின் பிடிவாதத்தை முறிக்கக் கூடும் என்பதாய் இருக்கலாம். அவை அதனிடம் ஒரு வார்த்தை சொல்வதற்குள் அது அவற்றிடம் பத்து வார்த்தைகள் சொல்லிவிடும் போலும். வெள்ளாட்டுக்கு அவை சொந்தத் தகப்பனுக்குப் போலக் கீழ்ப்படிகின்றன. உண்மையைச் சொன்னால் சொந்தத் தகப்பனை அவை அடையாளம் கண்டுகொண்டால்கூட ஒரு சிறிதும் மதிப்பதில்லை. வெள்ளாடு இல்லாவிட்டால் செம்மறிகள் மனம் போன திக்கில் கண்மண் தெரியாமல் நடக்கும். மேய்ப்பன் கழுதைமேல் உட்கார்ந்து, மந்தைக்கு முன்னே போய் வெள்ளாடு போல மே - ஏ - ஏ என்று கத்தவேண்டும். அப்போது செம்மறிகள் அவன் பின்னே ஒழுங்காக வரும். எங்களிடமோ, வெள்ளாடும் இல்லை, கழுதையும் இல்லை. இந்த அழகில் அனுபவக் குறைவு காரணமாக நான் மே-ஏ-ஏ என்று கத்தியது, அடி முட்டாளான செம்மறியைக்கூட ஏமாறச் செய்திருக்க முடியாது.

ஆனாலும், ஆண்டவன் உதவியால் நாங்கள் எப்படியோ முன்னே நகர்ந்தோம். இரவோ, எழில் ஓவியமாகக் காட்சி தந்தது. மலைப்பாங்கான ஸ்தெப்பிவெளி நாற்புறமும் நீண்டு பரந்திருந்தது. மலைச் சரிவுகள் நிலவில் வெள்ளியாக மினுமினுத்தன. கரு நிழல்கள் வெல்வெட் மென்மை உள்ளவை போலத் தோற்றம் அளித்தன. செங்குத்து நெற்றியும் பொன்னிறமும் கொண்ட நிலாகூடக் காற்றால் திரட்டிக் கூட்டப்படும் மேகங்களுக்கிடையே பிடிவாதமாக இடித்துப் புகுந்து வழி செய்து கொண்டு வானில் நீந்தியது. புற்கள் சிலுசிலுக்க, நறிய குளுமையை ஏந்தித் தரைமீதும் வீசியது காற்று. இரவின் இந்த வனப்பும் இன்பக் கவர்ச்சியும் செம்மறி ஆடுகளைக் கூடச் சொக்க வைத்துவிட்டன. அவை அமைதியாக வழியோடு நடந்தன. எப்போதாவது அவை கத்தியதுகூட எதிர்ப்பைத் தெரிவிப்பதற்காக அல்ல, இசைவைக் காட்டுவதற்காகவே. விரைவில் எங்கள் சாலை இருப்புப் பாதையை நெருங்கி, பாதையோரமாக எங்களை இட்டுச் சென்றது. தந்திக் கம்பிகளின்



மெல்லிசை பாதையைத் தொடர்ந்து வந்தது. எனக்கும் பாட வேண்டும் போல் இருந்தது. எடுத்த எடுப்பிலேயே உச்ச ஸ்தாயியில் நீண்ட கார்வை கொடுத்துப் பாடினேன்.

"நன்றாகப் பாடுகிறாய். தெரிந்த பாட்டை நான் கேட்டு வெகு காலம் ஆகிவிட்டது" என்று கனவு காண்பவன்போலக் கூறினான் அமன்.

இந்தப் புகழ்ச்சியால் உற்சாகம் அடைந்து நான் மேலும் மேலும் குரலை உயர்த்திக்கொண்டு போனேன். நானே மெல்லிய ஸ்வரங்களில் ஆரோகணித்து மேலே மேலே போய், வான விதானத்தை எட்டி விட்டேன் - விண்ணவர்கள் என் பாட்டைக் கேட்கும்படியும் விளிம்புகள் வரை வானம் அதிரும்படியும் எதைப் பற்றிப் பாடினேன் என்பது நினைவில்லை. இரவையும் நிலாவையும் நெடுஞ்சாலையையும் இரண்டு வெள்ளி நூல்கள் போல வெகு தூரம் நீண்டு சென்று முன்னே எங்கோ தொலைவில் இணைந்து (எல்லாத் தரைப் பாதைகளும் ஒன்றுகலப்பது போலவே) ஒன்றாகும் தண்டவாளங்களையும் பற்றிப் பாடினேன் போலும்.

இதற்கிடையே செம்மறிகள் அடிக்கடி ரயில்வே மேட்டில் ஏறலாயின. ஒரு வெள்ளாடு இல்லாதது எங்களை மீண்டும் உறுத்தத் தொடங்கிற்று. முன்னே ஒரு சிறு கிராமம் தெரிந்தது. இருப்புப் பாதையோடு ஒட்ட வைத்ததுபோல, கப்பிச் சாலை கிராம வீதி வழியே வீடுகளின் முன் சுவர்களின் இடையே போயிற்று. நாங்கள் செம்மறிகளை முன்னே விரட்டினோம். அப்பால் கப்பி ரஸ்தா இருப்புப் பாதையை எடுத்துச் செல்லலாயிற்று. அமன் இருப்புப் பாதையைத் தலையசைப்பால் சுட்டினான்.

"ரயிலில் பயணம் செய்பவர்கள் கொடுத்துவைத்தவர்கள்" என்று சொல்லிவிட்டு, "நாமும் ரயிலேறி உட்கார்ந்து ஏதேனும் மிக மிகத் தொலைவுக்குப் பயணம் செய்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்!" என்று ஆர்வம் பொங்கக் கூறினான்.

"ஆமாம், அருமையாய் இருக்கும். கணக்கில்லாத பணம் இருந்து இஷ்டம்போல ரயில் பயணம் செய்ய வேண்டும்! கவூன்சிக்கு, துர்க்கிஸ்தானத்துக்கு, சீனத்துக்கு அல்லது வேண்டுமானால் மாஸ்கோவுக்குப் போகலாம். யாரும் எதுவும்

சொல்லமாட்டார்கள், இதுதான் முறை போல. நாமோ மேலும் மேலும் ரயில் சவாரி செய்யலாம்..."

இப்படி நான் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, ஏதோ கதையில் வருவதுபோல உண்மையாகவே காதில் பட்டது ரயிலின் ஓசை! தண்டவாளங்கள் மேல் விரைந்து வந்தன இரண்டு நெருப்புக் கண்கள். அவை வர வர எங்களை வேகமாய் நெருங்கின. அமனும் நானும் இன்னமும் எங்கள் மனக்கோட்டையின் பாதிப்பில் இருந்தோம் ஆகையால் எல்லாவற்றையும் மறந்துவிட்டு அவற்றையே நிலைக்குத்திட்டு நோக்கியவாறு இருந்தோம். எங்கள் கனவு இதோ பலித்துவிடும் என்று எங்களுக்குத் தோன்றியது. வேறு ஒன்றும் இல்லாவிட்டாலும் இவ்வளவு பக்கமாக ஓடும் ரயிலைக் கண்ணாரக் கண்டு களிக்கலாமே. எங்களைப் போன்ற பையன்களுக்கு இந்த வாய்ப்பு ஒவ்வொரு நாளும் கிடைத்து விடுவது இல்லையே. அது பிரயாணி வண்டியே அல்ல, சரக்கு வண்டி, என்றாலும் அதில் ஒன்றுக்குப் பதில் இரண்டு எஞ்சின்கள் இணைத்திருந்தன. பெட்டிகளோ - பெரிய சிவப்பு நிறப் பெட்டிகள் அவை - முடிவே கண்ணுக்கு எட்டாதபடி அத்தனை நிறையக் கோத்திருந்தன.

எஞ்சின்கள் அருகாகத் தடதடத்து விரைந்தன. திடீரென இரண்டும் காது செவிடுபடும்படிச் சங்கூதின. அவற்றுக்கு என்னதான் நேர்ந்ததோ, இன்றளவும் எனக்கு விளங்கவில்லை. ஒரு பத்து லட்சம் எருதுகள் நடுநிசியில் தங்கள் சொந்தக்காரனை மாற்ற முடிவு செய்து எல்லோரும் கேட்கும்படி இந்த முடிவை அறிவித்ததுபோல் இருந்தது அந்த இரண்டு எஞ்சின்களும் செய்த முழக்கம். சுற்று வட்டாரம் முழுவதும் அந்த கர்ஜனையால் திடுக்கிட்டு அதிர்ந்தது. நானும் அமனும்கூடப் பதறிப் போய் விட்டோம். எங்கள் செம்மறிகளோ, உலகமே முடிவுக்கு வந்து விட்டது என நினைத்து வேறு இடத்துக்குச் செல்லும் சாலையை உடனே தேடுவது அவசியம் என்று தீர்மானித்துவிட்டன. வீடுகளின் சுற்றுச் சுவர்களோடு நெருங்கியிருந்த சில செம்மறிகள், திகிலால் சுவர்கள்மேல் பூனைகள் போலத் துள்ளி ஏறிக் கொண்டன. ஆனால் இந்தக் கலையில் பூனைகளுக்கும் அவற்றுக்கும் வெகுதூரம். எனவே அவை மறுபடி சரிந்து விழுந்தன. மடமடவென்று சரிந்து ஒன்றன்மேல் ஒன்றாக அவை



விழுந்து குமைந்தன. இந்த வட்டாரத்தில் இதற்கு முன் ஒரு போதும் காணாத காட்சியாக இருக்கும். மற்ற ஆடுகள் வந்த வழியாகவே இருண்ட வீதியில் திரும்பி ஓடின. வேறு சிலவோ, மூளையை அறவே பறிகொடுத்துவிட்டு, ரயில்மேட்டின் மேல் ஏறப் போயின. நல்லவேளையாக, தக்க சமயத்தில் அவை பின்வாங்கி ஓடி வந்துவிட்டன. சுருங்கச் சொன்னால் அவை விந்தையான 'கண்ணாமூச்சி' ஆடத் தொடங்கின. ரயில் வண்டி கனத்த தடதடப்புடன் எங்கள் அருகாகக் கடந்து விரைந்தது. முடிவில் சிவப்பு விளக்குகள் பொருத்திய கடைசிப் பெட்டியும் போய்விட்டது. கோபத்தால் சிவந்த சைத்தானின் கண்கள் போன்று ஒளிர்ந்தன அவ்விளக்குகள். வண்டி போய்விட்ட பிறகு பார்க்கிறோமோ, எங்கள் செம்மறி மந்தையைக் காணோம்!

செங்கல் சூளையிலிருந்து புகை வருவதுபோலப் புழுதி படலம் படலமாகக் கிளம்பியது. செம்மறி ஆடுகளின் பரிதாபக் கமறல் ஒலிகளும் அருகாமையில் கேட்டன. வீடுகளின் சுற்றுச்சுவர்களோடு நசுக்கப்பட்டிருந்த சில நொண்டி ஆடுகளும் சினைப்பட்டிருந்த செம்மறிகளுமே இவை. எங்கள் மந்தையில் எஞ்சி இருந்தவை இவை மட்டுமே.

சிதறிவிட்ட செம்மறிகளைக் கூவி அழைத்தவாறு நாங்கள் ஒரே கலக்கத்துடன் வெவ்வேறு புறங்களில் ஓடினோம். இருட்டில் நான் ஓர் ஆட்டுடன் மோதிக்கொண்டு அதைப் பின்னே இழுத்து வந்தேன். அமனின் நிழலுரு புழுதிக்குள்ளிருந்து வெளிப்பட்டது.

"எங்கேதான் ஒழிந்தீர்கள், பாழும் விலங்குகளே!" என்று அழுங்குரலில் ஓலமிட்ட அமன் என்மேல் மோதிக் கொண்டான்.

"ஆடுகள் எங்கே?" என்று இருவரும் ஏககாலத்தில் ஒருவரை ஒருவர் கரகரத்த குரல்களில் கேட்டோம்.

அமன் என்னை வன்மத்துடன் பார்த்து, இடையிலிருந்து கயிற்றை அவிழ்த்து, எஞ்சிய ஆடுகளை அதனால் ஒன்றாக இணைத்துக் கட்டினான். பின்பு நாங்கள் கிராம வீதியில் மறுபடி ஓடினோம். சுற்றுச்சுவர்கள் சில இடங்களில் இடிந்திருந்தன. இங்கே செம்மறிகள் மலையாடுகள்போல அவற்றைத் தாண்டியிருக்கும் என்று தோன்றியது. நாய்கள் எதிர்ப்படும் ஆபத்தையும் பொருட்படுத்தாமல் நாங்கள் ஒவ்வொரு சுவராக

ஏறிக் குதித்தோம். கறுப்பு விரிப்பில் எறும்புகளைத் தேடுவது போன்ற வேலை இது. ஆனாலும் நாங்கள் சுமார் மூன்று மணி நேரம் வீடு வீடாகத் தாண்டிக் குதித்துத் தேடி, ஒரு வீட்டு முகப்பில் ஐந்து செம்மறிகளையும் மற்றொன்றில் மூன்றையும் ஒரு பாழ் மனையின் இடிபாடுகளில் இன்னும் சிலவற்றையும் பயிர்களுக்கிடையே ஒரு பத்தையும் கண்டுபிடித்தோம்... களைப்பால் நாங்கள் செத்துச் சாவடைந்து போனோம். சற்று இளைப்பாறிய பின் ஆடுகளை மறுபடி எண்ணத் தொடங்கினோம். ஏழு செம்மறிகள் குறைந்தன. நான் அமனைப் பார்த்தேன், அவன் என்னை உறுத்து நோக்கினான். மண்சுவரில் பதித்த பாசி மணிகள்போல இருளில் புழுதிப்படிவுகளினூடே பளிச்சிட்டன அவனுடைய விழிகள்.

"இப்போது என்ன செய்வது?" என்றான்.

எனக்கோ, அழுகையே வந்துவிடும்போல இருந்தது.

"நாம் இரண்டு பேரும் இரண்டு வருஷங்கள் வேலை செய்தாலும் ஏழு செம்மறிகளின் கணக்கைத் தீர்க்க முடியாது!"

"வா, இன்னும் தேடுவோம்."

பளபளவென்று விடியலாயிற்று. நாங்கள் ரயில்மேட்டின் மறு பக்கம் போய், ஆட்டுப் புழுக்கைக் குவியல்களை இங்குமங்கும் கண்டு, அவற்றைத் தடம் பற்றிச் சென்று, சிறிது தூரத்தில் ஓடைக்கரையில் இன்னும் இரண்டு ஓடுகாலிகளைப் பிடித்தோம். மற்றவற்றைக் காணவில்லை, தேடவும் நேரமில்லை. கோக்-தெராக் தூத்தில் இருந்தது. ஆட்டுக்காரன் அங்கே சந்தையில் எங்களுக்காகக் காத்திருந்தான்.

வழியில் ஒரு செம்மறி மந்தையிலிருந்து பின்தங்கத் தொடங்கிற்று, மே என்று கத்திற்று, லொக்கு லொக்கென்று இருமிற்று. அதன் விழிகள் பளிச்சிட்டன. மற்றவற்றோடு சேர்த்து ஓட்ட நாங்கள் என்னதான் முயன்றும் அது மசியவில்லை. குந்தப் போவதுபோல அடிக்கடி பின்கால்களை அகற்றி வைத்துக் கொண்டது.

எங்களுக்கு எதிராகப் பழுப்புக் குதிரை ஏறிவந்த ஒரு கஸாக்கியன், "டேய், தம்பிகளா! இந்த ஆட்டை விரட்டாதீர்கள். இது குட்டி போடப் போகிறது!" என்று கத்தினான்.



முதலில் நாங்கள் இதை நம்பவில்லை. ஆனால் ரயில் எஞ்சின்களின் அலறலால் மிரண்டுபோன செம்மறிக்குப் பிரசவ வேதனை உரிய நேரத்துக்கு முன்பே உண்மையில் தொடங்கி விட்டது! இது ஒன்றுதான் எங்களுக்குக் குறையாய் இருந்தது!... வேளை வரும் முன்பே உலகில் தோன்ற அவசரப்படும் இந்தக் கலப்புசாதிக் குட்டி உருப்படாமல் போக! ஆனால் பாவம் செம்மறியின் விழிகள் பிதுங்கின. அது முனகிற்று, துடிதுடித்தது. இதைக் கண்டதும் எங்கள் வன்மம் போன சுவடு தெரியாமல் மறைந்துவிட்டது. மற்ற ஆடுகளை விலக்கி ஓட்டிவிட்டு நாங்கள் எங்களால் முடிந்த வகையில் பிரசவம் பார்க்கத் தொடங்கினோம். செம்மறிக்கு வலி எடுக்க ஆரம்பித்ததும் நாங்களும் அதனுடன் சேர்ந்து முக்கி முனகினோம், ஏதோ நாங்களே குட்டி போடப் போகிறவர்கள் போல உரக்கத் தொண்டையைக் கனைத்துக் கொண்டோம். முடிவில் நாங்கள் ஈன்றுவிட்டோம். தாய் ஆடு குட்டியைக் கால் முதல் தலைவரை நக்கிக் கொடுத்தது. நாங்களும் ஒருவேளை அப்படியே செய்திருப்போம். ஆனால் பொங்கிப் பெருகிய அன்பில் திளைத்த தாய் ஆடு எங்களுடன் அன்பைப் பகிர்ந்துகொள்ள விரும்பவில்லை என்பதை வெளிப்படையாகக் காட்டிக் கொண்டது. தவிர குடும்ப பாசத்துக்கெல்லாம் நேரமும் இல்லை. நாங்கள் போய்ச் சேருமுன் சந்தையை மூடிவிடுவார்களோ என்ற ஆபத்து இருந்தது.

சினை ஆடு எங்களை வெகு நேரம் தாமதப்படுத்திவிட்டது. கூடவே இப்போது அதற்குப் பதில் நாங்கள் குட்டியை இடுப்புக் குட்டையால் சுற்றிச் சுமந்து செல்ல வேண்டியிருந்தது. ஆயினும் மந்தையைச் சமாளிப்பது இப்பொழுது எவ்வளவோ சுளுவாகி விட்டது. அப்போதுதான் ஈன்ற ஆடு எங்களில் எவன் குட்டியை வைத்துக் கொண்டிருந்தானோ அவன் பின்னால் களைப்பின்றி ஓடியது. மந்தையின் மற்ற ஆடுகள் கும்பலாக அதைத் தொடர்ந்தன. ஆகவே, தலையாடு இல்லை என்ற குறை இப்போது தீர்ந்துவிட்டது. வெள்ளாட்டினுடைய வெற்றியின் இரகசியம் தன்னம்பிக்கையே என்பதை நாங்கள் புரிந்துகொண்டோம். போதிய தன்னம்பிக்கை உள்ள தோற்றத்துடன் கம்பீரமாக நடக்கும் எந்த ஆட்டையும் தொடர்ந்து செம்மறிகள் எங்கு வேண்டுமானாலும் போகும் - அதல பாதாளத்துக்குக் கூட.

புனிற்றிளங் குட்டி தாய் ஆட்டின் பார்வையிலிருந்து

எப்போதேனும் மறைந்துவிட்டால், அதற்குப் பதில் நாங்கள் ஆடு போலக் கத்துவோம். எங்களுக்கு இது ஒருவேளை நன்கு வாய்க்காமல் இருக்கலாம். ஆனால் ஆட்டுக்குட்டியும் இப்போதுதானே பிறந்தது! அதற்கும் என்ன பிரமாத அனுபவம் இருந்தது! - இப்படியாக நாங்கள் ஆற்றை அடைந்தோம்.

ஆற்றைக் கடக்க வேண்டும் என்பது எங்களுக்கு முன்கூட்டியே தெரிந்திருந்தது. அதாவது அமனுக்குத் தெரியும், அவன் என்னிடம் சொல்லியிருந்தான். ஆனாலும் இரவில் பல்வேறு சங்கடங்களுக்கு உள்ளாக நேர்ந்ததால் நாங்கள் இதை மறந்துவிட்டோம். இப்போதோ, திகைத்துத் தடுமாறிப் போனோம். இந்த இழிபிறவிகளின் கும்பல் முழுவதையும் தாமே விரும்பித் தண்ணீரில் இறங்க வைக்க முயன்று பார்த்தால் தெரியும்! ஒவ்வொன்றாகத் தூக்கிச் சென்று அக்கரை சேர்ப்பதும் நடவாது. ஆறு ரொம்ப அகலமில்லை, பிரசண்டமானதும் இல்லைதான். என்றாலும் அதனிடம் வேடிக்கை செல்லாது என்பது நிச்சயம். நாங்கள் கலந்து ஆலோசித்து, தாயன்பைப் பயன்படுத்திக் கொள்ளத் தீர்மானித்தோம். அமன் உடைகளைக் களைந்துவிட்டு ஆட்டுக் குட்டியைக் கைகளில் தூக்கித் தாய்க்கு அதைக் காட்டியபின் உரக்க மே என்று கத்தியவாறு ஆற்றில் இறங்கி நடக்கலானான். ஆற்றின் இரைச்சல் அவனுக்கு உதவிற்று. அவனும் மோசமில்லாமல் கத்தினான். நான் செம்மறியாய் இருந்தால் அது நிஜ ஆட்டின் கத்தலே என்று நம்பியிருப்பேன். தாய் ஆடு கலவரத்துடன் மிரள விழித்தவாறு கரையில் தயங்கி நின்றது. ஆனால் தாய் அன்பே முடிவில் வென்றது. அது நீரில் தாவிக் குதித்து அமன் பின்னே நீந்திச் சென்றது. மற்ற ஆடுகளும் அதைத் தொடர்ந்து நீரில் குதித்தன. மிகப் பயங்கொள்ளிகளான ஆடுகளை நான் ஆற்றில் நெட்டித் தள்ளி விரட்டினேன். விரைவில் மந்தை முழுவதும் ஆற்றில் இறங்கிவிட்டது. பாலில் விழுந்த சுண்டெலிபோலத் தலையை மேலே நிமிர்த்தியவாறு நீந்தின செம்மறிகள். சில வேளைகளில் பெருக்கு அவற்றை இழுத்துப் போகும், நாங்கள் அவற்றை லாவிப் பிடிப்போம். முடிவில் அதிர்ஷ்டம் எங்கள்மீது கருணை கொண்டது. மேற்கொண்டு கஷ்டம் இல்லாமல் மந்தை மறுகரை சேர்ந்துவிட்டது.

நாங்கள் மேலே நடந்தோம். சூரியன் மேற்கே சாய்ந்தது.



கோக்-தெராக்கின் அறிமுகமான வரையுருக்கள் முன்னே தென்பட்டன.

ஆடுகள் களைத்திருந்தன. பசியினால் அவற்றின் விலாக்கள் ஒட்டிப் போயிருந்தன. நாங்களும் ஒரேயடியாகச் சோர்ந்து போயிருந்தோம். எங்களுக்கு ஒரே ஓநாய்ப் பசி. ஆயினும் முதலில் ஆடுகளைக் கவனிக்க வேண்டியிருந்தது. அவைதாமே விலை போக வேண்டும், நாங்கள் அல்லவே! அவற்றைக் கொஞ்சமாவது மேயவிடுவது அவசியமாய் இருந்தது. அப்போதுதான் அவை உப்பிய வயிறுகளுடன் சந்தை போய்ச் சேரும். இல்லாவிட்டால் வாங்குபவர்கள் எங்கள் பக்கமே அண்ட மாட்டார்கள். அப்போது நாங்கள் புல் அடர்ந்த பெரிய திடலின் அருகாக நடந்து கொண்டிருந்தோம். கலந்து ஆலோசனை செய்தபின் நாங்கள் மந்தையை நிறுத்தி ஆடுகளைப் புல்வெளியில் மேயவிட்டோம். நாங்களும் சற்று தூரத்தில் சாய்ந்து கொண்டோம். மேலங்கிகளை விரித்துப் பேசாமல் படுத்துக் கொண்டு, மேயும் மந்தையைக் கண்காணித்தவாறு, ஆடுகள் தொலைந்து போனதற்கு என்ன சமாதானம் சொல்லுவது என்று சிந்தித்தோம். சிந்திக்க எளிதாய் இருக்கும் பொருட்டுக் கண்களை லேசாக மூடிக்கொண்டோம்... உரத்த வசவுகளைக் கேட்டு விழித்து எழுந்தோம்!

எங்கள் அருகே நின்றது மிகப் பெரிய வெளிர் மஞ்சள் குதிரை. சாட்டையை வீசி ஆட்டியபடி எங்களை வைது நொறுக்கிக் கொண்டு அதன்மேல் உட்கார்ந்திருந்தான் பருத்த ஆள் ஒருவன். அமன் துள்ளி எழுந்து நின்றான். அவன் முதுகில் விழுந்தன சில சாட்டையடிகள். நான் தாமதித்து உணர்வுக்கு வந்தேன், ஆனால் அமனின் தவற்றைக் கருத்தில் கொண்டு, அடி படாமல் விலகித் தப்பினேன். அந்த ஆள் வாய்க்கு வந்தபடித் தொடர்ந்து வசவுமாரி பொழிந்தான். அவனது நீண்ட, நரையோடிய தாடி கோபத்தால் கலைந்து பறந்தது. சப்பை மூக்கு பருத்தி மேலங்கியில் இறுகத் தைத்த பொத்தான்போல் இருந்தது. அவன்தான் சுற்றுப்புற நிலங்களின் சொந்தக்காரன் ஆன பிரபல ஜமீன்தார், சப்பைமூக்கன் அஜீஸ் என்பதைப் பிற்பாடு தெரிந்து கொண்டோம். ஆனால் அவன் இந்த நிலங்களின் சொந்தக்காரன் என்பது எங்களுக்கு அக்கம் பக்கம் கண்ணோட்டிய உடனே விளங்கிவிட்டது. எங்கள் செம்மறிகள் பருத்தி வயலில் புகுந்து

பருத்திச் செடிகளை அறவே மொட்டையடித்துவிட்டன.... சப்பை மூக்கு ஜமீன்தாரின் திட்டல்களாலும் புகலின்மையாலும் வரப் போகும் விபத்து பற்றிய கவலை தோய்ந்த முன்னுணர்வாலும் உந்தப்பட்டு நாங்கள் ஆடுகளைத் திரட்டிச் சேர்க்க விரைந்தோம். அதற்குள் அவை வருங்காலப் பயிரின் ஒரு பகுதியைச் சரியானபடித் தின்று தீர்த்திருந்தன. எங்கள் தொல்லைகொடுக்கிகளை நாங்கள் வயலிலிருந்து ஓட்டி வந்ததும் ஜமீன்தார் சற்று தூரத்தில் வேலை செய்து கொண்டிருந்த பணியாட்களைக் கூவி அழைத்து ஆடுகளைத் தன் பண்ணைவீட்டுக்கு விரட்டிச் செல்லும்படிக் கட்டளை இட்டான்.

நாங்கள் அங்கபடியைப் பற்றிக்கொண்டு அவனைக் கெஞ்சாத வண்ணம் கெஞ்சினோம்:

"ஜமீன்தார் ஐயா, நாங்கள் ஏழை அனாதைகள். எங்கள்மேல் கருணைகூருங்கள். வயிற்றுப் பிழைப்புக்காக வேலை செய்ய விடுங்கள் எங்களை. ஆயுள் காலம் முழுவதும் உங்கள் நலனுக்காகப் பிரார்த்தனை செய்வோம்..."

ஜமீன்தாரோ தன்னை மறந்த வெறியுடன் மேலும் மேலும் திட்டினான், எங்களை மாற்றி மாற்றிச் சாட்டையால் விளாறினான், பின்பு மந்தையின் பின்னே குதிரையை விரட்டிச் சென்றான். நாங்கள் அவனைத் தொடர்ந்து போனோம். அமன் ஆட்டுக்குட்டியைத் தூக்கிக் கொண்டிருந்தான். பண்ணை வீட்டை நெருங்கியதும் ஜமீன்தார் வேகத்தைக் குறைத்தான். நாங்கள் அவனை எட்டிப்பிடித்து மறுபடி கெஞ்சத் தொடங்கினோம்:

"ஜமீன்தார் ஐயா, இரக்கம் காட்டுங்கள். இன்று சந்தை நாள். எங்கள் எஜமானர் சந்தையில் எங்களை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார். உங்களுக்கு அவரைத் தெரிந்திருக்குமே. நாங்கள் ஆடுகளைக் கொண்டு சேர்க்காவிட்டால் அவர் எங்களைக் கொன்றே போடுவார்!..."

ஜமீன்தார் எங்களை ஓரக் கண்ணால் பார்த்தான்.

"யார் உங்கள் எஜமானர்?"

"கராஹோஜாபாய். அல்லா உங்களுக்கு அருள்வாராக..."

ஜமீன்தாரின் மனம் கொஞ்சம் இளகிவிட்டது போலத் தோன்றியது. அவன் ஓரக்கண்ணால் எங்களை மறுபடி பார்த்தான்.

"நல்லது, நான் உங்கள் எஜமானருடன் பேசுகிறேன்" - அவன் துப்பினான். "அவரிடம் சொல்லுகிறேன்" - அவன் மறுபடி துப்பினான் - "கயவாளிப் பயல்களான உங்களுக்குச் சரியான பாடங் கற்பிக்கும்படி! இதற்காகவே இன்று சந்தைக்குப் போகிறேன்! மதபக்தியுள்ள முஸல்மானின் சொத்தை, இவ்வளவு பாடுபட்டுச் சம்பாதித்த சொத்தை, நீங்கள் எப்படி ஆழும் பாழும் ஆக்குகிறீர்கள் என்பதை அவரிடம் சொல்லுகிறேன், கீழ்மக்களா! கராஹோஜாவின் செம்மறிகள் விஷயத்திலும் நீங்கள் இப்படித்தான் செய்திருப்பீர்கள்!" - இப்படி அவன் இலக்குப் பார்த்துத் தாக்கவே நாங்கள் அச்சத்தால் விலவிலத்துப் போனோம் - "ஊம்! ஆடுகளைத் திரட்டிச் சந்தைக்கு ஓட்டிப் போங்கள்! பகல் பொழுது பாதி கழிந்துவிட்டது, நாய்ப் பயல்களா, நீங்கள் என்னடா என்றால் நிழலில் படுத்து உறங்கிக் கொண்டிருக்கிறீர்கள்! ஆ-ஆ!" என்று பெருங்குரலில் அதட்டி மறுபடி சாட்டையை வீசினான். நாங்கள் இதை எதிர்பார்த்துத் தயாராய் இருந்தோம் ஆதலால் அடி விழும்வரை காத்திருக்கவில்லை.

அல்லாவுக்கு நன்றி செலுத்தி, மேலும் கருணை பாலிக்கும்படி வேண்டிக் கொண்டு நாங்கள் ஆடுகளைச் சந்தைக்கு ஓட்டிப் போனோம்.

எஜமானன் கோபத்தால் உடல் பதற எங்களுக்காகக் காத்திருந்தான். நாங்கள் பக்கத்தில் போனதுமே அவன் எங்கள் மேல் பாய்ந்து ஆபாச வசவுகளைப் பொழியத் தொடங்கினான், நாங்கள் அவற்றை எல்லாம் பொறுமையுடன் சகித்துக் கொண்டோம். இன்னும் சரியாகச் சொன்னால், ஆடுகள் குறைவதைக் கராஹோஜாபாய் கண்டுகொண்டதும் என்ன நடக்கும் என்ற காட்சியைக் கற்பனைக் கண்களால் நோக்கி நாங்கள் உணர்வற்று நின்றோம். ஆடுகளைப் பத்துப் பத்தாகச் சேர்த்துக் கட்டும்படி அவன் உத்தரவிட்டான். நாங்கள் அவ்வாறு செய்யத் தலைப்பட்டோம். எங்கள் நெஞ்சுகளோ, பாப்ளார் இலைகள் துடிப்பதுபோலப் பதைபதைத்துக் கொண்டிருந்தன. பத்து பத்து ஆடுகளாக மூன்று கும்பல்களைக் கட்டிவிட்டு நான்காவது பத்தைக் கட்டி முடிக்கும் தறுவாயில் அமன்

பதினோராவது ஆட்டை அந்தக் கும்பலில் சட்டெனச் சேர்த்துவிட்டு எனக்குக் கண் ஜாடை காட்டினான். அவன் மூளையில் ஏதோ தந்திரம் உதித்திருக்கிறது என்று நான் புரிந்து கொண்டேன். நாலாவது கும்பலை மற்ற மூன்றின் பக்கத்தில் நான் இழுத்துச் சென்றபோது அமன் திடீரென என்னை அதட்டிக் கூப்பாடு போட்டான்:

"அட வலிப்பு கண்ட மடையா, சரியாக எண்ணக்கூடத் தெரியவில்லையே உனக்கு! ஜமீன்தார் ஐயா, பத்துக்குப் பதில் பதினோரு ஆடுகளை ஒவ்வொரு கும்பலிலும் கட்டியிருக்கிறான்! அட மதிகெட்ட மூடமே, உன்னால் ஜமீன்தார் ஐயா நஷ்டப்பட்டுப் போவாரே, உலக்கைக் கழுந்து, பாழாய்ப்போகிற குறைப்பிறவிப் பயலே!"

ஜமீன்தார் உடனே இந்த வலையில் விழுந்துவிட்டான். நான்காவது கும்பலில் இருந்த ஆடுகளை மறுபடி எண்ணினான். என்னைத் திட்டினான். பின்பு மற்றக் கும்பல்களை எண்ணிச் சரி பார்ப்பதற்காகத் திரும்பினான். அப்போது அமன் என் மேலங்கிக் கையைப் பற்றி வெடுக்கென்று இழுத்தான். நாங்கள் இருவரும் ஒரு புறம் துள்ளித் தாவி, நொடிப்போதில் சந்தைக் கூட்டத்தில் மூழ்கிவிட்டோம்.



## அத்தியாயம் 10
# எங்களுக்குள் பூசல்

ஒருவனுக்குக் கடுக்காய் கொடுத்துவிட்டுத் தப்பி மறைய வேண்டுமானால் நெரிசலான ஜனக் கூட்டத்தில் கலந்து விடுவதைவிட மேலானது எதுவும் இல்லை. சமமான திறந்த வெளியில், சந்தைத் திடலின் நடுவில், மக்கள் கூட்டத்தில் போல ஒளிந்துகொள்ள அருமையான வசதி எந்தக் காட்டிலும் எந்தச் சிக்கலான புதிர்வழியிலும் எந்த இருண்ட குகையிலும் வாய்க்காது. ஆட்கள் ஒருவரை ஒருவர் நிரம்ப ஒத்திருப்பது அல்ல இதன் காரணம். நாம் மறைந்துகொள்ள உதவுவதற்கு அவர்கள் மிகுந்த ஆர்வம் கொண்டிருக்கிறார்கள் என்றோ சொல்லவே முடியாது. மாறாக, மரம் அல்லது பாறையிடம் இத்தகைய உதவியை அதிக எளிதில் பெறலாம். கூட்டமோ, ஒருவன் எதற்காக ஓடுகிறான், உண்மையில் யாரைப் பிடிக்க வேண்டும் - ஓடுபவனையா, துரத்துபவனையா என்பதை எல்லாம் தீர விசாரித்து அறிவதற்கு முன்பே ஓடுபவன் மேல் பாய்ந்து அவனுக்குக் குதூகலமான இறுதிச் சடங்கு நடத்தித் தீர்க்கத் தயாராய் இருக்கிறது. இல்லை, இரகசியம் உண்மையில் என்ன என்றால் கூட்டத்தில், இரைச்சல், நெரிசல், இவைபோன்ற இன்னம் ஏராளமான சள்ளைகள் காரணமாக மனிதன் அறிவு மழுங்கிவிடுகிறது. அப்போது அவனை நம் இஷ்டம்போல ஆட்டி வைப்பது நூல் உருண்டையால் பூனைக்குட்டியை வசீகரிப்பதைக் காட்டிலும் எளிது. இல்லாவிட்டால் இவ்வளவு மோசடிக்காரர்கள் சந்தையில் குழுமியிருப்பது எதற்காகவாம்?.. ஒருவனிடமிருந்து தப்பி ஓடும்போது கூட்டத்தில் நாம் மறைந்து கொள்ளக்கூட வேண்டாம். தப்பி ஓடியவன் வேறு பக்கத்தில் இருப்பதாகக் கிட்டே நிற்பவனை நம்பச் செய்துவிட்டாலே போதும். நாம் மட்டும் போதிய அளவு சுயநம்பிக்கையுடன் நடந்துகொண்டால், கூட்டத்தினர் இப்படி ஓடுவது தங்கள்

சொந்தப் பாட்டி என்று நினைத்தாலும் நினைப்பார்களே தவிர நீங்கள் என்று எண்ணவே மாட்டார்கள்.

உண்மையாகச் சொன்னால் கூட்டத்தில் மனிதன் மந்தையில் செம்மறியாட்டை ஓரளவு ஒத்திருக்கிறான். அல்லா அவனுக்கு ஒரு குறித்த அளவு மடத்தனத்தை அளித்திருந்தால், இங்கே அவன் தன் சேமிப்பிலிருந்து பதின்மடங்கு பிழிந்து எடுத்துக் கொள்கிறான்.

கூட்டத்தில் கலந்துகொண்டதுமே மனிதன் சொந்தப் பார்வையை ஒருவகையில் இழந்துவிடுகிறான் என்று சொல்வது சரியாய் இருக்கும். மற்றவர்களின் முதுகுகள் மறைவில் கண்ணுக்குப் புலப்படுவதும் கொஞ்சந்தானே. ஆகவே மற்றவர்கள் வாயிலாகக் காதில் படும் தகவலின் எந்தத் துணுக்கையும் அவன் அப்படியே பற்றிக்கொள்கிறான், தன் தகவல் துணுக்குகளையும் தாராளமாக வினியோகம் செய்கிறான். கூட்டத்தில் எல்லோரும் ஒரே மாதிரித்தான் பார்க்கிறார்கள் - அதாவது ஒரே மாதிரிக் குறைவாக. எனவே, ஒருவனுடைய ஊகங்களுடன் மற்ற எல்லோருடைய ஊகங்களும் சேர்ந்து ஒன்றாகி விடுகின்றன. விளைவாக, தனிமையில் ஒருவன் எந்தக் காரணத்தை முன்னிட்டும் ஏற்றுக்கொள்ள முடியாத சப்புச் சவறுகளால் கூட்டத்தின் ஒவ்வொரு மனிதனுடைய அறிவும் நிறைந்துவிடுகிறது.

நாங்கள் கூட்டத்தில் புகுந்து கலந்து, மிக மிக விட்டாற்றியான தோற்றத்துடன் அதில் வழி செய்துகொண்டு முன்னேறலானோம். இதற்கிடையே அமன் மென்மயிர்த்தோல் தொப்பியையும் மேல் கோட்டையும் கழற்றிச் சுருட்டிக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டான். நெருக்கத்திலிருந்து வழி செய்துகொண்டு விடுபட்டுச் சந்தையின் மறுகோடியை அடைந்தோம். அப்பால் இருந்தது பெரிய சாலை. அது நகரம் முழுவதன் ஊடாகவும் சென்றது. அதில் நடப்பது எங்களுக்கு ஆபத்து என்று பட்டது. எனவே குறுகல் தெரு ஒன்றில் நுழைந்து அடை சந்துகள், கொல்லைப் புறங்கள் வழியே நடந்து, சில இடங்களில் சுற்றுச் சுவர்களை ஏறித் தாண்டி, ஏனென்று கேட்பார் அற்ற ஒரு சிறு தோட்டத்தை அடைந்து, இளைப்பாறுவதற்காகச் சற்றே நீட்டிப் படுத்தோம்.

ஓரளவு களைப்பு ஆறியதுமே பசி எங்கள் வயிறுகளைக்



கிள்ளியது. இதில் ஆச்சரியம் ஒன்றும் இல்லை. முந்திய நாள் முதல் நாங்கள் சாப்பிடவே இல்லையே. ஆயினும் ரொட்டிகளாவது வாங்கிவர எங்கேனும் போவதற்கு அஞ்சினோம். இந்த மாதிரி ஒரு மணி அல்லது சற்று அதிக நேரம் படுத்திருந்தோம். அப்புறம் வயிறுகள் மேலிடத்து உத்தரவை ஏற்றுக்கொள்ள மறுத்துவிட்டன.

எப்படியோ துணிந்து நகரைவிட்டு வெளியேறினோம். பின்பு யாரேனும் நல்ல மனிதர்கள் எதிர்ப்படுவார்கள் என்ற நம்பிக்கையில் வயல்களின் வழியே கால்போன போக்கில் நடந்தோம். நாங்கள் ஐந்து ஆடுகளை இழந்து, ஒரு சல்லிக்காசு பெறாமல் எஜமானனிடமிருந்து தப்பி ஓடியிருந்தோம். இரவு முழுவதும் வதைபட்டுக் களைத்துச் சோர்ந்திருந்தோம். ஆயினும் நான் உற்சாகம் பொங்கும் மனநிலையில் இருந்தேன். எல்லாத் தளைகளிலுமிருந்து விடுபட்டுவிட்ட உணர்ச்சி என்னுள் நிறைந்திருந்தது. எப்படியோ, அல்லா ஒருவருக்கே வெளிச்சம். மாறாக அமனோ, புயல் மேகத்தைவிடக் கருங்கும்மென்று இருந்தான். அவன் ஒன்றுமே பேசவில்லை. என் கேள்விகளுக்கும் என்னைப் பார்க்காமலே நெற்றியைச் சுருக்கியவாறு பதில் அளித்தான். சரிந்த தாழ்வாரக்கூரை போலத் தொங்கின அவன் இமைகள். அவனுடைய இந்தக் கடுகடுப்பான தோற்றத்தை என்னால் சகிக்க முடியவில்லை. அவனைக் குஷிப்படுத்த முயன்றேன். அவனோ ஒரேயடியாகச் சள்ளென விழுந்தான்.

"அட பேசாமல் இருந்து தொலையேன்! உனக்கு என்ன? உன்னால்தான் நான் இரண்டு செம்மறிகளையும் ஒரு வெள்ளாட்டையும் இழந்தேன்! நீ வரும்வரையில் காரியம் எல்லாம் அருமையாக நடந்தது. நீ வந்தாய், தொல்லையும் வந்தது. நீ போகும் இடம் எங்கும் துன்பமும் தொடர்ந்து வருகிறது. பிணத்தைக் கழுவப் போய்ப் பட்ட பாடு எனக்குப் போதவில்லையே! மறுபடி உன்னோடு சங்காத்தம் வைத்துக் கொண்டேன் பாரேன்! சீ, சீ, ஆக்கக் கெட்ட சனியனே!" என்று பொடுபொடுத்தான்.

எனக்கும் அடங்கமாட்டாத கோபம் வந்துவிட்டது.

"நீ மட்டும் யாராம்! அதிர்ஷ்டக்காரனைப் பாரப்பா, அம்மை வடுவும் மூஞ்சியுமாய்! உன் ஆடுகளோடு அளவளாவ நான்

ஆசைப்பட்டேன் என்று எண்ணுகிறாயோ? நான் மட்டும் இல்லா விட்டால் ஐந்து அல்ல, இருபது ஆடுகளைப் பறி கொடுத்திருப்பாய்! அவற்றைத் தேடி வீடு வீடாக ஏறிக்குதித்தவன் யார்? சினை ஆட்டுக்குப் பிரசவம் பார்த்தது யார்? நீயே எல்லாம் செய்ததாக நினைப்போ? நீ வெள்ளாடு சம்பளமாகப் பெறுவதற்குள் ஒரு முழு மந்தையே உன்னிடமிருந்து தப்பி ஓடியிருக்கும்! புரிந்ததா?"

"எனக்குப் புரிந்துவிட்டது. நீயும் இதோ புரிந்துகொள்வாய்..."

"எதைப் புரிந்துகொள்வேனாம்?"

"மூக்கால் வாய்க்கால் தோண்டுவது எப்படி என்று புரிந்து கொள்வாய்."

"இதை எனக்குக் காட்டப் போகிறவன் யார், நீயா?"

"நான்தான்."

"எங்கே, காட்டு பார்க்கலாம்."

"இதோ காட்டுகிறேன்!"

"காட்டு, காட்டு. உன் மூக்கு இதற்குத்தான் ஏற்றது!"

நாங்கள் அப்படி ஒரேயடியாகக் களைத்து, பசியால் வாடிப் போயிராவிட்டால், மேற்கொண்டு வெயில் வேறு அவ்வளவு கடுமையாகப் பொசுக்காவிட்டால், எங்கள் வாய்ச் சண்டை கைச்சண்டையில் முடிந்திருக்கும். நடுப்பகல் கழிந்து வெகு நேரம் ஆகிவிட்டிருந்தது. நாங்கள் முன்போலவே வெற்று வயல்களில் வரப்புகள் வழியே நடந்தோம். கடைசியில் நாங்கள் சில ஆட்களைக் கண்டோம். அவர்கள் காரட்டுக் கிழங்குகளை அகழ்ந்து எடுத்துக் கொண்டிருந்தார்கள். அவர்களை நெருங்கியதும் முகமன் கூறி, சாலைக்கு எப்படிப் போவது என்று கேட்டோம். நல்லியல்புள்ள, சுருக்கங்கள் விழுந்த முகத்தினனான ஒரு கிழவன் எங்களைக் கவனமாக நோட்டமிட்டுவிட்டு, "எந்தச் சாலை வேண்டும் உங்களுக்கு, குழந்தைகளே. சந்தைக்குப் போகும் சாலையா?" என்று கேட்டான்.

"இல்லை அத்தா, நாங்கள் சந்தையிலிருந்துதான் வருகிறோம்" என்று தயங்காமல் பதில் சொன்னான் அமன்.

"அப்படியா, புரிகிறது" என்று உறுதிப்படுத்தும் பாவனையில் தலை அசைத்தான் கிழவன், தன் சொந்த எண்ணங்களுக்கு இசைவு தெரிவிப்பவன்போல. "சந்தை விவகாரம் உங்களுக்குச் சாதகமாக வாய்க்கவில்லை என்றால், இப்போது எங்கே போக அவசரப்படுகிறீர்கள்? அல்லது எங்கேனும் யாராவது உங்களுக்காகக் காத்திருக்கிறார்களோ? இருங்களேன் இங்கே. காரட்டுக் கிழங்கு தோண்டிப் பறிக்க எங்களுக்கு உதவுங்களேன். ஓரிரண்டு நாட்கள் வேலை செய்தீர்களானால் ஆளுக்கு ஒரு மூட்டை காரட்டு கிடைக்கும், சில்லறைச் செலவுகளுக்கு உதவுமே..."

இதைவிட மேலான யோசனை எங்களுக்கேகூட உதித்திராது. தளதளவென்று பருத்துச் சாறு நிறைந்த காரட்டுகளைக் கண்டதும் எங்கள் நாக்கில் நீர் ஊறிற்று. அவை இனிப்பாக, கறுக்கறுக்கென்று கடிக்க இன்பமாக இருக்கும் என்று பார்த்தாலே தெரிந்தது. அந்தக் கிழவன் எண்ணங்களைப் படித்துவிடும் உள்நோக்கு வாய்ந்தவன்போலும்! சந்தையில் எங்கள் காரியம் காயாகிவிட்டது என்பதை இவன் எப்படித் தெரிந்து கொண்டான்?

"நன்றி, அத்தா. மெய்யாகவே எங்களுக்கு அவசரம் ஒன்றும் இல்லை. வேலை தேடத்தான் போகிறோம்" என்றேன்.

"அட குழந்தைகளே. வேலையை நாம் தேடிப் போக வேண்டாம். அதுவே காலடியில் இடறுகிறது. ஒரு கம்பை எடுத்து வேறிடத்தில் வைத்தால் அதுவே வேலைதான். வாருங்கள், அகழ்ந்து எடுக்கத் தொடங்குங்கள். ஆண்டவன் அருளால் உங்களுக்கும் நலம், எங்களுக்கும் உதவி."

நாங்கள் மேலங்கிகளை வரப்புமேல் போட்டுவிட்டு வேலையில் முனைந்தோம். காரட்டு அபூர்வமான செழிப்புடன் வளர்ந்திருந்தது. ரொம்பச் சின்னதுகூட முழங்கை அளவு இருந்தது. கொஞ்சம் அகழ்ந்து எடுத்தபின் நாங்கள் சில காரட்டுகளை இன்பத்துடன் கடித்துத் தின்றோம். தேனாய் இனித்தன. இப்படியே தொடர்ந்தது. மண்வெட்டியால் கொஞ்சம் தோண்டுவோம், உழவனின் சாக்கில் சில காரட்டுகள் சேரும், நாங்கள் ஒன்றைக் கடித்து விழுங்குவோம். எங்கள் காலி இரைப்பைகளும் விரைவில் நிறைந்துவிட்டன. அமன் விசேஷ ஆர்வத்துடன் காரட்டு வேட்டையாடினான்.

மாலைத் தறுவாயில் வயல் சொந்தக்காரன் வந்தான். குதிரைமேல் உட்கார்ந்திருந்த அவனைக் கண்டதுமே நாங்கள் இரு மடங்கு ஊக்கத்துடன் தோண்ட ஆரம்பித்தோம். நெருங்கி வந்ததும் அவன் எங்களை அக்கறையுடன் பார்த்து, கிழவனிடம் விசாரித்தான். கிழவன்தான் இங்கே உழவர்களின் தலைவன். அவன் எங்களைப் பிரமாதமாகப் புகழத் தொடங்கினான்.

"ஆண்டவனேதான் இந்தப் பையன்களை நம்மிடம் அனுப்பியிருக்கிறான் எஜமான்! இவர்கள் இன்பமாய் வாழ்வார்களாக. இந்தப் பக்கமாகப் போனார்கள். நான் கேட்டுக் கொண்டதற்கு இணங்கி, மதியத்திலிருந்து வேலை தொடங்கி மலையாய்க் காரட்டுகளைத் தோண்டிக் குவித்துவிட்டார்கள்!" என்றான்.

எஜமானன் கேட்டு ஆமோதிக்கும் பாவனையில் தலை அசைத்தான்.

"அப்படியானால் இவர்களைப் பண்ணை வீட்டுக்கு அழைத்து வாருங்கள். இரவுச் சாப்பாடு சாப்பிடட்டும்" - அவன் குதிரையைத் திருப்பினான். பின்பு திரும்பிப் பார்த்து, "இந்தமாதிரி நாணயமுள்ள பையன்களுக்கு யாரும் சாப்பாடு போடுவார்கள்!" என்றான்.

அவன் போன பிறகு நாங்கள் சிறிது நேரமே வேலை செய்தோம். இருட்டிவிட்டது. காரட்டுகளை வண்டியில் ஏற்றினோம். பண்ணைவீடு போகும் வழியில் அமன் அடிக்கடி வயிற்றைத் தடவினான். அவன் முகம் வெளிறிவிட்டது என்று இருட்டில் எனக்குத் தெரிந்ததைக் கொண்டு அனுமானித்தேன்.

பண்ணையார் வீட்டில் சாப்பாட்டுக்கு உளுத்தங்கஞ்சி சமைத்திருந்தது. அவனுக்குத் தாராளம் வந்துவிட்டது. பெரிய வட்டில் நிறையத் தளம்பத் தளம்பக் கஞ்சி கொண்டுவந்து வைத்தான். எனக்கும் அமனுக்கும் கொடுக்கப்பட்ட மர ஸ்பூன்கள் அகப்பைகள் போல மட்டுமீறிப் பெரியவையாய் இருந்தன. இவ்வளவு ருசியான உணவு நாங்கள் வெகு காலமாகச் சாப்பிடவில்லை. மற்றவர்களுக்கு அனேகமாக இடங் கொடுக்காமல் உளுத்தங்கஞ்சியை ஒருகை பார்த்தோம். மற்றவர்கள் இரண்டு கரண்டி சாப்பிடுவதற்குள் நாங்கள் பத்து



கரண்டி கஞ்சியை உள்ளே தள்ளினோம். மிகப் பெரிய வட்டில் மளமளவென்று காலியாகிவிட்டது.

எங்களுடன் சேர்ந்து காரட்டு தோண்டியவர்கள் பண்ணையாரின் அண்டை அயலார். மரபுப்படி பரஸ்பர உதவிக் கடப்பாடு உடையவர்கள். சாப்பாட்டுக்குப் பிறகு சுருக்கமான தொழுகை நடத்திவிட்டு அவர்கள் தங்கள் வீடுகளுக்குப் போய் விட்டார்கள். நாங்கள் பண்ணையார் வீட்டிலேயே இராத் தங்கினோம். தொழுவத்தின் வெளித் தாழ்வாரத்தில் எங்களுக்குப் படுக்க இடம் தரப்பட்டது. அங்கே ஒரு பழைய கயிற்றுக் கட்டில் இருந்தது. கட்டிலில் படுக்க வேண்டும் என்பது அமனின் வெகு நாளையக் கனவு. அவன் என்னைவிட வயதில் மூத்தவன். எனவே நான் இந்த ஆடம்பரமான மஞ்சத்தை அவனுக்கு விட்டுக் கொடுத்தேன். இதில் எனக்கு விசேஷ வருத்தம் உண்டாகவில்லை. அவன் கட்டிலில் ஆட்டுத் தோலை விரித்துப் படுத்து, மேலங்கியைப் போர்த்துக் கொண்டான். நான் தரையிலேயே முடங்கினேன்.

அக்கணமே உறக்கம் வந்துவிடும் என்று நான் நினைத்திருந்தேன். உண்மையிலோ நடந்தது வேறு. அமன் கட்டிலில் ஓயாமல் புரண்டதால் அது கிரீச்சிட்டது. அப்போது தான் தூங்க ஆரம்பித்திருந்த நான் இதைக் கேட்டுச் சட்டெனக் கண்விழித்தேன். சற்று நேரம் வலையில் அகப்பட்ட மீன்போலத் துடித்துப் புரண்ட பின் அவன் எழுந்து முனகிக்கொண்டே எங்கோ ஓடினான். பின்பு திரும்பி வந்து படுத்தான். வயிற்றைச் சரிப்படுத்திக்கொள்ளும் முயற்சியில் கட்டில் மறுபடி நெடுநேரம் கிரீச்சிட்டுக்கொண்டிருந்தது. இரண்டு, மூன்று நிமிடங்களுக்கெல்லாம் பழைய பல்லவி மறுபடி தொடங்கிற்று. காரட்டு மிக இனிப்பும் வஞ்சகமும் உள்ள "முஷாக்" வகை. உளுத்தங்கஞ்சிக்கும் அதற்கும் ஒத்துவரவில்லை போலிருக்கிறது. இப்போது அவை வெறி கொண்ட பூனைகள் போல அமனின் குடலில் சண்டை போட்டன. அவற்றில் எது வெற்றியை நெருங்கி இருந்ததோ அறியேன். ஆனால் தோல்வித்துயரம் எல்லாம் அமன் தலையில் வந்து விடிந்தது. எனக்கோ - நான் அமன்போல அவ்வளவு அவக்கைப்படாததாலோ, அல்லது நாடோடி வாழ்க்கைக் காலத்தில் என் வயிறு எல்லாவற்றுக்கும் பழகிப் போய்விட்டது என்பதாலோ - எவ்விதமான சங்கடமும்

நேரவில்லை. காரட்டும் உளுத்தங்கஞ்சியும் ஒரே தாயால் வளர்க்கப்பட்டவைபோல ஒற்றுமையாக என் வயிற்றில் கிடந்தன.

காலையில் கிழக்கு வெளுக்கும் தறுவாயில் நாங்கள் எழுந்து வாய்க்காலில் உடம்பு கழுவிக்கொண்டு வீட்டுக்காரனை எதிர்பார்க்கலானோம். அமன் வெளிறிப்போய் அடிக்கடி முகம் சுளித்தான்: விடியற்காலை வரை அவன் வெளிக்கும் உள்ளுக்குமாக ஓடிய வண்ணம் இருந்தான் அல்லவா, அதனால்.

தேநீரும் இரண்டு ரொட்டிகளும் எடுத்துக்கொண்டு வீட்டுக்காரன் எங்களிடம் வந்தான்.

"ஊம், அப்புறம் என்ன செய்யப்போகிறீர்கள்? என் பண்ணை வீட்டில் சில வேலையாட்கள் இருக்கிறார்கள். அவர்கள் வைக்கோல் எடுத்துவர நேற்று மாலை ஸ்தெப்பிக்குப் போய் விட்டார்கள். நீங்கள் இங்கேயே தங்கி விடுகிறீர்களா? இலையுதிர்காலம் ஏற்கனவே எட்டிப்பார்க்கிறது. இருந்தாற்போல் இருந்து பனிக்காலம் தொடங்கிவிடும். பனிக்காலத்திலோ, வேலை அனேகமாக இருக்காது... கால்நடைகளை மேற்பார்த்துக் கொள்ளுங்கள். இதோ இங்கே கணப்பு மூட்டிக்கொண்டு இன்பமாகப் படுத்துக்கொள்ளலாம். உணவு நிறையக் கிடைக்கும். பாங்கான உடைகளும் நான் தருகிறேன். சில்லறைச் செலவுகளுக்குப் பணமும் கொடுக்கிறேன்... வேறு பணம் - மன்னித்துக் கொள்ளுங்கள். உங்களுக்கே தெரியுமே" என்றான்.

நான் அமனை ஓரக்கண்ணால் பார்த்தேன்.

"நன்றி, எஜமான். நாங்கள் யோசிக்கிறோம்" என்றேன்.

அவன் பின்கட்டுக்குப் போனதும் நாங்கள் கலந்து ஆலோசித்தோம். மெய்யாகவே சம்மதித்துவிடலாமோ? இதைவிட மேலான இடம் கிடைப்பது சந்தேகந்தான். எங்களிடம் உள்ள பணத்தை - என் இரண்டு தன்காக்களை - வைத்துக் கொண்டு தாஷ்கந்த் போய்ச் சேர முடியாது. இப்போதைக்கு இங்கே தங்குவோம். அப்புறம் பார்த்துக்கொள்வோம், இவ்வாறு நாங்கள் முடிவு செய்தோம்.

நாங்கள் எங்கள் இசைவைத் தெரிவித்ததும் பண்ணையார் சொன்னான்: "அப்படியானால், காலை ஆகாரத்தைச் சட்டென்று முடியுங்கள். உங்களில் ஒருவன் பண்ணை வீட்டில் இருப்பான், மற்றவன் எருதை மேய்க்கப் போவான். அறுப்பு அறுத்த வயலில். எருது பிதுரார்ஜிதம். என் தகப்பனாரிடமிருந்து எனக்குக் கிடைத்தது. அல்லா அதன் ஆயுளை நீடிப்பாராக. நல்ல எருது. அதைச் சரியானபடி கவனித்துப் பராமரிக்க வேண்டும். இங்கே இருப்பவன், விருந்தாளிகள் வந்தால் தேநீர் கொடுத்து உபசரிக்க வேண்டும்..."

அமனுக்குப் பண்ணை வீட்டில் தங்க அடங்கா ஆசை உண்டாயிற்று. நீர் கொதிக்க வைக்கும் ஸமோவாரின் ஓசையில் விருந்தாளிகளின் உரையாடலைக் கேட்பது தனக்கு மிக மிகப் பிடிக்கும் என்று அவன் சொன்னான். மதப் பள்ளியில் ஓர் ஆண்டு முழுவதும் படித்துத் தெரிந்துகொள்வதைவிட அதிக விஷயங்களை இந்த உரையாடலில் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் என்றான். ராத்திரி பூராவும் அவன் எப்படி ஓடிக் கொண்டிருந்தான் என்பது எனக்குத் தெரியும் ஆகையால், காரட்டும் உளுத்தங்கஞ்சியும் இன்னும் உடன்பாட்டுக்கு வரவில்லை என்றால் மாட்டை மேய்ப்பது அமனுக்கு ஏலவே ஏலாது என்று எண்ணினேன். அவன்மேல் இரக்கம் கொண்டு, எருதை நானே மேய்த்து வருகிறேன் என்று சொன்னேன்.

ஜமீன்தார் என்னைத் தொழுவத்துக்கு இட்டுப் போய், புள்ளிகள் உள்ள சிறு எருது ஒன்றைக் காட்டி, அதை ஓட்டிப் போகச் சொன்னான். அது மிகப் பணிவுள்ள தோற்றத்துடன் வந்ததைக் கண்டு எனக்கு அதன்மேல் இரக்கமாய்க்கூட இருந்தது. அப்பாவி மாடு. இப்படியே கசாப்புக் கிடங்குக்குப் போய்விடும். நான் தும்பைப் பிடித்து அதை நடத்திச் சென்றேன். கீழ்ப்படிவுள்ள சிறுவன்போல அது என் பின்னே வந்தது. நாங்கள் பண்ணை வீட்டிலிருந்து கணிசமான தூரம் அப்பால் போய் நாணல் புதர்களை நெருங்கினோம். அப்போது எருதின் நடை வேகம் சற்று மட்டுப்பட்டது. நான் திரும்பினேன். அது பின்னே நகர்ந்தது. பாவம், களைத்துப் போயிற்று போலிருக்கிறது என்று நினைத்து அதை லேசாகக் கயிற்றால் அடித்தேன். அது பொத்தென்று தரையில் விழுந்தது, அதன் விழிகள் பிதுங்கி நெற்றிமேல் துருத்தின, வாயிலிருந்து அடர்ந்த நுரை கிளம்பியது. அதன் உடம்பு முழுவதும் நடுங்கிற்று, அது வலிப்பு கண்டது போலக் கால்களை உதைத்துக் கொண்டது! எனக்கு நெஞ்சு பகீர் என்றது. என் கயிற்றடி ஏதேனும் புண்ணில் பட்டுவிட்டதோ?

அல்லது பிறந்தது முதலே இது அடி பட்டதே இல்லையோ? அல்லது இதற்குச் சாகும் வேளை வந்துவிட்டதோ? இது இப்போதே மண்டையைப் போட்டுவிட்டால் நான் என்ன செய்வேன்? - இப்படிப் பலவாறாக எண்ணிக் குழம்பி அந்த ஆக்கங்கெட்ட பிராணியைச் சுற்றிச் சுற்றிப் பரபரத்தேன். உதவிக்கு யாரையேனும் அழைப்போம் என்றால் அக்கம்பக்கத்தில் ஒருவரையும் காணோம்...

எருது தொடர்ந்து துடிதுடித்தது. நான் பண்ணை வீட்டுக்கு ஓடி எஜமானுக்குத் தகவல் சொல்வது என்று முடிவு செய்தேன். அதற்குள் எருது துள்ளி எழுந்து வாலைக் கிளப்பிக்கொண்டு எடுத்தது ஓட்டம். நான் அங்காந்த வாயுடன் நொடிப்போது மலைத்து நின்றேன். பிறகு அதன் பின்னே பாய்ந்து ஓடினேன். ஆனால் நான் அதைப் பிடிப்பது எங்கே? என்னைவிட அதற்கு இரண்டு கால்கள் அதிகமாய் இருந்தது வெறுமே அல்லவே. ஏககாலத்தில் இரண்டு நீராவி எஞ்சின்கள் இயங்குவதுபோல விரைந்து ஓடிற்று அது. பார்வையிலிருந்து அதைத் தப்பவிடாது இருப்பதற்காக, கால்களில் குத்திய முட்களையும் பொருட்படுத்தாமல் நான் ஓடினேன். பிதுரார்ஜித எருதாம்! காலஞ் சென்ற தகப்பனாரிடமிருந்து கிடைத்ததாம்! சாம்பல் காக்கைகள் இதைக் கொத்திப் பிடுங்க! திடீரென்று அது என்னிடமிருந்து கணிசமான தூரத்தில் நின்று, ஒன்றுமே நடவாததுபோலப் புல்லைக் கடிக்கலாயிற்று. நான் வைது திட்டி, மெதுவாக அதன் அருகே போனேன். நான் ஓர் ஐந்து தாவடி தூரத்தில் இருந்தபோது, நெஞ்சில் குளவி கொட்டிவிட்டது போல அது மறுபடி பின்கால்களை உதைத்துத்துள்ளி அப்பால் பாய்ந்து ஓடியது. கொஞ்ச தூரம் ஓடியபிறகு அது முன்போலவே வெகுளித் தோற்றத்துடன் மேய்வதைத் தொடர்ந்தது. இந்தப் பாழும் மிருகம் என்னை வேண்டுமென்றே ஏளனம் செய்தது! நான் புல்லில் படுத்து, சுற்றும் உள்ளவற்றுக்கும் எனக்கும் எவ்விதச் சம்பந்தமும் இல்லைபோலக் கால்மேல் கால் போட்டுக் கொண்டேன். அப்போது என்ன நடந்தது தெரியுமா? அந்தப் பேய் மாடு ஓசைப்படாமல் கிட்டே வந்து என் உயர்த்திய காலை முட்டிற்று! இது எல்லை மீறிய துடுக்கு! நான் துள்ளி எழுந்து ஒரு மண் கட்டியைக் கையில் எடுத்துக்கொண்டு வாயு வேகத்தில் அதை விரட்டிக்கொண்டு ஓடினேன். எரிச்சல் என் விரைவை அதிகப்படுத்தியது. நான் அந்த வதைகார மாட்டை நெருங்கி



அதன் சூம்பிய பின்புறத்தைக் குறி வைத்து மண்கட்டியை எறிந்தேன். மண் கட்டி சரியாக இலக்கில் தாக்கியது. மாடு மாவென்று அலறி, என்னை நோக்கித் திரும்பி, கொம்புகளை முன்னே துருத்தியவாறு முட்ட வந்தது...

இந்த மாதிரி நாங்கள் மாலை வரையில் ஒருவரை ஒருவர் விரட்டிய வண்ணமாய் இருந்தோம். அதன் தும்பை பிடிக்க ஒரு தரங்கூட எனக்கு வாய்க்கவில்லை. அன்றைய தினம் நான் ஓடிய தூரம் அந்த வயலிலிருந்து தாஷ்கந்த் வரை உள்ள தொலைவைவிட அதிகமாயிருக்கும். நான் மட்டும் பகல் முழுவதும் ஒரே திசையில் ஓடியிருந்தால் இதற்குள் வீடு போய்ச் சேர்ந்திருப்பேன். இந்த எருது என் எஜமானனுக்குப் பிதுரார்ஜிதமாகக் கிடைத்தது என்றால், அவனுடைய தகப்பனாரின் காலத்துக்குப் பிறகும் வாழ்ந்திருப்பது என்று முரட்டு பிடிவாதம் காரணமாக இது தீர்மானித்ததால்தான் என்று நினைக்கிறேன். தன் வாழ்நாளில் எத்தனை ஆட்களை இது வதைத்திருக்கும் என்று எண்ணவே பயங்கரமாய் இருந்தது! சூரியன் மறைந்த பிறகுதான் அது ஓரளவு படிமானத்துக்கு வந்தது. நான் எஞ்சிய பலத்தை எல்லாம் திரட்டி அதன் தும்பைப் பிடித்துப் பண்ணை வீட்டுக்கு இழுத்துச் சென்றேன். அதைத் தொழுவத்தில் கட்டுவதற்குள் நான் பட்ட பாட்டை எல்லாம் விவரிக்காமல் இருப்பதே மேல் - சொன்னாலும் நீங்கள் நம்ப மாட்டீர்கள்.

நான் வந்தபோது அமன் தன் அன்புக் கட்டிலில் படுத்திருந்தான். அவன் முகம் வாட்டம் அடைந்திருந்தது. எனக்குந்தான் முகம் தொங்கிப்போயிருந்தது என்றாலும் உற்சாகத்தை வருவித்துக் கொள்ளத் தீர்மானித்தேன்.

"ஊம், என்ன சேதி?" என்று கேட்டேன்.

"ஒன்றும் கேட்காதே. வயிறு புடைக்கத் தின்றுவிட்டேன்!" என்றான்.

"எதை வயிறு புடைக்கத் தின்றாய்?"

"ஓ! இங்கே என்ன கோலாகலம் தெரியுமோ? நீ போன பிறகு விருந்தாளிகள் வந்தார்கள். வீட்டுப் பெண்கள் சமையல் கலையில் கை தேர்ந்தவர்கள். அடே அப்பா! என்னென்ன வெஞ்சனங்களும்

பணியாரங்களும் சமைத்துவிட்டார்கள் என்கிறாய்! இறைச்சிக் கொழுக்கட்டை என்ன, இறைச்சி வதக்கல் என்ன, சேமியாப் பொரியல் கறி என்ன, பன்னீர் ஹல்வா என்ன - எல்லாவற்றையும் சொல்லி மாளாது. நான் வேலைக்கு நடு நடுவே ஒன்றை வாயில் போட்டுக்கொள்வதும் இன்னொன்றை ருசி பார்ப்பதுமாக இருந்தேன். ஓயாமல் இப்படித் தின்றதில் வயிறு வெடித்து விடும் போல் ஆகிவிட்டது. அப்புறம் விருந்தாளிகள் போய்விட்டார்கள். எஜமான் அக்கம் பக்கத்தாரிடம் கடன்களை வசூலிக்கப் புறப்பட்டார். பேரேட்டை நான் கக்கத்தில் இடுக்கிக் கொண்டேன், நாங்கள் கிளம்பினோம். ஒருவர் வீட்டுக்குப் போனோம், அடுத்தவர் வீட்டுக்குப் போனோம்... "உட்காருங்கள். கொஞ்சம் ருசி பாருங்கள்!" என்று ஒவ்வொருவரும் உபசரித்தார்கள். என்னைப் பண்ணையாரின் கணக்கப்பிள்ளை என்று நினைத்துவிட்டார்கள். அப்புறம் உபசாரத்துக்குக் கேட்பானேன்! எனக்கு இஷ்டமே இல்லை, ஆனால் வேண்டாம் என்று சொல்வது நன்றாய் இராதே. புலவு என்ன, இறைச்சிக் குழம்பு என்ன, ஒரே மோக்ளா!... சீ, எனக்கோ, குமட்டிக்கொண்டு வந்தது! இப்போது நினைத்தாலே வயிற்றைப் புரட்டுகிறது. சாப்பாட்டைப் பற்றி என்னிடம் பேசவே பேசாதே!"

அமன் இப்படி விவரித்துக் கொண்டிருந்த போது என் வாயில் நீர் ஊற்றாய்ப் பெருக்கெடுத்தது. அவன் சொன்ன சில பண்டங்களை நான் ஒரு தரங்கூட ருசி பார்த்ததே இல்லை. அவற்றின் பெயர்களை மட்டுமே கேள்விப்பட்டிருந்தேன். இந்தப் பயலுக்கு அடித்த அதிர்ஷ்டத்தைப் பாரேன்! அட, பரவாயில்லை, நாளைய தினம் இதற்குக் குறைந்துவிடாது, நிச்சயம். அமனை இந்த எருதுடன் அனுப்பி வைக்க வேண்டியதுதான் பாக்கி. அது மண்டையைப் போட, வலிப்பு வியாதிக்காரப் பிண்டம்! நான் பேரேட்டைக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு நடை போடுவேன்!

"உன் சேதி என்ன?" என்று கேட்டான் அமன்.

"என் சேதியா?... முதல் தரம்! பிரமாதம்!... இந்த எருது இருக்கிறதே, ஆண்டவன் தந்த வரம் என்பேன். அவ்வளவு சாது. சொன்னபடி எல்லாம் கேட்கும். தும்பைப் பிடித்து ஓட்டிக் கொண்டுபோய் வரப்பில் விட்டால் அங்கேயே நின்று புல்லைக் கடிக்குமே தவிர அப்புறம் இப்புறம் அசையாது, அங்கேயே கட்டிப்போடப்பட்டதுபோல. இந்த மாதிரி மாட்டை நான் கண்டதே இல்லை! புல் தீர்ந்ததும் கடைக்கண்ணால் நம்மைப் பார்க்கும். "மேலே போகலாமா?" என்று அனுமதி கேட்பதுபோல. நான் கையாட்டி, "போகலாம்" என்று சைகை செய்வேன், நிழலில் படுத்தபடியே. பின்னே என்ன! வெக்கை ஏறியதும் நான் ஓடைக் கரையில் வில்லோ மரத்தடியில் படுத்துத் தூங்கினேன். விழிப்பு வந்ததும் பார்க்கிறேனோ, மாடு அதே இடத்தில் நின்று கொண்டிருந்தது. சுற்று முற்றும் ஒரு புல் தாள்கூட இல்லை. நான் கண் திறப்பதற்காகக் காத்திருந்தது அந்த அப்பாவி... இது எருது அல்ல, தங்கக் கம்பி. நல்ல வேளைதான் நான் வீட்டில் தங்கவில்லை. இந்த விருந்தாளிகளோடு பாடுபடுவது வெறும் சள்ளை. நாளைக்கும் மாட்டை மேய்க்க ஓட்டிப்போவேன்."

அமன் குறுகிய வியப்பு ஒலிகள் செய்தவாறு பொறாமையுடன் என்னைப் பார்த்தான். சில வேளைகளில் வயிற்றைப் பிடித்துக்கொண்டு முனகினான். எங்களுக்காக மோர் ஊற்றிய கஞ்சி கொண்டுவரப்பட்டது. அவ்வளவு அபூர்வப் பண்டங்களைச் சாப்பிட்டபின் அமன் இதை ஏறெடுத்தும் பார்க்க மாட்டான் என்று புரிந்துகொண்டு நான் கஞ்சிக் கிண்ணத்தை என் பக்கம் நகர்த்திக் கொண்டேன். ஆனால் அவனோ, அசட்டையாகச் சொன்னான்:

"கொஞ்சம்போல எனக்கும் மிச்சம் வை. இந்தக் கஞ்சி எனக்கு இதமாய் இருக்கும். நான் இன்றைக்கு ஒரே கொழுப்பு உணவு சாப்பிட்டேன், வயிற்றில் கல்லை வைத்ததுபோலக் கனக்கிறது. இந்தக் கஞ்சி வயிற்றில் உள்ள அடைசலைக் கொஞ்சம் கரைக்கும். ஓ-ஓ! நேரே நிற்கவே முடியவில்லை. ஐயோ..."

"வைக்-கிறேன் மிச்சம்" என்றேன். அதற்குள் நான் அளந்த புளுகு நினைவுக்கு வரவே, "எனக்கும் அப்படி ஒன்றும் பசிக்கவில்லை. பகல் பூராவும் படுத்து உறங்கத்தானே செய்தேன்" என்று சுதை விட்டேன்...

மறுநாள் காலையில் பண்ணையார் மறுபடி இரண்டு ரொட்டிகளும் தேநீரும் எடுத்து வந்தான்.

"ஊம், இன்றைக்கு யார் என்ன வேலை செய்வதாக உத்தேசம்?" என்று கேட்டான்.

"இதோ தீர்மானிக்கிறோம்" என்று சொல்லிவிட்டு அமன் என் காதோடு, "கேளு, நான் எருதை ஓட்டிப் போகிறேன். நீ கருணை

காட்டு - எனக்குப் பதில் நீயே இந்தப் பண்டங்களை எல்லாம் சாப்பிடு. இல்லாவிட்டால் என் வயிறு இரண்டாவது நாளில் வெடித்துப்போகும். புரிந்ததா?" என்றான்.

நான் சந்தோஷத்தைக் காட்டிக்கொள்ளாமல், "புரிந்தது" என்று கிசுகிசுத்தேன். விதம் விதமான பண்டங்களை வயிறு வெடிக்கத் தின்னப் போகிறேன் நான். அவனுக்கு வாய்க்கப்போவதோ, என் எருது!

"மாட்டை நான் ஓட்டிப் போகிறேன், எஜமான்" என்று பண்ணையாரிடம் சொல்லிவிட்டு அமன் என் காதோடு மறுபடி கிசுகிசுத்தான்: "என் யோசனையை மறக்காமல் நினைவு வைத்துக்கொள். விருந்தாளிகள்முன் எஜமான் உனக்குக் கொழுப்பு தடவிய ரொட்டியைக் கொடுக்க வந்தால் அவக்கை கொண்டு தின்றுவிடாதே. 'இவனுக்குத் தின்னக் கொடுக்கா விட்டால் விருந்தாளிகள் எதிரில் நப்பாசைப்படுவான், எனக்குத் தலைகுனிவு ஏற்படும். என்ன இருந்தாலும் பஞ்சைப்பயல்தானே' என்று எஜமான் எண்ணுகிறான். நீ கவனமாய் இரு. அவனுக்கு நன்றி தெரிவி. ஆனால் ரொட்டி வேண்டாம் என்று மறுத்துவிடு. எனக்கு வயிறு நிறைந்திருக்கிறது என்று சொல்லிவிடு..."

"யோசனை சொன்னதற்கு நன்றி, அண்ணே" என்றேன். இந்தக் கடனைத் தீர்க்கும் பொருட்டு, எருதைப்பற்றி உபயோகமான யோசனைகளை அமனுக்குச் சொல்ல விரும்பினேன் - தும்பை விட்டுவிடாதே, அல்லது எதிலாவது கட்டிவை என்று... ஆனால் அவன் ஏதோ கெடுதல் இருக்கிறது என்று சந்தேகித்து மாட்டை ஓட்டிப்போக மறுத்துவிடுவானோ என்று பயந்தேன். ஆகவே வேறு யோசனை கூறினேன்: "நான் நேற்று பகல் பூராவும் கட்டாந்தரையில் படுத்திருந்தேனா, இப்போது இடுப்பு வலிக்கிறது. நீ கட்டிலை எடுத்துக்கொண்டு போ. அங்கே பக்கத்தில் நாணல்கள் மண்டியிருக்கின்றன. நிழலில் பாந்தமாக படுத்துக்கொள்."

இதற்குள் பண்ணையார் வீட்டுக்குள் போய்விட்டான். அமன் தொழுவத்துக்குச் சென்று மாட்டை அவிழ்த்து, கட்டிலை முதுகு மேல் சார்த்திக்கொண்டு வெளியே சென்றான்.

"அமன் - பாய் எங்கே?" என்று கேட்டான் திரும்பி வந்த பண்ணையார்.



"எருதை ஓட்டிக்கொண்டு போயிருக்கிறான் எஜமான்."

"ரொம்ப நல்லது. சபாஷ். காலை ஆகாரத்தை முடித்து விட்டாய் அல்லவா? வேலை தொடங்கலாம்..."

இவ்வாறு சொல்லி மண்வெட்டி, கோடரி, கைக்கோடரி ஆகியவற்றை என்னிடம் கொடுத்து என்னை வீட்டின் பின்புறம் கூட்டிச் சென்று, அநேகமாகத் தரையொட்ட வெட்டப்பட்டிருந்த இரண்டு முதிய பாப்ளார் மரங்களின் அடித்துண்டுகளை எனக்குக் காட்டினான்.

"எங்கே, உன் ஊக்கத்தைக் காட்டு பார்க்கலாம்! இந்த இரண்டு அடித்துண்டுகளையும் தோண்டி எடு. பனிக்காலத்தில் நீங்கள் குளிர்காயக் கணப்பு நெருப்புக்குப் பயன்படும். நேற்று அமன்பாய் - ஆண்டவன் அவனுக்கு நல்வாழ்வு அருள்வாராக - நன்றாகப் பாடுபட்டு உழைத்தான். இரண்டு பருத்த அடிமரத் துண்டுகளைப் பெயர்த்து எடுத்தான். மெச்சினேன் உங்களை, நேர்மையுள்ள பையன்கள்!"

இப்படிச் சொல்லிவிட்டு அவன் போய்விட்டான். அடிமரத் துண்டுகள் பற்றி அமன் என்னிடம் ஏன் சொல்லவில்லை என்று எனக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. மறந்திருப்பான், அவ்வளவுதான், என்று நினைத்தேன். அன்றைய மற்ற அனுபவங்கள் மிகப் பிரமாதமானவை ஆயிற்றே! "அட விருந்தாளிகள் வருவதற்குள் ஓர் அடித்துண்டைக் கெல்லி எடுத்து விடுகிறேன். ஒன்றும் கெட்டுப் போய்விடாது. அப்புறம் இளைப்பாறுவேன், தெவிட்டத் தெவிட்டச் சாப்பிடுவேன்!" என்று சொல்லிக்கொண்டேன். ஊக்கம் பொங்க வேலையில் முனைந்தேன்.

அடிமரத்துண்டு சிறியது, உளுத்துப்போனது. ஆனால் அதைச் சுற்றிலும் தரையை அகழ்ந்த பின் அதன் உள்ளார்ந்த சிறப்புக்கள் பலவற்றைக் கண்டுபிடித்தேன். அதற்குப் பல வலிய வேர்கள் இருந்தன, அவை தரைக்குள் கிட்டத்தட்ட ஒரு மைல் ஆழம் வரை சென்றிருந்தன. வேர்கள் மிகப் பருத்தவை, உறுதியானவை. ஒவ்வொன்றையும் வெட்டித் துணிப்பதற்குள் என் கண்கள் இருண்டன. இரண்டொரு தடவைகள் நான் என் காலை வெட்டிக் கொள்ளத் தெரிந்தேன். ஒரு வேரை நான் துணித்து முடித்ததும், பக்கத்தில் புதிய வேர் முளைத்துவிட்டதாகத்

தோன்றியது. பொசுக்கும் வெயிலில் எனக்கு வியர்வை ஆறாய்ப் பெருகிற்று. அடிமரத் துண்டுக்கோ முடிவையே காணோம். விருந்தாளிகளும் வருகிற பாடாய் இல்லை. நடுப்பகல் கழிந்ததும் பண்ணையார் கொழுப்பு தடவிய பாதி ரொட்டியை எடுத்துக் கொண்டு வந்தான்.

“வேலை செய்கிறாயா? சபாஷ், சபாஷ்! இந்தா, சாப்பிடு, ருசியான பண்டம்...”

ரொட்டியைக் கண்டதும் எனக்கு ஓநாய்ப் பசி எடுத்தது. ஆயினும் அமனின் யோசனையை நினைவுபடுத்திக்கொண்டேன். கண்ட சப்புச்சவற்றால் வயிற்றை நிரப்புவானேன்? அப்புறம் சரியான சாப்பாட்டுக்கு வயிற்றில் இடம் இராது.

“நன்றி பண்ணையார் ஐயா, என்னவோ இன்னும் பசிக்கவில்லை. வயிறு நிறைந்திருக்கிறது” என்றேன்.

பண்ணையார் நிரம்ப வற்புறுத்தி உபசரிக்கவில்லை.

“ஆமாம், நீ இன்னும் இளவட்டம். சக்தி தானே ஊறிப் பொங்குகிறது. ஜீவரசம் அபரிமிதம்!” என்றான்.

அவன் ரொட்டியை எடுத்துக்கொண்டு போய்விட்டான். நான் வாயில் ஊறிய நீரை விழுங்கிவிட்டு, இன்று இந்த விருந்தாளிகள் நேரம் ஆக்குகிறார்கள். ஆனாலும் இந்த மாதிரிச் சுவையுள்ள விருந்தை விட்டுவிட்டு எங்கும் போய்விட மாட்டார்கள் அவர்கள். அட அப்படியே ஒருவரும் வராவிட்டாலும் கடன் வசூலுக்கு நாங்கள் போவோமே. இல்லாவிட்டால் நாங்களே எங்கேனும் விருந்துக்குப் போகலாமே... இவ்வாறு எண்ணிப் பாழும் அடிமரத் துண்டோடு தொடர்ந்து போராடினேன். எப்படியோ சிரமப்பட்டு அதை ஒருவிதமாகப் பிடுங்கி எடுத்தேன். பொழுது சாயத் தொடங்கிற்று. ஆனாலும் விருந்தாளியைக் காணோம். எங்கோ ஏதோ கோளாறு இருப்பதை அப்போதுதான் முதன்முதலாக உணர்ந்தேன். அமன் என்னிடம் சொன்னது எல்லாம் பொய்தானா? இருக்க முடியாது. என் வயிறு வாடியது. கைகள் கோடரியைப் பிடிக்கவே சிரமப்பட்டன. ஆயினும் எதுவும் செய்வதற்கில்லை. நான் இரண்டாவது அடிமரத்துண்டைத் தோண்டிக் கெல்லுவதில் முனைந்தேன்...

அது எளிதில் வெட்டிக் கெல்லக்கூடியதாக இருந்தது.



அஸ்தமன வேளைக்குள் நான் அதை முடித்துவிட்டேன். எனக்கே இது ஆச்சரியமாய் இருந்தது. நடக்க மாட்டாமல் நடந்து வீட்டுக்குப் போய், திராணியின்றிப் பொத்தென்று சாய்ந்தேன். அரை மணி நேரம் பொறுத்து அமன் வந்து சேர்ந்தான். முதுகில் கட்டில். அரைகுறையாகக் கசக்கி அலசிய துணி போன்ற அழுக்குச் சாம்பல் நிறம். எஞ்சிய பலத்தை எல்லாம் திரட்டித் தும்பை இறுகப் பிடித்திருந்தான்... பேசாமல் என்னைக் கடந்து தொழுவத்துக்குப் போனான். வழியிலேயே கட்டிலைக் கடாசிவிட்டு மாட்டைத் தொழுவத்தில் கட்டினான்.

அமன்தான் முதலில் என்னிடம் சரடு திரித்தான் - அவனிடம் பொய் சொல்வதாக முதலில் நான் நினைக்கவே இல்லையே - இதன் பலனை இருவரும் நன்றாக அனுபவித்துவிட்டோம், என்றாலும் எனக்கு ஏதோபோல் இருந்தது. தவிரவும் அந்தப் பாழாய்ப்போகிற எருது என்னைக் காட்டிலும் எவ்வளவோ அதிகமாக அமனைப் பாடு படுத்திவிட்டது: என் யோசனைப்படி அவன் கட்டிலையும் எடுத்துப் போயிருந்தான் அல்லவா? அதனால். கட்டிலை வைத்துவிட்டு மாட்டைக் கவனித்தால் கட்டிலை எவனாவது திருடிக் கொண்டு போய் விடுவான். எருது எக்கேடும் கெட்டுப் போகட்டும் என்று விட்டுவிட்டுக் கட்டிலைக் காப்பாற்றினால், அது எங்கேனும் கண்காணாத இடத்துக்குப் போய்விடும். அப்புறம் அதைக் கண்டுபிடிக்க முடியாது. ஆகவே, பாவம் அமன் கட்டிலும் முதுகுமாக நாள் பூராவும் மாட்டின் பின்னே ஓடியிருந்தான். அவன் தோளில் தோல் முழுவதும் வழன்று போயிருந்தது. ஒரே எரிச்சலும் துன்பமும் பொங்கும் தோற்றத்துடன் அவன் உட்கார்ந்தான். எனவே, கேலிப் பேச்சால் எங்கள் உறவைச் சீர்படுதத நான் முயன்றேன்.

“என்ன, களைத்துப் போனாயா, அமன் - பாய்?” என்று கேட்டேன். அவன் பேசாதிருந்தான். “நானுந்தான்... உன் விருந்தாளிகள் என் எருதைவிட மேல் அல்ல.... சுவையான பண்டங்கள்தாம் இன்று எதனாலோ குறைவாக இருந்தன!” என்று சிரித்தேன். அமனோ என்னை நிமிர்ந்துகூடப் பார்க்கவில்லை. “என்ன பேசாதிருக்கிறாய்? இரும்புக் கம்பிவலைக் கட்டிலாய் இல்லையே, அதற்கே நீ நன்றி செலுத்த வேண்டும், ஆண்டவனுக்கு!” என்றேன். இதைக் கேட்டதும் அவன் என்னை ஏறிட்டுப் பார்த்தான். அவன் கண்களில் வன்மம் அனல் வீசியது.

"வாயை மூடு!" என்று கம்மிய குரலில் சொன்னான்.

நான் மனத்தாங்கல் கொள்ளவில்லை.

"டேய், அமன்! இந்தச் சிடுசிடுப்பை விடு! நீயும் நானும் இரண்டு கண்கள் போல - ஒன்று இல்லாமல் மற்றது ஒளியைக் காண முடியாது! சமாதானமாய்ப் போவோமா? நாம் இருவருமே குற்றவாளிகள்! கேட்டாயா, அமன்?" என்றேன்.

அவன் ஓரளவு படிந்து தலையைக்கூட அசைத்தான். ஆயினும் முன்போலவே என்னைப் பார்க்காதிருக்க முயன்றான்.

"இங்கிருந்து போய்விட வேண்டும்" என்று முணுமுணுத்தான்.

"ஆனால் நம்மிடம் பணமோ உணவோ, எதுவும் இல்லையே!"

"அதனால் என்ன?... வழியில் பட்டினியால் செத்துப் போய்விட மாட்டோம்... இங்கே மாத்திரம் என்ன பிரமாதச் சாப்பாடு கிடைக்கிறது!..."

"ஆமாம், வயிறு புடைக்கத் தின்னக் கிடைப்பதில்லைதான்!" என்று மறுபடி சிரித்தேன். அமன் மூக்கை உறிஞ்சினான். "சரி, உன் யோசனைப்படியே செய்வோம். ஆனால் வெறுங்கையோடு போய்விடுவதா?" என்று கேட்டேன்.

"உன் நினைப்புதான் என்ன? கூரையைப் பெயர்ப்பதாகவா, பண்ணைவீட்டைச் சூறையாடுவதாகவா?"

"சூறை என்னவோ ஆட மாட்டேன்தான். ஆனால் செய்த வேலைக்கு ஊதியம் நமக்குக் கிடைக்க வேண்டும்... எதை எடுத்துப் போவது என்பதே கேள்வி."

யார் என்ன சொன்னாலும் சரி, முல்லாவும் மௌல்வியும் எனக்கு நல்ல பாடம் கற்பித்திருந்தார்கள். "சொந்தக்காரன் கண்காணிப்பு இல்லாதவை எல்லாம் நஸிருத்தீனுக்குச் சொந்தம்" என்ற நமது பழமொழி பிரசித்தமானது. இப்போது நான் பொருள்களை அந்த நோக்கிலேயே பார்க்கலானேன். "பண்ணையார் ஒரு வார்த்தைகூடச் சொல்லி எச்சரிக்காமல் தன் பாழும் எருதை நம் தலையில் கட்டவில்லையா? எனவே அவனுடைய சொத்து எதையேனும் கவர்ந்துகொள்வதன் மூலம் நாம் நியாயத்தையே மறுபடி நிலைநாட்டுவோம்." என்று அமன் மனத்தில் பதிய வைத்தேன். முடிவில் அமன் இசைந்தான். எதை எடுத்துச் செல்வது



என்று தீர்மானிப்பது பாக்கி இருந்தது. கண்ட சப்புச் சவற்றை எடுத்துப் போவதிலும் அர்த்தம் ஒன்றும் இல்லை அல்லவா? திடீரென்று ஓர் அருமையான கருத்து என் மனத்தில் உதித்தது. புள்ளியிட்ட எருதையே வெட்டி எடுத்துப் போகலாமே!

இதை நான் அமனிடம் சொன்னதும் அவன் கண்கள் கூட ஒளி சுடர்ந்தன - என் யோசனை அவனுக்கு அவ்வளவு மகிழ்வு ஊட்டியது. அவனும் பகல் முழுவதும் இவ்வாறே ஆசைப் பட்டான், தனக்குத்தானே இதை ஒப்புக் கொள்ளமட்டும் தயங்கினான் என்று நினைக்கிறேன். "அருமை! இந்த வகையில் நாம் பண்ணையாரையும் தண்டிப்போம், எருதையும் பழிவாங்குவோம். அதோடு ஏராளமான இறைச்சியும் நமக்குக் கிடைக்கும்! அதை விற்றுப் பெறும் பணத்தை வைத்துக்கொண்டு வீடு போய்ச் சேருவோம்..." - அமன் ஒரேயடியாகக் களிப்பும் குதூகலமும் அடைந்தான். எருதுக்காகவும் கட்டிலுக்காகவும் அவன் என்னை முற்றிலும் மன்னித்துவிட்டான் என்று தோன்றியது.

நாங்கள் இறைச்சியைப் பற்றி மனக்கோட்டை கட்டலானோம். எங்கள் பட்டினிக் கற்பனையில் அது ஒரு சமயம் வெந்ததாகவும், மறுசமயம் வதக்கியதாகவும், ஒரு சமயம் சூடானதாகவும் மறு சமயம் குளிர்ந்ததாகவும் காட்சி அளித்தது... இரவுச் சாப்பாட்டுக்கு பரங்கிக் காய் போட்ட பால் கஞ்சி கொண்டுவரப்பட்டதும் ஏமாற்றத்தின் புளிப்பு எங்களுக்கு உறைத்தது. எங்கள் முகங்களில் தென்பட்ட ஏமாற்றத்தைக் கண்ட பண்ணையார் பரங்கிக் காயின் அற்புத குணாதிசயங்களைப் பாராட்டி வருணிக்கத் தொடங்கி, பரங்கிக் காய் தின்றவன் நரகத்துக்குப் போகவே மாட்டான் என்று அழுத்தமாகக் கூறி முடித்தான். எனவே அந்தக் கஞ்சியைக்கூட நாங்கள் ஒரு துளி மிச்சம் வைக்காமல் குடித்துத் தீர்த்தோம்.

இரவுச் சாப்பாட்டுக்குப் பிறகு பண்ணையார் வெளிவாயிற் கதவை மூடிப் பூட்டிவிட்டு வீட்டுக்குள் போய்விட்டான். நாங்கள் எங்கள் இடங்களில் படுத்து, தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டே உறங்கிப் போனோம். ஆனால் வயிற்றுக் கோளாறு அமனை எழுப்பிவிட, அவன் என்னை உசுப்பிவிட்டான். கிட்டத்தட்ட நள்ளிரவு ஆகியிருக்கும் என்று தோன்றியது. நாங்கள் எழுந்து நுனிக்கால்களால் நடந்து தொழுவத்துக்குப்

போனோம். அமன் அச்சத்துடன் சுற்றுமுற்றும் கண்ணோட்டினான். ஒவ்வொரு மூலையிலும் பதிபோட்டுக் காத்திருக்கும் நிழல் தென்படுவதுபோல அவனுக்குப் பிரமை உண்டாயிற்று. நான் விட்டாற்றியாக இருந்தேன். என்ன ஆனாலும் இமாமின் கழுதையை வேலை தீர்த்து அனுபவப் பட்டிருந்தேனே! பஞ்சு வைத்துத் தைத்த போர்வை போன்று கனத்துப் பருத்த கருஞ்சாம்பல் நிற மேகத்தின் பின்னே மறைந்தது சந்திரன். நாங்கள் தொழுவிற்குள் புகுந்தோம். தட்டித் தடவிப் புள்ளி மாட்டை நெருங்கி, அது கலவரம் அடைந்து கத்தாமல் இருப்பதற்காகப் பலவிதக் கொஞ்சல் மொழிகளைக் கபடமாகக் கிசுகிசுத்தோம். ஆனால் பொதுவாகவே அது மௌன விலங்கு. வெளியே கூட அது சொற்களில் அல்ல, செயலிலேயே பிடிவாதம் காட்டியது. அமன் கோடரியை என்னிடம் கொடுத்தான். நான் அதன் அடியால் மாட்டின் உச்சி மண்டையில் ஓங்கி ஒரு போடு போட்டேன். அது அப்படியே தரையில் சாய்ந்துவிட்டது.

விந்தையான சேதி! இந்த மாடு என்னைப் படாத பாடு படுத்தியிருந்தது. எனவே என் அடியால் அது தாக்குண்டு விழுந்ததும் பழிதீர்த்த இனிய மனநிறைவு எனக்கு ஏற்பட்டிருக்க வேண்டும். எனக்கோ அம்மாதிரி எந்த உணர்ச்சியும் உண்டாக வில்லை. மாறாக என்னவோ போல் இருந்தது. இந்தப் பைத்தியக்கார மிருகத்தின் மேல் எனக்கு இரக்கம் வந்துவிட்டது என்று சொல்வதற்கில்லை. இனி இந்த மாடு திடலில் ஓடித் தொல்லை கொடுக்காது என்ற எந்த எண்ணத்தால் எல்லாச் சந்தேகங்களையும் போக்க முயன்றேனோ அந்த எண்ணத்தினாலேயே மனது மிகவும் சங்கடப்பட்டது. அமனுக்கோ, மாடு விழுந்த சத்தந்தான் கலவரம் உண்டாக்கிற்று. இருட்டில் உற்றுக் கேட்டவாறு அலைபாய்ந்தான். ஆனால் ஒரே நிசப்தம் நிலவியது.

இன்னும் கொஞ்ச நேரம் நாங்கள் நின்றோம். பின்பு நான் அமனிடம் கத்தியை வாங்கிக்கொண்டேன். அது இந்தக் காரியத்துக்கு ஏற்ற கத்தி. அமனுடைய தகப்பன் கத்திகள் செய்பவனாக இருந்தது வீண் போகவில்லை. கத்தியைத் தொடையில் சில தடவைகள் தேய்த்துக்கொண்ட பின் மாட்டின் தலையில் ஓங்கிக் குத்தினேன். அது கால்களை உதைத்தவாறு துடித்து இறந்து போயிற்று (கோடரிப் பின்பக்கத்தால் நான்



கொடுத்த அடி அதை உணர்விழக்க மட்டுமே செய்திருந்தது.) மாட்டின் உடலை வகிரவும், தோலை உரித்து எடுக்கவும் இருட்டில் எங்களுக்கு எப்படி முடிந்தது என்பது இப்போது எனக்கே புரியவில்லை. எலும்புகள் இல்லாத நல்ல இறைச்சி ஒன்றரை மணங்கு போலப் பொறுக்கி எடுத்து, தொழுவிலிருந்த பிண்ணாக்கு மூட்டையைக் காலி செய்து அதில் போட்டுக் கட்டினோம்.

பண்ணை வீட்டிலிருந்து வெளியேறுவது இப்போது பாக்கி இருந்தது. வாயில் கதவு பூட்டப்பட்டிருந்ததால் வெளியே போக ஒரே வழி சுற்றுச்சுவரை ஒட்டியிருந்த தொழுவத்தின் முகட்டில் ஏறிக் குதிப்பதுதான். எங்களில் ஒருவன் மற்றவனுடைய உதவியால் முகட்டின்மேல் தொற்றிக்கொள்வது, அப்புறம் மாமிச மூட்டையையும் தோழனையும் கயிற்றைப் பற்றித்தூக்கி ஏற்றிவிடுவது என்று தீர்மானித்தோம். முதலில் ஏறுபவன் யாராயிருந்தாலும் ஒன்றுதான் என நான் நினைத்தேன். அமனோ தானே முதலில் ஏறுவதாக விடாது வற்புறுத்தினான். அவன் சொன்ன தோரணை எனக்கு எச்சரிப்பு ஊட்டியது. ஆனால் நான் அதைக் காட்டிக்கொள்ளவில்லை.

நிலா மறைந்துவிட்டது. வெளியே கும்மிருட்டு. நான் சுவரோரமாக நின்றேன். அமன் என் தோள்மேல் ஏறி முகட்டின் மேல் எளிதாகத் தொற்றிவிட்டான்.

"ஊம், சீக்கிரம்!" என்று உரக்கச் சீறினான். மாமிச மூட்டையுடன் கட்டியிருந்த கயிற்றின் மறு நுனியை நான் அவனிடம் எறிய வேண்டியிருந்தது. வஞ்சக் களிப்பும், அனேகமாக வெளிப்படையான வெற்றிக் குதூகலமும் அவன் குரலில் தொனித்ததைக் கேட்டு நான் விஷயத்தைச் சட்டெனப் புரிந்து கொண்டேன், பண்ணையாரை மட்டுமே அல்ல, என்னையும் சேர்த்துப் பழிவாங்க அவன் திட்டமிட்டிருந்தான். நான் இறைச்சி மூட்டையை அவனிடம் கொடுத்ததும் அவன் அதை எடுத்துக் கொண்டு கம்பி நீட்டிவிடுவான். என்னைத் தூக்கிவிடுவதாக அவனுக்கு எண்ணமே இல்லை. அவனுடைய நம்பிக்கைத் துரோக நினைவு எனக்கு உறுதிப்பட்டுவிட்டது ஆகையால் அநேகமாக உரக்கத் திட்டத் தெரிந்தேன். "பொறு, பொறு, காட்டுகிறேன்!"

மூட்டையை விரைவாக அவிழ்த்து இறைச்சித் துண்டுகளை அதிலிருந்து மளமளவென்று வெளியே எறிந்தேன்.

"அங்கே நீ என்னதான் செய்து கொண்டிருக்கிறாய்?" என்று கூரைமேலிருந்து சீறினான் அவன்.

"இதோ..." - அப்போதுதான் நான் சாக்கு நுனிகளில் கயிற்றைக் கட்டியிருந்தேன். அப்புறம் சாக்குக்குள் நுழைந்துகொண்டேன். வார் போலத் துளையில் கோத்த கயிற்றின் மறு நுனியை மேலே நீட்டி, "பிடித்து இழு!" என்று கத்தினேன்.

அமன் பொறுமையின்றித் துடித்துக் கொண்டிருந்தபடியால் என் குரல் விந்தையாக ஒலித்ததைக் கவனிக்கவில்லை. அவன் கயிற்றை இழுத்தான். மூட்டை மேலே தூக்கப்பட்டது. நான் தலைகீழாகத் தொங்கியவாறு சுவற்றில் இடிபட்டுக்கொண்டு மேலே போனேன். நான் சுமார் ஒன்றரை மணங்கு எடை இருந்தேன் - வெளியே எறிந்த இறைச்சி போலவே. ஆகையால் அமன் ஒன்றும் சந்தேகிக்கவில்லை. மூட்டையை இழுத்து முகட்டின்மேல் ஏற்றியபின் அவன் சற்று இளைப்பாறினான். அப்புறம் குனிந்து - என் காதருகே - கத்தினான்:

"என்ன, மாட்டிக்கொண்டாயா இப்போது? செம்மறியாடுகளுக்கும் எருதுக்கும் சேர்த்து உன் கணக்கு தீர்ந்தது! பண்ணையாருக்கு இப்போது பதில் சொல்லிப்பார், தந்திரக்காரப் பயலே!"

அட கீழ்மகனே! எனக்கு உண்டான ஆத்திரத்தில் சாக்குக்கு உள்ளிருந்து வெளியே பாய்ந்து வரப் பார்த்தேன். ஆனால் அப்படிச் செய்வது எனக்கே கெடுதலாக முடியும் என்று எண்ணினேன். தவிர இன்னும் கடுமையாக இவனைப் பழி வாங்குவேன்... அமன் முக்கி முனகியவாறு மூட்டையை முகட்டின் விளிம்புக்குத் தூக்கிச் சென்றான். கயிற்றைப் பிடித்துக்கொண்டு சுற்றுச்சுவருக்கு மறுபுறம் என்னை இறக்கினான். பிறகு அவன் அருகே குதித்தது என் காதில் பட்டது. அவன் மூட்டையைத் தூக்கி, படுசிரமத்துடன் என்னை முதுகில் வைத்துக்கொண்டு நடக்கலானான்... விரைவில் எனக்கு மூச்சு முட்டத் தொடங்கிற்று. அமனின் முதுகுமேல் சவாரி செய்கிறோம் என்ற உணர்வுதான் எனக்குத் தெம்பு அளித்தது. அவனோ, அடிக்கடி நின்று நீண்ட பெருமூச்சுடன் மூட்டையைத் தரையில் வைப்பதும் மறுபடி தூக்கிச் சுமப்பதுமாக அரும்பாடுபட்டு நடந்தான். இந்த மாதிரி யுகக் கணக்கில் நாங்கள் நகர்ந்து கொண்டிருப்பதுபோல எனக்குத்



தோன்றியது. அமனுக்கும் இப்படியே தோன்றியிருக்க வேண்டும். முடிவில் கிழக்கு வெளுக்கத் தொடங்கிவிட்டது என்பதைச் சாக்கின் ஊடாக நான் கண்டுகொண்டேன். காலை ஒலிகள் கேட்கலாயின. ஏதோ ஒரு பட்சி விழித்தெழுந்து களிபொங்கச் சீழ்க்கை அடித்தது. புல்லில் காற்று சரசரத்தது. அமனின் பாதங்களுக்கு அடியில் புழுதி புஸ் புஸ் என்று மென்மையாக மூச்சுவிட்ட ஒலி புற்களின் சரசரப்பில் அமிழ்ந்து விட்டது. அருகே நெருங்கும் கிராமத்தின் ஓசைகள் காதில் படுவதுபோல அப்புறம் எனக்குத் தோன்றியது. எங்கோ 'ளொள்'ளெனக் குலைத்தது ஒரு நாய்... குரைப்பு நெருங்கிவந்தது... இதோ அது எதிர் கொண்டு ஓடி வந்தது... நாயின் விட்டு விட்டு இரைக்கும் மூச்சொலி என் செவிகளுக்கு எட்டியது. அமன் நின்றுவிட்டான். நாய் காரணமாக என்று நான் புரிந்துகொண்டேன். நாய் சிந்தனையில் ஆழ்ந்திருந்தது போலும். அமன் ஓர் அடி எடுத்து வைத்தான் - நாய் உடனே பேய்க்குரைப்பு குரைத்தது! அக்கணமே வேறு நாய்கள் பதிலுக்குக் குரைத்தன. வர வர நாய்களின் குழுக் குரைப்பு தீவிரமடைந்து வலுத்தது. நாய்கள் எல்லாப் புறங்களிலும் எங்களைச் சூழ்ந்து கொண்டுவிட்டன போல் இருந்தது. அமன் குலை பதறிப்போனான் என்பது தெரிந்தது. அமனைச் சொல்வானேன், என் நிலைமையைக் கற்பனை செய்து பாருங்கள்! ஒரு மனிதனைச் சாக்குப்பைக்குள் அடைத்துக் கட்டி நாய்க் கும்பலை அவன்மேல் உசுப்பிவிடுவதைக் காட்டிலும் பயங்கரமான தண்டனையைத் திட்டமிடவே முடியாது! நாய்கள் அமனைக்காட்டிலும் அதிக ஊகத்திறன் உள்ளவை. எனவே, சாக்குக்குள் இருப்பது மாட்டிறைச்சி அல்ல, நான்தான் என்பதை அவை அறிந்திருக்கும். இதுதான் எல்லாவற்றிலும் பயங்கரமான விஷயம். ஒருவேளை இதை அறிந்ததால் அவை ஆத்திரம் அடைந்துவிட்டனவோ?... நான் உடனே கத்தியிருப்பேன். ஆனால் அமன் திகில் கொண்டு மூட்டையைக் கீழே போட்டுவிடுவானோ என்று பயந்தேன். போட்டால் என் கதி அதோகதிதான். ஆனால் அல்லாவின் திருவுள்ளம் வேறாய் இருந்தது: அமன் நடந்தான், நாய்கள் பாய்ந்தன, ஒன்று சாக்கையும் என் காலையும் கவ்வியது! அப்போது நான் எச்சரிக்கையை அறவே மறந்து "காப்பாற்றுங்கள்! மூட்டையை இன்னும் கொஞ்சம் உயர்த்து, மடையா!" என்று வீரிட்டேன்.

அமன் நிலை கலங்கிப் போனான். புதிதாக அறுத்த ஒன்றரை

மணங்கு இறைச்சி திடீரென்று உங்கள் தோள்களின் பின்னிருந்து பேசினால் நீங்களுந்தாம் கதிகலங்கிப் போயிருப்பீர்கள். என் நல்ல காலம், அவன் ஒரேயடியாகக் குழம்பிப்போயிருந்தபடியால் மூட்டையைத் தரையில் போடாமல் உண்மையிலேயே உயர்த்தித் தூக்கிக்கொண்டான். என் குரலைக் கேட்டு நாய்களுங்கூட மலைத்து நின்றுவிட்டன. பேசும் மூட்டைகளை அவையும் முன்பு எதிர்ப்பட்டதில்லை போலும்.

"மூட்டையைக் கட்டு அவிழடா, அறிவிலி!" என்று அமனிடம் கத்தினேன்.

அவன் கீழ்ப்படிந்து மூட்டையை இறக்கிக் கட்டு அவிழ்த்தான். நான் உஸ் அப்பா என்று முனகியவாறு வெளி வந்ததும் அவன் பிதுங்கும் விழிகளால் என்னைப் பார்த்தான்.

"இவனா?... அப்படியானால் இறைச்சி எங்கே?" என்று மதி மருண்டவன் போல மறுபடி மறுபடி முனகினான்.

அவன் தோற்றம் வேடிக்கையாய் இருந்தது. எனவே, நான் சிரிக்கும் நிலையில் இல்லாவிட்டாலும் வாய்விட்டுக் கடகடவென்று சிரித்தேன்.

"இறைச்சி எங்கேயா? தின்றுவிட்டேன்! எப்படிப் பருத்துப் போயிருக்கிறேன், தெரியவில்லையா?" என்றேன்.

அவனால் இன்னும் சுயநிதானத்துக்கு வர முடியவில்லை. நாய்களாலுந்தான். இத்தகைய காட்சியைக் காண அவற்றுக்கு வாய்த்ததே இல்லை; ஒரு மனிதன் இருந்த இடத்தில் இரண்டு பெயர் தோன்றுவது என்றால்? அவை மௌனமாகக் கலைந்து ஓடிவிட்டன.

நான் லேசாக நொண்டியபடி வழி நடந்தேன். அமன் என் பின்னே தளர் நடை போட்டான்...



### அத்தியாயம் 11

# விண்மீன்களுக்குச் சொந்தக் கதைகள் உண்டு

அமன் சுதாரித்துக் கொள்ளச் சிறிது நேரம் பிடித்தது. இப்போது அவன் என் அருகாக நடந்தான். வன்மத்தால் அவன் பொருமுவதைக் கண்டேன். பாதையோரம் வளர்ந்திருந்த முதிய செர்ரி மரத்தைக் கடந்து செல்கையில் அவன் பெரிய கிளை ஒன்றை முறித்து எடுத்துக்கொண்டான். பெரிய சவுக்குபோல் இருந்தது அது. தனது நேர்த்தியான கத்தியால் அதன் இரு நுனிகளையும் கூராகச் சீவிக்கொண்டான் அமன். "இந்தக் கம்பு என் உடம்பைத் தடவி விளையாடல் இருக்க வேண்டுமே" என்று எண்ணி, நானும் தற்காப்புக்கு ஆயுதம் வைத்துக்கொள்ளத் தீர்மானித்தேன். வாகான எதுவுமே அக்கம் பக்கத்தில் இல்லை. முடிவில் ஆப்ரிக்காட் கன்று ஒன்றை முறித்து எடுத்துக் கொண்டேன்.

"டேய், அருமை நண்பா, உன் கத்தியைக் கொஞ்சம் கொடேன். கம்பைச் சீவிக்கொண்டு தருகிறேன்" என்றேன்.

"கத்தியை ஆபாசப்படுத்திவிடுவாய், அசிங்கம் பிடித்த பயலே!" என்றான் அமன்.

"நானா அசிங்கம் பிடித்தவன்? இத்தனை நாட்களாக உன்னோடு சுற்றுகிறேனே, ஒரு தரமாவது நீ குளித்து நான் பார்க்கவில்லை. தண்ணீரைக் கண்டு கோழியைவிட அதிகமாகப் பயப்படுகிறாய் நீ! ஓடை நீரை முகத்தில் லேசாகத் தெளித்துக் கொள்வதோடு சரி. பெரும்பாலும் அது கூடச் செய்யாமல் தாண்டிப் போய்விடுகிறாய். லாகிரிப் பழக்கம் உள்ளவன்போல!"

"வாயை மூடு, சொல்லிவிட்டேன்!"

"நான் எதற்காக வாயை மூட வேண்டும்? நான் அசிங்கம் பிடித்தவன் என்றால் நீ யாராம்? சமீபத்தில்தான் நான் ஆற்றில்

நீந்திக் குளித்தேன், துணிகளை நன்றாகத் துவைத்தேன், நீயோ? போன வருஷ அழுக்கை இன்னமும் சுமந்து திரிகிறாய்!"

"வாயை மூடு என்றேனே!"

"இவன் சொன்னானாம்! ஹொ-ஹோ! கேளுங்கள், முஸல்மான்களே!"

"இதோ கம்பால் நாலு வாங்கு வாங்கினேனானால் எப்படி இருக்கும் தெரியுமா?... நீ அசிங்கம் பிடித்தவன் அல்ல, இன்னும் மோசம். ஆபாசப் பிறவிகளில் எல்லாம் கடைகெட்ட பிறவி நீ! நீ தொழுகை படித்தால் அந்த அழுக்கைப் போக்க விண்ணுலகத்தவர்கள் மூன்று தரம் இடப்புறம் துப்புகிறார்கள்! பாழாய்ப்போகிற சைத்தானே!"

"நான் சைத்தானாக்கும். இருந்துவிட்டுப் போகிறேன். நீயோ கேடு கெட்ட சைத்தானை விட அழுக்கடைந்த பாதகன். துரோகி. நண்பனை விற்றுவிட விரும்பினாய்!"

"உன்னை விற்கவா? ஒருவரும் வாங்க மாட்டார்களே!"

"பொறு, பொறு. நான் இன்னும் உன் கணக்கை முழுதாகத் தீர்த்துவிடவில்லை!"

"அடே-டே? எதற்காகத் தாமதிக்கிறாய்?"

"தீர்க்கிறேன், அவசரப்படாதே. நிறைய நேரம் இருக்கிறது."

"பேடிப் பயலே!"

"எங்கே, இன்னொரு தரம் சொல்லு!"

"இன்னும் பத்து தரம் சொல்லுவேன்: பேடி! பேடி! ஊம், என்ன செய்துவிடுவாய்?"

"என்ன செய்வேன் என்பதை இதோ காண்பாய். ஆபாசமே! என்னைத் தண்டனை பெற விட்டு விட்டு இறைச்சியுடன் கம்பி நீட்டப் பார்த்தாயே! இந்த அழகில் என்னைச் சைத்தான் என்கிறாய், வெட்கம் இல்லாமல்."

"சந்தேகமில்லாமல் நீ சைத்தான்தான்!... தீர்க்கதரிசி தாமே என் கனவில் வந்து இப்படிச் செய்யச் சொன்னார், துன்பங்களிலிருந்து நான் விடுதலை பெறுவதற்கு."

"ஊ-ஊம்? தீர்க்கதரிசி தாமேயா? கனவிலா? தூங்கியது அவரா, நீயா? என்னடா நீ அவரிடம் விவரமாகக் கேட்காமல் விட்டு விட்டாய்! பார், எவ்வளவு பெரிய தவறு செய்துவிட்டாய் என்று! இறைச்சியைச் சுமப்பதாக எண்ணினாய். என்ன விலைக்கு அதை விற்கலாம் என்று கணக்கிட்டும் விட்டாய். உண்மையிலோ, மூட்டையில் இருந்தேன் நான்! ஹ-ஹ-ஹா!"

"அட சும்மா இரு என்கிறேன்!"

"ஹொ-ஹோ-ஹோ! இறைச்சி பேசத் தொடங்கிற்று... ஹ-ஹா-ஹா!... கிலியால் உன் நாக்கு வாய்க்கு வெளியே பிதுங்கி விட்டது..."

கோபத்தால் உடல் பதற அமன் கம்பை ஓங்கி என்மேல் வீசினான். நான் துள்ளி விலகி, அவனை விடாது கிண்டல் செய்தேன்.

"இறைச்சியை விற்று அந்தப் பணத்தால் ஜமீன்தார் மகன் போல் ஆடம்பரமாக உடை அணிந்துகொண்டதாக அதற்குள் நீ மனக்கோட்டை கட்டியிருப்பாயே! சொல்லு, என்னென்ன வாங்கினாய்?" - கடைசியாக, நொந்த புண்ணில் நான் கோல் பாய்ச்சிவிட்டேன் போலிருக்கிறது.

சீற்றத்தால் புரையேற, "அட பயலே" என்று உறுமி, மறுபடி கம்பும் கையுமாக என்மேல் பாய்ந்தான் அமன். நானோ மறுபடி துள்ளி விலகிவிட்டேன். அவன் விழிகள் கண்குழிகளிலிருந்து ஒரேயடியாகப் பிதுங்கி, இதோ தெறித்து விழுந்துவிடும்போல் இருந்தன. கடைசியில் அவனுக்குப் பேச்சு கிளம்பிற்று. "உனக்கு என்ன, கந்தைப் பயலே! நீ எந்தப் பஞ்சைக் கோலத்தில் வேண்டுமானாலும் வீடு திரும்பலாம். எனக்கோ, ஜனங்கள் முன்னே தலைகுனிவு ஏற்படும்! எங்கேயோ போனான், வேலை செய்தான், சம்பாதித்து என்னடா என்றால் கந்தலும் கிழிசலும் தான் என்பார்களே எல்லோரும்! ஐயோ... உன்னைச் சந்திக்கும் தண்டனையை ஆண்டவன் எதற்காக எனக்கு விதித்தான்! நேர்மையாக உழைத்து நாலு காசு சம்பாதித்திருப்பேன். புது மேலங்கியும் நரி மயிர்த்தோல் தொப்பியும் வாங்கிக் கொண்டிருப்பேன்.... நீ மட்டும் இல்லையானால் இதற்குள் ஒரு செம்மறி எனக்குக் கிடைத்திருக்கும். செம்மறி உள்ளவன் நாளடைவில் குதிரை வாங்கி விடுவான், குதிரை உள்ளவன் பின்பு ஒட்டகம் வாங்கிவிட முடியும்..."

அவன் உண்மையான துயரம் பொங்க ஓலமிட்டது எனக்குப் பேரானந்தமாய் இருந்தது.

"ஐயோ பாவம்! அப்பாவி! உன்னைக் கொள்ளையடித்து விட்டார்கள் மற்றவர்கள்! பஞ்சை ஆக்கிவிட்டார்கள்! போனால் போகிறது, நீ கவலைப்படாதே. கழைக்கூத்தாடியிடம் சீடனாகச் சேர். அவன் உனக்கு வெல்வெட் நிஜார் தைத்துக் கொடுப்பான். இல்லாவிட்டால் கரி தள்ளுபவனாக வேலையில் அமர். நெருப்பு அருகே மேலங்கியும் வேண்டாம், தொப்பியும் தேவையில்லை... செம்மறியாடுகளைப் பொறுத்தவரையில்..."

அமன் எருதுபோல எக்காள முழக்கம் இட்டு என்மேல் பாய்ந்தான். ஆனால் நான் திரும்பி ஓடித் தொலைவில் நின்று கொண்டு பேச்சைத் தொடர்ந்தேன்:

"நான் சொல்வதைக் கேள், அமன் அண்ணே. செம்மறியாடுகளையும் குதிரைகளையும் ஒட்டகங்களையும் பொறுத்தவரையில், அவை உனக்கு எதற்காக? அவற்றுக்குத் தீனி போட்டே உனக்குக் கட்டாதே! மேற்கொண்டு தொழுவம் வேறு கட்ட வேண்டும் அவற்றுக்காக. சந்தை நாட்களில் கால்நடைச் சந்தைக்குப் போ. அதுதான் மேல். அது உன் தொழுவம், அதில் உள்ள கால்நடைகள் எல்லாம் உனக்குச் சொந்தமானவை என்று எண்ணிக்கொள். இது குறைவாகப் பட்டால் ஸர்க்கஸுக்கும் போ. யூபாத்தவின் ஸர்க்கஸ் தெரியும் அல்லவா? டிக்கட்டு வாங்க உன்னிடம் பணம் இருக்காது, ஆனால் நீ இடுக்கு வழியே பார்... ஒட்டகம் போதாது என்றால் யானையும் உன்னுடையதுதான் என்று நினைத்துக்கொள்! காவல்காரனிடம் மட்டும் எச்சரிக்கையாக இரு - அவனுடைய சாட்டை எப்படிப்பட்டது என்பது உனக்கே தெரியும்..."

என்மேல் சரியாகப் பாய்ந்து தாக்குவதற்கு ஏற்ற தருணத்தை எதிர்பார்த்து ஒரே இடத்தில் நடனமாடினான் அமன். அவன் என்னைவிடப் பலசாலி, எடை மிகுந்தவன். ஆனால் என் கால்கள் அதிகத் துடியானவை. அவனால் என்னைப் பிடிக்க முடியாது என்பதை நான் அறிந்திருந்தேன். அவன் திடீரென, காற்று வெளியேறிவிட்ட பலூன் போலத் தொய்ந்துபோய், கம்பு பிடித்த கையைத் தொங்கவிட்டு, தூவென்று உமிழ்ந்தான்.

"செத்த பசுவின் மடியை வைத்திருப்பது உன்போன்ற



தோழனைப் பெற்றிருப்பதைவிட மேல். மாட்டு மடிக்காவது சவர்க்காரம் தயாரிப்பவன் பணம் கொடுத்திருப்பான்... தொலைந்து போ சைத்தானிடம்! மேலுலகில் உன் ஆபாச மூஞ்சியை நான் பார்க்காமல் இருந்தாலே போதும்"... - இப்படிச் சொல்லிவிட்டு அவன் பாதையில் திரும்பி நடக்கலானான்.

ஓகோ, இவன் எங்கே போகிறான்? ஊருக்குள் திரும்பிச் சென்றால் நாங்கள் எவனுடைய மாட்டை வெட்டினோமோ, அந்தப் பண்ணையாரின் ஆட்கள் இவனைப் பிடித்துப் போலீசில் ஒப்படைத்துவிடுவார்கள், இவன் ஆயுள் முழுவதும் சைபீரியாவில் கழியும். இல்லை, நாய்போல அலைந்து திரிந்துவிட்டு மறுபடி இதே வழியாகத் திரும்பி வருவான்...

"ஏ, முல்லா அமன் - பாய், உங்கள் நண்பர்களான ஆடு மேய்ப்பவர்களுக்கும் குதிரைக்காரர்களுக்கும் நீங்கள் கடிதங்கள் அனுப்ப விரும்பவில்லையா? அல்லது ஜமீன்தார்களுடன்தான் நட்பாடுகிறீர்களோ? யாருக்கு நீங்கள் வணக்கம் தெரிவித்ததாகச் சொல்வது? அரீஃப்ஹோஜா-மௌல்விக்கோ? அல்லது மஹ்ஸூல்லாஹான் - தூமேக்கோ? அல்லது குல்யாம்ஹான் - காஜிக்கோ? ஏ, முல்லா, அமன்-பாய்!" என்று கத்தினேன்.

அவனோ, திரும்பியே பாராமல், ஒரு வார்த்தை பதில் பேசாமல், முதுகைக் கூனியவாறு மேலே நடந்தான். உள்ளதைச் சொன்னால் எனக்கு அவன் மேல் இருந்த வன்மம் தீர்ந்துவிட்டது. அவன் போகிறானே என்று வருத்தமாய் இருந்தது. மறுபடியும் வழியில் தனியே செல்ல வேண்டுமா நான்? எப்படிப் போவது? எங்கே?...

மெய்யாகவேதான், எங்கே போவது? நான் அமனைக் கிண்டல் செய்தேன் என்றாலும், அவனுடைய சொற்கள் அர்த்தம் உள்ளவையாகவே இப்போது எனக்குப் பட்டன. இத்தனை வாரங்கள் வெளியே சுற்றிவிட்டுப் பஞ்சைக் கோலத்தில் சுந்தல் அணிந்து வீடு திரும்புவது எப்படி? விதவைத் தாயார் ஏற்கனவே எவ்வளவோ கஷ்டப்பட்டிருப்பாள். இந்த அழகில் இடுப்புக் குட்டையில் ஐந்து காசுகள்கூட இல்லாத இன்னொரு தண்டத் தீனிக்காரன் அவள் தலையில் சுமந்தால் எப்படியிருக்கும்! தவிர அவர்கள் என்னை இன்னும் எதிர்பார்க்கிறார்களா? இன்னொரு புறம் பார்த்தால், அமனும் நானும் தாஷ்கந்த் போவது என்றுதான்

முடிவு செய்தாயிற்றே. இங்கே நாங்கள் இனி உழைத்துச் சம்பாதிக்க முடியாது, வயிறு பிழைக்க முடியாது. எங்களைப் பற்றிய வதந்தி ஜில்லா முழுவதிலும் இதற்குள் பரவியிருக்கும்! இஷான்பஜாரிலோ, கோக்-தெராக்கிலோ, மற்ற அக்கம் பக்கத்து இடங்களிலோ நான் தலை காட்டவே கூடாது. நான் போகக் கூடியது தாஷ்கந்த் செல்லும் வழி ஒன்றே.

தவிர இன்னொரு விஷயத்தையும் நான் உறுதியாக அறிந்திருந்தேன், ஏற்கனவே உங்களிடமும் சொல்லியிருக்கிறேன்: ஊர்க் குருவியின் உள்ளமும் அதே போன்ற பலமும் கொண்டவனுக்குக் கூட்டத்தில் கலந்துவிடுவதைக் காட்டிலும் மேலானது எதுவும் இல்லை. பெரிய கூட்டத்தை எங்கே காணலாம்? கிராமத்திலா, இல்லையே! கிராமத்தில் மனிதன் கஞ்சியில் ஈ போலக் கண்ணில் உறுத்துவான். நகரத்திலோ, மனிதனைக் கண்டு பிடிப்பது ஆட்டுக்கோலில் தெள்ளுப் பூச்சியைக் கண்டுபிடிப்பதைவிட எளிதல்ல.

நகரம்...

சாலையில் நடைபோட்டவாறே நகரத்தைப் பற்றிச் சிந்தனை செய்தேன். வர்த்தகர்கள், போலீஸ்காரர்கள், பிச்சைக்காரர்கள். புது வெள்ளம் வந்த ஆற்றைப் பார்த்திருக்கிறீர்களா? கலங்கிய மஞ்சள் நிறப் பெருக்கு வெறி கொண்டதுபோலப் பாயும். அது தன்னோடு இழுத்துச் செல்லாத பொருளே கிடையாது. என்னைச் சிம்பு போலச் சுழற்றுகிறது இந்தப் பிரவாகம். நான் மூழ்கமாட்டேன் போலும் - சிம்புகள் மூழ்குவது இல்லை. ஆனால் இவ்வளவு கலங்கிய நீரில் மிதப்பதுதான் ஒரே அருவருப்பாக இருக்கிறது. இல்லை, நகரம் போக எனக்கு விருப்பமே இல்லை! மக்கள் வேண்டுமென்றே கிளப்பும் துர்நாற்றத்தால் அது முழுதும் நிறைந்திருக்கிறது - லாகிரி உபயோகிப்பவனின் கொதிகலம் போல. அழுக்குப் பிண்டங்களாய், கொழுப்பு ததும்பும் முகங்களுடன் வளையவரும் அதே பணக்காரர் மகன்களை மறுபடி காண வேண்டியிருக்கும். அளவுகோல்களும் கைகளுமாகத் தங்கள் கடைகளில் நின்று வாடிக்கைக்காரர்களை எதிர்பார்த்துச் சோம்பலுடன் காத்திருப்பார்கள் அவர்கள். வெக்கையிலும் மூச்சு முட்டச் செய்யும் புழுதியிலும் மனிதனை மூழ்கடிக்கும் அதே நீண்ட, மிக நீண்ட கடைவரிசைகள். ஆட்டின் வால்சதை முழுவதையும்



திருடிவிட்ட பூனையின் விழிகள் போலக் கள்ளத்தனமாக இங்குமங்கும் பார்க்கும் கண்கள் கொண்ட வியாபாரிகள். நொண்டிக் கொக்கின் நிழல்போல ஒட்டி உலர்ந்த பிச்சைக்காரர்கள். அவர்கள் சில வேளைகளில் தனித்தனியாகவும் சில வேளைகளில் கும்பல் சேர்ந்தும் சுற்றித் திரிவார்கள்...

இல்லை, நகரம் எனக்குப் பிடிக்கவில்லை. ஒரு கஸாக்கியனின் மகன் சில்லறைச் சாமான்கள் கடைவரிசை வழியே செல்கையில் தகப்பனிடம் கேட்டானாம்:

"அத்தா, இந்த ஆட்கள் என்ன செய்கிறார்கள்?"

"ஏ மகனே, சந்தை நாளில் இவர்கள் மக்களை ஏமாற்றுகிறார்கள். சாதாரண நாட்களில் ஒருவரை ஒருவர் ஏமாற்றிக்கொள்கிறார்கள்..."

ஆனாலும் என்ன செய்வது? விண்ணோ தூரம், தரையோ கடினம், தவிரக் குளிர்காலம் வேறு வாளைச் சுழற்றிக்கொண்டு நெருங்கி வருகிறது. நான் என்ன பாழ்வீட்டு முகப்பில் உள்ள அடுப்பா, வாயை மூடாமல் குளிர்காலத்திலும் கோடை காலத்திலும் கொட்டாவி விட்டுக்கொண்டு இருக்க? கோழிக்கு வேண்டுமானால் தினையைக் கொத்தி, குட்டத்து நீரைக் குடித்தால் போதும். மனிதனுக்கோ, நிறைய வேண்டும்... சட்டென ஒரு விஷயத்தை நான் கவனித்தேன்: வெக்கை நாட்களில் பாதங்களைப் பொசுக்கிய சாலை இப்போது குளுமையாகிவிட்டது. புழுதி இறுகிவிட்டது. ஒவ்வோர் அடிவைப்பின்போதும் சிறு காற்று வீச்சின் போதும் அது கிளம்பவில்லை. ஓடைகளில் நீர் பளிங்கு போலத் தெளிவாயிருந்தது. விரைவில் இரவுகளில் குளிர் அடிக்கும். பனித்துளி காலை நேரங்களில் கம்பிப்பனியாக உறைந்து விடும். ஓடை ஓரங்கள் மெல்லிய பனிக்கட்டித் தகடுகளாகி, கெட்டியான பசும்பாலும் பாலேடும் போலக் காட்சி அளிக்கும்.

நடந்துகொண்டே என்னையும் அம்மாவையும் தங்கைகளையும் பற்றி எண்ணமிட்டேன். நாங்கள் எல்லோரும் மோசமாக வாழ்கிறோம். இது யாருடைய குற்றம்? என்னுடைய குற்றமா? நான் இப்படி ஒன்றுக்கும் உதவாதவன் ஆனது ஏன்? நான் யாரிடமாவது மாணவனாகச் சேர்ந்து படித்திருக்கலாம், அல்லது சில்லறை வேலை ஏதாவது செய்யலாம். நானோ, அதற்குப் பதிலாக வீணே நாடோடியாய்ச் சுற்றி அலைகிறேன். கறுப்பேறிய என்

வெறுங்கால்கள், நீரால் செலுத்தப்படும் நெற்குத்து உலக்கைகள் ஒன்று மாற்றி ஒன்றாக விழுவதுபோல, தாமே இயங்குகின்றன... ஒன்றுமே மாறுவதில்லை, சுற்றிலும் புதிது எதுவுமே இல்லை. சாலை, ஆளற்ற வெறுமை, நிசப்தம்...

ஆ, தொலைவில் கேட்பது ஒட்டகக் கூட்டத்தின் மணி ஒலியா என்ன? உற்றுக் கேட்போம்... அதுவேதான். அட என் ஆண்டவனே, வெறுமையான சாலையில் நடக்கும் வழிப்போக்கனுக்கு மணிகள் மாற்றி மாற்றி அடிக்கும் இந்த இனிய கணீரோசையைக் காட்டிலும் சிறந்த இசை எதுவுமே இல்லை. முதலில் தூரத்தில் ஒலித்து இடையிடையே நின்றுவிடும். பிறகு மேலும் மேலும் அருகாமையில் கணீரென்று ஒலிக்கும். ஆயினும் அதில் முன்போலவே மென்மை திகழும். வருபவை ஒட்டகங்கள் அல்ல, ஆண்டவனின் தூதர்கள் விரைவான எளிய வழியை நமக்குக் காட்டுவதற்காக வருகிறார்கள் என்று தோன்றும்.

ஒட்டகக் கூட்டம் தூர நைலின்
வாயிலை நெருங்கும் போது
பொற்சுடர்க் காலை, பொற்சுடர்க் காலை
அதனை எதிர்கொள்ள விரையும்,
வெண்கல மணிகள் இனிமையாகச்
சோர்வுடன் ஒலிக்கும் -
கிண்-கிணிங்! கிண்-கிணிங்!... புலரும் நாள் தன்
மொழியைச் சுருதி கூட்டும்.

இதற்குள் ஒட்டகக் கூட்டம் மெய்யாகவே அருகில் நெருங்கி விட்டது. அதில் சுமார் பதினைந்து ஒட்டகங்கள் இருந்தன. ஐந்தைந்து ஒட்டகங்கள் ஒரே கயிற்றில் இணைக்கப்பட்டிருந்தன. கழுதைகள் மேல் சவாரி செய்து கொண்டு வந்த ஒரு முதியவனும் இளைஞனும் கயிறுகளின் நுனிகளைக் கைகளில் பிடித்திருந்தார்கள். ஒட்டகங்களின் மேல் தீனிப்புல் சுமை ஏற்றப்பட்டிருந்தது. நான் சாலை ஓரத்தில் ஒதுங்கிக்கொண்டேன். ஒட்டகக்கூட்டம் கிட்டே வந்ததும் அதை எதிர் கொண்டு, ஆட்களை வணங்கி, "எதுவரை பயணம், அத்தா?" என்று கேட்டேன்.

பதில் வணக்கம் என் காதில் படுவதற்குள், கழுதையின் சேண வாரில் கட்டியிருந்த நாய் ஒன்று உரத்த குரைப்புடன் என்மேல்



பாய்ந்தது. நல்லவேளை, அது கட்டப்பட்டிருந்தது. இது இல்லாமலே நாய்களிடம் நான் போதும் போதும் என்னும் அளவுக்குப் பட்டுவிட்டேன்.

"இங்கே என்ன செய்கிறாய், மகனே? நல்லதுதான் என்று நினைக்கிறேன்" என்றான் கிழவன்.

"ஐயோ அத்தா, நான் நகரத்துக்குப் போகப் புறப்பட்டேன். நேரத்தைச் சரியாகக் கணக்கிடவில்லை. யாரேனும் துணைக்கு வர மாட்டார்களா என்று எதிர்பார்த்துக் காத்திருந்தேன். நல்ல வேளையாக நீங்கள் வந்தீர்கள்..."

"அங்கே ஸ்தெப்பியில் உன்னைப் போலவே இன்னொருவன் அலைகிறான். நீங்கள் எத்தனை பேர்? சொல்லு, மகனே. அப்போதுதான் நாயைக் கட்டவிழ்த்துவிடுவதா வேண்டாமா என்று எனக்குத் தெரியும்..."

"ஐயோ அத்தா, நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்? நாயை எதற்காகக் கட்டவிழ்த்துவிட வேண்டும்? எனக்கு நாய்களைச் சகிக்கவே முடியாது. அவற்றைக் கண்டாலே என் உடம்பு எல்லாம் கொப்புளங்கள் கிளம்பிவிடும்! ஸ்தெப்பியில் அலைபவன் யார் என்றே எனக்குத் தெரியாது. நான் ஆண்டவனின் அமைதியான அடிமை. ஈக்குக் கூடத் தீங்கு செய்ய மாட்டேன். என்னை உடன் அழைத்துச் செல்ல நீங்கள் விரும்பாவிட்டால், உங்கள் பின்னால் வருகிறேன். நான் உங்களை வேண்டிக்கொள்ளத்தானே முடியும், கட்டாயப்படுத்த முடியுமா?..."

"ஓகோ, நீ வாயடிப்பதில் தேர்ந்தவன் போலிருக்கிறதே! ஸ்தெப்பியில் திரிபவனை உனக்குத் தெரியாது என்றால் அவன் எதற்காக உன்னை வாயில் வந்தபடி திட்டினான்?" என்று கேட்டான் கிழவன்.

"நான் என்னத்தைக் கண்டேன், அத்தா? திட்டினானாக்கும். நன்றாகத் திட்டிவிட்டுப்போகட்டுமே. என் காதில் படாத வரையில் எனக்கு எல்லாம் ஒன்றுதானே! மனதில் தோன்றுகிறபடி வைது நொறுக்கட்டும். திட்டினால் அவனுக்கு வயிறு நிறைகிறது போலும்."

கிழவன் களுக்கென்று நகைத்தான்.

"ஆகவே, உனக்கு அவனைத் தெரியவே தெரியாது என்கிறாயா?...

சரி, போனால் போகிறது, கூட நடந்து வா. உன்னை என்ன செய்வது?"

நான் முதியவனின் அருகாக நடந்தேன். அவன் சற்றைக்கு ஒரு தரம் என்னைக் கேள்விக் குறியுடன் ஊடுருவிப் பார்த்தான். பின்னால் வந்த இளைஞனோ ஒரே சந்தேகத்துடன் நோக்கினான். நாயும் வெகுநேரம் அமைதியின்றிக் குரைத்தது. இந்த மாதிரி நாங்கள் ஒன்றுமே பேசாமல் நெடுநேரம் நடந்தோம். பகல் மாலைப் பக்கம் சாயலாயிற்று. தெளிந்த வானில் பஞ்சுமேகம் போல வெளிறிய நிலா தோன்றியது. தகதகக்கும் சூரியனின் ஏழை உறவினள் போலத் தென்பட்டது திங்கள். வான் அரசன் உறங்கப் போவதை எதிர்பார்த்து, அது அடக்கமாக ஒதுங்கியிருந்தது. ஆதவன் மறைந்ததும் அது தன்மாட்சியைக் காட்டும். ஆட்சி மிடுக்குடன் முழு வட்டமாக இலகும், விண்ணின் எல்லா மூலைகளையும் சுற்றிப் பார்வையிடும், ஒவ்வொன்றையும் பார்த்து, சீர்தூக்கி மதிப்பிடும்.

நான் சந்திரனை நோக்கியவாறு, நைச்சியமாகப் பேச்சைத் தொடங்குவது எப்படி என்று தீவிரமாகச் சிந்தனை செய்தேன். கிழவனோ தானே பேச்சு கொடுக்க மாட்டேன் என்றான். எனக்கோ ஒரேயடியாகக் கட்டிப்போட்டது போல் இருந்தது. பேசுவதற்கு ஆள் இருக்கும்போது இப்படி நெடுநேரம் வாய் திறவாமல் நடப்பது அவ்வளவு இனியது அல்ல.

"அத்தா, அதோ அந்த நட்சத்திரம் இருக்கிறதே, மாலையில் முதலாவது உதிக்கும் அந்த ஒளிமிக்க விண்மீன், அதன் பெயர் என்ன?" என்று முடிவில் உரையாடத் தொடங்கினேன்.

"ஓஹோ, தந்திரக்காரன் அப்பா நீ. நட்சத்திரங்களின் பெயர்களைத் தெரிந்துகொண்டு மந்திரவாதி ஆகப் பார்க்கிறாயோ?"

"நீங்கள் என்ன, அத்தா. மந்திரவாதியாவது ஒன்றாவது?"

"தெரியாதா மந்திரவாதியின் வேலை? நட்சத்திரத்தைப் பார்ப்பான், உடனே மழை பெய்யும்." - கிழவன் நல்லியல்புடன் குலுங்கிச் சிரித்தான். எனக்குத் துணிச்சல் வந்துவிட்டது.

"அந்த நட்சத்திரத்தின் பெயர் என்ன, சொல்லுங்களேன்!"

"அதோ, சீக்கிரம் ஒளி வீசும் தறுவாயில் இருக்கிறதே, அந்த



நட்சத்திரத்தைக் கேட்கிறாயா? அதன் பெயர் ஸுஹ்றா, மகனே... ஆமாம், தம்பி, விண்மீன்களுக்குச் சொந்தக் கதைகள் உண்டு. இந்த நட்சத்திரம் ஓர் ஏழையின் மகள். அவள் அழகிகளில் எல்லாம் பேரழகி! தாய் தகப்பனார் இறந்து போனதும் அவளைப் பெண்பேச பாதுஷா தன் ஆட்களை அனுப்பினான். ஸுஹ்றாவோ, மாட்டேன் என்றுவிட்டாள். 'எனக்குக் காதலன் இருக்கிறான், அவனைத்தான் மணப்பேன்' என்று சொல்லி விட்டாள். அப்புறம் கேட்க வேண்டுமா? பாதுஷா கோபம் அடைந்தான், அவளுடைய காதலனைத் தேடிப்பிடித்துத் தூக்கில் இடும்படிக் கட்டளை பிறப்பித்தான். ஏவலர்கள் அப்படியே செய்தார்கள். தூக்கு மரம் மிக மிக உயரம், மிக மிக நீளம். ராத்திரி வேளையில் அந்தப் பெண் தூக்கு மேடைக்கு வந்து தூக்குமரத்தின்மேல் தொற்றி ஏறத் தொடங்கினாள். மேலும் மேலும் ஏறி உச்சியை அடைந்துவிட்டாள். அங்கிருந்தோ, வானம் கைக்கு எட்டும் தூரம்! இனிமேல் நான் பூமியில் செய்வதற்கு என்ன இருக்கிறது? உலகத்தில் கெட்ட பாதுஷாக்கள் இல்லாமல் போகும் வரை வானத்திலேயே இருக்கிறேன். நல்ல காலம் வந்ததும் பூமிக்குத் திரும்பி விடுகிறேன் என்று எண்ணினாள். அதனால்தான் காலையிலும் மாலையிலும் அவள் பூமியையே பார்த்துக் கொண்டிருக்கிறாள் - அங்கே நிலைமை எப்படி இருக்கிறது? திரும்பலாமா? என்று. திரும்ப வேளை இன்னும் வரவில்லை என்று தெரிகிறது... அந்தக் காலம் முதல், சூரிய உதயத்தை எதிர்கொள்ளுபவர்கள் எல்லாருக்கும் அவள் நல்ல அதிர்ஷ்டம் உண்டாகச் செய்கிறாள். காலையில் தூங்குபவன் ஆக்கத்தையும் பறிகொடுத்துவிடுவான்!"

கிழவன் சொன்ன கதையை நான் திறந்த வாய் மூடாமல் கேட்டுக் கொண்டிருந்தேன். உலகில் அக்கறைக்கு உரிய விஷயங்கள்தாம் எத்தனை! நானோ அவற்றைப் பற்றிய அறிவே இல்லாமல் சுற்றித் திரிந்தேன். ஒவ்வொரு விண்மீனையும் பற்றிக் கதை சொன்னால் ஆயிரம் பகலும் இரவும் கேட்டுக் கொண்டே இருக்கலாமே! எப்பேர்ப்பட்ட வாய்ப்பு எனக்கு! இதற்கிடையே கிழவன் ஆகாயத்தில் கோடு வரைவது போலக் காற்றில் கையை ஆட்டி, சொல்லத் தொடங்கினான்:

"அதோ, வடக்கே ஒரு நட்சத்திரம் உதிக்கும். அதுதான் வானத்தின் அச்சு. அதை வழிகாட்டியாகக் கொண்டு பயணம்

செய்பவன் சரியான பாதையிலிருந்து பிறழவே மாட்டான்! இதை நினைவில் வைத்துக்கொள்." - அவன் மறுபடி உயரே கையை ஆட்டினான் - வானத்தை இரு கூறுகளாக வகிர்வதுபோல. "வானத்தின் ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை போகிறதே, பிரகாசமான பட்டை, அது என்ன தெரியுமா? அதுதான் பால் வீதி! உலகத்தில் சாலைகள் தோன்றி ஆட்கள் அவற்றில் நடக்கத் தொடங்கிய காலம் முதல், நாள்தோறும் மக்கள் பால்வீதியின் அடியே வளைய வருகிறார்கள், அதன் வழியே நடப்பதுபோல. ஆமாம்..." - அவன் பெருமூச்சு விட்டான். "நானும் சின்னப் பயலாக இருந்தேன், உன்னைப் போலவே. அப்புறம் கிழவன் ஆகிவிட்டேன். ஆனால் அதுவோ, அப்படியே இருக்கிறது - அதன் வழியே நடந்தவன் வைக்கோல் துணுக்குகளைச் சிதறிச் சென்றது போல.. என்ன, எல்லாம் புரிந்ததா, மந்திரவாதிப் பையா?"

இதற்குள் இருட்டத் தொடங்கிவிட்டது. கிழவன் சொன்ன விண்மீன்கள் ஒன்றன் பின் ஒன்றாக வானத்தில் சிதறின. விரைவில் நாங்கள் இடைத் தங்கலில் பயணத்தை நிறுத்தினோம். கிழவன் சாப்பிட வரும்படி என்னை மகிழ்வுடன் அழைத்தான். இளைஞன்தான் ஒன்றும் பேசாமல் கோணலாகப் பார்த்தான். நான் ஒட்டகத்தை ஓட்டிப் போய்விடுவேன் என்று பயந்தானோ?... விரைவிலேயே நான் படுத்து உறங்கிவிட்டேன். புலர் போதில் விழித்துக் கொண்டேன். கிழவன் என்னை இடித்து அசைத்தான்.

"எழுந்திரு, மகனே. போவோம். பொழுது சாய்வதற்குள் தாஷ்கந்த் போய்ச் சேர்ந்துவிட வேண்டும்!"

அந்தப் பகல் எப்படி என்று தெரியாமலே கழிந்துவிட்டது. சுவையான உரையாடல் செய்த மாயம் அது! புழுதி நிறைந்த சாலையில் கிழவன் பக்கத்தில் நடந்தபடி நான் கேட்ட விஷயங்களை என் வாழ்நாள் முழுவதும் என்னால் மறக்க முடியாது... மாலைத் தறுவாயில் தாஷ்கந்தின் வடக்கு நுழைவாயில் ஆன சிகாத்தாய் - தர்வாஜாவை நாங்கள் அடைந்ததும், கிழவனை விட்டுப் பிரிய வேண்டுமே என்ற எண்ணத்தால் என் மனத்தைத் துயர் கவ்வியது. ஏதோ நினைவுக்கு எட்டாத காலம் முதலே அவனை அறிந்திருந்ததுபோல எனக்குப் பிரமை உண்டாயிற்று...

முன் ஒட்டகத்தின் கழுத்து மணிகள் ஏக்கத்துடன் கிணுகிணுத்தன. மணியோசை வீதியின் மண் சுவர்கள் மேல்



பட்டுச் சிதறியது. துஹ்த்தாஜான் பாய் மசூதியை நாங்கள் கடந்து செல்கையில், தொழுகைக்கு அழைக்கும் ஸூஃபியின் குரல் நீட்டி மூக்கால் ஒலித்தது. கிணறு வடிவான மசூதி ஸ்தூபியில் இடுப்பளவு உள் ஆழ்ந்து நின்றான் ஸூஃபி.

"ஹயீனா ஹனன்ஹலா... ஹயீனா ஹனன்ஹலா" என்று சோகக் குரலில் கூவி அழைத்தான் அவன். கிழவனின் நாய் தன் நீண்ட ஆயுட்காலத்தில் இவ்வளவு அருவருக்கத்தக்க குரலை நாய்களின் கும்பலில்கூடக் கேட்டது இல்லை போலும். அது அரண்டு போய், ஸூஃபியின் குரலோடு குரல் சேர்த்து ஊளையிடத் தொடங்கிற்று. கிழவன் கம்பால் அதைக் குத்தினான். அப்புறந்தான் அது ஊளையை நிறுத்தியது.

"எவ்வளவு நல்ல குரல், அத்தா" என்று தயக்கத்துடன் புன்னகை செய்தவாறு சொன்னேன்.

கிழவன் என்னைச் சிறக்கணித்து நோக்கினான்.

"இந்த அப்பாவிக்கு அல்லா ஏககாலத்தில் இரண்டு நோய்களை அருளிவிட்டார் - இவன் மூக்கன், போதாக்குறைக்கு ஸூஃபி வேறே. அதுதான் இப்படிப் படாத பாடு படுகிறான்..."

சந்தையில் செருப்புக் கடை வரிசை அருகே நான் கிழவனிடம் விடை பெற்றுப் பிரிந்தேன். அவன் ஒட்டகங்களுடன் பிரயாணிகள் தங்கிடம் சென்றான். நானோ, கடைவரிசைகளில் எங்காவது நேரத்தைப் போக்கலாம் என்று முடிவு செய்தேன். ஆனால் அதற்கு எனக்கு வாய்க்கவில்லை. கிழவனும் நானும் சேர்ந்து நடந்தபோதே அவனுடைய நாய் சந்தையைக் கண்டு பயப்படுவதைக் கண்டேன். வாலைப் பின்கால்களுக்கிடையே நுழைத்துக்கொண்டு, கிழவன் சவாரி செய்த கழுதையோடு ஒண்டி உராய்ந்தவாறு அது நடந்தது. அடிக்கு ஒருவராக நின்று பயங்கரமாகச் சீழ்க்கை அடித்து, "வருகிறது யார்?" என்று கேட்ட வண்ணமாய் இருந்த காவலாட்களைக் கண்டுதான் அது வெருவுகிறது என்று நினைத்தேன். உண்மையோ வேறு. சந்தையில் அலைந்து கொண்டிருந்தன தெருநாய்களின் கும்பல்கள். கிழவனுடைய நாய் அஞ்சியது அவற்றையே. இறைச்சிக் கடைகளின் பக்கம் திரும்பியதுமே இந்த விஷயம் எனக்கு உறுதிப்பட்டுவிட்டது. அங்கிருந்த நாய்க்கூட்டத்துக்குத் தலைவனாக விளங்கியது ஒரு பெரிய, கறுப்பு நாய். என்னைக்

கண்டதுமே அது அச்சுறுத்தும் பாவனையில் உறுமிற்று. "இதுவரை நீ இல்லாமலே இங்கே காரியங்கள் நன்றாக நடந்தன, உனக்கு நம்பிக்கைப்படாவிட்டால் என் நாய்ப் பரிவாரம் முழுவதும் நம்பிக்கை ஊட்டும் சான்றுகளை உனக்குக் காட்டும்" என்று சொல்வதுபோல் இருந்தது அந்த உறுமல். நான் விவாதிக்க விரும்பவில்லை. மரியாதையாக மன்னிப்பு கேட்டுக்கொண்ட சவர்க்காரக் கடை வரிசையில் திரும்பினேன். அங்கே இருந்தது நாய்களின் தனிக் கும்பல். வருபவர்களிடம் அது நடந்துகொண்ட மாதிரி இன்னும் அழுத்தமாக மனதில் பதிய வைப்பதாக இருந்தது. "ஒருவனுக்கு எதிராக எல்லோரும்" என்ற கோட்பாட்டின்படிச் செயல் ஆற்றியது அந்தக் கும்பல். நான் இதைப் புரிந்துகொண்டு திரும்பிக் கொஞ்சம் அவசரத்தைக் காட்டினேன் - தெளிவாகச் சொன்னால் ஓட்டம் எடுத்தேன். உடனே அத்தனை நாய்களும் ஒரே கூட்டமாகப் பாய்ந்து என்னைத் துரத்தின. நான் நின்றேன். அவை என்னைச் சூழ்ந்துகொண்டன. இந்த மாதிரி என்னை ஒரு கணமும் தனியே விடாமல் சவர்க்காரக் கடைவரிசைக்கு வெளியே கொண்டுவிட்ட பின்பே அவை திரும்பின. எனக்கு அவை அன்பு கூர்ந்து காட்டிய மரியாதை இது. அவை பண்புடன் பயிற்றி வளர்க்கப்பட்டிருப்பதை நான் முழுதும் மதித்தேன். பழைய குளியறையை விரைவாகக் கடந்து மண்பானைக் கடைவரிசைக்கள் போகலாம் என்று பார்த்தேன். ஆனால், போற்றி அல்லாவே! அங்கே நாய்களின் தனிக் கும்பல்! நான் ஊரைவிட்டு வெளியே போயிருந்த இடைக்காலத்தில் இத்தனை நாய்கள் எங்கிருந்துதான் வந்து சேர்ந்துவிட்டனவோ! இது நாய்களின் ஆண்டோ? அதனால்தான் அவற்றின் விளைச்சல் இவ்வளவு செழிப்பாயிருக்கிறதோ? அப்புறம், அவைதான் எப்படிப்பட்ட சந்தேகப் பிராணிகள்!

இறைச்சிக் கடைவரிசையில், நான் இறைச்சித் துண்டுகளையோ எலும்புகளையோ அவற்றுடன் பகிர்ந்துகொள்ள வந்துவிட்டதாக எண்ணி அவை என்மேல் பொறாமை கொள்ளலாம். இதையாவது என்னால் புரிந்து கொள்ள முடியும். சவர்க்காரக் கடை வீதியில் தங்களுக்குக் கிடைக்கும் சிதறு துண்டுகள் பறிபோய்விடுமோ என்று அவை பயப்படலாம். ஆனால் மண்பானைக் கடை வரிசையில் இருந்ததே, நாய்க் கும்பல், அதற்கு அங்கே என்ன பயம்? நான் ஏதேனும் வெற்றுப் பானையை விழுங்கிவிடுவேன் என்றா, புலவு இல்லாத காலித்



தட்டைக் கடித்துத் தின்றுவிடுவேன் என்றா, இன்னும் நீர்கூட விடாத குயவன் குழலை நொறுக்கிச் சாப்பிட்டுவிடுவேன் என்றா? பரிதாபம், மிக மிகப் பரிதாபம்!

இந்த அவமானம் என் நெஞ்சின் ஆழம்வரை சென்று தாக்கியது. நான் கப்பாய் என்னும் இடத்தைக் கடந்து ஹஸ்தீ-உக்கோஷா மசூதிப் பக்கம் சந்தையிலிருந்து வந்தேன். இங்கேதான் மஹக்மா பஜார் தொடங்குகிறது. இந்த இடங்களை எல்லாம் நான் அங்குலம் அங்குலமாக அறிந்திருந்தேன். ஆனால் இன்றோ அவை ஏதோ புதியவையாக, வேற்றிடங்களாக எனக்குப் பட்டன. வெகு நாட்கள் வெளியே போயிருந்ததாலோ அல்லது இவ்வளவு நேரம் கடந்தபின் நான் இங்கு முன் ஒருபோதும் வந்ததில்லை என்பதாலோ. உக்கோஷா என்பது ஒரு மனிதனின் பெயர் என்பதை நான் நினைவுகூர்ந்தேன். அரேபியர்கள் நம் பிரதேசத்தை வென்று கைப்பற்றிக்கொண்ட போது அவன் அவர்களுடைய சேனைத் தலைவனாக இருந்தானாம், இந்த இடத்தில் அம்பு தைத்து இறந்துபோனானாம். அம்பை எய்தவர் நம் முன்னோர்களில் ஒருவர். அப்புறம் அரேபியர்கள் அவனுடைய கல்லறைமேல் மசூதி எழுப்பினார்களாம். இப்போது என்னடா என்றால் மதயாத்திரிகர்கள் திரள் திரளாக இங்கே வருகிறார்கள், வேடிக்கைதான்! கல்லை முத்தம் இடுகிறார்கள், அவனுடைய கல்லறை முன் தலை தரையில் படும்படி வணங்குகிறார்கள். இவனோ, நம் முன்னோரைக் கொன்றான், நகரைச் சூறையாடினான், கால்நடைகளைக் கவர்ந்து சென்றான், மொத்தத்தில் நம்மவர்கள்மேல் காறி உமிழ்ந்தான் - அவர்களுடைய நோய்களைத் தீர்க்கவோ, வேறு நன்மைகள் செய்யவோ அவன் கனவிலும் நினைக்கவில்லை. நமது உஸ்பெக்கிய மக்கள் சொல்வார்கள்: உன் தகப்பனைக் கொன்றவனுக்குத் தாயைப் பரிசாய்க் கொடு என்று. இந்த நையாண்டி மொழி சரிதான் போலும். இவர்கள் செய்வது அப்படித்தானே இருக்கிறது. நோய்களைத் தீர்த்துக்கொள்வதற்காக இப்போது அவர்கள் இவனிடம் ஓடோடி வருகிறார்கள். எதற்காக? இவனுடைய கல்லறைக்கு அடியிலிருந்து பொங்கும் ஏதோ ஓர் ஆபாச ஊற்றுக்காக. நான் இந்த ஊற்றைப் பார்த்திருக்கிறேன். வேறு எத்தனையோ ஊற்றுக்களையும் நான் கண்டிருக்கிறேன். வேறொன்றும் இல்லாவிட்டாலும் அவற்றிலிருந்து தண்ணீர் முறையாகப் பொங்கிப் பெருகுகிறது,

கைக்குழந்தையின் சிறுநீர் போலப் பீச்சி அடிப்பதில்லை. ஆனால் அந்த ஊற்றுக்களுக்கு எவனும் காடு, மலை, வனம், வனாந்தரங்களைக் கடந்து யாத்திரை செய்வதில்லை. எல்லாருக்கும் இங்கேதான் வந்து தொலைய வேண்டியிருக்கிறது. பார்க்கப் போனால் இந்த மாதிரிக் கூட்டத்தில் ஒவ்வொருவனுக்கும் ஒரு துளி வீதம்கூடத் தண்ணீர் கிடைப்பது சந்தேகந்தான். இந்த அழகில் நோய் தீர்வதற்கு இந்த ஊற்று நீரில் குளிக்க வேண்டும் என்று வேறு சொல்கிறார்கள். குளிப்பதாம்! எப்படியோ? தேக்கரண்டி நீரில் தலை முழுகுவது இதைவிட எளிது. இந்தப் பெரியவர்களைப் புரிந்துகொள்ளவே முடிவதில்லை. எல்லாம் அறிந்தவர்கள் போலத் தோன்றுகிறார்கள். சில சமயங்களிலோ, அர்த்தமே அற்ற வெட்டி வேலைகளில் ஈடுபடுகிறார்கள் - சிறுவர்கள் எள்ளி நகையாடும்படி.

ஹஸ்தீ - உக்கோஷாவைச் சுற்றிக் கடந்து ரொட்டிகள் சுடும் கிடங்குப் பக்கம் போனேன். இது முற்றிலும் வேறு உலகம். இங்கே இரவிலும் பகல் போல வெளிச்சமாய் இருக்கும். குந்தியிருக்கும் எவையோ அரக்க விலங்குகளின் திறந்த கரு வாய்கள் போன்ற அடுப்புக்களிலிருந்து செந்தழல் நாக்குகள் சற்றைக்கு ஒரு தரம் வெளியே துருத்தின. மெல்லிய கைத்தறித் துணி மேலங்கிகளும் திறந்த மார்புகளும் தலைக் கட்டுகளுமாக இருந்த ஆட்கள் எரியும் அடுப்புக்களுக்குள் அனேகமாக இடுப்பு வரை குனிந்து சிவந்த சுடு ரொட்டிகளை வெளியே எடுத்தார்கள். ஆகாகா, எப்பேர்ப்பட்ட ரொட்டிகள் அவை! இவற்றுக்காக உயிரையே தயங்காமல் கொடுக்கலாம்! ரொட்டிகள் அல்ல, முழு நிலாக்கள் இவை! இது ரொட்டிக் கிடங்கு அல்ல, மந்திர உலைக்கூடம் என்று தோன்றியது. மேற்கே எங்கேயோ கரு மலைகளின் பின்னே சூரியன் இதை நிருமித்திருப்பான்: நிலவு மறைந்ததும் ஒவ்வொன்றாக வானில் சுழலவிடும்பொருட்டு. ஒன்றன்பின் ஒன்றாகத் தங்க வட்டுகள் இங்கே வார்த்து எடுத்துச் சேமிக்கப்படுகின்றன.

ஆகா, எப்பேர்ப்பட்ட ரொட்டிகள்! உயர்ந்த ரகக் கோதுமை மாவால் ஆக்கப்படுபவை இவை. இவற்றின் உப்பிய விளிம்புகள் சிவு சிவுவென்று ஒளிர்கின்றன. உட்புறம் கருமையான குறுநொய்கள். மிகப் பெரிய ட்யூலிப் மலர்கள் இதழ்களை அகலப் பரப்பிவிட்டது போலவும் இதோ இதழ்களை உதிர்க்கத்



தொடங்கிவிடும் போலவும்! இங்கே, பண் மிழற்றும் ஓடைக் கரையில் உட்கார்ந்து, அப்போதுதான் சுட்டு எடுத்த இந்த அழகு ரொட்டிகளை ஒரு கூடை நிறைய முன்னே வைத்துக்கொண்டு, எவ்விதச் சடங்கும் பாராட்டாமல் முறித்து முறித்து நீரில் முக்கி முக்கித் தின்றால் எவ்வளவு பேரானந்தமாய் இருக்கும்! கூடையில் ரொட்டிகள் எடுக்க எடுக்கக் குறைவாமல் இருக்க வேண்டும், ஓடை நீர் போல... அப்புறம், வயிறு நிரம்பத் தின்ற பிறகு எழுந்து, சோம்பல் முறித்து, விலை கொடுப்பதற்குப் பதில் ரொட்டிக் காரனிடம் "நன்றி" என்று சொல்லிவிட்டு, நம் வழியே போய்விட வேண்டும்.

ஆனால் நான் அப்படி ஒன்றும் அவக்கை பிடித்தவன் அல்ல. எனக்கு அவ்வளவு நிறையத் தேவையில்லை. ரொட்டி சுடும் இந்த அற்புத மணமே என் வயிற்றை நிறைத்துவிடும். இதோ இங்கே, அடுப்புக்குப் பக்கத்தில் சௌகரியமாக உட்கார்ந்து கொண்டு இரவு முழுவதும், விடியும்வரை இந்த நறுமணத்தை முகர்ந்து கொண்டிருப்பேன்...

இந்த இன்பத்தை நான் வெகு நேரம் அனுபவிக்கவில்லை. என்னைக் கடந்து ரொட்டிக் கிடங்கிற்குள் சென்றான் சிறிது கூனல் விழுந்த ஒரு அறுபது வயதுக் கிழவன். அவன் தோள்மேல் லேஞ்சி இலகியது. வலுவான தோல் ஜோடுகள் அணிந்திருந்தான். கொழுப்பு தடவித் தேய்த்துப் பளபளவென மின்னின அவை. ஐந்து நிமிடங்களுக்குப் பின் அவன் வெளியே வந்தான். அவனுடைய லேஞ்சி பெரிய ரொட்டி மூட்டையாக மாறி இருந்தது. என்னைக் கவனமாக உற்றுப்பார்த்து, "ஏனப்பா, மகனே, இந்த ரொட்டிகளை என் வீடுவரை எடுத்து வருவாயா?" என்று கேட்டான்.

"எடுத்து வருகிறேன், அத்தா" என்று கூறி அவனிடமிருந்து மூட்டையை வாங்கி முதுகின் மேல் சுமந்துகொண்டேன். கிழவன் கைத்தடி வைத்திருந்தான். அதற்கு அவன் ஒரு கணமும் ஓய்வு கொடுக்கவில்லை. காலடியில் தட்டுப்படும் காகிதங்களையும் கிழிசல் துணிகளையும் ஒன்று விடாமல் கைத்தடி நுனியால் குத்திப் புரட்டினான். அவற்றுக்கு அடியில் தங்கமோ, தீர்க்கதரிசியின் கடைசிச் செய்தியோ மறைந்திருக்கிறதா என்று பார்த்தான் போலிருக்கிறது. புரட்டிப் பார்த்த பிறகு அவன் அந்தக் கழிவுத் தாளையோ கந்தலையோ தடி நுனியால் தூக்கிச் சுவர்

பொந்துகளில் நுழைத்தான். மிகச் சூடான பெரிய மூட்டையை முதுகில் சுமந்தவாறு நான் பின்னால் நடந்தேன். இந்த ரொட்டிகளில் ஒரு துண்டாவது எனக்குக் கிடைக்குமா, அல்லது புத்தகங்களைச் சுமக்கும் கழுதைபோல அவற்றின் சுவையை அறியாமலே இருந்துவிடுவேனா? தவிர, இந்தக் கிழவனுக்கு இத்தனை ரொட்டிகள் எதற்காக? இவன் வீட்டில் கல்யாணமோ? இருக்காது. கலியாண விருந்துக்கு இவை போத மாட்டா. குடும்பத்துக்கோ, மிக அதிகம். ஆனால் இவன் குடும்பம் எவ்வளவு பெரியதோ, கண்டது யார்? அப்புறம், இன்னும் கோழிகள் கூடக் கண்விழிக்காத அதிகாலையில் இவன் எழுந்திருந்தது ஏன்? - இவ்வாறு எண்ணமிட்டேன். நாங்கள் எவையோ தெருக்கள் வழியாக நடந்து சென்றோம், பிறகு பள்ளத்தாக்கின் புறம் திரும்பி, ஓடைக் கரையோரமாக முன்னே போனோம். கிழவன் இன்முகத்துடன் என்னோடு உரையாடினான். அவன் குரல் மென்மையாக, கேட்க இனியதாக இருந்தது.

"நீ என்ன இவ்வளவு வெள்ளென நடமாடத் தொடங்கி விட்டாய், மகனே? எதையேனும் தொலைத்துவிட்டாயா?"

"இல்லை, அத்தா. நான் ஸ்தெப்பியிலிருந்து ராத்திரிதான் வந்தேன்."

"அப்படியா? ஸ்தெப்பியிலிருந்தா? தாஷ்கந்த் நகரத்துத் தினையை ருசி பார்த்த குருவிகூட நேரே மெக்காவிலிருந்து இங்கே திரும்பிப் பறந்துவரும். ஆமாம், உனக்குத் தாயார் தகப்பனார் இருக்கிறார்களா?"

இந்த ஆள் எதற்காக என்னை நச்சரிக்கிறான்?

"இல்லை, அத்தா. காலமாகிவிட்டார்கள்" என்று சொல்லித் தப்பித்துக் கொள்ளப் பார்த்தேன்.

"ஆமாம். இது சகஜந்தான். பெற்றோர்கள் இறவா வரம் பெற்றவர்கள் அல்லவே. அதனால் பரவாயில்லை. கொஞ்சும் கன்றுக்கு இரண்டு பசுக்கள் பாலூட்டும் என்று பழமொழி சொல்வார்கள். தகப்பன் கிடைத்துவிட்டால் தாயார் தானே வருவாள்... மிகக் கடினமான நாற்சந்தியை நீ ஏற்கனவே கடந்து விட்டாய், மகனே. மேலே பயணம் அதிகச் சுளுவாய் இருக்கும். மோசம் ஒன்றுதான் - கெட்டவர்கள் ஏராளமாகப் பெருகி விட்டார்கள். ஆனால் நாம் நல்லவர்களாய் இருந்தால் இது



ஒரு பொருட்டில்லை, சரிதானே? நீ வெறுங்காலோடு நடக்கிறாய் போலிருக்கிறதே. கவலைப்படாதே. துடியான கால்களுக்கு ஜோடுகள் தாமே கிடைத்துவிடும். கால்களைத்தான் பத்திரமாகப் பேண வேண்டும்! அதுதான் விஷயம்..."

அமைதியான நீர்ப்பெருக்குபோல ஒரே மாதிரிக் கனிந்த குரலில் அவன் விரைவாகப் பேசினான். நான் மௌனமாக நடந்தவாறு கேட்டுக் கொண்டிருந்தேன்.

கிழவன் பேச்சைத் தொடர்ந்தான்:

"ஆமாம், மகனே. யுத்தம் தொடங்கி இதோ ஒரு வருஷத்துக்கு மேல் ஆகிவிட்டது, உனக்கு ஒருவேளை தெரிந்திருக்கலாம், ஊம்? அது முதல் விலைகள் எல்லாம் ஏறிவிட்டன. செருப்புக்களின் விலைகள்கூட. அதுதான் விஷயம், மகனே. அரசர்கள் இருக்கிறார்களே, அவர்களால் அமைதியாக இருக்க முடியாது. ஜுரம் பிடித்து ஆட்டுகிறது இவர்களை. நமது வெள்ளை ஜார் இருக்கிறானே, இவனைத்தான் பாரேன். என்ன வேண்டும் இவனுக்கு? அமைதியாக வாழ்க்கை நடத்தினான், நாட்டை ஆண்டான், ஐஸ்கிரீம் சாப்பிட்டான், பாதகர்களைத் தூக்குப் போட்டான், பெண்களோடு குலாவினான் என்று சௌக்கியமாய் இருப்பதுதானே! இல்லை, அது அவனால் முடியாது! யுத்தம்! இவ்வளவிற்கும் இவனிடம் எல்லாம் இருக்கிறது. பிரஜைகள் அவன் முன்னே வெயிலில் மெழுகைவிட மென்மையாகப் படிந்து போகிறார்கள். போலீஸ்காரர்களோ, இடை வாள்போல ஆயத்தமாய் இருக்கிறார்கள்: "பிடி!" என்று சொல்ல வேண்டியதுதான் தாமதம், கைது செய்துவிடுகிறார்கள். மௌலானாக்களும் உலேமாக்களும் அவனுக்காக நாள்தோறும் ஐந்து முறை தொழுகை படிக்கிறார்கள். பணமோ, ஆண்டவன் மூட்டை மூட்டையாய் அனுப்புகிறான் அவனுக்கு. எல்லாப் பணக்காரர்களும் அவனை மேலும் பணக்காரன் ஆக்கத் தயாராய் இருக்கிறார்கள். பார்த்தாயா மகனே. ஒருவனுக்கு இன்னும் என்னதான் வேண்டும்? ஆனால் இவனுக்கு இது போதவில்லை! யுத்தம்! யுத்தம் செய்கிறான், மக்களைக் கொன்று அழிக்கிறான், நகரங்களைப் பாழாக்குகிறான். வெறும் பாலைவனத்தில் ஆட்சி நடத்த ஆசைப்படுகிறான் போலிருக்கிறது..."

கடைசி வார்த்தைகளைக் கிழவன் நீட்டி முணுமுணுத்தான் - என்னிடம் அல்ல. பொதுவெளியை நோக்கிக் கூறுபவன்போல. அப்புறம் அவன் சற்றுநேரம் பேசாதிருந்தான். நானும் மௌனமாகவே நடந்தேன். திடீரென்று கிழவன் பாடலானான்:

"தந்தையையும் இளமையையும் தாய்க்காகத்
தந்திட முன்வாராத் தனயன் எவன் உண்டு?
சுற்றுங்கால் வேற்றூர்களில் சொந்த நாட்டினைப்
பற்றி நினைக்காத பதடி எவன் உண்டு?"

அவன் தொண்டைக் கரகரப்பால் இருமினான். அதோடு பாட்டு நடுவே நின்றுவிட்டது. அவன் மறுபடி முணுமுணுக்கத் தொடங்கினான்:

"ஆகா, இஸ்லாம் மதத் தலைவர்களை எவ்வளவு போற்றினாலும் தகும். என் காலஞ்சென்ற தகப்பனார் இரண்டு தடவை மெக்காவுக்கு ஹஜ் யாத்திரை செய்தார். இரண்டாவது தடவை என்னையும் அழைத்துக்கொண்டு போனார். அடே அப்பா, வேற்று நாட்டில் அலைபவர்கள் படும் பாட்டை எல்லாம் நாங்கள் அனுபவித்தோம். அந்தக் கஷ்டங்களை அனுபவிக்காமல் ஒரு மனிதன் முஸல்மான் ஆக மாட்டான் என்று புனிதத் தொண்டர்கள் சொல்லுகிறார்கள்... ஆமாம், விஷயம் அதுதான்." - திடீரென்று அவன் முணுமுணுப்பை நிறுத்திவிட்டு, "நீ எந்த ஊர்க்காரன்?" என்று கேட்டான்.

"நானா? நான்... உச்குர்கான் கிராமத்தவன்."

"அப்படியானால் நான் உன்னைக் கண்டிராவிட்டால் நீ உச்குர்கானில் தாயாரைப் போய்ப் பார்த்திருப்பாயாக்கும், ஊம்? அடா-டா-டா... யாரேனும் ஆசிரியரிடம் பாடம் கேட்க வாய்த்தது உண்டா உனக்கு?"

"உண்டு... ஆனால் "ஸூஃபி அல்யா"ரின் புத்தகம் பாதி முடிந்திருந்தபோது நான் பள்ளிக்கூடத்தைவிட்டு ஓடிவிட்டேன்."

"அப்படியா சேதி! மிக மிக ருசிகரமான கட்டத்தில் ஓடிவிட்டாயாக்கும், அப்படித்தானே, மகனே?"

"அப்படித்தான் போலிருக்கிறது, அத்தா..."

கிழவன் மூச்சு இழுத்துவிட்டு, "ஸூஃபி அல்யா"ரின் நரக வர்ணனைப் பகுதியிலிருந்து சில அடிகளைப் பாடத் தொடங்கினான். நான் அதை உடனே அடையாளம் தெரிந்து கொண்டேன்:

"கந்தக நாற்ற நரகிலிருந்து
சென்றிடும் சுவர்க்கத்துக்கு ஒரு பாலம்.
சந்ததம் நிலவும் அப்பாலத்தை
முந்தையர் ஸிராத் என மொழிந்திடுவாரே.
வாளிலும் கூர்மை, மயிரிலும் நுண்மை
வாய்ந்ததம் மாயப் பாலம் கண்டீர்:
வீழும் நரகம் செல்வழி எளிதாம்,
வாழும் சொர்க்கம் செல் வழியோ கடிதே."

தொண்டையைக் கரித்ததால் கிழவன் மறுபடி இருமினான். முதல் தடவை போலவே இருமல் அடங்கியதும் மௌனமாகி விட்டான். எனக்கு எதனாலோ அவன் காரணமாகக் குமட்டல் எடுத்தது. கம்பி நீட்ட முடிவு செய்தேன்.

"அத்தா, மூட்டையைக் கொஞ்ச நேரம் வைத்துக்கொள்ளுங்கள். தாகமாய் இருக்கிறது. ஓடை நீரைக் குடித்துவிட்டு வாங்கிக் கொள்கிறேன்" என்றேன்.

கிழவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"என்ன! தண்ணீர் குடிக்கப் போகிறாயா? உனக்கு என்ன வேண்டாத கொழுப்பு ஏறிவிட்டதா? அல்லது குதிரை இறைச்சியைத் தின்றுவிட்டாயோ? போவோம் வா, சைத்தான் மகனே, இதோ தேநீர் பருகுவாய், தண்ணீர் குடிக்கப் போகிறானாம்! அட ஆண்டவனே, குளிர்த்து விரைக்கிறது ஒரேயடியாக. நல்ல வெயில் அடிக்கும் கோடையில் ஒரு தடவைக்கு மேல் கை கழுவச் சோம்பல் அடிப்பான். இப்போது இலையுதிர் காலம் நெருங்கிவிட்ட நேரத்தில், அதிகாலை வேளையில் பனியாய்க் குளிர்ந்த நீரை வெறும் வயிற்றில் குடிக்க ஆசை வந்துவிட்டதாம்! த்தூ! உன்னைப் பெற்றவர்கள் என்ன, தாராக்களோ?" என்று பொடுபொடுத்தான்.

குளிர்ந்த நீர் காரணமாக இவன் என்னை இப்படி அதட்டி மிரட்டியதைக் கண்டு நான் வியப்பு அடைந்தேன். ஆயினும் எதுவும் செய்வதற்கில்லை. அவனோடு போக வேண்டியதாயிற்று.

நட்ட நடுப் பாதையில் அவனுடைய ரொட்டிகளை எறிந்துவிட மனம் இடந்தரவில்லை. அவனோ என் மேல் எரிந்து விழுவதை நிறுத்தாமல் மேலும் மேலும் முன்னே போனான். கடைசியில் பள்ளத்தாக்கின் கோடியில் இருந்த தாழ்ந்த வீடு ஒன்றின் வாயிலருகே நாங்கள் நின்றோம். அது பாதி சரிந்து விழுந்த வீடு. நான் அதை அச்சத்துடன் நோக்கினேன். கிழவன் என்பக்கம் திரும்பினான்.

"என்ன பின்வாங்குகிறாய்? இதுதான் விஷயம். உள்ளே போ, மகனே, உள்ளே போ" என்றான்.

காரணம் அற்ற கலவரம் என்னை ஆட்கொண்டது.

"அட இழவே! நீ என்ன கண்களைப் பரக்க விழித்து மிரண்டு பார்க்கிறாய், கன்று புலியைப் பார்ப்பதுபோலே? இது வெட்டுக் களம் அல்ல, மதப்பள்ளி இது, மதப்பள்ளி, அதுதான் விஷயம். நீ படிப்பை அரைகுறையாய் நிறுத்திவிட்டாய் அல்லவா, இங்கே முடித்துக்கொள்வாய்..." என்றான் கிழவன்.



## அத்தியாயம் 12
# எனது மதப்பள்ளி

புகை படிந்து கறுத்த தாழ்வான வாயிலுக்குள் குனிந்து எச்சரிக்கையுடன் - எதற்காக இந்த எச்சரிக்கை என்று தெரியாவிட்டாலும் - புகுந்தேன் அறைக்குள் கண்களைக் கரிக்கச் செய்யும் கள்ளென்ற நெடி நிறைந்திருந்தது. ஸமோவார் - தேநீர்க் கொதிகலம் - முன்மூலையில் ஆவி விட்டுக்கொண்டு நின்றது. சிறு குடும்பத்தினர் பயன்படுத்துவது போன்ற, நடுத்தர அளவுள்ள ஸமோவார் அது. அறையின் நடுவில் கணப்புச்சட்டி தணல் போட்டு வைத்திருந்தது. கீறல்கள் விழுந்து மூக்குகள் உடைந்த ஒரு அரை டஜன் தேக்கெண்டிகள் அதைச் சுற்றிலும் வைத்திருந்தன. தரையிலிருந்து சுமார் இரண்டே சாண்கள் உயரமான பலகை மணைகள் பாதி அறையை நிறைத்துக் கொண்டிருந்தன. அவற்றின் மேல் ஆறு ஆட்கள் வட்டமாக அமர்ந்திருந்தார்கள். வெளியே வெயில் வந்துவிட்டது. அறைக்கு உள்ளேயோ மினுக்கு மினுக்கு என்று இறுதி மூச்சுவிடுவது போல எரிந்து கொண்டிருந்தது மண்ணெண்ணெய் விளக்கு. அதன் சிம்னி இனிமேல் முடியாது என்னும் அளவுக்குப் புகை ஏறிக் கறுத்திருந்தது. சுவரில் இருந்த திறப்பில் ஒட்டியிருந்தது மஞ்சள் பாரித்த காகிதம். மங்கலான சூரிய வெளிச்சம் அதன் ஊடாக அநேகமாக வரவில்லை. எனவே விளக்கு எரிந்ததில் வியப்பு ஒன்றும் இல்லை. விளக்கின் பக்கத்தில் நடுத்தர வயதுள்ள ஒரு மனிதன் உட்கார்ந்திருந்தான். புதர் மண்டிய முகப்புத் தோட்டம்போல அடர்ந்து கற்றை கற்றையாய்த் தொங்கியது அவன் தாடி. இரட்டை மூக்குக் கண்ணாடி மாட்டியிருந்தான். அவன் மடிமேல் இருந்தது விரித்த பருத்த புத்தகம். அவன் அதை உரக்கப் படித்துக் கொண்டிருந்தான் போலிருக்கிறது. கேட்பவர்கள் பல்வேறு தோரணைகளில் அசையாது உட்கார்ந்திருந்தார்கள். நாங்கள் உள்ளே வந்ததும் அவர்கள் தலைகளை நிமிர்த்தக்கூட இல்லை. சப்பையாக அதுங்கிய மூக்கனான ஒரு கிழவன் மட்டுமே எங்களைக் கண்டு மகிழ்ச்சி

அடைந்தவன்போலத் தோன்றினான். கணப்புச் சட்டி நெருப்பை அவன் கிளறிவிட்டான்.

"ஆ இதோ ஹாஜி-பாபாவே வந்துவிட்டார்! அவரிடம் கேட்போம்!" என்றான்.

படித்துக் கொண்டிருந்தவனும் இதைக் கேட்டு நிமிர்ந்து பார்த்தான்.

"ஹாஜி பாபா! இங்கே ஓர் இடத்தில் எங்களுக்குச் சந்தேகமாய் இருக்கிறது. மாட்சிமிக்க அரசர் அபூ-முஸ்லிமும் நஸரேஸையார் பியோரும் ஹு"ராஸான் சமவெளியில் இருவர் போர் நடத்திய போது நஸரேஸையார் தொண்ணூற்று ஆறாயிரம் மணங்கு எடை கொண்ட கதாயுதத்தால் மகாபுனிதர் அபூ-முஸ்லிமின் தலையில் அடித்தான். அதனால் மகாபுனிதர் தரையில் புதைந்தார் - முழங்கால்கள் வரையிலா அல்லது இடுப்பு வரையிலா? போன ஆண்டு நாம் படித்தோமே, அந்தப் புத்தகத்தில் எழுதியிருந்தது முழங்கால்கள் வரையில் என்று. இதிலோ, இடுப்பு வரையில் புதைந்ததாக எழுதியிருக்கிறது" என்று ஏதோ முக்கியமாக விஷயத்தை விவாதிப்பவன்போலக் கூறினான்:

"முழங்கால்கள் வரையில் என்று எழுதியிருக்கும் புத்தகந்தான் சரி" என அதே போன்ற மிடுக்கான, மறுப்புக்கு இடம் அளிக்காத தோரணையில் சொன்னான் ஹாஜி-பாபா. "அசுரப் போர்களின் விதிகளின்படி மூன்று அடிகள் கொடுக்கலாம். முதல் அடி-யில்" என்று ஒரு விரலை மடக்கி நீட்டி முழக்கிச் சொல்லிக் கொண்டு போனான் ஹாஜி-பாபா. "எதிராளி முழங்கால்கள் வரையில் தரையில் புதைவான். இரண்டாவது அடி-யில்" - அவன் இன்னொரு விரலை மடக்கினான் - "இடுப்புவரை புதைவான். மூன்றாவது அடி-யில்" - அவன் மூன்றாவது விரலை மடக்கி வெற்றிக் குரலில் முடித்தான். "தோள்கள் வரை புதைவான்! அல்லாவே காப்பாற்று. இந்த நாய் மகன் முதல் அடியிலேயே மகா புனிதரை இடுப்புவரை புதையச் செய்துவிட்டான் என்றால், இரண்டாவது அடியில் மகாபுனிதர் காதுகள் வரை தரைக்குள் புதைந்திருப்பாரே! எங்கேயாவது கேட்டது உண்டா அப்படி நடந்ததாக? அப்படி நடந்திருந்தால் பண்டை நூல்களில் அது எழுதப்பட்டிருக்குமே. எங்கேயாவது இப்படிப் படித்திருக்கிறீர்களா?"



அவன் பேச்சை நிறுத்திவிட்டு மத நுட்பங்களை அறிந்து தேர்ந்தவனின் வெற்றிப் பெருமிதமும் கடுமையும் ததும்பும் பார்வையால் எல்லோரையும் நோக்கினான் - நியாயமான மரண தண்டனையை அறிவித்த நீதிபதிபோல. உட்கார்ந்திருந்தவர்களில் நீலத் தலைப்பாகை அணிந்த கருவலும் ஒடிசலுமான ஒருவன் உறுதிப்படுத்தும் பாவனையில் தலை அசைத்து எனக்கு விளங்காத பாஷையில் ஏதோ சொன்னான். நான் திக்குத் திசை தெரியாமல் திகைத்து நின்றேன். அறையில் குமைந்த கடு நெடியால் ஆரம்பத்தில் எனக்குக் குமட்டல் எடுத்தது. அப்புறம் நிலைமை ஓரளவு சரி ஆயிற்று. ஆனால் அறையையும் அதில் இருந்தவர்களையும் கண்டு எனக்குத் திகிலும் குழப்பமும் உண்டாயிற்று. யார் இந்த ஆட்கள்? இது என்ன இடம்? இது மதப்பள்ளி அல்ல என்பதை மடமட்டி கூடப் போகிற போக்கில் கண்டு கொள்வான். அவர்கள் படித்த புத்தகம் எது என்பதையும் நான் ஊகித்துக்கொண்டேன். 'அதிர்ஷ்டசாலி அபூ-முஸ்லிமின் போர்கள் பற்றிய கதை' அது. ஆனால் இதனால் எதுவும் தெளிவாகிவிடவில்லை. ஒருவேளை... புதிருக்கு விடை சட்டென என் மூளையில் உதித்தது. ஒருவேளை இது... அபினி புகைக்கும் கூடமோ?

ஹாஜி-பாபா ரொட்டி மூட்டையை என்னிடமிருந்து வாங்கி ஸமோவாரின் அருகே பெட்டியில் வைத்தான். அப்புறம் எட்டு ரொட்டிகளை எடுத்துத் தட்டில் வைத்து, ஒவ்வொரு ரொட்டி மேலும் ஒரு குத்து உலர்ந்த திராட்சையும் ஜீத் பழங்களும் தூவினான். மண விருந்தில் தின்பண்டம் வினியோகிப்பது போலத் தட்டும் கையுமாகச் சுற்றி வந்து ஒவ்வொருவர் முன்பும் ஒரு ரொட்டியை வைத்தான். தானும் வட்டத்தில் அமர்ந்து கொண்டான். நான் இன்னமும் தயக்கத்துடன் கதவருகே நின்றேன்.

"டேய், நீ என்ன, சுவரில் சார்த்திய மண்வெட்டிபோல அங்கே அசையாமல் நின்றுவிட்டாய்? மாமாக்களுக்கு முகமன் சொல்லு, இங்கே வா! மணையில் ஏறி உட்காரு, மகனே, அதுதான் விஷயம்..." என்றான் ஹாஜி-பாபா.

"ஸலாம் அலைக்கும்!" என்று தணிந்த குரலில் சொல்லிவிட்டு, யார் மேலாவது இடித்துவிடுவேனோ என்ற பயத்துடன் கூசிக் குறுகியவாறு மணைமேல் ஏறிக்கொண்டேன். ஹாஜி-பாபா

நகர்ந்து தன் அருகே எனக்கு இடம் கொடுத்தான். என் எதிரே ஒரு ரொட்டி கிடந்தது. ஹாஜி-பாபா கிண்ணத்தில் தேநீர் ஊற்றி எனக்குத் தந்தான்.

"ரொட்டியை விண்டு தின்னு, கூச்சப்படாதே. தேநீரைக் குடி, ரொட்டியைத் தின்னு. அவசரப்படாதே. நன்றாகச் சுவைத்து விழுங்கு. இது முழுவதும் உனக்குத்தான், மகனே. அதுதான் விஷயம்..."

சுற்றியிருந்தவர்களை ஓரப்பார்வையால் மறைமுகமாக நோட்டமிட்டவாறு நான் தின்னலானேன். இங்கே எவ்விதச் சடங்கும் கடைப்பிடிக்கப்படவில்லை. ஒவ்வொருவனும் தன் தன் தேக்கெண்டியிலிருந்து தேநீர் ஊற்றிக் குடித்தான், தன் தன் ரொட்டியைத் திராட்சைப் பழத்தோடு சேர்த்துச் சாப்பிட்டான். ஒருவருக்கொருவர் "சாப்பிடுங்கள், தயவு செய்து" என்று யாரும் உபசாரம் செய்யவில்லை. நீலத்தலைப்பாகைக்காரன் ஹாஜி-பாபா பக்கம் குனிந்து, "ஸாஹிப், நி பச்சா பிஸ்த்?" என்றான்.

அப்போது அவன் என்னைப் பார்க்கவில்லை. அவனுடைய கேள்வி எனக்கு விளங்கவும் இல்லை. என்றாலும் "பச்சா" (குழந்தை) என்ற சொல்லைக் கொண்டு அவன் என்னைப் பற்றியே கேட்கிறான் என்று ஊகித்தேன். என் ஊகம் சரி ஆயிற்று."

"ரொட்டிக் கிடங்கில் கண்டேன். இவனுக்குத் தகப்பனும் இல்லை, தாயும் இல்லை. நம் நகரத்தில் அனாதைகள் குறைவு என்று எண்ணி இங்கே வந்திருக்கிறான்... பையன் துடியானவன், லாகவம் உள்ளவன். நாக்கு நன்றாகப் புரள்கிறது, தாடைகள் சேதப்படாமல் இருக்கின்றன." - இப்படித் தணிந்த குரலில் சொல்லிவிட்டு எல்லோரையும் பார்த்து, "உங்களுக்கு உதவியாய் இருப்பான்" என்றான்.

நீலத் தலைப்பாகைக்காரன் திருப்தியுடன் தலையை அசைத்தான். மற்றவர்களும் அப்படியே செய்தார்கள்.

"அருமை, ஹாஜி-பாபா, மிக நல்லது, ஹாஜி-பாபா" என்றார்கள்.

ஆம், இது அபினி புகைக்கும் கூடம்தான். இவற்றைப் பற்றி நான் எவ்வளவோ கேள்விப்பட்டது உண்டு, பார்க்கத்தான் இதுவரை வாய்த்ததே இல்லை. அதனால்தான் தண்ணீர் என்ற



சொல் காதில் பட்டதுமே கிழவன் அப்படித் திடுக்கிட்டான் போலும். அது சரி, இப்போது நான் என்ன செய்வது? இங்கே இருந்து இவர்களுக்குச் சேவை செய்வதா? கிழவன் அப்படித்தான் எண்ணுகிறான் என்று தெரிகிறது. குமட்டல் எடுக்கிறது... ஆனால் எதுவுந்தான் பழகிப்போய்விடும். இந்த இடம் வெதுவெதுப்பாய் இருக்கிறது... சும்மா சொல்லக் கூடாது. இவர்கள் மெய்யாகவே அபினி புகைப்பவர்கள் என்றால் இங்கே மேல் வரும்படியும் சம்பாதிக்கலாம். இவர்கள் வெறிக்கப் புகைத்தபின் எதையுமே புரிந்துகொள்வதில்லையாம். குற்றேவல் வேலைக்கு என்னை வைத்துக் கொண்டார்களானால் தேநீரும் ரொட்டிகளும் நிச்சயமாய் என் கைகளில் இருக்கும். குறுகிய காலத்திற்குள் கொஞ்சம் பணம் சேர்ந்துவிடும். பனிக்காலம் தொடங்குவதற்குள் அம்மாவைப் போய்ப் பார்க்கலாம், வெறுங்கையாக இல்லாமல்... அம்மாவைப் பற்றியும் இங்கிருந்து ஒரு மணி வாக்கில் வீடு போய்ச் சேர்ந்துவிடலாம் என்பது பற்றியும் நினைத்ததுமே எனக்கு இங்கிருந்து உடனே ஓடிவிட ஆசை அடக்க மாட்டாமல் எழுந்தது. சிரமப்பட்டு என்னைக் கட்டுப்படுத்திக்கொண்டேன். "இல்லை, உனக்கு வயது வந்துவிட்டது. காரியங்களைப் பற்றி நீ எண்ண வேண்டும். இங்கே கொஞ்ச காலம் தாமதிப்பது பயன் உள்ளதாக இருக்கும்."

தேநீர் பருகுவது முடிவதற்கு முன்பே நீலத் தலைப்பாகைக்காரன் எழுந்திருந்தான்.

"இன்று சந்தை நாள், பெரியவரே, கடையை நேரத்தோடு திறக்க வேண்டும். போக விடை கொடுங்கள்." என்று அயல் மொழியில் கூறினான்.

"சரி, சரி, போங்கள். மாலைச் சாப்பாட்டுக்குத் திரும்பி வந்துவிடுவீர்கள் அல்லவா?"

"கட்டாயம்" என்று ஜோடுகளை மாட்டிக்கொண்டான் நீலத் தலைப்பாகை. அவன் புருவங்களுக்கு நடுவே புஹாராத் தன்கா நாணயம் அளவான சிவப்புப் போட்டு இருந்ததை அப்போது தான் கவனித்தேன். அவன் போன பிறகு நான் ஹாஜி-பாபாவிடம், "பாபா, இந்த ஆள் யார்?" என்று கேட்டேன்.

"முதலாவதாக, வெறும் பாபா அல்ல, ஹாஜி-பாபா, கயவாளிப் பயலே! இரண்டாவதாக, நீ என்ன போலீஸ் அதிகாரியா, என்

விருந்தாளிகள் பற்றி நான் உனக்கு விவரம் தெரிவிப்பதற்கு? யார் இங்கே வருகிறார்கள், அவர்களுடைய பெயர்கள் என்ன, தொழில்கள் என்ன, அவர்கள் எந்த ஊர்க்காரர்கள் என்பதை எல்லாம் தெரிந்துகொள்ள வேண்டுமோ நீ?... ரொம்பத் தெரிந்து கொண்டாயானால் சீக்கிரம் வழுக்கைத் தலையன் ஆகிவிடுவாய், ஹெ-ஹே. இவன் இந்தியாக்காரன், மகனே. முகம்மதியன், அதுதான் விஷயம். பெஷாவர் நகரத்தான். கேள்விப் பட்டிருக்கிறாயா பெஷாவர் என்று? இல்லையா? ஊம், பார்த்தாயா? இவன் பண மாற்று வியாபாரி, அதோடு வட்டிக்கும் கடன் கொடுக்கிறான். இந்தியனிடம் ஒரு லட்சத்துக்குமேல் பணம் சேர்ந்துவிடும்போது அவன் நெற்றியில் சிவப்புக் குறி இட்டுக் கொள்வது வழக்கம் - இதோ, இந்த இடத்தில்! அவன் நெற்றியில் வட்டக் குறியைப் பார்த்தாயா? பார்த்தாய் அல்லவா? பழுக்கக் காய்ந்த தங்கத்தை நெற்றியில் பதித்து இந்தக் குறியை ஏற்படுத்துவார்கள். இவனிடமோ, ஒரு லட்சத்துக்குத் தங்கமோகராக்கள் இருக்கின்றன! தாஷ்கந்தில் உள்ள வியாபாரிகள் எல்லோரும் இவனிடம் பயப்படுகிறார்கள், வெடவெடவென்று நடுங்குகிறார்கள் இவனைக் கண்டு. எல்லோரும் இவனுக்குக் கடன்பட்டவர்கள், அதுதான் விஷயம். மகனே... சரி, கிடக்கிறது. அரட்டை அடித்தது போதும். எழுந்திரு. ஹுக்கா தயாரி. சாயங்காலம் வரை ஊக்கமாக உழைத்தாயானால் எனக்கு அப்பாடா என்று இருக்கும், நான் உனக்குச் செருப்புக்கள் வாங்கித் தருவேன்..."

ஆம், இங்கே கொஞ்சகாலம் தங்கியிருப்பது நல்லதுதான்.

அன்றைய தினம் நான் சிரமத்தைப் பாராமல் உழைத்தேன். கிழவன் இட்ட பணிகளை எல்லாம் நிறைவேற்றினேன். அதற்கு மேலேயே கூட, ஏவாத பணிகளையும் செய்தேன். ஹாஜி-பாபா ஓரளவு சலிப்பூட்டினான், அதிலும் "அதுதான் விஷயம்" என்று அடிக்கு ஒரு தரம் பல்லவி பாடியவாறு அவன் நீண்ட நேரம் தொணதொணத்தபோது தலை வேதனையாய் இருந்தது. ஆனால் ஒன்று. அவன் கெட்டவனே அல்ல. தாராளக் கையன் கூட. கணக்கில் அவன் மந்தமாக இருந்தது இதன் காரணமாய் இருக்கலாம். உதாரணமாக ரொட்டிகளை, ஆறு உருப்படிகள் வரை வரிசையாக எண்ண விரும்பினால் நான்குவரை எண்ணியபின் வழக்கமாக அவனுக்குக் கணக்கு பிசகிவிடும்.



கடைசிவரை நஷ்டம் இல்லாமல் கணக்கிட்டு முடிப்பதற்கு அவன் அரும்பாடு படவேண்டியிருக்கும். அவனுடைய இந்தக் குறை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. எவையேனும் பெருத்த எண்ணிக்கைகள் அவனை அச்சுறுத்தத் தொடங்கியதும் அவன் என்னை உதவிக்கு அழைப்பான். என்னை அவன் நம்பினான்.

மாலையில் இந்தியப் பணமாற்று வியாபாரி மறுபடி வந்தான். நான் அவனுடன் நெருக்கமாக அறிமுகம் செய்துகொண்டேன். அடுத்த சில நாட்களில் நான் அவனுக்கு மிகவும் பழகிப்போய் விட்டேன். அவன் போய்விட்டதும் எனக்கு ஏதோ வெறுமையாய் இருப்பதுபோலத் தோன்றும். அவனுக்கும் என்னைப் பிடித்துவிட்டது எனத் தென்பட்டது. அவன் வந்ததுமே எனக்கு ஆறு ஆறு கால்களும் கைகளும் முளைத்துவிட்டனபோல் இருக்கும். ஓடியாடி அவனுக்குப் பணிவிடை செய்வேன். இந்தியாவின் அற்புதங்கள் பற்றி அசாதாரணமான விஷயங்களை அவன் கதை கதையாய், எனக்குச் சொல்லுவான். உஸ்பெக் மொழியில் என்னையும் உங்களையும் போலவே சரளமாய்ப் பேசுவான். அவன் சொன்னவை எல்லாம் உண்மைதானா? இந்தியாவின் நகரங்களில் எல்லா வீதிகளிலும் நன்முத்துக்கள் இறைந்து கிடக்குமாம். சிறுவர்கள் நீலமணிகளைக் கவண்களில் வைத்து அடிப்பார்களாம். முத்துக்களையும் வைத்து அடிப்பார்களாம் - அவைதாம் குனிந்த இடங்களில் எல்லாம் கிடைக்குமே. இந்தியாவில் ரொட்டிகள் மரங்களில் பழுக்குமாம், ஆண்களுக்கு ஐநூறு வயது ஆகும்போதுதான் மீசை முளைக்குமாம். எல்லாவற்றிலும் முக்கியமானது என்னவென்றால், இந்தியாவில் பனிக்காலம் கிடையாதாம், ஆகவே ஆண்களும் பெண்களும் ஆண்டு முழுவதும் பிறந்த மேனிக்கு - ஆடைகளின்றி - வளைய வருவார்களாம். அப்புறம் விலைகள்தாம் என்ன மலிவு! செம்மறிகள் சும்மாவே கிடைக்குமாம். யானையும் யானைக்குட்டியும் நாலே தன்காக்கள் தானாம்! அதாவது நான் ஒரு வாரம் வேலை செய்தால் ஒரு யானை சம்பாதித்துவிடுவேன்! எப்படி இருக்கிறது! குட்டி இல்லாமல் யானை மட்டும் இன்னும் மலிவாகக் கிடைக்கலாம். எனக்குந்தான் குட்டியானையோடு பாடுபட எங்கே முடியப் போகிறது?...

இந்தியா போக வேண்டும் என்று எனக்கு ஒரே ஆசையாய்

இருந்தது. எங்கள் வட்டாரப் பையன்களுங்கூட முன்பு இந்தியா பற்றிச் சுவையான செய்திகள் சொல்லியிருந்தார்கள். ஆனால் அவை எம்மாத்திரம்! பணமாற்று வியாபாரி சொன்ன கதைகளுக்கு உறை போடக் காணா அவை. தவிர அந்தச் சேதிகளைச் சிறுவர்கள் சொன்னார்கள், அவர்கள் சொல்லுவதை நானே கூடக் கற்பனை செய்துகொள்ள முடியுமே.

இந்தியன் சுவையான கதைகள் சொன்னதோடு அன்றி, பண விஷயத்திலும் தாராளமாக இருந்தான். பரும்படியான தாஷ்கந்த் புகையிலைத் துணுக்குகளை அல்ல, நாசூக்கான புஹாராப் புகையிலைப் பொடியையே அவன் புகைத்தான். அவனுக்குப் பிடித்த பொடி வாங்குவதற்காக நான் கடைக்குப் போய் வருவேன். பாதி ஊரைச் சுற்ற வேண்டியிருந்தாலும் சரியே, அந்தப் பொடியை வாங்கிக்கொண்டுதான் திரும்புவேன்.

"சபாஷ்!" என்று பாராட்டி, நான் செலவிட்டதற்கு மேல் பத்து - பதினைந்து காசுகள் கூடவே தருவான் அவன். சில வேளைகளில் ஒரு தன்காகூட அதிகப்படியாகக் கொடுப்பான். சந்தை நாட்களில் ஒரு மூட்டை நிறைய வெள்ளி, பொன் நாணயங்களைச் சுமந்து கொண்டு வருவான். கடுமையான தேநீர் போட்டுத் தரச் சொல்லுவான். பின்பு தரையில் வசதியாக உட்கார்ந்து, நாணயங்களை எண்ணத் தொடங்குவான். பாதிவரை எண்ணியதும் அடிக்கடி உறங்கி விழுவான், ஆனால் சட்டென விழித்துக்கொண்டு பயத்துடன் திடுக்கிட்டு, ஹுக்காவை உறிஞ்சிப் புகைப்படலங்களை வெளிவிட்டுவிட்டு விட்ட இடத்திலிருந்தோ ஆரம்பத்திலிருந்தோ மறுபடி எண்ணத் தொடங்குவான். நாணயங்களின் மினுமினுப்பு என்னைக் கவர்ந்து இழுக்கும். நான் பக்கத்தில் உட்காருவேன். அவன் தூங்கி வழியும்போது அவன் மேல் கண் பட்டுவிடாதபடிப் பாதுகாப்பேன். விழித்துக்கொண்டதும் அவன் பெருமூச்சுவிட்டு, "மாஷா அல்லா!" (ஆண்டவன் கெட்ட பார்வையிலிருந்து காக்க!) என்பான்.

இந்தியன்மேல் எனக்கு மிகுந்த அன்பு விழுந்துவிட்டது.

புகைக்கூடத்துக்கு வாடிக்கையாக வந்த மற்றவர்களும் முரட்டுத்தனமே இல்லாதவர்கள். உண்மையில் அவ்வளவு மென்மையும் மரியாதைப் பாங்கும் உள்ளவர்களை அரிதாகவே காண முடியும். அவர்கள் அபினி புகைத்துவிட்டு மயங்கி விழும்போதுதான் அவர்களைக் காணவே பழக்கமற்றவர்களுக்குப் பயங்கரமாய் இருக்கும். வேறு உலகிலிருந்து திரும்பிய இறந்தவர்கள் போலத் தோற்றம் அளிப்பார்கள் அவர்கள். அபினி புகைத்து முடிக்கும்வரை அவர்கள் ஏதேனும் புத்தகத்தை உரக்கப் படிப்பார்கள். பெரும்பாலும் மெதுவாக, கம்பீரத் தோற்றத்துடன் உரையாடுவார்கள் - நடந்தது, நடப்பது, நடக்கப் போவது, எல்லாவற்றையும் பற்றி.

நான் புகைக்கூடம் வந்து சேர்ந்தபோது யுத்தம் தொடங்கி ஓர் ஆண்டுக்கு மேல் ஆகியிருந்தது. அதைப் பற்றியும் இங்கே பேசிக்கொண்டார்கள்:

"கடுமையான யுத்தம் நடக்கிறது, கடுமையான யுத்தம். ஒரு தரப்பில் ஜார் நிக்கொலாயும் பிரெஞ்சுக்காரர்களுமாம், மறு தரப்பில் யாரோ ஜெர்மன்களாமே! யார் இந்த ஜெர்மன்கள்? அவர்கள் ஆறு கண்ணர்களாம், இறக்கைகள் உள்ளவர்களாமே! நல்ல வம்சந்தான் போ! பழங்காலத்தில்கூட இந்த மாதிரிக் கண்டதில்லை. வெள்ளை ஜாரின் எத்தனையோ நகரங்களை மண்ணோடு மண் ஆக்கிவிட்டார்களாம். இன்னும் ஊர்ந்து போகும் பீரங்கியை இந்த ஜெர்மன் கண்டுபிடித்திருக்கிறானாம், அது பறவை நாகம்போல இருக்கிறதாம். அது பறவை நாகத்தின் வம்சமேதான். தவிர, இந்த ஜெர்மனை ஜெயிக்க யாராலேயும் முடியாதாம் - அபூ-முஸ்லிம், கஹ்ராமானி-கத்தீல், ஹலீபா-ரூமி மாதிரி வெல்லமுடியாத வீரர்களைத் தவிர... எப்படி இருக்கிறது சேதி! ஒருவேளை நம் ஊர் வரை வந்துவிடுவான். ஆட்கள் இன்னும் என்ன சொல்லிக்கொள்கிறார்கள் தெரியுமா? வெள்ளை ஜாரின் படைவீரர்களில்" - இதற்குப் பின் அவர்கள் இரகசியமாகக் கிசுகிசுக்கிறார்கள் - "கீழ்ப்படிவில்லாதவர்கள் சேர்ந்துவிட்டார்களாம்... ஊம், கேட்டீர்களா? ஜெர்மனுடன் நாங்கள் சண்டை போட மாட்டோம். வெள்ளை ஜார் தானே சண்டை போட்டுக்கொள்ளட்டும்" என்கிறார்களாம் இவர்கள்... அவர்கள் சொல்லுவதும் புரியக்கூடியதுதான். வெறுங்கைகளோடு இந்த மாதிரி அரக்க ஜந்துவை எதிர்த்துப் போராட யார்தான் விரும்புவார்கள்? என்ன நான் சொல்லுகிறது? இவர்களுக்கு, இந்த வணங்காதவர்களுக்குத் தலைவன் யார்? ஆம், ஆம், நானும் கேள்விப்பட்டேன் - மஸ்தெரோவோய் என்ற அசுரனாம்..."

இத்துடன் புதிய அரசியல் செய்திகள் தீர்ந்து போய்விடும். உரையாடல் அரசியலிலிருந்து பட்சி வளர்ப்பவர்களின் சபலங்களுக்கு மெதுவாகத் திரும்பும். எவனோ ஒரு விசித்திரப் பிரகிருதி கிளிக்கு "முட்டாள்" என்று சொல்லக் கற்றுக் கொடுத்திருக்கிறானாம். இன்னொருவன் அண்டங்காக்கையை அபினி புகைக்கப்பழக்கியிருக்கிறானாம் - கடவுள் ஆணை, இப்போது ஹுக்கா புகைக்காமல் அதனால் ஒரு நாள்கூட உயிர் வாழ முடியாதாம்! வேறு ஒருவன் பெட்டைக் கோழிக்குச் சேவல் போலக் கத்தக் கற்றுக்கொடுத்திருக்கிறானாம். இப்போது அது கடிகாரத்துக்குப் பதிலாகவும் வேலை செய்கிறதாம், முட்டையும் இடுகிறதாம். ஜுலான் பட்சி வாயால் முட்டை இடுகிறதாமே, கேள்விப்பட்டிருக்கிறீர்களா இதை?... விரைவில் இந்த விஷயமும் தீர்ந்து போய்விடும். அப்புறம் பூகம்பம் ஏற்படுவதன் காரணங்கள் பற்றி விவாதம் தொடங்கும். இதில் வெளியிடப்படும் ஏராளமான அக்கறைக்கு உரிய தகவல்களைக் கேட்பவன் பூகம்பங்களை நன்றாக அறிந்தவனாக இருந்தாலுங்கூட, கட்டாயமாக ஏதேனும் புதிய சேதியைத் தெரிந்து கொள்வான். இல்லை, சலிப்பாய் இருப்பதாக நான் குறை கூறினால் பாவம்.

ஹாஜி-பாபாவுக்கும் என் பணிவிடைகளால் திருப்தி ஏற்பட்டு விட்டது. தாஷ்கந்தில் செருப்புக்களின் விலை ஒரேயடியாக ஏறிவிட்டது என்றாலும் ஜோடுகள் வாங்கித் தருவதாக எனக்குக் கொடுத்த வாக்கை அவன் நிறைவேற்றினான். உணர்ச்சியற்ற செம்மான்களும் அவர்களுடைய வாடிக்கைக்காரர்களான பல்வகை ஏழை மக்களும் "அடித் தோல்கள்" என்றே ஜெபித்தார்கள். இந்த "அடித்தோல்களுக்காக" எல்லோரும் ஆளாய்ப் பறந்தார்கள். போர்முனையில் கொல்லப்பட்ட படை வீரர்களுடைய பூட்சு அடிப் பகுதிகள் இவ்வாறு அழைக்கப் பட்டன, பண ஆசை பிடித்த ஏதோ ஒரு பொறுப்புள்ள இராணுவ அலுவலகம் இவற்றைச் சேகரித்தது. தாஷ்கந்த் வியாபாரி ஒருவன் இதைப் பற்றிக் கேள்விப்பட்டான். "ஏழைகள் விஷயத்தில் எப்படிக் கவலை எடுத்துக்கொள்வது என்று உங்களுக்குக் காட்டுகிறேன்!" என்று சொல்லி அவன் போர் முனைக்குப் போய் எட்டு ரயில் பெட்டிகள் நிறைய "அடித் தோல்களை" ஏற்றிக் கொண்டுவந்தான். இவற்றைப் பத்து பத்து, இருபது இருபதாகக் கட்டி, பழைய ஜோடுகளைச் செப்பனிடும் சிறு செம்மான்களுக்கு விற்றான். செம்மான்கள் அவற்றைச்



செப்பனிட்டு ஏழை மக்களுக்கு விற்றார்கள். இவ்வாறு புது மிதியடிகளோ, ஜோடுகளோ வாங்கப் பணம் செலவிடுவதிலிருந்து ஏழைகளுக்கு விடுதலை கிடைத்தது... "அடித் தோல்கள்" எவ்வளவோ மலிவு! பெரிய மனம் படைத்த வியாபாரியும் நஷ்டப் படவில்லை, ஒரு ஜோடி நல்ல பூட்சுகள் தனக்கும் சம்பாதித்துக் கொண்டிருப்பான் என்று நினைக்கிறேன். இந்த மாதிரி உறுதியான "அடித் தோல்களே" ஹாஜி-பாபா எனக்கு வாங்கித் தந்தான். இரண்டு கோடரிகள் போலக் கனமாய் இருந்தன அவை. அவ்வளவே உறுதியாகவும் இருந்தன. முதல் நாள் என் கால்களை வழட்டிக் கொப்புளங்கள் கிளம்பச் செய்துவிட்டன. ஆனாலும் மிதியடிகள் இருந்தன என்ற திருப்தி ஏற்பட்டது. கொப்புளங்களைப் பொறுத்துக் கொள்ளலாமே.

வியாழன், வெள்ளிக் கிழமைகளில் புகைக்கூடத்தில் ஆட்கள் நிறையக் கூடுவார்கள். இருபதுக்கு மேற்பட்ட வாடிக்கைக் காரர்கள் தவிர இளைஞர்களும் வருவார்கள். அவர்கள் புலவு கொண்டுவந்து பொதுவில் வைப்பார்கள், இரண்டொரு தடவை ஹுக்கா இழுப்பார்கள் அல்லது 'அனாஷ்' என்னும் லாகிரி வஸ்துவைப் புகைப்பார்கள். "பசி எடுப்பதற்காகவும்", "மனநிலை சரிப்படுவதற்காகவும்" புகைப்பதாகச் சொல்லுவார்கள். இந்த இளைஞர்களில் பெரும்பாலோர் சிறு கம்மியர்கள். பணக்காரர்களின் புதல்வர்கள் எப்போதேனும் அரிதாகவே இவர்களுக்கு இடையே காணப்படுவார்கள். புதன்கிழமைகளில் காலை முதல் மாலைவரை ஹாஜி-பாபா எனக்கு விடுமுறை கொடுத்துவிடுவான். சில வேளைகளில் சந்தையில் எவையேனும் சில்லறை வேலைகள் செய்யச் சொல்லுவான். ஆனால் பெரும்பாலும் நான் சந்தையில் என் இஷ்டம்போலச் சுற்றித் திரிவேன். மற்றவர்களுக்கு வெள்ளிக்கிழமை எப்படியோ, அப்படியே புதன்கிழமை எனக்கு வார விடுமுறை நாள். ஹாஜி-பாபா "ஜுமாலிக்", அதாவது விடுமுறை இனாமாக, அரைத் தன்கா கொடுப்பான்.

"இந்தா மகனே. சீக்கிரம் திரும்பிவிடு. குறும்புகள் பண்ணாதே. மளிகைக்காரனின் குரங்குபோல வழியில் போகிறவர்கள் எல்லாரும் சிரிக்கும்படி நடந்துகொள்ளாதே. ஒவ்வொரு கடை முன்னாலேயும் தபால் குதிரைபோலப் பராக்குப் பார்த்துக் கொண்டு நிற்காதே. கண்ட வெட்டிப் பயல்களோடெல்லாம்

சண்டை போடாதே, இறைச்சிச் சந்தையில் தெரு நாய்போல, பண்டிகை நாளில் கடைத் தெருவுக்கு வந்த நாட்டுப்புற வெகுளி போல வந்தது வருகிறது என்று தின்று வயிற்றைக்கெடுத்துக் கொள்ளாதே... கண்கள் காண்பவற்றை எல்லாம் வயிறு ஏற்றுக் கொண்டுவிடாது. அதுதான் விஷயம், மகனே, ஆமாம்."

இப்படி அவன் தொணதொணப்பான். நான் கால்களை மாற்றி மாற்றி வைத்தவாறு நின்றேன். ஒரே மகிழ்ச்சி நிறைந்த விடுமுறை நாள் என்னை எதிர்நோக்கி இருக்கும். இப்போது அவன் சொல்கிற எல்லா விஷயங்களையும் வேலை நாட்களில் நான் நூறு தடவைகள் கேட்டிருப்பேன். என்ன, முடிந்துவிட்டதா உபதேசம்? நான் தலைவணங்கிவிட்டு ஓட்டம் எடுப்பேன். அவனோ, மறுபடி என்னை நிறுத்துவான்:

"இந்தா, இதையும் கேட்டுவிட்டுப் போ. இந்த ஐந்து கோப்பெக்குகளை வாங்கிக்கொள். சவர்க்காரக் கடை தாலிபா உஸ்தாதிடம் ஒரு ராத்தல் மெழுகுவர்த்தி வாங்கிவா, ஹாஜி குஷ்னாயில் இருக்கிறது அவன் கடை, தெரியும் அல்லவா? நாற்றம் அடிக்காதவையாகப் பார்த்து வாங்கு. நாளை புதன்கிழமை. புனிதர்களின் ஆவிகளுக்கு மெழுகுவர்த்திகள் ஏற்றி வைப்போம். வத்திகள் நாற்றம் அடித்தால் அவர்கள் கோபங்கொண்டு விடலாம்... சரி, போ மகனே, போ..."

அல்லாவுக்கு நன்றி! நான் இரண்டு தாவல்கள் தாவுவதற்குள் அவன் மறுபடி என்னைக் கூப்பிடுவான்:

"பொறு, மகனே. இன்னும் இரண்டு கோப்பெக்குகள் இந்தா. புகையிலைக் கடைக்குப்போ. அங்கே புஹாராக் கடைக்காரன் இருக்கிறான். இடித்த புகையிலைத் தூள் அவனிடம் வாங்கி வா, இந்தியனுக்காக..."

"ஆகட்டும். காசு வேண்டாம். புகையிலைத் தூள் நானே வாங்கி வருகிறேன்."

"அப்படியா! நானே வைத்துக்கொள்கிறேன். பணம் உள்ளத்தின் மகிழ்ச்சி. எனக்குத் தெரியும், நீயும் இந்தியனும் இணை பிரியா நண்பர்கள் என்பது! ஆளைப் பாரடா - இந்தியனுக்கு என்றதுமே காசு வேண்டாமாம்! என் கைகள் கொடுக்கின்றன, என் கைகள் எடுத்துக்கொள்கின்றன. ஹெ-ஹே,



அதுதான் விஷயம். மகனே, உன் கண்கள் இங்குமங்கும் அலைபாய்கின்றன! போ, போ, நலமே போய் வா, விட்டாற்றியாக, பிரம்பு போல... ஆகா, இளமையையும் சுதந்திரத்தையும் விட மேலானது எது!"

அவன் இன்னும் என்னவோ முணுமுணுத்தான், ஆனால் நான் அதைக் காதில் போட்டுக்கொள்ளாமல் குதித்து ஓடினேன்... உண்மைதானே, சுதந்திரத்தைவிட மேலானது எது?

## அத்தியாயம் 13
# விடுமுறை நாள்

**நா**ன் தெருக்கள் வழியே போகும்போது தெரிந்தவர்கள் யாரேனும் எதிர்ப்பட்டுவிடுவார்களோ என்ற அச்சம் என் மனத்தை அரித்துக் கொண்டிருந்தது. இந்த இரண்டு மூன்று வாரங்களாக அப்படி எவரையும் நான் சந்திக்காததே ஆச்சரியம்தான். அம்மா அல்லது அத்திம்பேர் கண்ணில் பட்டுவிட்டால் - ஆண்டவனே, காப்பாற்று - அவமானம்! இப்போதைக்கு அதிர்ஷ்டம் என் பக்கம் இருந்தது. புகைக்கூடம் எங்கள் வட்டாரத்திலிருந்து தொலைவில் இருந்தது. ஆயினும் சந்தைக்குத்தான் எல்லோரும் வருவார்களே.

இப்போதும் நான் சந்தைக்குத்தான் போய்க் கொண்டிருந்தேன். திறந்தவெளியில் மஜோமிக்கு அப்பால் இருந்த முலாம்பழச் சந்தைக்கு முதலில் போனேன். தர்பூஸ் பழங்களும் முலாம் பழங்களும் அங்கே மலை மலையாய்க் குவிந்திருந்தன. பச்சை மலைகள், கறுப்புப் பட்டைகள் தீட்டிய பச்சை மலைகள், அனேகமாகக் கரிய நிறமாகத் தோற்றம் அளித்த பச்சை மலைகள் - இவை ஒரு புறம், வெளிர் மஞ்சள், குங்குமப்பூ, மஞ்சள் பழுப்பு, செம்மஞ்சள், பழுப்பு என்று பல்வேறு சாயல்களில் மறுபுறம் குவிந்து கிடந்தன மஞ்சள் குன்றுகள்... தண்ணீர்க்காரர்கள் தரையில் தாராளமாக நீர் தெளித்திருந்தார்கள். குளுகுளுவென்று இருந்தது. மூவிலைப் புல் போர்கள் நாற்புறமும் காட்சி அளித்தன. கூட்டு வண்டிகள் நின்றன. கூவா, மர்கிலான், ஃபர்கானா, ஆல்த்தா-ஆரீக்- எல்லா இடங்களிலுமிருந்து வந்திருந்தன அவை. குதிரைகள் அவிழ்த்துவிடப்பட்டிருந்தன. வண்டிக் கூண்டுகளின் நிழல்களிலேயே பல் வண்ணப் பழ மலைகள் குவிந்து கிடந்தன. மென்மையான வெண் சதை உள்ள "அக்குரூக்" ரக முலாம் பழங்கள் ஒரு புறம். செம்மஞ்சள் நிறக் "கிர்க்மா" ரகம் மறுபுறம். கறுக்குக் கறுக்கென்று கடிபடும் மணங் கமழும் சிவப்புச் சதை கொண்ட "கிஸீல்-குரூக்" வேறு புறம். லேசாகத் தொட்டதுமே



பிளந்துவிடத் தயாராய் இருக்கும் பொன்னிற "ஷக்கர் பாலக்" ரகம் இன்னொரு புறம்...

வண்டிகளிலேயே குவிந்திருந்தன செம்பழுப்பு உருண்டைகள். மாணிக்கங்கள் நிறைத்து, பூட்டுவாய் கூடத் தெரியாதபடி அல்லாவாலேயே பூட்டப்பட்ட மந்திரப் பெட்டகங்கள். அவைதாம் மாதுளம் பழங்கள். அவற்றின் கெட்டியான தோட்டுக்கு அடியில் மறைந்திருந்தன பளிங்குப் பட்டைகள் தீர்த்த நூற்றுக்கணக்கான சிறு செம்மணிகள், நறுமணமுள்ள புளிப்பும் இனிப்புமான சாறு நிறைந்த தெய்விகப் பரல்கள் - அற்புதம்!

என் எதிரே வந்தான் என்போலவே நாடோடியாகக் காணப்பட்ட என் வயதுப் பையன் ஒருவன்.

"டேய், உன் பெயர் என்ன?" என்று கேட்டேன்.

"எதற்காக உனக்கு?... நல்லது, அத்தாபாய்."

"நான் ஒரு முலாம் பழம் வாங்கினால் தின்பதில் என்னோடு சேர்ந்து கொள்வாயா?"

"சேர்ந்துகொள்வேன். ஆனால் என்னிடம் பணம் இல்லை."

"பணம் இல்லை என்றால் சந்தையில் என்ன செய்கிறாய்?"

"உனக்கு என்ன வந்தது?"

உண்மைதான்! எனக்கு ஒன்றும் இல்லைதான். வேறொரு சமயமாய் இருந்தால் இப்படி முறைத்ததற்கு அவனை லேசில் விட்டு வைத்திருக்க மாட்டேன். ஆனால் இப்போது என் மனநிலை நன்றாய் இருந்தது. சச்சரவில் மாட்டிக் கொள்ள எனக்கு விருப்பம் இல்லை. தவிர, பணம் இல்லாமல் அவன் சந்தையில் என்ன செய்கிறான் என்பது உண்மையில் எனக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. முலாம் பழங்களையும் தர்பூஸ் பழங்களையும் இறக்குவதில் ஒத்தாசை செய்து அதற்குக் கூலியாக, தூரத் தோட்டத்தில் விளைந்து, நொந்து வெடிப்புக் கண்ட அல்லது முதிராத பழங்களைப் பெற்றுக்கொள்வான்... சரி, உன் வழியே போ, நாடோடி! இன்று நீ எனக்கு ஜோடி ஆக மாட்டாய். நான் இரண்டு கோப்பெக்குகளுக்குச் சிவப்புச் சதையுள்ள சிறு முலாம் பழம் வாங்கி வகிர்ந்து, தன்னந்தனியே முழு மனநிறைவுடன் தின்பேன். பழங்களுக்காக மிகவும் ஏங்கிப்

போனேன்... புகைக்கூடத்தில் பழங்களைக் கண்ணிலேயே காட்ட விடுவதில்லை. தெர்யாக், அபினி, குக்னார் போன்ற லாகிரி வஸ்துக்களைப் புகைப்பவர்கள், தண்ணீரைக் கண்டு பூனை அஞ்சுவதைவிட அதிகமாகப் பழங்களைக் கண்டு பயப்படுகிறார்கள். குளிர்ந்த தண்ணீரைக் கண்டும் அவர்கள் அப்படியே அஞ்சுகிறார்கள். பாலும் தயிரும்கூட அவர்களுக்கு ஆகாது. ஆல்பகோடா, செர்ரி, கோக்-ஸுல்தான் ஆகிய பழங்களையும் மாதுளையைக் கூடக் கண்டாலே காத வழி விலகிவிடுவார்கள் அவர்கள். இவற்றைப் பற்றிப் பேச்சு எடுத்தாலே அவர்கள் திடுக்கிடுவார்கள். தோல் சீவிய பீச் பழத்தைச் சுவைத்துப் பார்க்கும்படி ஒரு முறை ஹாஜி-பாபாவை வற்புறுத்தி இணங்கச் செய்தேன். அட அப்பா! அப்புறம் நடந்ததைச் சொல்ல முடியாது! அவன் காறிக்காறி உமிழ்ந்தான், இரைப்பையே வெளிவந்துவிடும் போல. "த்தூ, நாசமாய்ப் போகிற பயலே! பீச் பழமாம், பீச் பழம்! இது நஞ்சு, தின்பண்டம் அல்ல! பார்! தண்ணீர் உருண்டை! கரையும் கந்தைத்துணி! அதுவாக்கும் உன் பீச் பழம்! த்தூ!" என்று சிடுசிடுத்தான். அப்புறம் நான் அவனை வற்புறுத்தவில்லை. ரொம்பத்தான் வேண்டுமாக்கும் எனக்கு! நானே தின்பேனே!

இப்போது முலாம் பழத்தைச் சப்புக் கொட்டிக் கொண்டு தின்றேன். பிறகு... இன்னும் இரண்டு மாதுளம் பழங்களும் வாங்குவது என்று தீர்மானித்தேன். விருந்துக் கொண்டாட்டம் நல்ல விருந்துக் கொண்டாட்டமாகவே இருக்கட்டுமே! ஃபர்கானாக் குல்லாய் அணிந்து, வெயிலில் கரும் பழுப்பு ஏறிச் சுருக்கம் விழுந்த முகத்தில் நரைத்த மீசையும் தாடியும் வெண்பனிபோல இலங்க நின்று கொண்டிருந்த ஒரு குடியானவனிடம் ஐந்து கோப்பெக் நாணயத்தை நீட்டினேன்.

"மாதுளை தின்க ஆசையாய் இருக்கிறதா, மகனே! நல்லது. காசைப் பையில் போட்டுக்கொள். நான் இன்னும் போணி பண்ணவில்லை. போணி பண்ணுவதற்கு முன்னால் சில்லறை வியாபாரம் செய்ய எனக்கு இஷ்டமில்லை..." - நான் தோள்களைக் குலுக்கிவிட்டு அப்பால் நகர்ந்தேன். அதற்குள் அவன் குனிந்து இரண்டு பெரிய மாதுளைகளை எடுத்து என்னிடம் நீட்டினான். "இந்தா! வாங்கிக்கொள், வாங்கிக்கொள், பயப்படாதே... ஒன்றை நீ தின்னு, மற்றதைத் தம்பிக்குக் கொண்டு கொடு. எனக்காகத்



தொழுகை படியுங்கள், அது போதும். மாதுளைகள் புனிதமானவை, வெகு தொலைவிலிருந்து வந்தவை" என்றான்.

நான் கிழவனுக்குத் தலை வணங்கி "நன்றி" என்று முணுமுணுத்துவிட்டு மாதுளைகளை வாங்கிக்கொண்டேன். அப்புறம் இடுப்புக் குட்டையை இறுக்கிக் கட்டிக்கொண்டு மாதுளம் பழங்களைச் சட்டை மார்புக்குள் வைத்துக் கொண்டு முலாம்பழச் சந்தையிலிருந்து அகன்றேன். ரொட்டிக் கடை வரிசை வழியாகச் செல்கையில் பழைய நகரக் காவலர்களின் தலைவர் ரஹமதுல்லா ஸர்க்காரைக் கண்டேன். அவர் என் தந்தையின் நண்பர். எனக்கு எதிரே வந்தார் அவர். முதலில் நான் நழுவி ஓடப் பார்த்தேன். ஆனால் அதற்குள் அவர் என்னைக் கவனித்து விட்டார். நான் அடக்க ஒடுக்கமாக அவரை அணுகி வணக்கம் தெரிவித்தேன்.

என்னை ஏற இறங்கப் பார்த்து, தலையை அசைத்தவாறு, "அடே மகனே! இவ்வளவு பெரியவன் ஆகிவிட்டாயா நீ! காலந்தான் எப்படி ஓடுகிறது! மிர்ஜா-அகா சௌக்கியமாய் இருக்கிறாரா?" என்று கேட்டார் அவர்.

அவர் கேட்டது என் தகப்பனாரைப் பற்றி! ஆகவே என் விஷயம் இவருக்குத் தெரியவே தெரியாது போலும்...

"அவர் காலமாகிவிட்டார், அத்தா" என்றேன்.

"அடாடா! ஐயோ கஷ்டமே. வருந்தத்தக்க விஷயம். உன் தகப்பனார் நல்லவர், மகனே..." - அவர் சற்று நேரம் மௌனமாய் இருந்தார். "ஊம், ஆண்டவன் அவரைக் காப்பாராக! ஆமாம், தாயார்... சௌக்கியமா?"

"தாயார்... தாயார் நலமே இருக்கிறாள், அத்தா."

"நீங்கள் எத்தனைக் குழந்தைகள்?"

"நானும் தங்கைகளும்..."

"எல்லாம் சிறிசுகள்... ஐயோ கஷ்டமே!" அவர் சிறிது நேரம் பேசாதிருந்தார். இங்கும் அங்கும் கண்ணோட்டினார். பின்பு சட்டைக்குள்ளிருந்து மெலிந்த காடை ஒன்றை எடுத்தார்.

"இந்தா, இதைக் கூண்டில் வைத்து இரை கொடு. ஒருவேளை நன்றாகப் பாடத் தொடங்கும்" என்றார்.

"ஆம், ஆம், உன் தகப்பனார் போனது வருத்தந்தரும் சேதி... இங்கே இன்னோர் ஆள் சாகும் நிலையில் இருக்கிறான். கராபாய்-தாஜிக் என்பவனைத் தெரியுமா உனக்கு? தெரியாதா? வாலிபன்... இளமை முறுக்கும் யோசனையின்மையும்தான் தெரிந்தவை ஆயிற்றே. பந்தயம் கட்டினான். முதுகெலும்பு பூட்டு கழன்றுவிட்டது. அவனை மருத்துவச் சாலைக்குத் தூக்கிக் கொண்டு வந்திருக்கிறார்கள். பிழைக்க மாட்டானோ என்று அஞ்சுகிறேன்..."

"அவன் முதுகெலும்பு பூட்டு கழன்றது எப்படி, அத்தா?"

"அதுதான் சொல்லுகிறேனே, மளிகைக் கடைப் பணக்காரப் பையன்களோடு பந்தயம் பேசினான் - கண் படாமல் காப்பதற்கான மணிகள் நிறைந்த பெரிய மூட்டையைத் தனி ஆளாக வண்டியிலிருந்து எடுத்துக் கொட்டகையில் கொண்டு சேர்ப்பதாக... அந்த மூட்டையோ பத்து மணங்குக்கும் மேல் கனமானது! பணக்காரப் பையன்களிடம் பந்தயம் கட்டலாமா எங்காவது? ஏழையை அங்கவீனன் ஆக்குவது அவர்களுக்கு வெறும் வேடிக்கைதானே. அடாடா..."

காவலாட்கள் பெரும்பாலும் தாஜிக்குகள். இந்தக் கராபாய் - தாஜிக் அவர்களில் ஒருவன் போலிருக்கிறது. கடை வரிசைகளில் சரக்கு ஏற்றி இறக்கும் வேலையையும் இவர்கள் செய்துவந்தார்கள். ரஹ்மதுல்லா - ஸர்க்கார் அவர்கள் எல்லோருக்கும் தலைவராக இருந்தார். அவர்கள் அவரை வெகுவாக மதித்தார்கள். கராபாய் - தாஜிக்குக்கு ஏற்பட்ட விபத்து அவரை உலுக்கி எடுத்துவிட்டது.

"நல்லது, மகனே. போய்ப் பார்க்கிறேன் அவனுக்கு என்ன ஆயிற்று என்று. ஒழிந்தபோது எங்கள் வீட்டுக்கு வா" என்றார் அவர்.

நான் சிந்தனையில் ஆழ்ந்தவனாக நின்றேன். இனி எங்கே போவது? அப்போது கர்னாய், ஸுர்னாய் வாத்தியங்களின் இசை என் செவிகளை எட்டியது. என் கால்கள் தாமாகவே அந்தத் திக்கில் சென்றன. ஸர்க்கஸ்! அப்புறம் நான் நடை வேகத்தை மட்டுப்படுத்தினேன். சுற்றுவட்டாரத்துச் சிறுவர்கள் எல்லாரும் அங்கே குழுமி இருப்பார்களே. எல்லோரும் என்னைப் பார்ப்பார்களே!... அட, என்ன வேண்டுமானாலும் ஆகிவிட்டுப் போகிறது!



ஆம், அவர்கள் மெய்யாகவே யூப்பாத்தவின் ஸர்க்கஸ் காரர்கள்தாம். அவர்களுடைய அலங்கரித்த வண்டிகள் சோர்ஸா சதுக்கத்தின் நடுவில் நின்றன. ஒரு வண்டியில் இசைஞர்கள் மக்களைத் திரட்ட முழுமூச்சாக முயன்று கொண்டிருந்தார்கள். இரண்டு கர்னாய் வாத்தியக்காரர்கள், ஸுர்னாய் ஊதும் ஒடிசலான ஒருவன், டமாரம் அடிப்பவன் ஒருவன் ஆகியோர் கொண்டது அந்த இசைக்குழு. கர்னாய்க்காரர்கள், பார்ப்பவர்கள் கண்கள் முன்பு இதோ வெடித்துவிடுவார்கள் போலத் தங்கள் வாத்தியங்களை ஊதினார்கள். ஸுர்னாய்க்காரனோ, முகத்தைக் கூட வலிக்காமல் அனாயாசமாக ஊதித் தள்ளிக் கொண்டிருந்தான். ஸுர்னாயின் இனிய ஒலிகள் மட்டும் என் காதுகளில் படாமல் இருந்தால் ஸுர்னாய்க்கார ஆசாமி ஊதுவது போல வெறுமே போக்கு காட்டுகிறான் என்று நினைத்திருப்பேன். அவன் மிக ஒட்டலாக இருந்தபடியால் அவனுடைய உடல் ஊத முடியவில்லையோ ஒருவேளை? ஆனால் டமாரக்காரன் இரு மடங்கு உற்சாகத்துடன் வெளுத்து வாங்கினான். இரண்டு அல்ல, பத்து கோல்கள் இருந்ததுபோல டமாரத்தை அடித்து முழக்கினான்...

பக்கத்து வண்டியில் கோமாளிகள் வேடிக்கை காட்டிக் கொண்டிருந்தார்கள். கற்பனை செய்யவே முடியாதபடி அத்தனை விதம் விதமான நிறங்கள் கொண்ட தொப்பிகள். உலகத்தில் துணிகளுக்கு ஏற்றும் எல்லா வகைச் சாயங்களும் உள்ள துணித் துண்டுகளை ஒட்டுப் போட்டுத் தைத்திருந்தன அந்தத் தொப்பிகள். அவர்களுடைய முகங்களோ, முகங்களே அல்ல, வண்ணப் பூச்சும் மாவும் கலந்த முகமூடிகள். இந்த முகமூடிகளின் நட்ட நடுவே துருத்தியிருந்தன மூக்குகள். தோளுக்கு அடியில் அவற்றால் சொறிந்துகொள்ளலாம் போல அவ்வளவு நீளமானவை. இந்த நேர்த்திகளுக்கெல்லாம் சிகரம் வைத்தாற் போலத் தொப்பிகளுக்கு அடியே தொங்கின நீண்ட மஞ்சள் முடிகள்! எனக்கு மட்டும் இந்தமாதிரி டோப்பா இருந்தால் எவ்வளவு நன்றாய் இருக்கும்... அவர்களுடைய மேலங்கிகள் கிடைத்தாலும் நான் வேண்டாம் என்று மறுக்கமாட்டேன். பட்டைகள் போட்ட நீண்ட மேலங்கிகள் அவை. வெள்ளிப் பிறைகளும் தங்க நட்சத்திரங்களும் ஏராளமாக அவற்றை அணி செய்தன. ஆனால் எல்லாவற்றையும் விட எனக்குப் பொறாமை ஊட்டுவது பலவகை வேடிக்கைகள் செய்யவும் செப்படி

வித்தைகள் காட்டவும் அவர்களுக்கு உள்ள திறமைதான். அந்த வித்தைகளைப் பார்த்து வாய் பிளந்து மலைத்து நிற்க வேண்டியிருந்தது. ஆகாகா! இவற்றைக் கற்றுக்கொள்ள மட்டும் அல்லா எனக்கு வாய்ப்பு அளித்தால் இத்தகைய திறமையை வைத்துக்கொண்டு நான் துயரையே அறியாதவனாய் இருப்பேன். பிரதேசத்துச் சிறுவர்களிடையே பெரு மதிப்பு அடைந்திருப்பேன் என்பது ஒரு புறம் இருக்க, ஏராளமாகப் பணமும் சம்பாதித்திருப்பேன். இதோ முட்டையை வாயில் போட்டுக் கொண்டு காது வழியாக எடுக்கிறேன் பார் என்று பந்தயம் கட்டுவதைவிட எளிது எது? ஒரு கோமாளி இதையேதான் செய்தான்...

இன்னொரு வண்டியில் ஒரு ருஷ்ய மாது ஐந்து நாய்களுக்குப் பெண்கள்போல உடைகள் உடுத்தி, பாடிக் கொண்டே அவற்றை நடனம் ஆட வைத்தாள்.

"காதல் கொண்டேன், அம்மாக்கண்ணே,
காதல், காதல் கொண்டேன் நான்,
ஜன்னல் வழியே வெளியே பார்ப்பேன்,
என்றன் அருமை அம்மாக்கண்ணே.
தம்ளரிலேயே தேநீர் குடிப்பேன்
அம்மாக்கண்ணே எப்போதும்..."

இப்படிப் பாடினாள் அவள். அசட்டுத்தனமான பாட்டு. ஆனால் நாய்களுக்கு இது போதுமே. எந்தச் சொற்களின்படி ஆடினால் என்ன, அவற்றுக்கு எல்லாம் ஒன்றுதானே!

நாலாவது வண்டியில் அரைநிர்வாணமான ஒரு பெண் கால்களாலும் கைகளாலும் பல ஆட்டங்கள் காட்டிக் கொண்டிருந்தாள். ஆனால் எனக்கு என்ன தோன்றிற்று என்றால் தன் பகட்டான சராய்களையும் பளிச்சிடும் கொக்கிப் பொத்தான் களையும் காட்டி டம்பம் அடித்துக்கொள்வதுதான் அவளுடைய முக்கிய நோக்கம் என்பதே. ஒரு பயில்வான் ஒவ்வொரு மணங்கு எடையுள்ள நான்கு குண்டுகளை - அவை ஒவ்வொரு மணங்கு எடையுள்ளவை என்று அவனே கத்தினான்! - ஒன்றன்பின் ஒன்றாக மேலே எறிந்து பிடிப்பதும் மறுபடி எறிவதுமாக இருந்தான். இன்னும் ஒரு பேர்வழி, உற்சாகமுள்ள குதிரை பின்னங்கால்கள்மேல் நிற்பதையும் அது பார்வையாளர்களுக்கு வணக்கம் தெரிவிப்பதையும் ஒரு வட்டத்தில் காட்டிக் கொண்டிருந்தான். அவன் குதிரையை அப்படியே ஒத்திருந்தான் ஆதலால் எனக்கு அவன்மேல் ஏறிச் சவாரி செய்ய ஆசை உண்டாயிற்று.

இந்த விந்தைக் காட்சிகள் எல்லாவற்றுக்கும் நடுவே ஒரு வண்டியிலிருந்து இன்னொரு வண்டிக்கு மாறியவாறு சுற்றிவந்து கத்திக் கொண்டிருந்தான் எல்லாருக்கும் தெரிந்த விதூஷகன் ரஃபீக்:

"தெரியாதவர்கள் தெரிந்துகொள்ளுங்கள்! தெரிந்தவர்கள் மற்றவர்களுக்குச் சொல்லுங்கள்! நமது மக்களுக்கு நன்கு தெரிந்த யூப்பாத்தவ்பாயும் அவருடைய மகள் மைராம்ஹோனும் வண்டித் தங்கிடத்துக்குப் பக்கத்தில் ஸர்க்கஸ் அமைத்திருக்கிறார்கள்! கேட்டீர்களா? ஸர்க்கஸ்! கட்டணங்கள் ஐந்து கோப்பெக் முதல் ஒரு தன்காவரை! வாருங்கள்! வாருங்கள்! வராவிட்டால் வருத்தப்படுவீர்கள்!..."

நான் கூட்டத்தில் நுழைந்து முன் வரிசைக்குப் போய் இசைஞர்களுக்கு எதிரே நின்றுகொண்டு முழுத் திருப்தி அடைந்தேன். மாதுளம் பழங்கள் நினைவுக்கு வரவே அவற்றில் ஒன்றை எடுத்து அதிலிருந்த சிறு கீறலைக் கண்டு பிளந்து வாய்க்குள் பிழிந்துக்கொண்டேன். புளிப்பும் இனிப்புமான சாறு என் வாய்க்குள்ளும் மோவாய் மேலும் வழிந்தது. பல்லில் சில விதைகள் விழுந்தன. நான் புளிப்பாலும் மனநிறைவாலும் முகத்தைச் சுளித்துக்கொண்டு அவற்றைச் சவைக்கலானேன். கர்னாய்களும் ஸுர்னாயும் முன்போல உற்சாகமாக ஒலிக்கவில்லை என்பதை முதலில் நான் கவனிக்கவில்லை. அவற்றிலிருந்து குவாக்குவா என்ற ஒலிகள் கிளம்பின. திடீரென்று ஒரு கர்னாய் வாத்தியக்காரன் - தாடியற்ற கிழவன் - வாசிப்பதை நிறுத்திவிட்டு, தோளில் போட்டிருந்த கைக்குட்டையை எடுத்து, கன்னங்களையும் உதடுகளையும் துடைத்துக் கொண்டான், துப்பினான்.

"டேய், நாசமாய்ப் போகிற பயலே!... உன்னைத்தான் சொல்கிறேன்!" என்று கத்தினான்.

அவன் யாரைக் கண்டு கத்துகிறான் என்று பார்ப்பதற்காகத் திரும்பினேன்.

"என்னடா நெளிகிறாய்? உன்னைத்தான் சொல்லுகிறேன்! அப்பாலே போ. வேறு எங்காவது போய் உன் மாதுளையைத் தின்னு. உனக்கு ஒன்றுமே செரிக்காமல் போக!"

அட வம்பே! ஊது கருவிகள் வாசிப்பவர்கள் முன்னால் மாதுளை போன்ற புளிப்புப் பழங்களைத் தின்னக்கூடாது என்பதை நான் மறந்தே போனேன். யாரேனும் புளிப்புப் பழங்கள் தின்பதைக் கண்டதும் அவர்கள் நாவில் நீர் ஊறத் தொடங்கும், ஊதுவது முடியாமல் போய்விடும்.. எனக்கு இது தெரியும், ஆனால் மறந்துவிட்டேன்! ஒரு கோமாளி வண்டியிலிருந்து குதித்து என்னைக் கூட்டத்திலிருந்து வெளியே நெட்டித் தள்ளினான். நானோ கண்களைப் பரக்க விழித்து அவனை விழுங்குபவன் போலப் பார்த்தேன். முட்டையை வாய்க்குள் போட்டுக் காது வழியாக எடுத்தானே, அதே கோமாளி இவன்...

விரட்டி விட்டார்களாக்கும், போனால் போகிறது! எனக்கும் ஸர்க்கஸ் அலுத்துப்போய்விட்டது. அதிலும் இந்த விளம்பர நிகழ்ச்சி முடிவை நெருங்கிவிட்டது. கோமாளியின் மஞ்சள் தலைமயிரை மறுபடி நினைத்துப் பார்த்தவன், தலையைக் குலுக்கினேன். நான் யுகக்கணக்காக முடி வெட்டிக்கொள்ள வில்லை என்று நினைவுவந்தது. மயிர்வினைஞனிடம் போனால் என்ன? முடி சிங்காரிக்கும் கடை இதோ மஹகமா மசூதியின் பக்கத்தில்தான் இருக்கிறது. அடையாளப் பலகைக்குப் பதில் மரத்தின் மேல் தொங்கிற்று அழுக்கேறிய சிவப்பு முன்தாங்கித் துணி. வெகு தூரத்திலிருந்தே அதைக் காண முடிந்தது. அங்கே முடிவெட்டுபவர்கள் இருப்பதை ஜனங்கள் உடனே கண்டு கொண்டார்கள்.

முடிவெட்டும் கடையில் சிலர் உட்கார்ந்திருந்தார்கள். ஒருவன் கழுத்தின்மேல் நான்கு அட்டைகள் ஒட்டிக் கொண்டிருந்தன. இன்னொருவன் கன்னப் பொருத்துக்களில் இரத்தம் வடிப்பதற்கான கொம்புக் குழல்கள் இணைக்கப்பட்டிருந்தன. எருது அல்லது பசுவின் அசல் கொம்புகளைக் குடைந்து, இரு புறமும் திறப்புள்ள இந்தக் குழல்கள் செய்யப்பட்டன. மயிர் வினைஞன் பொருத்துக்களில் கீறி, இரத்தம் வடிவதற்காக இந்தக் குழல்களைப் பொருத்துவான். கொம்புகள் பொருத்தப்பட்ட மனிதன், சிவந்த முகமும் பருத்த, செங்குத்தான நெற்றியுமாக, எருதுபோலவே காணப்பட்டான். அவனும் அட்டைகளை



அப்பிக் கொண்டிருந்தவனும் முனகினார்கள். அவர்கள் இருவரும் கதவு அருகில் இருந்த தாழ்ந்த பெஞ்சியில் உட்கார்ந்திருந்தார்கள். மயிர்வினைஞன் மூன்றாவது ஆளின் கடைவாய்ப் பல்லைப் பிடுங்குவதில் முனைந்திருந்தான். அந்த ஆள் கரையில் கிடக்கும் மீன் போலத் திறந்தவாயுடன் அசையாமல் இருந்தான். அவன் விழிகளும் மீனின் கண்களையே போல வெளித் துருத்தியிருந்தன.

கறுப்பு இரும்பு விளிம்பு கட்டிய மூக்குக் கண்ணாடியை நாசி நுனியில் தாழ்த்திக்கொண்டு கிழ நாவிதன் என்னைப் பார்த்தான்:

"என்ன தம்பீ, முடி வெட்டிக்கொள்ள வேண்டுமா? தலையை மழிக்க வேண்டுமா? இதற்குக் கட்டணம் இரண்டு கோப்பெக்குகள். காசு இருக்கிறதா?" என்று கேட்டான்.

"இருக்கிறது."

"அப்படியானால் இங்கே வெட்டியாக நின்று கொண்டிராதே. குட்டைக்குப் போய்த் தலைமயிரை நன்றாக நனைத்துக்கொள்."

மயிர்வினைஞர்கள் அந்தஸ்து உள்ளவர்கள், படித்தவர்கள், பல தொழில்களில் தேர்ந்தவர்கள். முடி வெட்டுவது, மழிப்பது, தாடி மீசைகளைச் சீர்படுத்துவது, கேசத்துக்கு வண்ணம் ஏற்றுவது ஆகிய தொழில்களோடு கூடவே பலவித நோய்களையும் ஆற்றி வந்தார்கள் அவர்கள். இரத்தம் வடிப்பது, அட்டைகளை உறிஞ்ச விடுவது, பற்களைப் பிடுங்குவது, பேதிக்குக் கொடுப்பது ஆகியவை எல்லாம் அவர்களுடைய கடமைகளில் சேர்ந்தவை. சுன்னத்து செய்வதுதான் இவற்றில் எல்லாம் அதிக வருவாய் தருவது. எனவே வீண் வேலை சுமத்தும் என்போன்ற வாடிக்கைக்காரர்கள் வந்தால் கண்டிப்புள்ள மயிர்வினைஞர்கள் தங்கள் கைகளால் அவர்களுடைய முடி நனைக்க ஒருப்படுவதில்லை. குட்டைக்குப் போய் நனைத்துக்கொண்டு வரச் சொல்லி விடுவார்கள்.

நான் மஹகமா மசூதியின் முகப்புக்குப் போய், அதன் நடுவிலிருந்த குட்டை நீரால் தலையை நன்றாக நனைத்துக் கொண்டு, கவனமாக முடியைத் தேய்த்தேன். முடிவெட்டும் இடத்துக்கு நான் திரும்பியபோது கடைவாய்ப் பல் பிடுங்கப்பட்டு விட்டது, அதற்கு உடையவன் ஒரு பக்கம் நின்று ஐயோ அப்பா என்று முனகியவாறு இரத்தத்தை உமிழ்ந்து கொண்டிருந்தான்.

மயிர்வினைஞனோ, எவனோ கிழவனுடைய மீசையைக் கத்தரித்துச் சீர்படுத்துவதில் முனைந்திருந்தான். அவன் என்னை ஓரக்கண்ணால் மறுபடி பார்த்தான்.

"என்ன நிற்கிறாய்? மயிரைத் தேய்த்துவிடு. இல்லாவிட்டால் உலர்ந்து போகும்!" என்றான்.

கடைசியில் என் முறையும் வந்தது. சிவப்பு நிற அழுக்குத் துணி என் கழுத்தைச் சுற்றிக் கட்டப்பட்டது.

"அட அழுக்குப் பிண்டமே, தலையைப் படுமோசமாக நனைத்துக் கொண்டிருக்கிறாயே!'' என்று சொல்லி, கழுவுவதற்கான நீர்ப் பாத்திலிருந்து சிறங்கை நிறையத் தண்ணீரை எடுத்து என் தலையில் தெளித்து, தானே என் முடியைத் தேய்த்தான் நாவிதன். அவன் விரல்கள் ஒவ்வொன்றிலும் மோதிரம் இருந்தது. தேய்க்கும்பொழுது பட்டை பட்டையாக என் மண்டைத் தோலை உரித்துவிட்டான் அவன். பாக்கி வேலையைச் செய்தன ஈக்கள். கூட்டங்கூட்டமாக அவை என் புண்கள் மேல் பாய்ந்து மொய்த்தன - விழுந்த குதிரையை ஓநாய்கள் தாக்குவதுபோல. முடி வெட்டும் கடையில் உள்ள ஈக்கள் வியப்பூட்டுபவை. எதற்கும் அஞ்சாதவை! கடைக்காரனுடன் அவை பேசி வைத்துக் கொண்டிருக்கும் என்று நினைக்கிறேன். மலிவான வாடிக்கைக்காரர்களையே அவை மொய்த்துப் பிடுங்கின.

என் மண்டைத் தோலைப் பாதி வழற்றி எடுத்தபின் (மயிரை நன்றாக நனைப்பது என்று இதைத்தான் அவன் குறிப்பிட்டான்) மயிர்வினைஞன் முடிவில் வேலை தொடங்கினான். கை அகல அலகுள்ள மழி கத்தியால் கன்னப் பொருத்துக்களிலிருந்து மழிக்கலானான். ஒவ்வொரு தரமும் அவன் மழிக்கையில் நான் துணுக்குற்று நடுங்கினேன். ஏனென்றால் கிட்டத்தில் பார்ப்பதற்கு அது மழிகத்திபோல அல்ல, ரம்பம்போலக் காணப்பட்டது. அலகு விளிம்பில் பற்கள் வைத்திருந்தன. ஆனால் ரம்பத்தையும் கூடத்தான் ஆட்கள் எப்போதாவது தீட்டிக் கூராக்கிக் கொள்வார்கள். இவனோ, யாரோ ஒடிசல் வாடிக்கைக்காரனை ரம்பத்தால் இரு கூராக வகிர்ந்த பின்பு அதை ஒரு தரங்கூடத் தீட்டவில்லை போலிருந்தது. நான் காதைப் பிளக்கும் கத்தலுடன் துடித்துத் துள்ளிய போதெல்லாம் அவன் கோபத்துடன் என்னை



இருக்கையில் தள்ளி, "அசையாமல் உட்கார்ந்திரு! கொஞ்சங்கூடப் பொறுமை இல்லாத பையன்! சைத்தான் உள்ளேயிருந்து ஆட்டி வைக்கிறானா என்ன?" என்றான்.

மழிப்பு ஒரு வகையாக முடிந்ததும் எனக்குச் சொர்க்கத்துக்கே வந்துவிட்டதுபோல் இருந்தது. இத்தனை சித்திரவதைகளுக்குப் பின் உயிர் பிழைத்திருப்பது சாத்தியம் இல்லை. மாபெரும் தியாகி என்ற முறையில் நான் பரலோகம் சேர்ந்துவிட்டேன் போலும். ஆனால் - நற்காலமோ, கெட்ட காலமோ - நான் இன்னும் முடிவெட்டும் கடையிலேயே இருந்தேன். நான் எழுந்து நின்றதுமே சேணக் கடை வரிசையின் பக்கத்திலிருந்து கூட்டத்தின் இரைச்சல் கேட்டது. நான் வாயிலுக்குப் பாய்ந்தேன் - என்ன நடக்கிறது என்று பார்ப்பதற்காக. ஆனால் கோழிக்குஞ்சு மேல் பருந்து பாய்வதுபோல என்மேல் பாய்ந்தான் நாவிதன். என் சட்டை மார்பைப் பிடித்துக்கொண்டான் அவன்.

"அட கழிசடைப் பயலே! கடுக்காய் கொடுக்கப் பார்க்கிறாயா? முதலில் காசைக் கீழே வை, அப்புறம் போய்த் தொலை. இது சுத்தமான இடம். சுத்தன்-ஸுலைமானை ஏமாற்றுவது கூடாது. புரிந்ததா, கீழ்மகனே? அவனை ஏமாற்றியவன் தலையில் வங்கு படரும், பொடுகு வைக்கும், சொறி பிடிக்கும். மயிர் எல்லாம் கொட்டிப் போகும்" என்று கத்தினான்.

வங்கும் சொறியும் இன்னும் இவை போன்ற நோய்க்கிருமிகளும் இந்த மிகத் துப்புரவான இடத்தில் உள்ள முன்றாங்கியிலும் சுற்றிக் கட்டும் துணியிலும் வேண்டிய அளவு இருக்கின்றன என்று சொல்ல வாயெடுத்தேன். ஆனால் பேசுவதற்கு நேரம் இல்லை. கிழவனுக்கு அவன் கேட்ட இரண்டு கோப்பெக்குகளைக் கொடுத்துவிட்டு, கத்தலும் கூப்பாடும் வந்த இடத்துக்கு விரைந்தேன்.

புத்தகக் கடைவரிசைகளும் நமுதா, கத்திகள், சேணங்கள் ஆகியவை விற்கும் கடைவரிசைகளும் என் அருகே பளிச்சிட்டு மறைந்தன. ஜனக்கூட்டமோ, சொல்லி முடியாது. எல்லோரும் காட்டுக் கூப்பாடு போட்ட வண்ணம் கழுத்துக்களை முன்னே நீட்டியவாறு விரைந்து ஓடினார்கள். ஆட்களுக்கு இடையே வழுகி, இடித்துப் புகுந்து நான் சந்தைச் சதுக்கத்தை அடைந்தேன். சந்தையின் ஊடாக ஓடிய ஜங்காஹ் ஓடைப் பாலத்தின்

பக்கத்தில் இந்த அமளி குமளிக்கெல்லாம் காரணத்தைக் கண்டேன். டமாரக் கடை வரிசையின் புகுவாயில் அருகே, வாட்டசாட்டமான சில இளைஞர்கள் ஓர் ஆளைப் பிடித்துக் கரகரவென்று இழுத்து வந்தார்கள். பகட்டாக உடை அணிந்த அந்த ஆள் வடிவமைந்த மேனியும் கரிய மீசை தாடியும் கொண்டவன். அவனுக்குச் சுமார் நாற்பது வயது இருக்கும். அவனுடைய சட்டையும் உள்கோட்டும் சீனப் பட்டில் தைத்தவை. ரோஜாப் பட்டுக் குட்டை இடையை அலங்கரித்தது. மார்பில் தொங்கியது நீண்ட தங்கக் கடிகாரச் சங்கிலி. கோக்கந்த் வர்ணக் குல்லா தலைமேல் இருந்தது. பாலிஷ் போட்ட ஜோடுகள் புழுதியின் ஊடே பளபளத்தன. பிரபல பாடகி ஆயஷா -யல்லாச்சி என்பவள் வீட்டின் செதுக்குச் சித்திர வேலைப்பாடுள்ள இரட்டைக் கதவு வாயிலிலிருந்து அந்த ஆளை இளைஞர்கள் அப்போதுதான் பிடித்து இழுத்துவந்தார்கள் போலும். அது யாருடைய வீடு என்பது நினைவுக்கு வந்ததும் அகப்பட்டவன் யார் என ஊகித்துக்கொண்டேன். பாடகி ஆயஷாவின் கணவன், பழைய நகரத்தின் பெயர் பெற்ற டம்பாச்சாரி ரஹ்மத்-ஹாஜி போலும் அவன்! உண்மை அதுவேதான்! அவன் முடிந்தவரை எதிர்த்துப் பார்த்தான். சுற்றிலும் உள்ள கூட்டமோ, "இழுத்துக்கொண்டு போ இவனை, நெட்டித் தள்ளு! இவன்தான் கூட்டிக்கொடுக்கிற பாதகன்! பெண்களைக் கடத்தும் போக்கிரி! இழுத்துப் போ இவனை!" என்று கூச்சலிட்டது.

ஹாஜியை இழுத்துச் சென்ற இளைஞர்கள் அவன் கைகளையும் கால்களையும் பற்றித் தூக்கிச் சிறிது தூரம் கொண்டு போனார்கள். பின்பு தானிய மூட்டைபோல அவனை வீசி எறிந்தார்கள். ஹாஜி தரையில் மடாரென்று மோதிக் கொண்டான் என்றாலும் சட்டெனத் துள்ளி எழுந்து, வலக் கையை உயர்த்தி, கூட்டத்தைப் பார்த்து, "முஸல்மான்களே! பொதுமக்களே!" என்று கத்தினான்.

இதற்குள் கசாப்புக்காரன் போன்று உடை அணிந்திருந்த முப்பது வயது உள்ள பூதாகரமான ஓர் ஆள் ஹாஜி மேல் பாய்ந்து தலையால் அவனை முட்டினான். பாவம் ஹாஜி குட்டிக்கரணம் அடித்து விழுந்தான். "அடியுங்கள் இந்தக் கடைகெட்ட கூட்டிக் கொடுக்கியை!" என்று கூட்டம் மறுப்படி



கத்திற்று. ஆட்கள் ஹாஜியின் கால்களைப் பிடித்து நாற்சந்திக்கு இழுத்துச் சென்றார்கள். கோப வெறி பிடித்த கூட்டத்தை எந்தச் சக்தியாலும் சமாதானப்படுத்த முடிந்திராது. அந்தத் துர்ப்பாக்கிய சாலியை நெருங்க வாய்த்த ஒவ்வொருவனும் அவனை முட்டியால் குத்துவது அல்லது உதைப்பது தன் கடமை என்று கருதினான். தொலைவில் இருந்தவர்கள் அவனைக் கற்களாலாவது அடிக்க ஆசைப்பட்டார்கள். அவர்கள் எறிந்த கற்கள் மற்றவர்கள்மேலும் பட்டன. இதனால் பொதுக் குழப்பமும் சீற்றமும் மேலும் அதிகரித்தன. ஆத்திரமூட்டப்பட்ட குளவிக்கூடு போல் இருந்தது கூட்டம். குளவிகள்தாம் கொஞ்சம் பெரியவை. குதிரைப் போலீசாரும் காலாட்போலீசாரும் வந்தார்கள். அவர்கள் ஊதல்களை ஊதினார்கள், உயரே குண்டுகள் சுட்டார்கள், சாட்டைகளால் அடித்துக் கூட்டத்தைக் கலைக்க முயன்றார்கள். எதுவும் பயன் அளிக்கவில்லை. உண்மையில் அப்பாவி ஹாஜியின் உயிர் வெகு நேரத்துக்கு முன்பே பிரிந்துவிட்டது. ஆட்களோ அவன் உடலை இன்னும் அடிப்பதும் உதைப்பதும் வதைப்பதுமாக இருந்தார்கள். அரை மணி நேரத்துக்கும் மேல் கழிந்த பிறகே கூட்டம் கலையத் தொடங்கிற்று. ஆட்கள் குறையக் குறைய அவர்கள் அவசர அவசரமாக அப்பால் சென்றார்கள்.

"ஏன் அப்பா, இப்படி அடித்துக் கொல்லப்பட்டவன் யார், தெரியுமா? என்ன செய்தான் அவன்?" என்று ஒருவன் மற்றவனிடம் வினவியதை என் காதுகளால் கேட்டேன்.

இவர்களே ஆக்கங்கெட்ட ஹாஜியை முதலில் அடித்தவர்களாக இருக்கலாம்.

உரையாடல்களை உற்றுக் கேட்டவாறு இன்னும் வெகு நேரம் இங்குமங்கும் நடமாடிக் கொண்டிருந்தேன். கொஞ்சங் கொஞ்சமாக ஹாஜியின் கதை முழுவதையும் அறிந்து கொண்டேன்.

## அத்தியாயம் 14

# ரஹ்மத்-ஹாஜியின் கதை

ஆயஷா-யல்லாச்சியின் கணவன் ரஹ்மத்-ஹாஜி சுற்றிப் பார்த்து இன்பப் பொழுது போக்குவதற்காக இந்த ஆண்டுக் கோடையில் ஃபர்கானா போயிருந்தான். தான் பணக்காரன் என்றும் மணம் செய்துகொள்ள விரும்புவதாகவும் அங்கே வதந்தி பரப்பினான். இந்தக் காரியம்தான் தடைப்படுவதே கிடையாதே. ஒரு செம்மானின் மகளை ஆட்கள் அவனுக்குப் பெண்பேசி மணம் முடித்து வைத்தார்கள். அவள் இளம் விதவை. லத்தீஃபா-ஹோன் என்று பெயர். மர்கிலானில் அவளோடு சில நாட்கள் இருந்தபின் சீர்வரிசைகளுடன் அவளைத் தாஷ்கந்துக்கு அழைத்து வந்தான் ஹாஜி. ஆனால் அவளை வீட்டுக்கு இட்டு வருமுன் தான் மட்டும் போய் மூத்த மனைவி ஆயஷாவிடம் கெஞ்சி மன்றாடினான்:

"என் அன்பே, இளமைக் கிறுக்கில் நான் தவறு செய்து விட்டேன். முட்டாள்தனம் பண்ணிவிட்டேன். நீ என்னை காட்டிக்கொடுத்துவிடாதே. ஒரு வாரம் போல அவளோடு வாழ்ந்துவிட்டு, நல்லபடியாக, தக்க முறைப்படி திருப்பி அனுப்பி விடுகிறேன். அதுவரையில் நீ என் "சகோதரியாக" இரு. என்னை அவமானத்துக்கு உள்ளாக்கிவிடாதே, என் கண்ணே. நான் இதற்குக் கைம்மாறு செய்வேன். சாகும்வரை உனக்கு விசுவாசமுள்ள நாயாக இருப்பேன். நீ மட்டும் நான் சொல்கிறபடிச் செய். அப்புறம் பணம் சேர்த்து, அடுத்த தடவை மெக்காவுக்கு உன்னையும் அழைத்துக்கொண்டு ஹஜ் யாத்திரை செய்வேன், சத்தியமாக - அல்லா எனக்குச் சக்தி அருள்வாராக.... உலகத்தைச் சுற்றிப் பார்ப்போம், எல்லாப் பாவங்களையும் கழுவி விட்டுத் தூயவர்களாகத் திரும்புவோம்! சரிதானா, ஆயஷா-ஹோன்? நீ மட்டும் என்னை அவமானப்படுத்திவிடாதே. நீ காலைக் கழுவின நீரால் தேநீர் போட்டுக் குடிக்கவும் நான் தயார்..."



அவன் விடாமல் கெஞ்சிக் கூத்தாடவே, ஆயஷா சற்று சிந்தனை செய்துவிட்டு, எப்படி வேண்டுமானாலும் தொலைந்து போ என்னும் பாவனையில் கையை ஆட்டினாள். ரஹ்மத்-ஹாஜி அந்த மர்கிலான் அழகியை அவள் வீட்டுக்கு அழைத்து வந்தான். தன் திருமணத்தைக் கொண்டாடுவதற்காகச் சிறுவிருந்து கொடுத்தான். இப்படி நாட்கள் கழிந்தன. புதுமோகம் பழைய காதலைப் புறக்கணிக்கச் செய்யும் என்பார்கள். இங்கே அப்படியே நடந்தது. ரஹ்மத்-ஹாஜி ஆயஷாவுக்குப் பிடிகொடுக்காமல் நழுவத் தொடங்கினான். சில வேளைகளில் லத்தீஃபா-ஹோன் முன்னிலையில் அவளை எள்ளி நகையாடவும் துணிந்தான். இளையவளுக்கு உண்மை தெரியாது. ஆயஷா பொறுத்துப் பொறுத்துப் பார்த்தாள். கடைசியில் அவளுடைய சகிப்புத்தன்மை தகர்ந்துவிட்டது - குடம் அளவுக்கு மேல் நிரம்பிவிட்டது. ஒருநாள் ரஹ்மத்-ஹாஜி வீட்டில் இல்லாதபோது அவள் லத்தீஃபா-ஹோனை அருகே அழைத்து, பின்வருமாறு சொல்லலானாள்:

"ஏன் அம்மா, தங்கச்சீ! உங்கள் மர்கிலானில் எல்லோருமே இந்த மாதிரி வெகுளிகளா அல்லது நீங்கள் மட்டுந்தாம் இப்படியா? நீங்கள் இந்த வீட்டுக்கு வந்து மூன்று மாதங்கள் ஆகின்றன. இன்னும் நீங்கள் எதையுமே கவனிக்கவில்லையா? உங்கள் ஹாஜி என் சகோதரரே அல்ல, கணவர்! ஆகவே, நீங்களும் என் மதனி அல்ல, சக்களத்தியாக்கும். வீட்டுச் செலவு எல்லாம் என் தலையில்தான் சுமந்திருக்கிறது. ரஹ்மத்-ஹாஜியை நான் மிகவும் சீராட்டிக் கெடுத்துவிட்டேன். அதனால்தான் அவன் கொழுப்பு ஏறிப்போய் மதம் பிடித்துத் திரிகிறான்! நான் தாஷ்கந்த் நகரில் எல்லோரிலும் புகழ்பெற்ற பாடகி என்பது உங்களுக்குத் தெரியாதா என்ன? ஸவ்ரீ, ரிஸால், ஃபாத்திமா, எல்லோரும் என் மாணவிகள். திருமணக் கொண்டாட்டங்கள் எல்லாவற்றுக்கும் போய், பொழுது விடியும் வரை பாடுவேன், ஆடுவேன். ஜமீன்தார் மகன்களுக்கும் முக்கியமான பணக்காரர் களுக்கும் கப்பரியர்கள் கூட்டத்துக்கும் உவப்பாய் இருக்கும்படி உயிரைக் கொடுத்துப் பாடுபடுவேன். இப்படி என்னையே தாழ்த்திக் கொண்டு சிரமப்பட்டு நான் சம்பாதிக்கிற பணத்தையே ரஹ்மத்துல்லா-ஹாஜி மானாங்காணியாகச் செலவழிக்கிறான். உங்களுக்கு என்ன, இவை எல்லாம் கண்ணில் படவில்லையா? இல்லை. இரண்டு நாய்கள் ஒரே தட்டில் இரை தின்பதில்லை

என்பார்கள். நான் கணவனை வைத்துக்கொள்ளப் பிரமாத ஆசைப்படவில்லை. நான் விரும்பினால் நூறு ஆண்கள் எனக்குக் கிடைப்பார்கள். ஒவ்வோர் இரவும் என்னை உறுத்துப் பார்க்கும் அத்தனை ஆடவர் கண்களை நீங்கள் வீதிகளில் கண்டிருக்க மாட்டீர்கள். நான் இஷ்டப்பட வேண்டியதுதான் தாமதம். என் நெற்றிமேலும் கன்னங்கள்மேலும் மோவாய் மேலுங்கூடத் தங்கப் பத்து ரூபிள்களாக அப்பிவிடுவார்கள் ஆண்கள்! நான் தலை அசைத்தால் போதும், வானத்தில் பறக்கும் பட்சி என் கைக்கு வந்துவிடும்... எனக்கு ஒரு பொருட்டே இல்லை. ஆனால் உங்கள்மேல் எனக்கு இரக்கமாய் இருக்கிறது. நீங்கள் இன்னும் யுவதி, மதநம்பிக்கை உள்ள முஸல்மானின் மகள். நேர்மையுள்ளவர் உங்கள் தகப்பனார். ஹாஜி உங்களைக் கெடுத்துவிட்டான், இன்னும் கெட்ட பெயரும் வாங்கி வைக்கப் போகிறான். அவனுக்கு நீங்கள் எதற்காக வேண்டும் தெரியுமா? ஐயே... நீங்களாகவே இதை ஊகித்துக் கொண்டிருக்க வேண்டும்! அவன் உங்களைப் பணக்காரக் கிழவர்களுக்குக் கூட்டிக் கொடுப்பான். ஓர் இரவுக்கு நூறு ரூபிள்கள் வீதம் உங்களுக்காக அவனுக்குக் கிடைக்கும்! ஆகவே, எச்சரிக்கையாய் இருங்கள். அல்லது ஒருவேளை இது உங்களுக்குப் பிடித்ததுதானோ? அப்படியானால் உங்கள் இஷ்டம்...

பாவம் லத்தீஃபா-ஹேறான் வெள்ளைத் துணி போல வெளிறிப் போய், ஒரு வார்த்தைகூடப் பேச முடியாத நிலையில் இருந்தாள். ஆயஷாவின் சொற்களை முடிவுவரை கேட்டுவிட்டு, எழுந்து, குண்டடிபட்ட காடைபோலத் தள்ளாடியவாறு தன் அறைக்குப் போனாள். சிறிது நேரத்துக்குப் பின் புர்க்கா அணிந்து, முடிச்சும் கையுமாக வெளியே வந்தாள்.

"உங்களுக்கு நன்றி, ஆயஷா அக்கா. நான் குருடி போல இருந்தேன். நீங்கள் என் கண்ணைத் திறந்துவிட்டீர்கள். தெரிந்தோ தெரியாமலோ நான் உங்கள் மனத்தைப் புண்படுத்தியிருந்தால் அதற்காக என்னை மன்னித்துவிடுங்கள். நான் மர்கிலான் போகிறேன், வீட்டுக்கு!" என்றாள்.

ஆயஷா அவளுக்கு விடை கொடுத்தாள். இருவரும் சற்று நேரம் அழுதார்கள். ஒருவரை ஒருவர் தழுவி முத்தமிட்டுக் கொண்டார்கள். லத்தீஃபா-ஹேறான் போன ஐந்து நிமிடங்களுக் கெல்லாம் ரஹ்மத்-ஹாஜி வீடு திரும்பினான். லத்தீஃபா-ஹேறானின்



அறைக்குள் போனான். அங்கே அவளைக் காணாமையால் வெளியே வந்து, "ஏய், லத்தீஃபா எங்கே?" என்று ஆயஷாவிடம் கேட்டான்.

"லத்தீஃபா உன்னை விட்டுப் போய்விட்டாள் மர்கிலானுக்கு. மணமுறிவு செய்துகொள்ளப்போகிறாளாம். சக்களத்தியுடன் ஒரே வீட்டில் குடியிருக்க முடியாது என்கிறாள்."

"நீதான் அவளிடம் கோள் மூட்டிவிட்டாயா?"

"நான் ஒன்றும் கோள் மூட்டவில்லை. ஆனால் ஊர் வாயை மூட முடியுமா? நம் வீட்டுக்கு ஆயிரம் பேர் வருகிறார்கள். அவர்களில் யாராவது வாய் தவறி உளறி இருப்பார்கள்."

"அட கஷ்டமே! காரியம் கெட்டுவிட்டதே. அவள் போய் வெகு நேரம் ஆயிற்றோ?"

"ஐந்து நிமிஷங்கள்கூட ஆகவில்லை. ஓடு, அவளைப் பிடித்து விடுவாய். மர்கிலான் புர்க்காவும் கையில் மூட்டையுமாக ஒரு பெண் இந்த வழியாகப் போனாளா என்று ஆட்களிடம் கேள். யாராவது கட்டாயம் பார்த்திருப்பார்கள்."

ரஹ்மத்-ஹாஜி மனக் குழப்பமும் திகிலும் அடைந்து வீதி வழியே ஓடினான். ஆட்களிடம் ஒருவர் மாற்றி ஒருவராக விசாரித்து அவள் போன திசையை அறிந்துகொண்டு இறைச்சிக் கடை வீதி அருகே அவளை எட்டிப்பிடித்தான்.

"இந்தா லத்தீஃபா, நில்லு!"

"நிற்பதாக என்கு எண்ணமே இல்லை, பாழாய்ப்போகிற கூட்டிக் கொடுக்கி!"

"என்ன உளறுகிறாய், மடைச்சி! கூட்டிக்கொடுப்பவனாவது ஒன்றாவது!"

"கூட்டிக்கொடுக்கி! நீதான் கூட்டிக்கொடுக்கி! இனி உன்னால் என்னை ஏமாற்ற முடியாது, சைத்தான்! நீ நாசமாய்ப் போக! ஐயோ, நான் அதிர்ஷ்டக் கட்டை! ஜனங்களே, முஸல்மான்களே!"

ஆட்கள் கூடத் தொடங்கினார்கள். இவர்கள் இருவரும் சச்சரவிடுவதைக் கேட்டுக் கசாப்புக்காரர்கள் தங்கள் கடைகளிலிருந்து வெளியே வந்தார்கள். நிலைமை கெடுதலாகத்

திரும்புவதைக் கண்ட ரஹ்மத்-ஹாஜி திரும்பி வீட்டுக்கு ஓடினான். சோம்பேறிகளின் கூட்டம் லத்தீஃபா-ஹோனிடம் விவரங்களை விசாரித்தவாறு அவனைத் தொடர்ந்து ஓடிற்று. லத்தீஃபா-ஹோன் அழுதுகொண்டே ஏதேதோ சொன்னாள், அது யாருக்கும் சரியாகப் புரியவில்லை. ஆனாலும் கூட்டத்துக்கு அதுவே போதுமானதாக இருந்தது. யுத்தம் பற்றிய அன்றாடப் பேச்சுக்களும் வதந்திகளும், விஷம்போல ஏறிக் கொண்டிருந்த விலைகள், நேரவிருக்கும் துன்பம் பற்றிய அச்சம் இவற்றால் ஜனங்கள் ஏற்கனவே எரிச்சல் பட்டுக் கொண்டிருந்தார்கள். எனவே அவர்கள் ரஹ்மத்-ஹாஜியை வீட்டு முகப்பிலிருந்து இழுத்து நெட்டித் தள்ளினார்கள்..."

போலீசார் அவனுடைய பிணத்தை உலர்ந்த திராட்சைப் பழக் கடைக் கொட்டகைக்கு எடுத்துப்போய்த் துணியால் மூடிப் போர்த்தார்கள். கொன்றவர்களையோ சாட்சிகளையோ தேடிப் பிடிக்க முடியவில்லை. லத்தீஃபா-ஹோனும் எங்கோ மறைந்துவிட்டாள்.

என் விடுமுறை நாள் மாலையை நெருங்கிக் கொண்டிருந்தது. சந்தை கொஞ்சங் கொஞ்சமாகக் காலியாகத் தொடங்கிற்று. ஹாஜி சொல்லியிருந்தபடி நான் ஒரு ராத்தல் மெழுகுவர்த்திகள் வாங்கினேன். செத்த கோழிக்குஞ்சை நாய் முகர்வதுபோல முதலில் அந்த வர்த்திகளை மோந்து பார்த்தேன். பிறகு இந்தியனுக்காக இரண்டு கோப்பெக்குகளுக்குப் புகையிலைத் தூள் வாங்கிக் கொண்டேன். ஆறு கோப்பெக்குகளுக்கு அரை ராத்தல் ஹல்வாவும் வாங்கினேன் - எங்கள் புகைக்கூடத்துக்கு வரும் தனி ஆட்களுக்காக. வீட்டுக்குத் திரும்பியிருக்கலாம். அதற்குள் ரொட்டிக் கடை வீதி அருகே, பாதல்மாத்தூமின் குளியறைக்குப் பக்கத்தில் துராப்பாய் என்ற நெருங்கிய நண்பனைச் சந்தித்தேன். பருத்தித் தோடு வியாபாரி ரஸுல்மாத் என்பவரின் மகன் அவன், எங்கள் வட்டாரத்துக்காரன்.

தெரிந்தவர்கள் எதிர்ப்பட்டுவிடுவார்களோ என்று நான் ஓயாமல் பயந்து கொண்டிருந்தேன் ஆகையால் அவனைக் கண்டதில் எனக்கு மகிழ்ச்சி உண்டாயிற்றா இல்லையா என்று எனக்கே தெரியவில்லை. துராப்பாய் நொடிப்போது நின்றான், உற்றுப் பார்த்தான், பின்பு என்னை நோக்கிப் பாய்ந்து வந்தான்.



"அட பாவி! உயிரோடுதான் இருக்கிறாயா, போக்கிரி? தாஷ்கந்திலேயே இருக்கிறாயாக்கும், ஊம்? உன் தாயார் என்னடா என்றால் இழவு கொண்டாடி விடலாம் என்றாள்!" எனக் கத்தினான். நாங்கள் தழுவிக்கொண்டோம். அவன் மறுபடி என்னை ஏற இறங்க நோட்டமிட்டான். "நீ ஏன் வீட்டுக்கு வரவில்லை? அவ்வளவு நெஞ்சீரமற்றவனா நீ?" என்றான்.

"வந்து, விஷயம் என்ன தெரியுமா... என் கோலத்தைத்தான் பாரேன். இந்தப் பஞ்சை வேஷத்தில் வீட்டுக்கு வருவது என்றால் வெட்கமாய் இருக்கிறது... நான் ஒரு வாரமாக இங்கேதான் இருக்கிறேன்" என்று மென்று விழுங்கிக்கொண்டு பதில் சொன்னேன்.

"ஒரு வாரமாகவா? அப்படியானால் நீ எங்கள் கண்ணிலேயே படாதது எப்படி?" என்று கேட்டான் துராப்பாய்.

"நான் எஜமான் வீட்டில் இருக்கிறேன்... ரொம்ப தாராள மனது அவருக்கு... இன்னும் ஒரு வாரம் அவர் வீட்டில் வேலை செய்கிறேன்.... நல்ல சட்டை தைத்துக்கொள்கிறேன், தங்கைகளுக்கும் ஏதாவது வாங்குகிறேன், அப்புறம் வீட்டுக்கு வருகிறேன்" - இப்படிச் சொல்லும்போது ஒரு வாரத்துக்குப்பின் வீடு திரும்புவது என்று உண்மையாகவே தீர்மானித்துக் கொண்டேன். "கேளு, துராப்பாய், உன்னிடம் ஒன்று கேட்டுக் கொள்கிறேன். என்னைப் பார்த்ததாக யாரிடமும் சொல்லாதே! யாரிடமும்! அடுத்த வாரம் நானே வருகிறேன்! சொல்ல மாட்டாய் அல்லவா?" - அவன் ஆகட்டும் என்று தலை அசைத்தான். "ஆமாம், அம்மாவும் தங்கைகளும் சௌக்கியமாய் இருக்கிறார்களா? நம் வட்டாரத்தில் புதினங்கள் என்ன?" என்று கேட்டேன்.

"அப்படி ஒன்றும் இல்லை. உன் தாயாரும் தங்கைகளும் சௌக்கியம். உன் அத்திம்பேர் உதவி செய்கிறார். நம் வட்டாரத்தில் புதினங்கள் என்ன இருக்க முடியும்? ஸலீம்பாய்-ஸுஃபியின் ஆடு குட்டி போட்டிருக்கிறது! ஒரே வேடிக்கை... ஹுஸ்னிபாய் நொடித்துப் போனான். அவன் துணித்துண்டு வியாபாரம் செய்யத் தொடங்கினானே, தெரியும் அல்லவா? அடியோடு நொடித்துப் போனான்! தகப்பனார் அவனை வெளுத்து வாங்கினார். மசூதியில் தொழுகைக்காகப் பட்டும்

பருத்திநூலும் கலந்த பட்டைபோட்ட கைத்தறித் துணி விரிப்பு விரித்திருக்குமே, அதை யாரோ திருடிவிட்டார்கள். திருடியது எவரோ தெரியாது. ஜனங்கள்தாம் பேசிக்கொள்கிறார்கள், இஸ்மத்-துவான் இந்த விரிப்புத் துணியால் மேலங்கி தைத்துப் போட்டுக் கொண்டிருப்பதாக! குருடி ஜியாத்-அச்சா காலமாகி விட்டாள்… நாலடிப் பாட்டுக்கள் இட்டுக்கட்டுவாளே, அவள்… கடைசிப் பாட்டு தெரியுமா? தெரியாதா?

'வெறுந்தோலைக் காலந்தான் ஒவ்வோர் ஆண்டாய்
மென்மேலும் பதனிட்டுக் கெட்டியாக்கும்.
பருந் தோலே மிதியடியாய் மாறும், பாரில்
படு துயர்கள் பொறுத்தாரே அரசராவார்.'

"இவைதாம் புதுமைகள்…"

"நீ சௌக்கியந்தானா, துராப்பாய்?"

"நானா? எனக்கு ஒரு குறைவும் இல்லை! என் தகப்பனாரின் வியாபாரம் இப்போது சக்கைப் போடு போடுகிறது. பருத்தித் தோடுகள் விலை ஏறிவிட்டன… நீ மட்டும் அடுத்த வாரம் வீடு திரும்பவில்லையோ, உன்னைப் பார்த்ததாக எல்லோரிடமும் தண்டோரா போட்டுவிடுவேன், சொல்லிவிட்டேன்! உன் அம்மாவிடமும் மற்றப் பையன்களிடமும். அது சரி, உன் எஜமானர் யார்?"

"இரகசியம்!"

"அப்படிப் போடடா, இரகசியமாமே! நீ அவ்வளவு முக்கியஸ்தன் ஆகிவிட்டாயோ?"

"அட சும்மாதான்…"

"மரியாதையாகச் சொல்லிவிடு. இல்லாவிட்டால் நானே துருவித் தெரிந்துகொண்டு எல்லோருக்கும் பறை சாற்றிவிடுவேன்!"

"சரி, சொல்லியே விடுகிறேனே… நான்… நான் கழைக் கூத்தாடியிடம் சீடனாகச் சேர்ந்திருக்கிறேன்…"

"டேய், புளுகினாலும் பொருந்தப் புளுகு! கழைக்கூத்தாடியிடம் வேலைக்கு அமர்ந்திருக்கிறாய் என்றால் வெல்வெட் சராய்



எங்கே?" - நாங்கள் இருவரும் விழுந்து விழுந்து சிரித்தோம்.

"நல்லது, சொல்லு, அமன் எங்கே?" என்று கேட்டேன்.

"அடே, சொன்னாற்போலே… மறந்தே போனேன். அவன் சில நாட்களுக்கு முன்னால் திரும்பி வந்தான், ஒரே பஞ்சைக் கோலத்தில். என்னென்னவோ கதைகள் சொன்னான். ஆனால் அவற்றை யாருமே நம்பவில்லை. 'நான் சொல்வது பொய்யானால் அல்லா என்னைத் தண்டிக்கட்டும். என் தலையில் இடி விழட்டும்.' என்று சத்தியம் செய்தான். இப்போது அவன் நிலைமை ஒருவாறாகச் சரிப்பட்டுவிட்டது. அப்துல்லா-அர்பாகேஷிடம் வேலை கற்றுக்கொள்ளச் சேர்ந்திருக்கிறான். அவனுக்குத் தண்ணீர் சுமந்துவந்து கொடுக்கிறான். குதிரைகளை மேற்பார்த்துக் கொள்கிறான்… அப்துல்லா-அர்பாகேஷ் அவனுக்குப் படைவீரனின் இடைவார் பரிசளித்திருக்கிறான். ருஷ்ய மொழியில் திட்டவும் கற்றுக்கொடுத்திருக்கிறான். அடேயப்பா, எப்படி வைகிறான் தெரியுமா? எனக்கு ஒரே பொறாமையாய் இருக்கிறது. சமீபத்தில் அவன் தகப்பனுடைய கடை சரிந்து விழுந்துவிட்டது. நாங்கள் இலவசத் தொண்டு செய்து அதைச் செப்பனிட்டோம்."

இதை எல்லாம் கேட்டுக்கொண்டே எங்கள் வட்டாரத்து அறிமுகமான முகங்களை எண்ணிப் பார்த்ததும் வீட்டுக்குப் போக மனம் ஆவல் கொண்டு துடித்தது!

"நல்லது, நான் போக வேண்டும். மற்றத் தகவல்களை நானே வீடு திரும்பியபின் தெரிந்துகொள்கிறேன்" என்றேன்.

ரஹ்மத்துல்லா-சர்க்கார் கொடுத்த காடையின் நினைவு அப்போது எனக்கு வந்தது. அது என் சட்டை மார்புக்குப் பின்னே உட்கார்ந்திருந்தது. அதை எடுத்துத் துராப்பாயிடம் நீட்டினேன்.

"இந்தா, இதைக் கூண்டில் வைத்து வளர். நன்றாகப் பாடும்" என்றேன்.

துராப்பாய் காடையை வாங்கிக்கொண்டு அதன் காதில் ரீங்காரம் செய்தான். பிறகு இன்னும் ஒரு முறை அப்படியே செய்தான்.

"இது பெண் பறவை அல்லவா?" என்றான்.

"என்னடா இது, நான் இந்த ஸ்தெப்பி வெளி எல்லாம் சுற்றி வந்திருக்கிறேன், ஆண் காடைக்கும் பெண் காடைக்கும் எனக்கு வித்தியாசம் தெரியாதா? இது ஆண்தான்" என்று அடித்துப் பேசினேன். ஆனாலும் என் மனதுக்குள் சந்தேகம் தலை தூக்கியது. வழியில் போன ஒருவனை நாங்கள் நிறுத்தினோம்.

"முல்லா-அகா, இந்தக் காடை பாடுமா, பாடாதா, சொல்லுங்களேன்" என்றேன்.

அந்த ஆள் காடையை வாங்கிப் பார்த்துப் புன்னகை செய்தான்.

"இதன் ஆண் குஞ்சுகள் பாடும். இந்தப் பெண் பறவை பாடாது!" என்றான்.

நான் அவமானப்பட்டதாகக் காட்டிக்கொள்ளவே இல்லை.

"அப்படியானால் புலவுக்குக் கறியாகப் பயன்படுத்திக்கொள்" என்று சொன்னேன்.

நாங்கள் பிரிவு சொல்லிக்கொண்டு வெவ்வேறு திசைகளில் சென்றோம்.



## அத்தியாயம் 15

# புகைக்கூடம்

**நா**ன் திரும்பியபோது ஹாஜி-பாபாவும் மற்றவர்களும் மூன்றாவது தொழுகை படித்து முடித்திருந்தார்கள். மெழுகுவர்த்திகள், புகையிலைத் தூள், ஹல்வா, மிஞ்சிய மாதுளம் பழம் ஆகியவற்றை நான் ஒரு பக்கம் வைத்தேன். ஹுக்காத் தண்ணீரைக் கொட்டிவிட்டு நல்ல நீர் ஊற்றினேன். ஹுக்காவின் தலைப்பகுதியைச் சுத்தம் செய்தேன். பிறகு தேநீர் தயாரிப்பதற்கான ஸமோவாரைத் துடைத்தேன், சாம்பலை அள்ளி வெளியே கொட்டினேன். அப்புறம் தோளில் துவாலையும் கையில் துடைப்பமுமாக, தொழுகை முடிவதை எதிர்பார்த்து நின்றேன். தொழுகை முடிந்தது.

"அட என் அனாதைப் பையா, நன்றாக ஊர் சுற்றினாயா, பாவமே! அனாதைகளுக்கு அப்பன்கள் நிறைய என்று சொல்லுவார்கள். அதுதான் விஷயம். உனக்கும் இரண்டு தகப்பன்கள் கிடைத்துவிட்டார்கள் போலிருக்கிறது, அப்படித்தானே? கிடைத்தார்களோ? என் சொகுசு விளக்குமாறே, உன்னை ஜெர்மன் குண்டு வாரிக்கொண்டு போக!" என்றான் ஹாஜி-பாபா.

"இதோ பாருங்கள், ஹாஜி-பாபா, அந்தி வேளையிலே சாபம் கொடுக்காதீர்கள்" என்று எனக்குப் பரிந்துகொண்டு வந்தான் புகைப்பவர்களில் ஒருவன்.

"ஒரேயடியாகக் கைக்கு அடங்காதவன் ஆகிவிட்டான்!" என்றான் ஹாஜி-பாபா.

"சந்தையில் சுவையானது என்ன நிகழ்ந்தது?" என்று கேட்டான் எனக்காகப் பரிந்து பேசியவன்.

"ஓ, ஹாஜி-பாபா, இன்றைக்குச் சந்தையில் ஆட்கள் கூட்டம் ரஹ்மத்துல்லா-ஹாஜியைக் கொன்றுவிட்டது. உங்களுக்கு அந்த ஆளைத் தெரியுமா? அழகானவர், பாடகி ஆயஷாவின் கணவர்!

ஜனங்கள் சட்டமுறை இல்லாமல் அவரை அடித்துக் கொன்று விட்டார்கள்." என்றேன்.

"அட பாவமே... அல்லா நம்மைக் காப்பாராக! மெய்யாகவே அவன் நல்ல அழகன், கவர்ச்சி உள்ளவன்! சொர்க்க சாம்ராஜ்யம் அவனுக்குக் கிட்டுமாக! ஜனக்கும்பல் அவனைக் கொன்றது என்றால் மதத்துக்காகத் துன்பப்பட்ட உயர் தியாகிகள் வரிசையில் அவனும் சேர்க்கப்படுவான்... மாறாக, நரகத் தீயில் என்றென்றும் வதைபடுவதிலிருந்து அவனுக்கு விடுதலை கிடைத்துவிட்டது... அதுதான் விஷயம்" என்றான் ஹாஜி-பாபா.

மற்றவர்கள் விவரங்களை அறிய விரும்பினார்கள்.

"இது எப்படி நடந்தது, சொல்லு. நீ நேரில் பார்த்தாயா? எங்கே? முடிவெட்டும் கடையில் கேள்விப்பட்டாயா? அடே, ஆமாம், நீ தலையை மழித்துக் கொண்டிருக்கிறாயே. ஈரான் பாதுஷா வழுக்கைத்தலை அசுமதலியே அச்சாக இருக்கிறாய் இப்போது! அவருடைய போட்டோவை நான் பார்த்தேன்! சரி, சொல்லு..."

எப்படி, என்ன கேள்விப்பட்டேன், எங்கே எதைப் பார்த்தேன் என்று ஆரம்பத்திலிருந்து முழுக்கதையையும் விவரமாகச் சொல்லத் தொடங்கினேன். எனக்கு உற்சாகம் பிறந்துவிட்டது. சொல்லும்போதே ஒன்றைவிட மற்றொன்று கவர்ச்சியான விவரங்கள் என் மனதில் உதித்து, மிக மிகத் தூய உண்மைகள் போல என் நாவிலிருந்து பெருக்கெடுத்தன. இந்த ரஹ்மத்துல்லா - ஹாஜியைக் கொல்வதற்காகக் கணக்கற்ற மக்கள் திரண்டு வந்தார்கள் என்றும், அவர்களுடைய சுமை தாங்க மாட்டாமல் ஓர் இடத்தில் தரை அழுந்திப் பள்ளமாகிவிட்டது என்றும், எனக்கு முன்னே விழுந்தவர்கள் பள்ளத்தை நிறைத்து விட்டபடியால்தான் நானும் அந்தக் கெபியில் விழுந்து புதையாமல் தப்பினேன் என்றும் கயிறு திரித்தேன். ஜார் அந்த இடத்துக்கு ஒரு லட்சம் படை வீரர்களை அனுப்பியதாகவும், அவர்கள் எழுபத்தோரு தரம் கூட்டத்தின்மேல் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததாகவும், குண்டு சுட்ட அதிர்ச்சியால் எல்லோரும் திடுக்கிட்டுப் போனதாகவும் அதனால் ஒன்பது மாதர்கள் உரிய காலத்துக்கு முன்பே குழந்தைகள் பெற்று விட்டதாகவும் கூக்கெல்தாஷ் மசூதியின் ஒரு தூபி சாய்ந்து விட்டதாகவும் சரடு விட்டேன். அப்புறம் மச்சாலவின் போலீசார்



சேணக்கடை வரிசையைச் சூறையாடியதாகவும், அப்போது குளியறையில் குளித்துக் கொண்டிருந்த பெண்கள் கிலி கொண்டு அம்மணமாக வெளியே ஓடி வந்ததாகவும் கதை அளந்தேன்...

இந்த மாதிரி ஒரு மணி நேரத்துக்கு மேல் பேசினேன். நான் அளந்த அளப்பில் ஹாஜி-பாபா நான் தாமதமாக வந்தது பற்றி மறந்தே போனான். நான் இதை எல்லாம் சொல்லி முடிப்பதற்குள் புகைக்கூடம் புதிய வாடிக்கைக்காரர்களால் நிறைந்துவிட்டது. ஒரு பனிரெண்டு பெயர் கூடிவிட்டார்கள். கண்களைப் பரக்க விழித்தவாறு அவர்கள் என் கதையைக் கேட்டார்கள். அனேகமாக மூர்ச்சை அடையும் நிலைக்கு வந்துவிட்டார்கள் என்று எனக்குத் தோன்றியது. சிலர் அப்போதுதான் அபினி சாப்பிட்டோம் என்பதை மறந்து மறுபடி அபினி வேண்டும் என்று கேட்டார்கள். இரண்டு-மூன்று பெயர் தாங்களும் சந்தையில் இருந்து வந்தவர்கள். ஆச்சரியம் என்ன என்றால் அவர்கள் என் சொற்களை உறுதிப்படுத்தியது மட்டும் இன்றித் தாங்களும் மேற்கொண்டு சில விவரங்களைப் புனைந்துரைத்தார்கள்! மூன்றாவது தொழுகை முடிந்ததுமே என் இந்தியனும் வந்துவிட்டான். அவன் முகத்தில் குதூகலம் ததும்பியது. நான் சொன்னதில் பாதிக் கதையை அவன் கேட்டான். தன் வழக்கப்படி, "மாஷா-அல்லா, மாஷா-அல்லா!" என்று ஆரவாரித்தவாறு மறுபடி மறுபடி துருவி விசாரித்தான்.

பிறகு எல்லோரும் ரஹ்மத்துல்லா - ஹாஜியின் துயரக் கதையைப் பற்றிச் சர்ச்சை செய்தார்கள். சிலர் அவனே குற்றவாளி என்றார்கள். வேறு சிலர் ஆயஷாவையும் பின்னும் சிலர் மர்கிலான் விதவையையும் குற்றவாளி ஆக்கினார்கள். மற்றும் சிலரோ இந்தக் கட்டுக்கு அடங்காத கூட்டத்தை (நல்ல வேளையாகக் கூட்டம் இங்கே இல்லை!) தாக்கினார்கள். இன்னும் சிலர் மச்சாலவையும் அவனுடைய போலீசாரையும் அவர்களுடைய பொறுப்பற்ற நடத்தைக்காக விளாசினார்கள்.

"உண்மைதான், தப்பு எண்ணங்கள் ஏற்படுவது உண்டு" என்றான் எங்கள் நிரந்தர வாடிக்கைக்காரன் ஆன கண்ணாடிக்காரக் கிழ முல்லா மீர்ஸலீம். "போன வருஷம் ஸான்கி-அத்தா கொண்டாட்டத்தின்போது என்ன நடந்தது தெரியுமோ? அன்று வெள்ளிக்கிழமை. இருங்கள், இது எந்த மாதத்தில்... ஆமாம், ஸுன்புல் மாதத்தில் நடந்தது! மகா புனிதர்

பெரியார் ஸான்கி-அத்தாவின் சமாதிக்கு யாத்திரிகர்கள் வந்து சேர்ந்தார்கள். அடேயப்பா, அவர்கள்தாம் எங்கு எங்கு எல்லாம் இருந்து வந்திருந்தார்கள்! ஈராக், பதாஹ்ஷான், இந்தியா, ரோம், சீனா - உலகின் எல்லாப் பகுதிகளிலுமிருந்து வந்து கூடிவிட்டார்கள். நம்முடைய தாஷ்கந்திலிருந்தோ, எல்லாருமே அங்கே போய்விட்டார்கள். கைக்குழந்தைகள்கூடத் தொட்டில் களிலிருந்து வெளியே தவழ்ந்து வந்துவிட்டார்கள் என்றால் பாருங்களேன். மொத்தத்தில் கூட்டமான கூட்டமில்லை, அப்படி ஒரே நெரிசல். வெள்ளிக்கிழமைத் தொழுகைக்கான அழைப்பு ஒலித்தது. ஜனங்கள் தொழுகையிடத்துக்குப் போனார்கள். தொழுகையிடத்தின் பக்கத்தில் உள்ள மைதானம் முழுவதும் ஆட்கள் நிறைந்துவிட்டார்கள். கொஞ்சம் தாமதித்து வந்த ஒருவன் கூட்டத்தில் புகுந்து முன்னே போனவன், தன் நண்பனைக் கண்டான். நண்பனுடைய சட்டைப் பையிலிருந்து மணிபர்ஸ் வெளியே துருத்திக்கொண்டு இதோ விழுந்து விடும்போல் இருந்தது. மணிபர்ஸை நண்பன் பைக்குள் நுழைப்பதற்காக இந்த ஆள் கையை நீட்டினான். ஒரு முஸல்மான் இதைப் பார்த்துவிட்டான். அவன் தொழுகையை மறந்து, 'முஸல்மான்களே, காப்பாற்றுங்கள்! நமக்கிடையே ஜேபடித் திருடன்!' என்று பெருங்கூச்சல் போட்டான். அவ்வளவுதான். அங்கே இருந்தவர்கள் எல்லோரும், இமாமின் தலைமையில் தொழுகையை நிறுத்திவிட்டு அந்த மனிதனை அடிக்கத் தலைப்பட்டார்கள். ஆளுக்கு ஒரு பக்கமாக அவனை அடித்து வெளியே இழுத்துப் போய் மறுபடி மொத்திப் புடைத்தார்கள். அவனை அடித்துக் கொன்றபின் நிதானத்துக்கு வந்து, 'ஆமாம். என்ன நடந்தது? இவன் என்ன செய்தான்? இவனைப் பிடித்தது யார்?' என்று விசாரிக்கத் தொடங்கினார்கள். இதற்கிடையே அந்த மணிபர்ஸ்காரனே வெளியே வந்து கண்ணீர் பெருக்கியவாறு, 'இவன் என் உயிருக்கு உயிரான நண்பன். இவன் என் மணிபர்ஸைத் திருட விரும்பவே இல்லை. அதை மறுபடி பைக்குள் வைக்கவே முயன்றான். எதற்காக இவனை அடித்துக் கொன்றீர்கள்?' என்று புலம்பினான். ஆனால் காரியம் தீர்ந்து போன பிறகு என்ன சொல்லி என்ன பயன்? செத்தவன் பிழைத்துவரப் போவதில்லையே..."

"ஆமாம். அவனும் சுவர்க்கத்தை அடைவான். நேரே சுவர்க்கத்துக்குப் போவான், எவ்வித விசாரணையோ காணிக்கை



செலுத்தலோ இல்லாமல்" என்று அதிகார தோரணையில் கூறினான் ஹாஜி-பாபா.

மறுபடி எல்லாரும் பேசத் தொடங்கி மற்றவனுடைய மணிபர்ஸுக்காக உயிரைக் கொடுத்த அந்த ஆக்கங் கெட்டவனைப் புகழ்ந்து பாராட்டலாயினர். அப்புறம் ஒருவன் முஸல்மான்களுக்குப் புகழ் பாடினான். அவர்கள் பார்வைக்கு எதுவும் தப்புவதில்லை, இஸ்லாம் மத நியமங்களை மிக நன்றாகக் கடைப்பிடிக்கிறார்கள் என்று மெச்சினான். மக்களே தண்டனை கொடுக்கும் இந்த வழக்கம் இருக்கும் வரை இஸ்லாம் மதப்பற்று உள்ளவனுடைய சொத்தில் கை வைக்க எந்தத் திருடனும் துணிய மாட்டான். ஆகையால் நிம்மதியாக உறங்கலாம் என்றான் அவன். எல்லோரும் அவன் பேச்சை ஆமோதித்து, "நமது மக்கள் தண்டனைத் தீர்ப்பு வாழ்க, வாழ்க!" என்று ஆர்ப்பரித்தார்கள் - யாரோ சுவர்க்க இன்பத்தை அவர்கள் பைகளிலிருந்து உருவிக் கொள்ள முயல்வதுபோல.

இந்த மாதிரி மக்கள் தண்டனைத் தீர்ப்பு பற்றி வாயாரப் பேசித் தீர்த்தார்கள் அவர்கள். அப்புறம் அவர்கள் பேச்சு வேறுதிசையில் திரும்பியது. காலம் இப்போது மிக மிகக் கெட்டுப் போய்விட்டது. ஜனங்கள் மோசம் ஆகிவிட்டார்கள். ஜார் செய்வதும் சரியாயில்லை. மானம் மரியாதையோ மனச்சாட்சியோ ஒருவரிடமுமே இல்லை. பெண்களும் குழந்தைகளும் நேரே மந்தையில் விற்கப்படுகிறார்கள், அவர்களுக்கென்று தனிக் கடைவரிசையே திறந்துவிடலாம். இஸ்லாம் மத நியமங்களை யாருமே கடைப்பிடிப்பதில்லை. உள்ளதைச் சொன்னால் இயேசு இரண்டாம் தடவை உயிர்த்து எழுவதற்கு இன்னும் ஒரு வாரந்தான் இருக்கிறது. ரோமாபுரிக்குக் கொஞ்ச தூரத்தில் தபாத்துல் - அர்ஸ் என்ற பயங்கர அரக்க விலங்கு ஏற்கனவே தோன்றிவிட்டது. இந்த மாவிலங்கு உலக முடிவிற்கு முன் மோஸஸின் தடியுடனும் ஸாலமனின் மோதிரத்துடனும் தோன்றி, இஸ்லாமின் பிரதானப் பகைவனை வெற்றி கொள்ளும். சீனத்தின் பக்கமிருந்து ஒற்றைக்கண்ணர் களான கோகுகளும் மோகுகளும் படையெடுத்து வருகிறார்கள். பாதி ஈரான் நாட்டைப் பூமி விழுங்கிவிட்டது. இவை எல்லாம் போதாது என்று நம் தாஷ்கந்த் நகரத்தில், தூப் மேட்டில் முறைகேடாகப் பிறந்த இளங்குழந்தை ஒன்று கண்டெடுக்கப்

பட்டுள்ளது - இப்படி ஆளுக்கு ஒன்றாகச் சொன்னார்கள்.

இதற்குள் எங்கள் களி மிக்க மசூதியின் இமாமான ஹாஜி-பாபா நான்காவது தொழுகைக்காக எழுந்தான். மற்றவர்களும் எழுந்தார்கள். நான் கடுமையான தேநீர் தயாரித்து, தேநீர்க் கெண்டிகளை அவரவர் இடங்களில் ஒழுங்காக வைத்தேன். ஹுக்காவில் மறுபடி புகையிலை நிறைத்தேன். விளக்கை ஏற்றி அறை நடுவில் வைத்தேன். பின்பு பெரிய தட்டில் ஆளுக்கு ஒரு புளிப்புமா ரொட்டியும் இரண்டு சர்க்கரைக் கட்டிகளும் ஒரு குத்து உலர் திராட்சைப் பழமுமாகத் தனித் தனியே வைத்தேன். தொழுகை முடிந்ததும் அவரவர்களுடைய தேக்கெண்டிகளையும் கோப்பைகளையும் அவரவர்கள் முன்னே வைத்தேன். ஹாஜி-பாபா ஒவ்வொருவரும் கொடுத்த பணத்துக்குத் தக்கபடி சிலருக்குக் கொஞ்சமும் வேறு சிலருக்கு நிறையவுமாக மறுபடி அபினி வினியோகம் செய்தான். குக்னார் என்னும் லாகிரிப் பானம் பருகிய நான்கு பெயருக்கு ஆளுக்கு ஒரு கோப்பை சர்க்கரைப் பாகு கொடுத்தான். கோப்பைகள் கைக்குட்டையால் மூடப்பட்டிருந்தன. அப்புறம் தொடங்கியது பொதுக் கேளிக்கை. புத்தி நிதானத்தோடு இருந்தபோதே காது புளித்துப் போகும்படி அசட்டுப் பிசட்டென்று பிதற்றிய அவர்கள் போதையேறியதும் உளறியதைக் கேட்கவே சகிக்கவில்லை. நிதான புத்தியுடன் இருக்கையில் அவர்கள் ஒரே கஞ்சர்களாய் இருந்தார்கள். பாதி திராட்சைப் பழங்கூட அதிகப்படியாகப் பிறத்தியானுக்குக் கொடுத்துவிட மாட்டார்கள். வெறி ஏறியதுமோ, சொற்களில் ஒரே தாராளக்காரச் செல்வர்கள் ஆகிவிட்டார்கள் அவர்கள். அந்தத் தாராளத்தைச் சொல்லி முடியாது!

ஒருவன் பூத்துக் குலுங்கும் தன் தோட்டத்தைப் புகழ்ந்து பெருமை அடித்துக்கொள்ளத் தலைப்பட்டான். இதை அவன் கனவில் வளர்த்திருப்பான். அந்தத் தோட்டத்தின் ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை ஒரு நாளில் நடந்து போய்ச் சேர முடியாதாம், அவ்வளவு பெரியதாம்! மற்றொருவன் தன் கற்பனைத் தங்க நாணயங்களை எண்ணத் தொடங்கினான். அவற்றை முழுவதும் எண்ணிக் கணக்கிட அவனால் முடியவே இல்லை - அத்தனை நிறைய இருந்தன அவை. மூன்றாமவன் பக்கத்தில் இருந்தவனைத் தன் வீட்டுக்கு விருந்துக்கு அழைத்தான்.



கைகளை வீசி ஆட்டியவாறு, "இரண்டு ஆடுகளை வெட்டிக் கறி சமைக்கிறேன்" என்றான் அவன். உண்மையிலோ அவனிடம் ஆடுகள் மட்டுமல்ல, வீடேகூட இருக்காது என்று எனக்குத் தோன்றியது. திராட்சைப் பழங்களையும் ரொட்டிகளையும் ஒருவர் அருகில் ஒருவர் நகர்த்தியவாறு அவர்கள்தாம் ஒருவரை ஒருவர் எப்படி உபசரித்தார்கள், தேநீர் பருகும்படி! அபினியைக் கூட, ஈச்சிறகு அளவான துண்டுகளாகப் பகிர்ந்துகொண்டார்கள் அவர்கள்...

அவர்கள் பேச்சைக் காதில் போட்டுக்கொள்ளாமல் இருக்க முயன்றவாறு அவர்களுக்கு மும்முரமாகப் பணிவிடை செய்தேன் நான். தேக்கெண்டியை ஒருவன் மூடியால் தட்ட வேண்டியதுதான் தாமதம், நான் உடனே பாய்ந்து ஓடிக் கெண்டியில் புதிய கடுந் தேநீர் ஊற்றுவேன். ஆனால் வழக்கம்போலவே இந்தியனுக்குத்தான் நான் முதன்மையாகப் பரிந்து பரிந்து தொண்டு செய்தேன்.

"மாஷா அல்லா, என் மகனே, மாஷா அல்லா, எனக்குத் திருப்தி ஆகிவிட்டது... இன்று சந்தை நாள், கடுமையான நாள். நான் களைத்துப் போனேன். ஒரேயடியாகக் களைத்துப் போனேன்... இன்றைய வரவை எண்ணிக் கணக்கிட எனக்கு முடியாது. நல்லது, நாளைக்குப் பார்த்துக்கொள்ளலாம். ஹுக்கா கொண்டுவாயேன் சற்றே."

நான் ஹுக்காவின் தலைப்பகுதியில் மூன்று கங்குகளைப் போட்டு முறைப்படி புகை இழுத்துப் பற்ற வைத்தேன். இந்தியனுக்காக வாங்கியிருந்த மெல்லிய புகையிலைத் தூளையும் எடுத்துக்கொண்டேன்.

"இந்தாருங்கள் பாச்சா, ஹுக்கா தயார், தணலும் அளவாகக் கனிந்திருக்கிறது."

"சபாஷ் மகனே, சபாஷ்"

அவன் சில தடவைகள் புகை இழுத்தான். புகையிலை காட்டமானது. விரைவிலேயே அவனுக்குப் போதை ஏறிவிட்டது. அவனுடைய பழுப்பு முகம் வெளிறிற்று. விழிகள் செருகிக் கொள்ளலாயின.

"தண்ணீர்... தண்ணீர் கொண்டுவா."

நான் ஓடிப்போய் ஒரு குவளை குளிர்ந்த நீர் எடுத்து வந்தேன். அவன் கைகள் நடுங்கின. சில மடக்குகள் குடித்தான். நான் சற்று நேரம் பக்கத்தில் நின்று கொண்டிருந்தேன். அவன் கொஞ்சங்கொஞ்சமாகச் சுதாரித்துக் கொண்டான். காகிதத்தில் சுற்றிய புகையிலைத் தூளை அவனிடம் கொடுத்தேன்.

"இந்தாருங்கள், புஹாரா மூக்குத்தூள் உங்களுக்காக வாங்கி வந்திருக்கிறேன்."

"ஆகா, சபாஷ் மகனே! மெச்சினேன், நன்றி..."

அவன் தன் சில்லறைப் பையில் கைவிட்டுத் துழாவி அரைரூபிள் வெள்ளி நாணயம் ஒன்றை எடுத்து என் பக்கம் நீட்டினான்.

"இது உனக்குப் பரிசு. ஹாஜி-பாபாவுக்குத் தெரியாமல் மறைத்துக் கொள்."

நான் வாங்கிக்கொண்டு லேசாகத் தலை வணங்கினேன்.

"நன்றி, பாச்சா..."

அக்கம் பக்கம் பார்த்தேன். மற்றவர்களுக்கும் ஹுக்காவும் தேநீரும் கொடுப்பது அவசியமாய் இருந்தது. கேளிக்கை இரண்டாம் சாமக்கோழி கூப்பிடும்வரை தொடர்ந்தது. ஹாஜி-பாபா எல்லோரையும் என் பொறுப்பில் விட்டுவிட்டு வெகுநேரம் முன்பே உள்கட்டுக்குப் போய்விட்டான். ஒருவர் ஒருவராக வாடிக்கைக்காரர்களும் ஆளுக்கு ஒரு விதமாக எழுந்து வெளியேறினார்கள். இந்தியனும் உஸ்தாது ஸலீ எனப்பட்ட இரட்டைக் கண்ணாடிக்காரனும் மட்டுமே, வழக்கம்போலப் புகைக்கூடத்தில் இராத்தங்கும் நோக்கத்துடன் எஞ்சி இருந்தார்கள். விளக்கை ஊதி அணைத்துவிட்டு நானும் படுத்துக் கொண்டேன்.

மறுநாள் வியாழக்கிழமை, வேலை நெரியும் தினம் ஆயிற்றே. வெள்ளிக்குத் தலைக்கு நாள் வாடிக்கைக்காரர்கள் ஏராளமாக வருவார்கள்.

காலையில் நான் வெள்ளென எழுந்து ஸமோவாரை மூட்டினேன். துடைப்பம் மளமளவென்று தரையைப் பெருக்கியது. ஆயிற்று, அறை துப்புரவாகி விட்டது. சாமான்கள் ஒழுங்குபடுத்தப்பட்டுவிட்டன. எல்லாம் சுத்தமாய் இருந்தது. உஸ்தாது ஸலீம் மூலையில் தனியே காலைத் தொழுகை படித்துக் கொண்டிருந்தான். தனது காலஞ்சென்ற தாய்தந்தையரையும் இன்னும் ஏகப்பட்ட உறவினர்களையும் எண்ணிப் பிரார்த்தித்தான். தற்போது சாவின் புகுவாயிலில் இருந்தவர்களையும் அவன் புறக்கணிக்கவில்லை. தன் சொந்த ஆன்ம ரட்சகனுக்கும் பிரார்த்தனை செலுத்தினான். இப்படி நெடு நேரம் தொழுதபின் நீண்ட ஜெபத்தை முடித்துவிட்டு, "தேநீர் கொதித்துவிட்டதா?" என்று கேட்டான்.

"ஓசை வந்துவிட்டது."

அன்று சுட்ட ரொட்டிகள் வாங்கிவரப் போக வேண்டியிருந்தது. ஆனால் புகைக்கூடத்தைக் கண்காணிப்பு இல்லாமல் விட்டுப் போக ஹாஜி-பாபா அனுமதிப்பதில்லை. என்ன செய்வது? உஸ்தாது ஸலீமை அனுப்புவதா? நல்ல வேளை, அதற்குள் ஹாஜி-பாபாவே வந்துவிட்டான்.

"இன்னும் ரொட்டி வாங்கி வரவில்லையாக்கும்?"

"நீங்கள் பணம் கொடுத்துவைக்கவில்லையே."

"ஆமாம், விஷயம் அதுதான்..."

மேலங்கிப் பைக்குள் கையை விட்டுக் குடைந்து இரண்டு தன்காக்களை எடுத்து என்னிடம் கொடுத்துவிட்டு அவன் வழக்கம்போல நீண்ட உபதேசம் செய்யலானான்:

"ரொட்டி வாங்கும்போது ஒவ்வொன்றையும் எல்லாப் பக்கங்களிலும் பார், கருகியோ அரைப் பக்குவமாகவோ இருக்கிறதா என்று. இல்லாவிட்டால் நீ வாங்கி வருவதைத் தின்ன முடியாது. விஷயம் அதுதான், ஆமாம், ஒரு துண்டு விண்டு, மாவு மட்டுமீறிப் புளித்துவிடவில்லையா என்று ருசி பார். கடைக்காரன் திணிப்பதை எல்லாம் வாங்கிக்கொண்டு வந்துவிடாதே. நிறை அதிகமாகவே இருக்கும்படி கைமதிப்பாகச் சரிபார். அதுதான் விஷயம்... யுத்தம் நடக்கிறது என்றாலும் ரொட்டிக் கிடங்குகளைத் தரை இன்னும் விழுங்கிவிடவில்லை..."

நான் லேஞ்சியைத் தோளில் போட்டுக்கொண்டு ரொட்டிக் கிடங்கிற்கு ஓடினேன். பொழுது இன்னும் நன்றாக விடியவில்லை.

தெள்ளிய காற்று குளுகுளுவென்று இருந்தது. லேசான நீலச் சாயல் எல்லாவற்றையும் ஊடுருவிச் சென்றிருந்தது. மரங்களும் சுற்றுச் சுவர்களும் வீடுகளும் புலர்போதின் வளமான நீலக் குளிர்மையில் முழுக்காடியவைபோலத் தோற்றம் அளித்தன. பழைய கப்பான் திருப்பத்தின் பக்கத்தில் நான் மல்லா-ஜின்னி என்ற கிறுக்கனைக் கண்டேன். பசித்த தெரு நாய்களின் கூட்டம் அவனைப் பின்தொடர்ந்து வந்தது. நடந்துகொண்டே அவன் தனக்குத் தானே பேசிக் கொண்டான்:

"ஒரு கோப்பெக்குக்கு ஒட்டகம் வாங்கு - எங்கே உன் கோப்பெக்கு ஆயிரம் ரூபிள்களுக்கு ஒட்டகம் வாங்கு. பணம் உன்னிடம்தான் இருக்கிறது கேட்டீர்களா, நாய்களே!" - இப்படிச் சொல்லி நாய்க்கூட்டத்தின் பக்கம் திரும்பி, ஒட்டி உலர்ந்து அவலட்சணமாக இருந்த, யாவற்றிலும் சிறிய நாய்க்குட்டியை அழைத்தான். "என் கண்ணே, நீ எல்லாப் பாதுஷாக்களையும் விட மேல். யாருடனும் நீ சண்டை செய்வது இல்லை. சச்சரவு இடுபவர்களோடு உனக்கு எவ்வித உறவும் கிடையாது." என்று அதனிடம் சொன்னவன் என்னைப் பார்த்துவிட்டான். "டேய் தம்பி! என் கண்மணியின் வாலை முத்தமிடு!" என்றான்.

நான் ஒரு புறம் துள்ளி ஓடி அவனுடைய முட்டாள் சேட்டைகளைத் தொலைவிலிருந்து பார்த்தேன். என் பழைய நண்பர்களான தாஷ்கந்த் பைத்தியக்காரர்களை வெகுகாலமாக நான் காணவில்லை. என்னையும் அறியாமல் மல்லா-ஜின்னியையும் அவனுடைய நாய்க் கும்பலையும் தொடர்ந்து திரிந்தேன். திடீரென்று தன்னினைவு அடைந்து, வந்த வழியே திரும்பி ரொட்டிக்கடைக்குப் போனேன். ரொட்டிகள் வாங்கிக் கொண்டு நான் புகைக்கூடம் திரும்பியபோது ஹாஜி-பாபா வெகுநேரமாகவே கொதித்துக் கொண்டிருந்த ஸமோவாரின் அருகே வேலையில் முனைந்திருந்தான்.

"ஆக்கங்கெட்ட பயலே, நீ என்ன, ரொட்டி வாங்க நேரே தோய்த்தேப்பா வரை போனாயோ? எங்கே தொலைந்துவிட்டாய்? கொண்டா இப்படி!" என்று சிடுசிடுத்தான்.

புகைக்கூடத்தில் அதற்குள் ஏழு, எட்டு வாடிக்கைக்காரர்கள் வந்திருந்தார்கள். தேநீரும் உணவும் லாகிரி வஸ்துக்களும் அவரவர் கொடுத்த பணத்துக்குத் தக்கபடி எல்லாருக்கும்



வினியோகித்தோம். எல்லோரும் ஆகாரம் உட்கொள்ளத் தொடங்கியதும், தேயிலையும் சர்க்கரையும் வைத்திருந்த பெட்டியைத் திறந்து, தலைக்கு நாள் வாங்கிய பஷ்மாக்-ஹல்வாவை எடுத்து மூன்று கூறுகள் ஆக்கி ஹாஜி-பாபாவுக்கும் (எல்லாவற்றிலும் பெரிய துண்டு அவனுக்கு) இந்தியனுக்கும் உஸ்தாது ஸலீமுக்கும் முன்னே வைத்தேன். ஹாஜி-பாபாவின் விழிகளில் ஆர்வம் சுடர்ந்தது.

"எங்கிருந்து எடுத்து வந்தாய் இதை, குட்டிப் பேயே?" என்று சீறினான்.

நான் அடக்கத்துடன் விழிகளைத் தாழ்த்திக் கொண்டு, "நீங்கள் கொடுத்த காசைச் சேர்த்து வைத்து நேற்றுச் சந்தையில் வாங்கினேன்" என்றேன்.

ஹாஜி-பாபா வியப்பும் உளநெகிழ்ச்சியும் அடைந்தான். இந்தியனும் உஸ்தாது ஸலீமும் அப்படியே.

"சபாஷ், பையா! நீ சரியான ஆளாகத் தலையெடுப்பாய். செட்டாக இருப்பதும் சேர்த்து வைப்பதும் மிகவும் நல்ல குணம். இப்படியே செய்துவா, சீக்கிரம் பணக்காரன் ஆகிவிடுவாய். ஆமாம், அதுதான் விஷயம்... நல்லது. போ, மகனே போ. உனக்கு இது பத்து மடங்காகத் திரும்பக் கிடைக்கட்டும்" என்று வாழ்த்தினான் ஹாஜி-பாபா.

பகல் வழக்கம்போலக் கழிந்தது. மாலைத் தறுவாயில் புதிய ஆட்கள் நிறைய வந்தார்கள். எல்லா வெள்ளிக்கிழமைகளிலும் போலவே இவர்களில் பெரும்பாலோர் இளம் கம்மியர்கள். இவர்கள் இரண்டொரு தடவைகள் புகை இழுப்பார்கள். பாதி ஹுக்காவைச் சிரமத்துடனேயே புகைத்துத் தீர்ப்பார்கள். ஆனால் புலவோ கறிக்குழம்போ சமைப்பார்கள். அற்ப விஷயங்களுக்கெல்லாம் கலகலவெனச் சிரித்தவாறு இரவு முழுவதும் குதூகலமாய் இருப்பார்கள். சுருங்கக் கூறின், இவர்கள் வருகையால் புகைக்கூடம் கொஞ்ச நேரத்துக்காவது சாதாரண மக்கள் நிறைந்த சாதாரணத் தேநீர்க் கடையை ஒத்திருக்கும். இந்த மாதிரிச் சாதாரண ஜனங்களுக்காக உண்மையில் நான் மிகவும் ஏங்கிப் போயிருந்தேன். தவிர இப்படி நெய் பிழியும் புலவும் இவ்வளவு மணம் கமழும் கறிக் குழம்பும் வழக்கமான நாட்களில் எனக்கு எங்கே கிடைக்கும்? இந்த இளைஞர்கள்

ஒவ்வொரு வெஞ்சனத்திலும் ஒரு பகுதியைச் "சாயாக்கடைப் பையனுக்காக" - அதாவது எனக்காக - எடுத்து வைத்தார்கள். அவர்களிடம் பண ஓட்டம் குறைவுதான் என்றாலும் மனம் தாராளம். ஒவ்வொரு காசையும் கணக்குப் பார்க்க அவர்கள் இன்னும் பழகவில்லை. தேநீருக்கும் ரொட்டிக்கும் விறகுக்கும் உப்புக்கும் மிளகாய்க்கும் உள்ள விலைக்கு அதிகமாகவே கொடுத்தார்கள். இப்படி ஒவ்வொரு காசாக என்னிடம் பணமும் சேர்ந்தது. இந்த மாதிரி நாட்களில் ஐந்தாறு தன்காக்கள் சம்பாதித்துவிடுவேன். இது மிகப் பெரிய தொகை! இத்தகைய நாட்களில் பொதுப்புலவு புகைக்கூடத்தில் பல முறைகள் தயாரிக்கப்படும். நான் நள்ளிரவுக்குள் வயிறு புடைக்கத் தின்றுவிட்டு, நீர்த் துறைத் தாராபோலத் தத்தக்க பித்தக்க வென்று நடப்பேன்.

இன்று நல்ல நாள். வியாபாரம் மும்முரமாக நடந்தது. நான் ஹாஜி-பாபாவிடம் இருபத்தொரு ரூபிள்களும் கோப்பெக்குகளும் ரொக்கமாகக் கொடுத்தேன். மகிழ்ச்சியால் அவன் முகம் ஒரேயடியாக மலர்ந்துவிட்டது. ஐந்தாவது தொழுகைக்குப்பின் புகைக்கூடத்தில் ஏழெட்டு வாடிக்கைக்காரர்கள் மட்டுமே எஞ்சியிருந்தபோது அவன் தலைக்கு நாள் நான் வாங்கிவந்த மெழுகுவர்த்திகளில் நான்கை எடுத்து நான்கு மூலைகளிலும் பொருத்திவைத்து ஒவ்வொன்றின் முன்பும் குரானின் ஒரு செய்யுளைப் படித்தான். உஸ்தாது ஸலீம் பளிச்சிடும் திண்டுமேல் அதே "அதிர்ஷ்டசாலி அபூ-முஸ்லிமின் போர்கள் பற்றிய கதை" என்ற புனித நூலை விரித்து வைத்தவாறு மணைமீது வசதியாக அமர்ந்துகொண்டான். இதோ உரத்த குரலில் ராகம் போட்டுப் படிப்பான். மற்றவர்கள் கேட்கத் தயாரானார்கள். படிப்பு தொடங்குவதற்கு முன்பே மனநிறைவும் பயமும் பேரின்பமும் புகைபடிந்த மண்ணெண்ணெய் விளக்கின் ஒளியில் அவர்களுடைய முகங்களில் தோற்றம் அளித்தன.

"ஆக... ஆக, மைமோனின் திக்கில் இருந்து வலது சாரியில் குஹிதாமன் மலை அடிவாரத்தின் பக்கத்தில் புழுதி கிளம்பிற்று. ஏழு பகுதிகள் கொண்ட கவச உடைகள் அணிந்த எழுபத்திரண்டு ஆயிரம் படைவீரர்களின் எழுத்திரண்டு பதாகை வீரர்கள் அந்தப் புழுதியில் மறைந்தார்கள். ஹொராஸான் அதிர்ஷ்டசாலி மகாபுனிதர் அபூ-முஸ்லிமின் மாவீரர்கள் மைஸாரின் திக்கிலிருந்து இஸ்கந்தர் - ஸுல்கார்நைனுடைய சுவர் போன்ற நேர் வரிசையில் அணிவகுத்துக்கொண்டார்கள். பொன் அணிகளால் அலங்கரிக்கப்பட்ட அவருடைய மரகதச் சிங்காதனத்திற்கு மேலே வீசிப் பறந்தது முகம்மதின் கொடி - ஹொராஸானின் ஒளி சுடரும் பதாகை.

"ஏழு பகுதிகள் கொண்ட கவசம் பூண்டு முகமூடி அணிந்த ஒரு மாவீரன் பகைவர் வரிசைகளிலிருந்து விரைந்தோடும் குதிரையைக் குதிமுட்களால் முடுக்கி விரட்டியவாறு போர்க் களத்தில் பாய்ந்து வந்தான். அவனுடைய குதிரையின் கால்கள் மண்ணில் ஆழப் புதைந்தன. மரம் போன்ற பெரிய கதாயுதத்தைத் தலைக்கு மேலே சுற்றி முகமூடியை அகற்றிவிட்டு அவன் கர்ஜித்தான்:

" 'ஹொராஸான் ஸ்தெப்பியைச் சேர்ந்த அடே அபூ-முஸ்லிம், விலங்குகளின் அன்பனே, என்னை அறிவாய் என்றால் அறி. அறியாய் என்றால் தெரிந்துகொள் - நான்தான் நஸரேஸையார் பெயோர். இன்று இந்தக் களத்தில் உன்னைத் தாக்கி உயிரைப் பறிக்கிறேன்."

"இப்போது மகாபுனிதர் அபூ-முஸ்லிம் வீரம் பொங்க, குஹ்தாச் என்ற பெயர் கொண்ட தம் சாம்பல் பழுப்புக் குதிரைமேல் தாவி ஏறி, அந்தச் சபிக்கப்பட்டவனின் வழியை மறித்தார். அவருக்கு ஏற்பட்ட சீற்ற மிகுதியால் அவருடைய ஒவ்வொரு ரோமமும் குத்திட்டு, நஞ்சு தடவிய வேல் போலக் கவசத்தைத் துளைத்துக்கொண்டு நின்றது.

" 'ஓ அலி!' என்ற முழக்கத்துடன் ஒரே பாய்ச்சலில் நஸரேஸையாரின் இடைவாரைப் பற்றித் தூக்கி, தம் அருள் பெற்ற தலைக்கு உயரே ஏழு தடவைகள் சுழற்றி வானத்தில் எறிந்தார் அவர். அந்தப் பாவியின் உடல் கண்ணுக்கு மறைந்து, புலவு தயாரிப்பதற்கு ஆகும் நேரம்வரை மறுபடி புலப்படவில்லை. அப்புறம் மகாபுனிதர் தம் அருட்கரங்களை ஆகாயத்தில் நீட்டி அவனைப் பிடித்துச் சேதம் இல்லாமல் தரையில் விட்டார்.

" 'டேய் நஸரேஸையார், ஹொராஸான் வாசிகளின் கௌரவத்தை மரியாதையின்றி இப்படி எள்ளி நகையாட இனி துணியாதே!"

"நஸரேஸையார் தன் செயலுக்கு வருந்தி, மகாபுனிதருடைய குதிரையின் அங்கபடிகளை முத்தமிட்டு, இனி அவருக்குப் பணிந்து நடப்பதாக உறுதி கூறினான்."

இந்த வியப்பூட்டும் கதையைக் கேட்டவர்கள் நடு நடுவே உற்சாக ஆரவாரம் செய்தார்கள். ஆகாகா, ஓகோகோ என்றார்கள். படிப்பில் இடை நிறுத்தம் ஏற்பட்டதும் ஒருவராலும் பேசாதிருக்க முடியவில்லை. மும்முரமான கருத்துப் பரிமாற்றம் தொடங்கியது.

திக்கான்லி-சமாதியில் வேலை செய்த அகமதலி என்பவன், "இவரல்லவா வீரர்!" என்று கண்ணீரைக்கூடத் துடைத்துக் கொண்டான்! "இது அல்லவா வீரம்! வீரனைப் போரில் கண்டறியலாம் என்பது இத்தகையவர்களைப் பற்றித்தான். இந்தக் காலத்துப் படைவீரர்களும் ஒரு கணக்கில் சேர்த்தியா? கோழைத்தனமே உரு! ஒரு மைல் தொலைவில் நின்று கொண்டு எதிராளியைத் துப்பாக்கியால் சுடுகிறார்கள். இல்லாவிட்டால் அமைதியுள்ள மக்கள் மேல் பீரங்கிக் குண்டுகள் பொழிகிறார்கள்... படைவீரர்களாவது, பாவிகள்!" என்றான்.

"உண்மைதான்! இப்போது அந்த மாதிரி வீரர்கள் இல்லை, இல்லவே இல்லை!" என்றார்கள் மற்றவர்கள்.

என் இந்திய நண்பனும் இந்தப் பொதுப்பாட்டில் சேர்ந்துகொண்டான்.

"மாஷா அல்லா, மாஷா அல்லா, உண்மைதான்!" என்றான் அவன்.



அத்தியாயம் 16

# எனக்குப் புளித்துப் போயிற்று

**நீ**ங்கள் என்ன வேண்டுமானாலும் சொல்லிக்கொள்ளுங்கள். இங்கே மாதக்கணக்கில் தங்கியிருக்க எனக்குப் பொறுமை போதாது. இது மிகவும் லாபம் தரும் இடந்தான், சந்தேகம் இல்லை. என் போன்ற சிறுவன் தாயாருக்கும் தங்கைகளுக்கும் உதவும் அளவுக்கு மட்டும் அல்ல, இந்தியா பயணம் செய்வதற்கும் வேண்டிய பணத்தைச் சம்பாதித்துச் சேர்க்க வேறு எங்கே முடியும்? ஆயினும் இது வரை இளம்புல்லில் மேயும் கன்றுபோல விட்டாற்றியாகச் சுற்றித் திரிந்துவிட்டு, திடீரென்று குடத்துக்குள் விழுந்த வயலெலிபோல மாட்டிக்கொண்டால், குடத்தில் என்னதான் சுவையான பண்டங்கள் இருந்தாலும் மனம் குதூகலப்படுமா எங்காவது? குடத்துக்கு உள்ளே வெள்ளி ரூபிள் அளவான வானம் மட்டுமே கண்ணுக்குத் தெரியும். வெள்ளி ரூபிள் ஆகாயத்துக்கு ஈடாகுமா?... இந்திய நாணய மாற்று வியாபாரியின் கதைகள் மிகவும் சுவையானவை, அவனுடைய மேலங்கி போலவே (அது அவனைக் காட்டிலும் ஒரு கஜம் நீளமானது) நீண்டவை என்பதும் உண்மைதான். ஆனால் இந்தக் கதைகள் என் சமவயதுப் பையனுக்கு, உயிர் நண்பனுக்கு மாற்று ஆக முடியுமா? நண்பனோடு விளையாடலாம், சச்சரவு செய்யலாம், பலத்தை சோதித்துப் பார்க்கலாம், சண்டைக்குப்பின் சமாதானம் ஆகலாமே!

எனக்குச் சலிப்பாக இருந்தது. எப்படி அலுத்துப் போனேன் என்று சொல்லக்கூட முடியாது. மனதிற்குக் களிப்பூட்ட ஏதேனும் கிடைக்காதா என்று தேடிய வண்ணமாய் இருந்தேன். ஹாஜி-பாபா வளர்த்துவந்த காடைகள் பாடத் தொடங்கி விட்டன. எங்கள் புகைக்கூடத்தின் வழக்கமான வாடிக்கைக் காரனான ஸுல்தான் - தூக்கிய மூக்கும் மென்மயிர்த் தோல் தொப்பியுமாக வளைய வருவானே, அவன் - விட்டுச் சென்றிருந்த கேக்ளிக் பட்சியும் பாட ஆரம்பித்திருந்தது. ஆனால் இந்தப்

பறவைகளும் என்னைப்போலவே சிறைப்பட்டிருந்தன. ஒன்று வெண்பனி மூடிய தாய்த்தாய் மலையின் உயரமான சரிவுகளிலிருந்து அகற்றப்பட்டு இங்கே அடைபட்டிருந்தது. காடைகளோ, குன்கிராக் - தெப்பே பசும்புல் வெளிகளிலிருந்து பிடித்து வரப்பட்டிருந்தன. அவற்றின் இசையைக் கேட்கையில் என் விடுதலையின்மை முன்னிலும் கடுமையாக எனக்கு உறைத்தது. எனக்குக் களிப்பூட்டுவதற்கு இன்னும் சுவையான எதிர்பாராத ஏதேனும் நிகழ்ச்சி தேவைப்பட்டது. உதாரணமாக, மிருகக் காட்சிசாலையிலிருந்து புலி தப்பி ஓடி, வலீஹோஜா - அகாவின் சில்லறை உடுப்புச் சாமான் கடை வரிசையைத் தாக்கியிருந்தால், அல்லது பொதுக் குளியறையில் கொதிகலம் பட்டப் பகலில் வெடித்திருந்தால், நான் குதூகலம் அடைந்திருப்பேன். இவ்வாறு நடப்பதாக நான் கனவு கண்டேன். கடை வரிசை வழியாகப் போகும்போது பல்வித வாசனைகளால் புலி நொடிக்கு ஒரு தரம் தும்முவது போலவும் வாயைச் சரியாகத் திறக்கவே அதற்கு வாய்க்கவில்லை போலவும் எண்ணிக் கொள்வேன். குளியறைக் கொதி கலம் வெடித்துச் சிதறுவாகவும், அம்மணமான ஆட்கள் நமுதாவிலிருந்து தெள்ளுப்பூச்சிகள் போல அறையிலிருந்து மளமளவென்று வெளியே ஓடி வருவதாகவும் கற்பனை செய்துகொள்வேன். ஆனால் மிக அடிக்கடி நான் கற்பனை செய்து கொண்டது இந்தியப் பயணத்தையே: அடர்ந்த காடுகள் வழியே நடக்கிறேன், சிங்கத்தோடு சண்டை போடுகிறேன், நாற்பது தலைப் பாம்பின் தலைகளை வெட்டித் தள்ளுகிறேன், காட்டு ஆனைப் பழக்குகிறேன், முதலைகள் மேலும் காண்டாமிருகங்கள்மீதும் சவாரி செய்கிறேன் - ஆகா, இந்த மாதிரி வாழ்க்கை எனக்கு உவப்பாய் இருக்கும்!

இங்கேயோ? நோயுற்ற தவிட்டுப் புறாக்கள் போலச் சாம்பல் நிறமான இந்த லாகிரிப் பிரியர்களையும் இவர்கள் ஆழும் போதை உறக்கம் போலவே முடிவற்ற, இவர்களுடைய சலிப்பூட்டும் பேச்சுக்களையும் எப்படித்தான் நான் இன்னும் பொறுத்துக் கொண்டிருந்தேனோ! இவர்களுக்குள் கருத்து வேறுபாடுகள் ஏற்படும் போதோ, ஒரேயடியாகக் குமட்டல் எடுக்கும். இவர்கள் கூச்சலிடுவார்கள். கைகளை வீசி ஆட்டுவார்கள். செத்தவர்கள் உயிர்த்து எழுந்து வருங்காலம் பற்றித் திட்டங்கள் போடத் தொடங்கினால் இதைவிட



மேலாயிருக்குமே! பிய்த்துக்கொண்டு போய்விட வேண்டும் இங்கிருந்து, கம்பி நீட்டிவிட வேண்டும்! தவிர, தாயார் முன்னாலும் வட்டாரத்தின் முன்னாலும் தலை காட்டாமல் இருக்க வெட்கமாய் இருந்தது - துராப்பாய் எங்கள் சந்திப்பைப் பற்றி யாரிடமாவது அடக்கமாட்டாமல் கிசுகிசுத்திருப்பான்! ஆனாலும் "போவதற்கு இன்னும் நேரம் வரவில்லை, பொறு" என்று எதுவோ என் காதோடு சொல்லிற்று. முதலாவதாக, இந்தியப் பயணத்துக்கு வேண்டிய பணம் நான் இன்னும் சேகரிக்கவில்லை. அதற்காக இந்தியனின் தாராளத்தையோ, கணக்குப் பார்ப்பதில் ஹாஜி-பாபாவின் திறமை இன்மையையோ, புலவு விரும்புபவர்களின் பெருந்தன்மையையோ என்னுடைய சுறுசுறுப்பையோ போதாது என்று நான் குறை கூறினால் அது பாவம் ஆகும். உங்களிடம் மட்டுமே சொல்லுகிறேன்: என்னிடம் ஐந்து ரூபிள் நாணயங்கள் மூன்றும் ஒரு பத்து ரூபிள் நாணயமும் இரண்டு ரூபிள்களும் தங்கத்திலும், மற்றும் வெள்ளி, செப்பு நாணயங்களும் ஏற்கனவே சேர்ந்திருந்தன. இந்த விஷயம் இந்தியன் ஒருவனுக்கும் அல்லாவுக்குமே தெரிந்திருந்தது. சில்லறை முழுத் தொகை அளவுக்குச் சேர்ந்ததும் இந்தியன் அதைத் தங்க நாணயமாக மாற்றிக் கொடுப்பான். தங்க நாணயங்களை என் லேசான கோடைகால மேலங்கி விளிம்பில் வைத்துத் தைத்துக் கொண்டிருந்தேன். மற்ற நாணயங்களை ஹாஜி-பாபாவின் சாம்பல் கலயத்தில் போட்டு, ஓடைக் கரையில் புதைத்திருந்தேன். அந்த இடம் புகைக்கூடத்திற்கு சுமார் ஐம்பது தாவடித் தொலைவில் முதிர்ந்த பாப்ளார் மரத்தின் அடியில் இருந்தது. சும்மா சொல்லக்கூடாது, நான் நிறையவே சம்பாதித்தேன், என்றாலும் இன்னும் போதவில்லை.

விஷயம் இது மட்டும் அல்ல. ஹாஜி-பாபாவுக்கு என் வேலை பிடித்திருந்தது. நான் இல்லாமல் அவனால் கொண்டு செல்ல முடியாது. ஆகவே, நல்லபடியாக என்னை அவன் போகவிட மாட்டான். சொல்லிக்கொள்ளாமல் கம்பி நீட்டுவோம் என்றால் அவன் என்னைத் தேடத் தொடங்குவான். இது ஸ்தெப்பி வெளி அல்லவே, நகரம்தானே. எனவே அவன் என்னை எப்படியும் கண்டுபிடித்துவிடுவான். அப்புறம் வட்டாரத்தில் என்னால் தங்கியிருக்க முடியாது... இல்லை, இவர்களாக என்னை விரட்டும்படி ஏதாவது செய்ய வேண்டும். இதுவரை நான் நிலவு வீசும் சாலையில் தேரைபோல அற்பமாய் இருந்தேன்...

என் மனத்தில் அரைகுறைத் திட்டங்கள் செம்மச் செம்ம நிறைந்திருந்ததாலோ, சலிப்பும் சோர்வும் என்னை ஒரேயடியாக ஆட்கொண்டுவிட்டதாலோ, எதனாலோ தெரியவில்லை, நான் வழக்கத்துக்கு மாறாக அமைதியாக, சிந்தனையில் ஆழ்ந்திருந்ததைப் புகைக்கூடத்தில் உள்ளவர்கள் எல்லோரும் கவனித்துவிட்டார்கள். இது ஹாஜி-பாபாவுக்குக் கவலை உண்டாக்கியது. இந்தியனுக்கோ இன்னும் அதிகமாக.

செவ்வாயன்று ஹாஜி-பாபா என்னை அருகே அழைத்து, "சொல்லு, மகனே - இந்த விஷயம் நமக்குள் மட்டுமே இருக்கும். தற்செயலாக இந்த நாசமாய்ப் போகிற கறுப்புச் சாமானை நீ ருசி பார்த்தாயா என்ன (ஆண்டவன் அப்படி நேராமல் காப்பாராக)?" என்று கனிவுடன் கேட்டான்.

"எந்தக் கறுப்புச் சாமானை?"

"எதையாம் அதை - நாங்கள் உபயோகிக்கிறோமே, அதைத்தான் கேட்கிறேன்..."

"நீங்கள் என்ன ஒன்று, ஹாஜி-பாபா! கற்பனையில்கூடச் சுவைத்துப் பார்க்கவில்லை நான். நம் வாடிக்கைக்காரர்கள் எந்தக் கதிக்கு ஆளாகிறார்கள் என்றுதான் பார்க்கிறேனே. எனக்குக் கனகாபிஷேகமே செய்தாலும் அதை வாயருகேகூடக் கொண்டு போக மாட்டேன்."

"அப்படியா, அல்லாவே போற்றி, சபாஷ், மகனே. இந்த நஞ்சிலிருந்து விலகியே இரு. அதுதான் விஷயம்..."

ஹாஜி-பாபா எப்போதும் தோள்மேல் போட்டிருக்கும் இடுப்புக்குட்டையால் கண்களைத் துடைத்துக்கொண்டு, பைக்குள் கை விட்டு ஒரு ரூபிள் நோட்டை எடுத்தான்.

"இந்தா, இது நாளை உன் விடுமுறைச் செலவுக்காக. போய் விருப்பமான பண்டங்களை வாங்கிச் சாப்பிடு. உன் பதில் எனக்கு நிரம்ப மகிழ்ச்சி அளித்தது. இவ்வளவு நல்ல பையனை உருப்படாமல் அடித்துவிட்டோமோ என்று எண்ணிப் பயந்து போனேன்" என்றான்.

பணத்தை வாங்கிப் பையில் வைத்துக்கொண்டு, "இந்த விஷயத்தில் நீங்கள் கவலையே பட வேண்டாம், ஹாஜி-பாபா! நான் மடையனா என்ன?" என்றேன்.



அவன் உண்மையாகவே ஆறுதல் அடைந்து வழக்கமான உபதேசங்களைப் பொழியலானான்.

மாலையில் இந்தியனும் அதே போலக் கனிவுடன் என்னை அருகே அழைத்தான்.

"இங்கே வா, மகனே. நீ எப்படி இருக்கிறாய்? உனக்கு உடம்பு சரியாய் இல்லையா என்ன?"

"ஒன்றும் இல்லை, பாச்சா, எனக்கு உடம்பு சரியாய்த்தான் இருக்கிறது."

"எதனால் ஏங்கியிருக்கிறாய்?"

"அட சும்மாதான்" என்று அவனை ஓரக்கண்ணால் பார்த்து, தயக்கத்தை விட்டுவிட்டு, "நான் ஓயாமல் இந்தியா நினைவாகவே இருக்கிறேன். அங்கே போக ஆசைப்படுகிறேன்!" என்றேன்.

அவன் பக்கென்று நகைத்தான். நானும் வாய்விட்டுச் சிரித்தேன்.

"மாஷா அல்லா, நீ மெய்யாகவே இந்தியா போக ஆசைப்படுகிறாயா?"

"ஆமாம், பாச்சா."

"இந்தியப் பயணம் மிக நீண்டது, மிகவும் கஷ்டமானது ஆயிற்றே!"

"எனது ஆர்வம் மிகப் பெரிது, பாச்சா."

"சபாஷ், மகனே... மாஷா அல்லா!"

அவன் கணப்போது பேசாதிருந்தான். அவன் விழிகள் மங்கின. எங்கள் புகைக்கூடத்துக்கு அப்பால் வெகு தொலைவில் அவன் எதையோ கண்டுவிட்டதுபோல் இருந்தது. பிறகு அந்தக் காட்சியை அகற்றும் பாவனையில் அவன் களித்த முகத்துடன் தலையை அசைத்தான். முன்னே விட அதிகக் கனிவுடன் என்னை நோக்கினான். தன் மூட்டைக்குள் கையை விட்டு எதையோ எடுத்தான். ஓகோ! அது ஐந்து ரூபிள் நோட்டு! நான் கொஞ்சம் தயங்கினேன். இந்தப் பணம் அவ்வளவும் எனக்கே என்று உண்மையிலேயே நான் நம்பவில்லை.

"வாங்கிக்கொள், மகனே. எனக்குக் குடும்பமோ குழந்தை குட்டிகளோ கிடையாது. பணத்தை எல்லாம் செலவழித்துவிட

மாட்டேன். பாவங்களைப் போக்குவதற்காகத் தானம் செய்வது அல்லாவுக்கு உவப்பானதுகூட!" என்றான் அவன்.

இன்று எனக்கு அதிர்ஷ்டத்துக்குமேல் அதிர்ஷ்டம்! நல்ல முகத்தில் விழித்தேன் போலிருக்கிறது. ஒரே நாளில் ஆறு ரூபிள்கள் சம்பாதிப்பது என்றால் விளையாட்டா! இந்த ரீதியில் லட்சாதிபதி ஆக வெகு காலம் பிடிக்காது. ஏங்கிய தோற்றம் இந்த மாதிரி வருவாய் தரும் என்று மட்டும் எனக்குத் தெரிந்திருந்தால், தொடக்கத்திலிருந்தே வாழ்நாள் பூராவும் ஏக்கமே வடிவாக வளைய வந்திருப்பேனே. ஆனால் எனக்கு உற்சாகம் பிறந்துவிட்டது. ஒரு காரணமும் இல்லாமல் அடிக்கடி புன்னகை செய்தவாறு மாலை வரை வேலை செய்தேன்.

புதன்கிழமை விடியற்காலையில் ஹாஜி-பாபா என்னிடம் இரண்டு தன்காக்களைக் கொடுத்தான்.

"சீக்கிரம் ஓடிப்போய் ரொட்டிகள் வாங்கி வா, சால்களில் தண்ணீர் நிரப்பு, பட்சிகளுக்கு இரையும் நீரும் போதுமா என்று பார். அப்புறம் உனக்கு விடுதலைதான். கடைவீதிக்குப் போ, சாப்பிடு. சந்தோஷமாகப் பொழுது போக்கு. இஷ்டமான போது திரும்பி வா. ஆனால் நிரம்ப நேரம் தாழ்க்காதே. காலம் கெட்டுக் கிடக்கிறது. கயவர்கள் வசவசவென்று நிறைந்திருக்கிறார்கள். அதுதான் விஷயம்" என்றான்.

நான் ஒரே நொடியில் ஓடிப்போய் ரொட்டி வாங்கி வந்தேன். சால்களில் தண்ணீர் நிறைத்தேன். பட்சிகளுக்கு இரை வைத்தேன். அப்புறம் ஹாஜி-பாபாவும் நானும் தேநீர் பருகினோம். நான் சந்தைக்குப் புறப்பட்டேன். இந்தத் தடவை ஹஸ்தீ-உக்கோஷ் அருகில் உள்ள பால் கடைவீதியிலிருந்து தொடங்கினேன். ரொட்டியும் பாலாடையும் தின்ன எனக்கு ஆசையாய் இருந்தது... நான் அங்கே போய்ச் சேர்ந்து, ஒரு கடையில் பாலாடையை நக்கிப் பார்த்துவிட்டுப் "புளிப்பு" என்றும், மற்றொன்றில் "நீர்த்துப் போனது" என்றும் சொல்லியவாறு முறைப்படி ருசி பார்க்க ஆரம்பிப்பதற்குள் எங்கள் வட்டாரத்துப் பையன் உபாய் என்பவனைக் கண்டேன். இவன் அரைவை மில்காரன் சீச்சுக்குரல் அப்துல்லாவின் தம்பி, கிழவர் இப்ரஹீம்-பயில்வானின் மகன். என்னைக் கண்டு அவன் மகிழ்ச்சியும் ஆச்சரியமும் அடைந்தான். துராப்பாய் தன் வாக்கைக் காப்பாற்றினான், நான் தாஷ்கந்தில் இருப்பதை யாருக்கும் சொல்லவில்லை என்பது உபாய் ஆச்சரியப்பட்டதிலிருந்து தெளிவாயிற்று. மறுபடி விசாரிப்பும் கதைகளும் தொடங்கின. சில கேள்விகளுக்கு உண்மையாகவும் மற்றவற்றுக்குக் கயிறு திரித்தும் பதில்கள் சொல்லி ஒருவாறு சமாளித்தேன் - அல்லாவுக்கு நன்றி. பிறகு நாங்கள் காரியார்த்தமாகப் பேசினோம். நான் பாலாடை தின்று முடிப்பதற்குள் அவன் சந்தைக்குக் கொண்டுவந்திருந்த தயிரை விற்றுவிடுவான். பிறகு இருவரும் யூப்பாத்தவ் ஸர்க்கஸுக்குப் போவோம். அதன்பின் ஐஸ்கிரீம் தின்போம், பொரித்த மீன் வாங்குவோம், ஒட்டகச் சேணத்தில் கட்டிய மூடு பெட்டிகளில் சவாரி செய்வோம், பயாஸ்கோப் பார்ப்போம்... மனமார இன்பப் பொழுது போக்குவோம்! - இப்படிப் பேசி முடிவு செய்து கொண்டோம்.

இன்று எல்லாப் பண்டங்களும் என் செலவிலேயே வாங்கிக் கொடுப்பதாக நான் உபாயிடம் சொன்னேன். தயிர் விற்றுக் கிடைக்கும் பணத்தை அவனால் செலவு செய்ய முடியாது. செய்தால் அவன் மதனியிடமிருந்து அவனுக்குச் செம்மையாகக் கிடைக்கும். தயிரை மலிவாக விற்கக் கூடாது என்று அவள் அவனுக்குக் கட்டளை இட்டிருந்தாள். உபாய் தயிர் விற்பதில் முனைந்திருக்கையில் நான் ஐந்து கோப்பெக்குகளுக்குப் பாலாடையும் இரண்டு கோப்பெக்குகளுக்குப் புளித்த ரொட்டியும் வாங்கிக்கொண்டு நிழலில் குந்தினேன். விரைவில் உபாய் தயிர் விற்றுவிட்டு வந்து சேர்ந்தான். சாப்பாட்டை அவனும் பகிர்ந்து கொண்டான். காலிப் பாத்திரங்களைக் கசாப்புக்காரன் கராபாயின் கடையில் வைத்தபின் தளை அவிழ்க்கப்பட்ட இளங் குதிரைகள்போலக் கட்டற்றவர்கள் ஆகிவிட்டோம்.

சந்தை. நடுப்பகல். ஜனக் கூட்டம் நெரிந்தது. வைக்கோலும் விறகும் நிக்கரியும் ஏற்றப்பட்ட ஒட்டகக் கூட்டங்களின் வரிசைகள் பிரயாணித் தங்கிடத்தின்வாயில் அருகே இடத்தை எதிர்பார்த்து வழியை மறித்தவாறு நின்று கொண்டிருந்தன. ஒட்டகக் கூட்டங்கள் மௌனமாக நின்றன. அவற்றின் விகாரமான முகங்களில் தோன்றிய உணர்ச்சி மட்டுமீறிய, இகழ்ச்சியா அல்லது எல்லையற்ற பணிவா என்று சொல்ல முடியவில்லை. சில வேளைகளில் அவற்றில் ஒன்று தலையைத் திருப்பும். அப்போது சிறு மணிகள் கிணிங்கென ஒலிக்கும்.

அவற்றின் மௌனம் நம் காதுகளுக்கு எட்டாத மிக நீண்ட பேச்சு போலவும் இந்த மணியொலி வெகு நேரமாக எதிர்பார்த்த முற்றுப்புள்ளிபோலவும் அப்பொழுது தோன்றும்.

மஹகமா கால்வாய்ப் பாலத்தின் மறுபுறம், எங்கும் புகை பரப்பிக் கொண்டிருந்தது மீன் பொரியல் கடை. அங்கே அழுக்கேறிய மேஜைமேல் அடையாகப் பரப்பிக் கிடந்தது ஸீர் தரியா ஆற்றில் பிடிக்கப்பட்ட பிரமாண்டமான கெளிறு. திராட்சைப் பழங்களை ஒத்த அதன் திறந்த விழிகளில் ஈக்கள் மொய்த்திருந்தன. மீன் பொரியல் கடையின் எதிரே உயர் ரக ஆட்டுத் தோல்கள் விற்கப்பட்டுக் கொண்டிருந்தன. அப்பால் இருந்த மைதானத்தில் சர்க்கஸின் வெண்ணீலக் கித்தான் கூடாரம் காட்சி தந்தது! அதன் வாயில் அருகே உயரமான பலகை மேடை மேல் எங்களுக்கு ஏற்கனவே அறிமுகமான வாத்தியக்காரர்களும் கோமாளிகளும் இருந்தார்கள். ரஃபீக் என்னும் பெயர் பெற்ற கோமாளியும் அங்கே இருந்தான். சிறு சிறு நிகழ்ச்சிகளைக் காட்டி ஆட்களை அழைத்துக் கொண்டிருந்தார்கள் அவர்கள்.

"அட முலாம் பழமோ மாதுளம் பழமோ இல்லாமல் போயிற்றே" என்று முந்திய புதன்கிழமை வாத்தியக்காரர்களுடன் எனக்கு நேர்ந்த அனுபவத்தை உபாயிடம் விவரித்தேன். இருவரும் கடகடவென்று சிரித்தோம்.

"அப்புறம் என்ன, ஸர்க்கஸுக்குப் போவோமா?" என்று கேட்டேன்.

"வேண்டாம், எனக்கு இஷ்டம் இல்லை" என்று சொன்னான் உபாய். எனக்கு வியப்பு உண்டாயிற்று.

"என்ன இப்படிச் சொல்லுகிறாய்?"

"கட்டணம் அதிகம்."

"பணம் நான் தானே கொடுக்கிறேன்?"

"அது சரிதான். அங்கே யாரோ மாய்ராம்-ஹான் என்று ஒருத்தி அம்மணமாக வித்தை காட்டுகிறாளாமே. நிர்வாணமான பெண்களிடம் எனக்கு ஒரே பயம்! ஏதோ தவளையை மிதிப்பது போலத்தான் இது, சத்தியமாக. வேறு என்ன காட்சிகள் உண்டு அங்கே? செப்படி வித்தைகளை நாம் பார்த்து விட்டோம், சங்கீதத்தைக் கேட்டுவிட்டோம். நடனம் ஆடும் குதிரைகளைப் பார்க்கப்போகிறோமா என்ன? எங்களிடம் சொந்தக் குதிரை இருக்கிறது. என் தகப்பனார் அதன் மேல் எப்படிச் சவாரி செய்வார் தெரியுமா? என்ன ஆனாலும் இந்தக் குதிரை நடனங்கள் கூடாச் சண்டைக்கு ஈடாகுமா? ஆட்டுப் பந்தயத்துக்கு நீ போயிருக்கிறாயா?"

"இல்லை, ஒரு தரங்கூடப் போனதில்லை."

"நான் போயிருக்கிறேன். ஆகாகா! அது அல்லவா ஸர்க்கஸ்!"

"இருந்தாலும் பார்த்து வைப்போமே."

"நீ என்ன, பணக்கார வியாபாரியா, காசைக் கரியாக்குவதற்கு? பார்த்ததையே மறுபடி பார்ப்பதைவிட ஐஸ்கிரீம் வாங்கிச் சாப்பிடுவோமே" - திடீரென்று அவன் உற்சாகம் அடைந்தான். "இங்கே, ஸர்க்கஸில் ஒரு தடவை ரஃபீக் வாய் நிறைய மரத்தூளை அடைத்துக்கொண்டு நெருப்புக் குச்சியைக் கிழித்து அதைப் பற்ற வைத்துக்கொண்டு வாயிலிருந்து பொறிகளாகச் சிதறினானாமே, நீ பார்த்தாயா?" என்று கேட்டான்.

"இது புளுகு..."

"எனக்கு ஹுஸ்னிபாய் சொன்னான்."

"அப்படியானால் ஹுஸ்னிபாய் பொய் சொல்லுகிறான்!"

"சரி, சரி. ஐஸ்கிரீம் வாங்கப் போவோமா?"

நாங்கள் போனோம். நான் சிவப்பு ஐஸ்கிரீம் வாங்கினேன். உபாய் வெளிர் மஞ்சள் ஐஸ்கிரீம் வாங்கிக்கொண்டான். ஐஸ்கிரீம் தட்டுக்களில் எங்களுக்குத் தரப்பட்டது. பனிக்கட்டியாய்க் குளிர்ந்த அந்த மொத்தைகளில் செருகப்பட்டிருந்தன மர ஸ்பூன்கள். தினந்தோறும் இந்த இனிய பண்டத்தைச் சுவைக்கும் அதிர்ஷ்டக்காரர்களும் இருக்கிறார்கள் அல்லவா? தட்டுக்கள் நாங்கள் அறியாமலே காலி ஆகிவிட்டன.

பிரயாணிகள் தங்கிடத்துக்கும் மைதானத்துக்கும் பக்கத்திலேயே தபால் நிலையம் இருந்தது. அதன் அருகே கம்பங்கள் நாட்டிக் கயிறுகள் இழுத்துக் கட்டப்பட்டிருந்தன, கழைக்கூத்தாடிகளுக்காக. ஆட்டம் இன்னும் தொடங்கவில்லை. இப்போதைக்குச் சில வாத்தியக்காரர்கள் வாத்தியங்களை இசைத்துக்

கொண்டிருந்தார்கள். இரண்டு கோமாளிகள் நீண்ட பொய்க்கால்களில் அசைந்தாடியவாறு என்னென்னவோ வேடிக்கைகள் காட்டுவதும் வாய்க்கு வந்தபடி உளறுவதுமாக இருந்தார்கள். அவர்களில் ஒருவனை எனக்குத் தெரியும். தங்கப் பின்னல்கள் தைத்த குல்லாயைக் கொண்டு அவனை அடையாளம் தெரிந்து கொண்டேன். அகா புஹார் என்பது அவன் பெயர். இங்கேயும் நாங்கள் வெறுமே சுற்றிவந்தோமே தவிர ஆட்டம் தொடங்கும் வரை காத்திருக்கவில்லை. வட்டாரம் திரும்பியதும் எதனால் பொய்க்கால்கள் செய்து கொள்ளலாம் என்பது பற்றிச் சர்ச்சை செய்தவாறு மேலே நடந்தோம். பொய்க்கால்கள் இல்லாமல் இதுவரை எப்படித்தான் இருந்தோமோ விளங்கவில்லை. அவற்றைக் கட்டிக்கொண்டு நடப்பது கஷ்டமே இல்லை (குறைந்த பட்சம் எங்களுக்கு அப்படித் தோன்றிற்று). எந்த மனிதனையும் விட, எந்தச் சுற்றுச் சுவரையும் விட உயரத்தில் இருக்கும் நம் தலைகள். எங்கே வேண்டுமோ, எதை வேண்டுமோ தடை இல்லாமல் பார்க்கலாம்!

"பட்டாணிச் சுண்டல் வாங்குவோமா?" என்றான் உபாய்.

"அட விடு அப்பா. பாலாடையும் ரொட்டியும் இப்போது தானே தின்றோம்! பயாஸ்கோப் பார்க்கலாம் வா. ஆரம்பத்திலிருந்தே தீர்மானித்திருந்தோமே பயாஸ்கோப் பார்ப்பதென்று, நினைவு இல்லையா?"

பயாஸ்கோப் படங்கள் காட்டினான் வழுக்கைத்தலை இப்ராய் - சாயாக்கடைக்கார இல்ஹாமின் தம்பி. இரண்டு படங்கள் பார்க்கக் கட்டணம் ஒரு கோப்பெக். ஆனால் நாங்கள் அண்டை வீட்டார் என்பதை இப்ராய் கண்டுகொண்டான். எனவே, இரண்டு கோப்பெக்குகளுக்கு ஐந்து படங்கள் காட்ட இசைந்தான். பயாஸ்கோப் கண்ணாடிகளைக் கண்களில் பொருத்திக் கொண்டோம்.

சலிப்பூட்டும் குரலில் இப்ராய் சொல்லத் தொடங்கினான்: "இவர்தான் ரோமபாதுஷா கேஸர் (ருமேலீஸ்க்கிய்), மனைவியோடு தெருவில் உலாவுகிறார்... இவர்தான் துருக்கி ஸுல்தான் ஹலீஃப் இரண்டாம் அப்துல் ஹமீது. வெள்ளிக்கிழமை அன்று தொழுகை படிப்பதற்காக லேபாஃபியா மசூதிக்கு வந்திருக்கிறார். சாரட்டுக்கு முன்னே இருப்பவர்கள் யாசகம் கேட்கும்



பிச்சைக்காரர்கள்... இவர்தான் ஆப்கானிய ஸுல்தான் அப்துர் ரஹ்மான். இவள்தான் இந்தியச் சிற்றரசி. பரங்கிப் பாதுஷாவின் மகள். மஸாந்தரான் காடுகளில் யானைமேல் சவாரி செய்கிறாள்..." இப்ராய் இந்த விளக்கங்களை மளமளவென்று பொரிந்து தள்ளினான். படங்கள் விளக்கங்களுக்கு ஏற்ற வேகத்தில் இயங்கவில்லை. எனவே நாங்கள் ரோமானியக் கேஸரின் மனைவியை ஹலீஃப் துருக்கி ஸுல்தான் இரண்டாம் அப்துல் ஹமீத் என்று எண்ணிவிட்டோம். இந்தப் பிசகை நாங்கள் புரிந்து கொள்வதற்குள் ஆப்கானிய ஸுல்தான் அப்துர் ரஹ்மான் யானை மேல் பவனி வரும் இந்தியச் சிற்றரசி போல நடிக்க முயன்றார்" - நடு நடுவே இப்ராய் எதையோ அர்த்தமற்ற வார்த்தைகளைப் பொரிந்து தள்ளினான். "இவர்கள் மெக்காவுக்குப் போகும் யாத்திரிகர்கள். அராஃபா மலை மேல் ஏறுகிறார்கள்... இவள்தான் மாட்சிமை தாங்கிய வெள்ளைக்கார ஜாரின் செவிலித்தாய் வலேந்தீனா ஃபியோதரவ்னா. பெருங்குடல் வீக்கத்தால் போன வருஷம் காலமாகிவிட்டாள் இவள். அவ்வளவுதான், நடையைக் கட்டுங்கள்!"

கட்டணத்தில் எங்களுக்குக் காட்டிய சலுகைக்கு ஈடு செய்வதற்காக இப்ராய் அவசர அவசரமாகக் காட்சியை முடித்து விட்டான் என்பது துலக்கமாய் இருந்தது. நாங்கள் காசைக் கொடுத்துவிட்டு அப்பால் சென்றோம். உலகை ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை சுற்றி வந்துவிட்டதுபோல இருந்தது எங்களுக்கு - அத்தனை நிறைய விளங்காத விஷயங்களை இப்ராய் இரண்டே நிமிடங்களில் எங்களுக்குக் காட்டிவிட்டான். எல்லாம் எங்கள் மூளையில் தாறுமாறாகக் குழம்பிவிட்டன. பறங்கி (அதாவது பிரான்சு நாட்டின்) பாதுஷா தன் மனைவியோடு அமைதியாக வீதிகளில் உலவிக் கொண்டிருந்தபோது அவருடைய மகள் இந்தியச் சிற்றரசி எங்கேயோ யானைமேல் பவனி வந்தது எங்களுக்குக் கொஞ்சங்கூட ஆச்சரியமாக இருக்கவில்லை. மெக்கா யாத்திரிகர்கள் லேபாஃபியா மசூதியின் பக்கத்தில் என்ன செய்கிறார்கள் பாரேன்... த்தூ, அவர்கள் அராஃபா மலை மேல் ஏறுகிறார்கள், கேஸரிடம் பிச்சை கேட்பதற்காக... மொத்தத்தில் நாங்கள் ஒரேயடியாகக் குழம்பிப் போயிருந்தோம். மாலைவரையில் இந்தச் சிடுக்கைச் சரியாக விடுவிக்க எங்களுக்கு முடிந்திருக்குமா என்பது

சந்தேகந்தான். ஆனால் நாங்கள் மெழுகுக்கடை வீதிக்கு வந்ததும் புதிய காட்சி ஒன்று எதிர்ப்பட்டது. மூளைபுரண்ட ராஜா ராணி களையும் பெருங்குடல் வீக்கத்தால் மடிந்த அவர்களுடைய செவிலித் தாய்களையும் நாங்கள் மறக்கும்படிச் செய்துவிட்டது அந்தக் காட்சி.

கள் குடித்த கரடிகளோ வெறிகொண்ட ஒட்டகங்களோ தளைகளை அறுத்துக்கொண்டு ஓடி வருவதுபோலக் கடைவீதி முழுவதும் இரைச்சல் கிளப்பிக்கொண்டு தங்கள் பாட்டுக்களைப் பாடியவாறு வந்தார்கள் மிட்டீஹான் துராமின் பக்கிரிகள். அவர்கள் அருகாகக் கடந்து செல்லும்வரை காத்திருந்துவிட்டு நாங்கள் அவர்கள் பின்னே நடந்தோம். அவர்கள் மஜோமி மசூதிப் பக்கம் சென்றார்கள். மசூதிக்கு அப்பால் கடை வீதியை அடுத்து அகன்ற சதுக்கம் இருந்தது. அன்று அந்தச் சதுக்கத்தில் கூஸா-மத்தாஹ்ற என்ற இமாம் உபதேசப் பிரசங்கம் செய்வதாக இருந்தார். கூஸா-மத்தாஹ்ற தாஷ்கந்தில் மட்டும் அல்ல, மத்திய ஆசியா முழுவதிலும் மிகப் பிரபலமான உபதேசியார். இந்தப் பக்கிரிகள் அவருடைய சீடர்கள் போலும்.

கணப்போதில் குழுமிய ஏராளமான ஆட்களின் கூட்டத்திற்கு முன்னே அவர்கள் வரிசையாக நின்றுகொண்டார்கள். ஒரு பக்கிரிகூட உட்காரவில்லை. நீளமும் குட்டையுமாக அவரவர்களுக்குக் கிடைத்த தடிகளை ஊன்றிக்கொண்டு அசைந்தாடியவாறு, "ஹூவ், ஹூவ், ஹூவ்" என்று ஓலம் இட்டார்கள். சில ஆட்கள் எங்கிருந்தோ ஒரு சாய்வு நாற்காலியை எடுத்து வந்து நடுவில் வைத்து ஆட்டுத் தோலால் போர்த்தார்கள். பக்கத்தில் சிறு மேஜை போடப்பட்டது. ரொட்டிகளும் சர்க்கரையும் அதன்மேல் வைக்கப்பட்டன. தேக்கெண்டியும் கோப்பையும் கொண்டுவரப்பட்டன. சிறிது நேரத்துக்குப் பின் கூஸா-மத்தாஹ்ற வந்து சேர்ந்தார். குட்டையான பருத்த மேனியர் அவர். வயது சுமார் எண்பது இருக்கும். அவரது வெளிறிய, மழித்த முகத்தில் சுருக்கங்கள் விழுந்திருந்தன. பெரிய வெள்ளைத் தலைப்பாகையும் செம்மஞ்சள் மேலங்கியும் அணிந்திருந்தார். நாடா தைத்த சட்டைக் கழுத்துப் பட்டை மேலங்கிக்கு அடியே தெரிந்தது. தடியைப் பிடித்துக்கொண்டு மெக்காவின் திசையில் பார்த்தவாறு அவர் நாற்காலியில் அமர்ந்தார். பக்கிரியின் வரிசை முழுவதும் அவருக்கு எதிரே



இருந்தது. இப்போது இன்னும் இரண்டு பக்கிரிகள் வந்தார்கள். ஒருவன் கூர்த்த கருந்தாடியினன், மற்றவன் அவனைவிட இளையவன், மழித்த முகத்தினன். இருவரும் வெள்ளைச் சால்வை போர்த்திருந்தார்கள். லேசான மேலங்கிகள் அணிந்திருந்தார்கள், வெறுங்கால்களில் மிதியடிகள் மாட்டியிருந்தார்கள். கூஸா-மத்தாஹ்ற போலவே வெள்ளைத் தலைப்பாகைகள் கட்டிக் கொண்டிருந்தார்கள். இமாமின் சீடர்கள் அவர்கள். வந்ததுமே அவர்கள் "எல்லாம் மண்ணே அல்லாவே!" என்ற பாட்டைப் பாடினார்கள்.

கூஸா-மத்தாஹ்ற கோப்பையில் தேநீர் ஊற்றி, தொண்டையை நனைத்துக் கொண்டு, தடியை ஊன்றி எழுந்து நின்றார். அப்புறம் நிதானமாக நடந்து ஒரு வட்டம் சுற்றி வந்து (நானும் உபாயும் அதற்குள் இடித்துப் புகுந்து போய் முன் வரிசையை அடைந்துவிட்டோம்), கூடியிருந்தவர்கள்மேல் கண்ணோட்டி விட்டுத் தம் இடம் திரும்பினார். கையை உயர்த்தி, கரகரத்த குரலில் கத்தினார்:

"ஏ, ஆட்களே, முதலில் உட்காருங்கள். உருவ வழிபாடு செய்பவர்களின் தெய்வச் சிலைகள்போல நட்டமாய் நில்லாதீர்கள்!"

இதைக் கேட்டதும் எல்லோரும் அவரவர் நின்ற இடங்களில் உட்கார்ந்தார்கள். அதனால் கலகலப்பு உண்டாயிற்று. நாங்களும் இடம் அனுமதித்த அளவுக்கு நெருக்கியடித்து உட்கார்ந்தோம்.

"பலே, பலே!" என்று உபதேசியாரின் சீடர்கள் கீச்சுக்குரலில் ஆரவாரித்தது ஷெய்ஹான்தாவூர் வரை கேட்டிருக்கும்.

கூஸா-மத்தாஹ்ற தமது பேச்சைத் தொடர்ந்தார்:

"இங்கே கூடியிருப்பவர்களில் ஸமர்க்கந்த், புஹாரா, கத்தாகுர்கான், உரா-தெப்பே, ஃபர்கானா, ஹோஜெந்த் ஆகிய இடங்களைச் சேர்ந்த நம் சோதர முஸல்மான்கள் இருக்கிறார்கள் என்று உங்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். சுவர்க்கத்துக்கு நிகரான நம் தாஷ்கந்த் நகருக்கு அவர்கள் வந்திருக்கிறார்கள்!" - கூட்டத்தில் தணிந்த கலகலப்பு ஏற்பட்டது. பின்பு நிசப்தம் குடி கொண்டது. "இப்போது அடியேனை உங்களுக்கு அறிமுகப் படுத்திக் கொள்கிறேன். அடியேன் புஹாரா நகரத்தவன்,

கஸாகரான் வட்டாரத்தைச் சேர்ந்தவன். என்னை ஹாஜி நஜிமுத்தீன் இபன் ஸலாஹுத்தீன் என்று அழைப்பார்கள். போற்றுதற்கு உரிய எங்கள் தந்தையாரும் அமீர் முஸஃப்பரின் காலத்தில் மிகப் புகழ் பெற்ற உபதேசியராக விளங்கினார். ஸமர்க்கந்த் நகர ஹுஸைன் - வாயிஸின் வம்சத்தோடு பதினேழு தலைமுறைகளாக எங்களுக்குத் தொடர்பு உண்டு. மாபெரும் தைமூர் வழித்தோன்றல் ஹுஸைன்-பைக்கார் காலத்தில் மிக உன்னத நிலையில் இருந்தார் இந்த எங்கள் மூதாதை... ஆ எத்தகைய பொற்காலம் அது! "நற்பயன் தரும் ஒழுக்க நெறி" என்னும் நூலை எழுதியவர் அந்த மகாபுனிதரே. நான் அவருடைய பதினேழாம் தலைமுறைப் பேரன்! இதைச் சந்தேகிப்பவன் வெந்நீர்க் கொப்பரை போலக் கறுத்துப் போவான், அவன் ஆன்மா அடுப்புபோல நெருப்பில் எரியும்! ஆமென்!"

"ஆமென்! அது நாசமாய்ப் போகும்!" என்று சீடர்களும் கீச்சிட்டார்கள்.

"இப்போது விவகாரத்துக்கு வருவோம்" என்று வேறு தோரணையில் சொன்னார் கூஸா-மத்தாஹ். "அல்லா தம் அடிமைகள் மூவருக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்று தம் புனித மறைகளில் எழுதியிருக்கிறார். முதலாவது, அருள் நிறைந்தவரும் யாவர்க்கும் இறைவரும் ஆன தமக்கு. அவரது பேராற்றலாலேயே நாம் படைக்கப்பட்டிருக்கிறோம், ஆகவே மணிதோறும், நிமிடந்தோறும், கணந்தோறும் அவருக்குப் பணிந்து நடக்கக் கடமைப்பட்டவர்கள் ஆவோம்!"

"ஆம், ஆம், கடமைப்பட்டவர்கள் ஆவோம்!" என்று கீச்சிட்டார்கள் சீடர்கள். பக்கிரிகளோ, "ஹாக், ஹோ, ஹுவ்" என்று முழங்கினார்கள்.

கூஸா-மத்தாஹ் அவர்களைக் கையமர்த்திவிட்டு மேலே பேசினார்:

"இரண்டாவது, அல்லாவின் தூதரான நமது மார்க்கதரிசி முகம்மது முஸ்தபாவுக்கு - ஆண்டவன் அவருக்கு அருள் பாலித்து அவரை வாழ்த்துவாராக! - நபிகள் நாயகத்துக்கு நாம் கீழ்ப்படிய வேண்டும். அவரது ஒவ்வோர் உபதேசத்தையும் சிரத்தையுடன் கடைப்பிடிக்க வேண்டும். அவரது தூய ஆன்மா அருள் பெறுவதாக!"



"ஹாய், ஹாய், அருள் பெறுவதாக, ஆமென்!" என்று கீச்சுக்குரல்களில் கத்தினார்கள் சீடர்கள். பக்கிரிகள் அல்லாவையும் தீர்க்கதரிசியையும் போற்றி மறுபடி எக்காள முழக்கம் செய்தார்கள். உபதேசியார் மீண்டும் அவர்களைக் கையமர்த்தினார்.

"மூன்றாவது" என்று முன்னிலும் உரக்க, கரகரத்த குரலில் பேச்சைத் தொடர்ந்தார் அவர்: "மூன்றாவது, நமது மாபெரும் பேரரசர் வெள்ளை ஜார், மாட்சிமை தாங்கிய நிக்கொலாய் ரொமானாவுக்கு நாம் கீழ்ப்படிய வேண்டும். அல்லா தம் புனித மறைகளில் கூறியிருப்பதுபோல, பேரரசர் உலகில் ஆண்டவனின் நிழலாகத் திகழ்கிறார். அவருடைய கருணை நம்மைக் கைவிடாது..."

"ஆமாம், கைவிடாது. நிழலாகத் திகழ்கிறது, ஆமென். நிழலாகத் திகழ்கிறது!" என்று ஒத்துப் பாடினார்கள் சீடர்கள். "பிரபுவே, என் தேவைகளைக் கண்பாரும், பிரபுவே, என்பால் கருணைகூரும், ஹூ-ஹூ" என்று நீட்டி முழக்கினார்கள் பக்கிரிகள்.

"நம் மாபெரும் நிக்கொலாயின் தர்பாரும் அவருடைய மந்திரிகளும் ஆலோசகர்களும் ஆயிரம் ஆண்டு நிலைத்திருக்கட்டும், ஆமென்!" என்றார் உபதேசியார். இவ்வளவு வசதியான வாய்ப்பை நழுவவிடக் கூடாது என்பதற்காகச் சீடர்கள் ஒத்துப்பாட வாய் எடுத்தார்கள், ஆனால் உபதேசியார் அவர்களுக்குத் திரும்பக்கூட இடங்கொடுக்காமல், பகைமை நிறைந்த குரலில் சொல்லிக்கொண்டு போனார்: "இந்த நாட்களில், கேடுகெட்ட பகை ஜெர்மானிய அரசன், ஏழு அடுக்குக் கவசங்கள் பூண்ட நூறாயிரம் படைவீரர்களை நமது மாபெரும் சக்கரவர்த்திக்கு எதிராக ஏவிவிட்டிருக்கிறான். பீரங்கிகளும் பறக்கும் இயந்திரங்களும் உள்ளவர்கள் அந்தப் படைவீரர்கள். அவர்களை ஏவி ஜெர்மன், ஜார் மக்களுக்குக் கணக்கற்ற துன்பங்கள் விளைவித்திருக்கிறான். இந்த நாட்களில் மாபெரும் ஜாருக்கும் அவருடைய எல்லாவிதக் கட்டளைகளுக்கும் கீழ்ப்படிவது ஒவ்வொரு முஸல்மானுடையவும் விசேஷக் கடமை ஆகும். 'உங்கள் அரசர் எந்த மதத்தைச் சேர்ந்தவர் ஆனாலும் அவருக்குக் கீழ்ப்படியுங்கள்!' என்று அல்லா சொல்லியிருக்கிறார். அல்லாவின் அருளால், நமது ஜாரும் அவருடைய மந்திரிகளும் புனித மறைகளை, புனித தேவதூதரின் ஆணைகளைக்

கடைப்பிடித்து ஒழுகுகிறார்கள். இயேசு தெய்வீகத் தீர்க்கதரிசி அல்லவா? நமது மாபெரும் ஜாரும் அவருடைய அரசவையினரும் நாஸ்திகர்கள் அல்ல, முகம்மதுக்கு முந்திய இறைவிளக்க நூல் அவர்களுக்குக் கிடைத்தது. இதை நினைவில் வைத்துக்கொண்டு நம் ஜாருக்குக் கீழ்ப்படியுங்கள், பெரும் போர்கள் நடக்கும் இந்த நாட்களில் அவருக்கு உதவுங்கள், ஆமென்! வீடு வாசல் அற்ற வெறுங்காவலர்கள், சந்தை சுற்றிய கயவர்கள், விசுவாசம் அற்ற வீணர்கள், மறைமுகப் பகைவர்கள் உங்களிடையே வளைய வருகிறார்கள். அவர்களுடைய பசப்புக்கு மயங்கிவிடாதீர்கள் என்று உங்களை எச்சரிக்கிறேன். அவர்களை எங்கே கண்டாலும் பிடித்து வைத்து நகர அதிகாரிகளிடம் - மேன்மை தாங்கிய போலீஸ் தலைவரிடமும் அவருடைய போலீஸ் படையினரிடமும் - ஒப்படையுங்கள். தூண்டி விடுபவர்கள் பாறைகளுக்கடியில் நசுங்கிச் சாகட்டும்! ஆமென்! ஆமென்! ஆமென்!"

மூன்று தரம் ஒலிக்கப்பட்ட "ஆமென்" உண்மையில் மேலிருந்து வந்த சைகை என்று சீடர்களும் பக்கிரிகளும் எண்ணி, "ஆமென், நசுங்கிச் சாகட்டும், நசுங்கிச் சாகட்டும், ஆமென்!" என்று முழக்கமும் கீச்சுக் குரல்களுமாக ஆரவாரித்தார்கள். அந்தப் பேரிரைச்சலால் சுற்றுப்புறச் சுவர்களில் வெடிப்புக்கள் ஏற்பட்டு விட்டன.

இதோடு உபதேசத்தின் முதல் பகுதி முடிந்துவிட்டது. கூஸா-மத்தாஹ் அன்றாடச் சடங்குகள் பற்றிய பிரச்சினைகளை அலசத் தலைப்பட்டு, அவற்றின் மேல் இஸ்லாம் மத விதிகளின் ஒளியைப் பாய்ச்சலானார். கக்கூசுக்கு எந்த நோக்கத்துடன் போக வேண்டும்? ஓடும் நீரில் அழுக்குகள் விழுந்துவிட்டால், அவை எத்தனை தடவைகள் புரண்ட பிறகு ஓடும் நீர் துப்புரவு ஆகும்? குதிரைச் சவாரி செய்பவன் கழுதைமேல் ஏறிப் போகிறவனுக்கு முகமன் கூறலாமா? காலையில் எழுந்ததும் செருப்பை எந்தக் காலில் முதலில் மாட்டிக் கொள்ள வேண்டும் - வலது காலிலா, இடது காலிலா? தையல்காரர்களும் முடி வெட்டுபவர்களும் சுவர்க்கத்துக்குப் போவார்களா, மாட்டார்களா?" தட்டையான ருஷ்யப் பாத்திரத்தில் தயாரான உணவைத் தின்னலாமா? திருடன் ஆண்டவனின் அடிமையா அல்லவா? உருளைக் கிழங்கு சாப்பிடுவது இஸ்லாம் மத விதிகளால் அனுமதிக்கப் பட்டிருக்கிறதா இல்லையா? - இந்தக் கடினமான பிரச்சினைகள்



எல்லாவற்றையும் கூஸா-மத்தாஹ் கொட்டை உடைப்பதுபோல டக் டக்கென்று தீர்த்துவிட்டார். ஆனால் எனக்கும் உபாய்க்கும் எதனாலோ அவற்றில் அக்கறை ஏற்படவில்லை.

"கேள், உபாய், இந்தப் பிதற்றல் பனிக்கட்டியாக உறைந்த வெள்ளரி போலச் சப்பென்று இருக்கிறது. இவர் என்ன சொல்லுகிறார்?"

"எனக்குந்தான் புரியவில்லை. வெள்ளை ஜாரையும் அதிகாரிகளையும் பற்றி இப்படிக் கொக்கரித்தாரே இவர், எதற்காக? அவர்களிடம் லஞ்சம் வாங்கிக் கொண்டாரோ?" என்றான் உபாய்.

"போய்விடுவோமா இங்கிருந்து?"

"உனக்கு என்ன, பைத்தியமா? இங்கிருந்து வெளியேற முடியுமா எங்காவது?... தவிர, மத்தாஹ் பணம் கேட்பாரே, அப்போது பார்க்க மிகவும் வேடிக்கையாய் இருக்கும், ஸர்க்கஸைவிட. பணம் கேட்க ஆரம்பிக்கும் கட்டத்துக்கு அவர் வந்துவிட்டாரா இல்லையா?"

"அட, உனக்கு ஒன்றுமே தெரியவில்லையே. இந்த மாதிரி உபதேசத்துக்குப் பிறகு யாராவது பணம் கேட்பார்களா? கதைகள் சொன்ன பிறகு கேட்பார்கள். சுவையான கட்டம் வரையில் கதை சொல்லிவிட்டு, மேலே என்ன நடக்குமோ என்று எல்லோரும் ஆவலாக இருக்கும்போது கதையை நிறுத்தி, பணம் கேட்கத் தொடங்குவதுதான் இவர் வழக்கம்!" என்றேன்.

அக்கம் பக்கத்தவர்கள் உஷ்ஷென்று எங்களை அடக்கினார்கள். நாங்கள் பேச்சை நிறுத்தினோம். அந்தச் சமயத்தில் கூஸா-மத்தாஹ் கதை சொல்லும் தந்திர வித்தையைத் தொடங்கினார். அர்த்தமற்ற அற்புதங்கள் அளவு சங்கை இல்லாமல் நிறைந்த நம்ப முடியாத கற்பனைக் கதையைச் சொல்ல ஆரம்பித்தார். அடுத்த நொடியில் என்ன புதிய அற்புதம் தமது கதையில் நிகழும் என்பது அவருக்கே தெரியாது போலிருந்தது. இது தந்திரமான குயுக்தி. அவருக்கே அடுத்து வருவது என்ன என்று தெரியாதபோது கேட்பவர்கள் அதை ஊகிக்கவே முடியாது அல்லவா? ஒரு வார்த்தையைக் கூட விடாதிருக்க முயன்றவாறு எல்லோரும் உற்றுக் கேட்டார்கள். திடீரென அவர் கதையை இடை நிறுத்தினார். பணம் கேட்கும் கட்டம் வந்து

விட்டதால் அல்ல. அவரே தம்மீது சுமத்திக் கொண்ட இடிபாட்டுக் குவியலுக்கு உள்ளிருந்து மீண்டு வெளியேற வகை தெரியாததால்தான் அவர் இப்படிச் செய்தார் என்று நினைக்கிறேன். சாதாரண மனிதனால் இந்தக் கதைச் சிடுக்கை விடுவிக்க முடிந்திராது. மேலிருந்து உதவி பெறுவதற்கோ அவருக்கு நேரம் தேவைப்பட்டது. மொத்தத்தில் ஒரே அடியில் இரண்டு முயல்களைக் கொன்றுவிட்டார் அவர்.

கூஸா-மத்தாஹ் சொன்னார்:

“முஸல்மான்களே, நாம் எல்லோரும் மனிதர்கள். குடும்ப பாரத்தைச் சுமப்பவர்கள். குடும்பத்தைப் பராமரிக்கும்படி அல்லா நமக்கு ஆணை இட்டிருக்கிறார். நமது கதையின் தொடர்ச்சியைக் கேட்க விரும்புபவர்களும் நமது மதச் சோதரர்கள் எல்லோரும், பிள்ளை வேண்டுமென்று விரும்புபவர்களும், செல்வம் அல்லது கடன்களிலிருந்து விடுதலை பெற விரும்புபவர்களும், மணம் செய்துகொள்ளவோ நோய்களைத் தீர்த்துக்கொள்ளவோ ஆசைப்படுபவர்களும், அல்லா தங்கள் பிரார்த்தனைகளைக் கேட்க வேண்டும் என்று விரும்புபவர்கள் எல்லோரும் காணிக்கையாக...” - இப்படிச் சொல்லி ஆழ்ந்த உளப்பதிவு ஏற்படும் முறையில் இடை விட்டுவிட்டு, பின்பு வாக்கியத்தை முடித்தார். “எழுபது வீரர்களிடமிருந்து எழுபது குதிரைகளைத் தருவார்கள்” - அவர் கண்களை பாதி மூடித் துயரத் தோற்றத்தை மேற்கொண்டார். அப்போது அவர் முகம் சுருங்கியதில் சுருக்கங்கள் தவிர வேறு எதுவுமே மிஞ்சவில்லை. “அடா-டா-டா! நான் இப்படிக் கேட்டது வீண், ஆம், வீண், நானோ கிழவன். ஏழை, சீத்துவங்கெட்ட வயோதிகன். எனக்கு எதற்காக எழுபது குதிரைகள்? அல்லா சாட்சி, எனக்கு ஒரே ஒரு குதிரை போதும். ஒரு வீரனிடமிருந்து ஒரு குதிரை மட்டும். பாக்கி அறுபத்தொன்பது பெயரும் ஆளுக்கு ஒன்றாக அறுபத்தொன்பது தங்க நாணயங்கள் மட்டும் கொடுக்கட்டும்!” - அவர் மறுபடி முகத்தைச் சுருக்கி, சற்று நேரம் இங்கும் அங்குமாக ஆடினார். மெய்யாகவே அவர் இதோ விழுந்துவிடுவார் என்று நினைத்தேன் நான். ஆனால் அவர் விழவில்லை. “அடா-டா-டா! நான் வீணாக இப்படிக் கேட்டேன், வீணாக! இந்த மாதிரி அமைதியற்ற நேரத்தில், எல்லோருக்கும் எத்தனையோ கவலைகள் இருக்கும் போது, மக்கள் தங்க நாணயங்களுக்கு எங்கே போவார்கள்?



எனக்குத் தங்க நாணயங்கள் வேண்டாம், ஆளுக்கு ஒரு ரூபிள் கொடுத்தால் போதும்!” என்று சொல்லிவிட்டு, பாதி மூடிய கண்களுடன் அசைந்தாடினார். கடைசி ஆள் வரை கூட்டம் முழுவதையும் அவர் பார்க்கிறார் என்னையும் உபாயையும்கூட அவர் விடவில்லை என்று என் தலையைப் பணயம் வைத்து ஆணையிட நான் தயாராயிருந்தேன். எல்லாவற்றையும் ஊடுருவும் தம் பார்வையை அவர் பணம் வைத்துத் தைத்திருந்த என் கோடை கால மேலங்கி விளிம்புக்குள் செலுத்திவிட்டார் என்று எனக்குத் தோன்றியது. மிகவும் எக்கச்சக்கமாய் இருந்தது. அதற்குள் கூஸா-மத்தாஹ் மறுபடி முறையிடலானார்: “ஏ முஸல்மான்களே! எல்லாவற்றிலும் சிறந்தது நடு வழியே என்று தீர்க்கதரிசியின் நூலில் சொல்லப்பட்டிருக்கிறது. அவரவரால் முடிந்ததைத் தரும்படிக் கேட்க வேண்டும் என்று இதற்கு அர்த்தம் அல்லவா? மெய்யாகவே அப்படித்தான். கொடையாளிகளிடம் நான் கேட்பது எல்லாம் ஆளுக்கு ஒரு தன்காதான். ஆளுக்கு ஒரு தன்கா மட்டுமே, மத பக்தர்களே காக்கவைக்காதீர்கள். நம் அருமைக் கதையில் மேற்கொண்டு என்ன நடந்தது என்று தெரிந்துகொள்ள ஆசைப்படுபவர்கள் தங்கள் பணப்பைகளிலிருந்து நாணயத்தைத் தயாராக எடுத்து வைத்துக் கொள்ளுங்கள்!”

ஒரு பக்கம் தோல் வைத்து இறுக்கிய வளையத் தட்டுக்களை எடுத்துக் கொண்டு இரண்டு சீடர்களும் கூட்டத்தில் சுற்றி வந்தார்கள். இதற்குள் எவனோ ஜமீன்தார் மகன் மெலிந்த குதிரை ஒன்றை நடத்தியவாறு வட்டத்துக்குள் வந்தான். உபதேசியாரின் அருகே நெருங்கி, தலை வணங்கி, கடிவாள வாரை அவர் கையில் கொடுத்தான்.

“பெரியவரே, நான் பிள்ளை இல்லாதவன். எனக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள்” என்றான்.

உபதேசியார் தீர்க்கதரிசிபோல விழிகளை வானை நோக்கி உயர்த்தினார் (அவருடைய ஒரு கண்ணில் பூ விழுந்திருப்பதை அப்போதுதான் நான் கண்டேன்). கடிவாளவாரை விட்டு விடாமலே கைகளைத் தேய்த்து, உரத்த குரலில் சொன்னார்:

“ஆமென். மதபக்தர்களே, என்னோடு சேர்ந்து சொல்லுங்கள்: ‘ஆமென்’!”

நாற்புறமும் மக்கள் "ஆமென்" என்று முழங்கினார்கள்.

"இந்த மனிதனின் விருப்பங்கள் எல்லாம் பரம்பொருளை எட்டுமாக! மாபெரும் தெய்விகச் சிங்கம், மதக் காவலர் அலி இவனுக்கு ஆசி வழங்குவாராக! ஒன்பது ஆண் இரட்டைக் குழந்தைகளுக்கும் ஒன்பது பெண் இரட்டைக் குழந்தைகளுக்கும் இவன் தகப்பன் ஆகும்படி அல்லா அருள்க! வாழ்நாள் முழுவதும் இவன் ஒன்றுக்குப்பின் ஒன்றாக மண விருந்துகள் நடத்திக் கொண்டிருப்பானாக! ஆமென்!"

உபதேசியாரின் இந்த வாழ்த்தைத் தொடர்ந்து எல்லாப் புறங்களிலும் "ஆமென்" என்ற கோஷம் மறுபடி எழுந்தது. ஆனால் இம்முறை அது முன்போல ஒற்றுமையாக ஒலிக்கப்பட வில்லை. சீடர்களின் கீச்சுக்குரல்களும் பக்கிரிகளின் எக்காள முழக்கமும் இந்தக் கோஷத்தின் ஊடாகக் கேட்டன. கூஸா-மத்தாஹ் இந்தக் குதிரைமேல் சவாரி செய்ததை ஏற்கனவே யார் யாரோ பார்த்ததாகப் பக்கத்தில் சிலர் கிசுகிசுத்ததும் அதே சமயம் என் காதில் விழுந்தது.... மனிதக் காதுகளில் என்ன வெல்லாந்தான் கசமுசக்கிறான் இந்தச் சைத்தான்! காணிக்கை திரட்டுபவர்கள் இதற்குள் ஒரு சுற்று வந்துவிட்டார்கள். நல்லுடை அணிந்தவர்கள் பக்கத்தில் அவர்கள் அதிக நேரம் தாமதித்தார்கள். அவர்கள் தம்பட்டங்களில் எவ்வளவு பணம் விழுந்ததோ, அல்லாவுக்கே வெளிச்சம். நான் எண்ணிப் பார்க்கவில்லை, இந்த இறைவன் அடியாருக்குக் கணக்கனாக நான் வேலை செய்யவில்லை. உபாயின் காதில் உதடுகள் படும்படியாகக் குனிந்து, நான் கொஞ்ச காலம் உடன் வசித்த மகாபுனிதரான இமாமைப்பற்றி அவனுக்குக் கதை சொன்னேன். உபாய் இஹிஹி என்று இளித்தான். எனக்கு உற்சாகம் பிறந்து விட்டது. என் கதை என் முகத்தில் எழுதியிருந்தது போலும். கூஸா-மத்தாஹின் கூரிய பார்வை எங்கள் மேல் நிலைத்ததை நாங்கள் உணரக்கூட இல்லை.

"ஏய், பக்கிரிகளே!" என்று திடீரெனக் கூவி அழைத்தார் அவர். "மரியாதைக்கு உரிய சோதரர்களே! அடக்கம் அற்ற இந்தச் சிறுவர்களை வெளியேற்றுங்கள்! புனிதக் காரியத்தை எள்ளி நகையாடுகிறார்கள் இந்தக் கயவர்கள்! நல் உணவில் விழுந்த இந்த அசிங்கம்பிடித்த ஈக்களை விரட்டுங்கள்!"



நாங்கள் என்னவென்று நிதானிப்பதற்குள் தடித்த பக்கிரிகள் நால்வர் எங்களை நெருங்கினார்கள். இருவர் என்னையும் இருவர் உபாயையும் கைத்தாங்கலாகக் கூட்டத்துக்கு வெளியே இழுத்துப் போய், ஆளுக்கு ஒரு குத்து விட்டு மைதானத்திலிருந்து கடைவீதிப் பக்கம் நெட்டித் தள்ளினார்கள். வசவுகள் எங்களைத் தொடர்ந்து வந்தன, ஆனால் நாங்கள் அவற்றைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை.

இதற்குள் பாதிப் பகல் கழிந்துவிட்டது. செய்வதற்கோ ஒன்றும் இல்லை. தவிர உபாய் வேறு, வீட்டுக்குப் போக அவசரப்பட்டான். நான் நடந்து கொண்டே எண்ணமிட்டேன்: ஓரிரண்டு ரூபிள்கள் செலவழித்து, ஒரு பத்து ராத்தல் அரிசியும் மற்றச் சில்லறைச் சாமான்களும் வாங்கி உபாய்மூலம் பாவம் அம்மாவுக்கும் தங்கைகளுக்கும் கொடுத்து அனுப்பினால் என்ன? ஆனால் உபாய் என்னை எங்கே பார்த்தான் என்று அம்மா விசாரித்தாலோ, என்னை அவனிடம் அழைத்துப் போ, அவனைத் தேடிக் கண்டுபிடி என்று சொன்னாலோ என்ன ஆகும்? அப்போது உபாய் என்ன செய்வான்? அனேக மாதங்களாக நான் ஒரு தகவலும் இல்லாமல் சுற்றித் திரிவது உண்மைதான். நான் உயிரோடு நலமாய் இருப்பது வட்டாரத்தில் ஒரு சிலருக்குத் தெரியும், அவர்கள் அம்மாவிடமும் இதைச் சொல்லியிருப்பார்கள். நாங்கள் - அதாவது அவர்களும் நானும் - எவ்வளவோ பொறுத்தாகிவிட்டது. இன்னும் கொஞ்சம் பொறுப்போம். என்ன ஆனாலும் இன்னும் ஒரு வாரத்துக்கு மேல் நான் ஹாஜி-பாபாவிடம் தங்கப் போவதில்லை.

ஒரு வெள்ளி நாணயத்தை உபாயிடம் நீட்டினேன்:

"இந்தா, சில்லறைச் செலவுகளுக்கு வைத்துக்கொள். என்னைக் கண்டதாக அடுத்த வாரம் வரை யாரிடமும் சொல்லாதே. சரிதானா? ஒரு வாரத்தில் நான் வீடு திரும்பிவிடுவேன்" என்றேன்.

நாங்கள் பிரிந்தோம். திடீரென எனக்குப் பசி எடுத்தது. அட என்ன ஆனாலும் ஆகட்டும், இல்ஹாமின் சாயாக்கடைக்குப் போய், பணக்காரப் பையன்கள் போலச் சம்பிரமமாகச் சாப்பிடுவது என்று முடிவு செய்தேன். சாயாக்கடையில் எல்லாம் முன்போலவே இருந்தன. கிராமபோன் அதே போலப் பாடிக் கொண்டிருந்தது, வழுக்கைத் தலை அஸ்ரா முன்போலவே பரந்து பரந்து வேலை செய்து கொண்டிருந்தான். கிளி மட்டுமே எங்கோ

காணவில்லை. வழுக்கைத்தலை அஸ்ரா முதலில் என்னை உள்ளே விடவே மறுத்தான்.

"போ, போ, ஒழி இங்கிருந்து! உன் வேலையைப் பார்! ஒரு தேக்கெண்டி சாயாவும் அரைக்கால் ராத்தல் சர்க்கரையும் ஒரு ரொட்டியும் இங்கே என்ன விலை தெரியுமா? ஒன்பது கோப்பெக்குகள்! உன் மாதிரி ஆட்களுக்குக் கட்டாது இங்கே சாயா சாப்பிடுவது. ஊம், ஊம், நட வெளியே! நமுதா விரிப்பை அழுக்காக்குவாய், அவ்வளவுதான்!" என்றான்.

"ஐயோ, அஸ்ரா-அகாஜான், என்னை உள்ளே விடுங்கள். என்னிடம் எட்டு காசுகள் மட்டுமே இல்லை. ரூபிளும் இருக்கிறது. இதோ! நம்பிக்கை இல்லாவிட்டால் பார்த்துக் கொள்ளுங்கள்!" என்றேன்.

ரூபிளை அவனுக்குக் காட்டினேன்.

அவன் பின்னே நகர்ந்தான்.

"அட குட்டிச் சாத்தான்! கடைவரிசையைச் சூறையாடினாயா என்ன? ரூபிள் எங்கிருந்து கிடைத்தது உனக்கு?... நல்லது, உள்ளே வா."

நான் பலகை மேடை ஓரத்தில் அமர்ந்தேன். அவன் முறைப்படி எல்லாவற்றையும் எடுத்து வந்தான். நான் இன்பமாகத் தேநீர் பருகினேன். கிராமபோன் சங்கீதம் கேட்டேன். கிளி இல்லாதது தான் வருத்தமாய் இருந்தது. அதனுடன் ஏதாவது பேசியிருப்பேன். பலகை மேடை ஓரத்தில் என் பக்கத்தில் உட்கார்ந்தான் அழுக்குத்துணி உடுத்த ஒரு குடியானவன். எங்கோ தூரத்திலிருந்து வந்தவன் போலும். வழுக்கைத்தலை அஸ்ரா இவனை எப்படி உள்ளே விட்டான்? அவன் மிரட்சியுடன் சுற்றுமுற்றும் பார்த்தான். நிம்மதியாக உட்கார்ந்திருக்கவே அவனால் முடியவில்லை. அவன் யாரையோ எதிர்பார்க்கிறான் என்று முதலில் நினைத்தேன். அப்புறந்தான் தெரிந்தது, பாடுவது யார் என்று அவனுக்கு விளங்கவில்லை என்பது! நான் பக்கென்று சிரித்துவிட்டேன். அவன் அச்சத்துடன் என்னை நோக்கினான். குழாய் வைத்திருக்கிறதே அந்த இயந்திரம், அதோ மூலையில் இருக்கிறதே, அதுதான் பாடுகிறது என்று நான் முடிந்தவரை மரியாதையுடன் அவனுக்கு விளக்கினேன். இதனால் அவன்



ஒரேயடியாகக் குழப்பம் அடைந்து மிரண்ட விழிகளால் அதை உறுத்துப் பார்த்தான். இதன் அர்த்தம் என்ன என்று அவன் சிந்தனை செய்தான் போலும். ஆள் உள்ளே இருக்கிறான் என்றால் பெட்டியில் இதற்கு இடம் பற்றவே பற்றாது. உள்ளே இருப்பது பேய் என்றால் அல்லாவையும் தீர்க்கதரிசியையும் பற்றிப் பாடுவது எப்படி? பயங்கரம்! இதைப்பற்றி நினைக்காதிருப்பதே மேல். நான் வாய்க்குள்ளாக சிரித்துக்கொண்டேன். நானோ பல நூறாயிரம் தடவைகள் கிராமபோன் கேட்டிருந்தேன். இதற்குள் ஓர் எண்ணம் என் மனத்தில் உதித்தது. கிராமபோன் எப்படிப் பாடுகிறது என்று விளக்கும்படி இந்த ஆள் கேட்டுவிட்டானோ, நான் தொலைந்தேன்! எனக்கு இது அவனைவிட அதிகமாய்த் தெரியாது!

## அத்தியாயம் 16

# வெடியதிர்ச்சி

ஒரு ராத்தல் மெழுகுவர்த்திகள், இரண்டு கோப்பெக்குகளுக்கு பூஹாரா மூக்குத் தூள், கொஞ்சம் ஹல்வா என்று வழக்கமான சாமான்களைக் கடைவீதியில் வாங்கிக்கொண்டு புகைக்கூடம் திரும்பினேன். எனக்கு அது ஒரேயடியாக வெறுத்துப் போயிருந்தது. அந்த முகரைக்கட்டைகளை எல்லாம் மறுபடி பார்ப்பேன் என்று நினைத்ததுமே எனக்குக் குமட்டிக் கொண்டு வந்தது.

புகைக்கூடம் சேர்ந்ததும், ஒருவர் முகத்தையும் ஏறிட்டுப் பாராதிருக்க முயன்றவாறு, எப்படியோ அவசிய வேலைகளை எல்லாம் செய்துவிட்டுப் படுத்துக்கொண்டேன். உறங்கியவன், குளிர் நடுக்கியதால் விழித்துக்கொண்டேன். ஏதோ விளங்காதது நிகழ்ந்திருந்தது உலகில். இருட்டாகவும் அதே சமயம் விந்தையான வகையில் வெளிச்சமாகவும் இருந்தது. வெளியே பார்த்தேன். முதல் வெண்பனியின் மெல்லிய படிவு தரைமேல் கிடந்து இளகிக் கொண்டிருந்தது! இவ்வளவு முன்னதாக வெண்பனி ஒரு போதும் விழுந்தது கிடையாது - அதுவும் இப்படித் திடீரென்று! நேற்று மாலை கதகதப்பாய் இருந்தது. நள்ளிரவுக்குப் பின்பே கருண்ட குளிர் மேகங்கள் வானில் கவிந்தன போலும்... நல்ல சங்கடந்தான்! நாளை எப்படித் தொடங்குவது என்று தெரியாமல் நான் வீட்டுக்குள் வந்தேன். திடீரென்று விந்தையான ஓர் எண்ணம் எனக்கு உதித்தது. விளக்கு ஏற்றி அருகே உட்கார்ந்தேன். தேயிலைப் பொட்டலத்தின் காகிதம் அருகே இருந்தது. ஹாஜி-பாபா வழக்கமாக இதில்தான் அபினி வைத்து விருந்தாளிகளுக்குக் கொடுப்பது வழக்கம். நான் அந்தக் காகிதத்தை எடுத்து ஹாஜி-பாபாவுக்கு ஒரு கடிதம் செய்யுள் வடிவில் ஒரே மூச்சில் எழுதிவிட்டேன். அந்தக் கடிதம் இதோ:



"வெண்பனிக் கடிதம்

அன்புசேர் பாபா, அல்லா
வெண்பனி பொழிந்தார் இன்று,
விண் கடுகடுத்து நோக்கும்,
குளிர் இனி நடுநடுக்கும்.
ஏழையின் பணமோ எல்லாம்
செலவழிந்திட்டது ஐயா,
பாழும் கோப்பெக்கும் இல்லை,
உடுப்புகள் வாங்குதற்கு.
குலை நடுங்கிடுமே, கால்கள்
மரத்துவிட்டனவே, பாபா,
தலையினை மூடுதற்கும்
என்னிடம் இலையே ஏதும்!
அல்லொடு பகலும் பாராது
ஆர்வமாய் உழைத்தேன் ஐயா,
நல்லர் நீர் தந்த வேலை
அனைத்தையும் நயந்து செய்தேன்.
வைகறை ஆகு மட்டும்
வீட்டினைப் பெருக்கியே நான்
மெய் தளர்ந்திட்டேன், முற்றாத்
துடைப்பம் போல் தேய்ந்துபோனேன்.
மேலங்கி, தொப்பி வாங்க
வேண்டுமே பணம் எனக்கு,
சால நீர் ஒருவர் அன்றிப்
புகல் எனக்கு ஆரும் இல்லை!
விழுமிய செயல்கள் யாவும்
பயன் அளித்திடும் உமக்கே,
எழு முறை மெக்கா சென்று
இசையுடன் திரும்புவீரே!

தங்கள் அனாதைச் சீடன்."

எழுதியதைத் திரும்பப் படித்தேன். அது எனக்கே மிகவும் பிடித்திருந்தது. அதைத் தபால் கடித வடிவில் மடித்து, ஹாஜி-பாபா தன் அறையிலிருந்து வெளியே வந்ததும் அவனிடம் நீட்டினேன்.

"இது என்ன, மகனே?"

"தெரியாது. யாரோ ஓர் ஆள் வந்து நமான்காவிலிருந்து வந்த கடிதம் என்று கொடுத்துவிட்டுப் போனான்."

"அப்படியா. மமாத்ரீஸா எழுதியிருப்பான். இந்த வருஷம் கசகசா பயிரிடப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தான்" என்று கூறி, கண்ணாடிக்கார உஸ்தாது ஸலீமிடம் கடிதத்தை நீட்டி, "இது என் நண்பனின் கடிதம். சற்றுப் படியுங்களேன். காலை வேளைகளில் எனக்குக் கண் சரியாய்த் தெரிவது இல்லை" என்றான்.

உஸ்தாது ஸலீம் கடிதத்தை வாங்கிப் படிக்க ஆரம்பித்தான்.

"வெண்பனிக் கடிதம்..."

"என்ன, என்ன?" என்று குறுக்கே கேட்டான் ஹாஜி-பாபா.

"வெண்பனிக் கடிதம்" என்று திருப்பிச் சொல்லிவிட்டு மேலே படித்தான் உஸ்தாது ஸலீம். ஹாஜி-பாபாவுக்கோ கோபத்தால் உடம்போடு நடுங்கிற்று.

"ஏனடா, அழுக்குப் பிடித்தவனே. இதை உன்னிடம் கொடுத்தது யார்? நீ அவனை உடனே ஏன் நிறுத்தி வைத்துக் கொள்ளவில்லை, ஊம்? அவனைக் கழுதைமேலே பின்பக்கம் பார்க்கும்படி ஏற்றி கரி பூசி ஊரைச் சுற்றி வரச் செய்திருப்போமே! ஏ ஆண்டவனே, கிழவயதில் என்னைக் கேலிக்கு ஆளாக்கத் திருவுளம் கொண்டாயா? நீயும் நல்ல ஆள்தான். மளிகைக்காரன் வாய்போல எவ்வளவு பணிவு காட்டுவதாகப் பாசாங்கு செய்கிறான் பார்... நல்லது, மேலே படியுங்கள் உஸ்தாது ஸலீம், மேலே படியுங்கள்" என்றான்.

உஸ்தாது ஸலீம் தட்டித் தடுமாறியவாறு ஒவ்வொரு வார்த்தைக்குப் பின்னும் "ஹுஷ்-ஹுஷ்" (பலே, பேஷ்) என்று பாராட்டியபடி மேலே வாசிக்க வாசிக்க விஷயம் என்ன என்பது ஹாஜி-பாபாவின் மூளைக்கு எட்டலாயிற்று. "ஏழு முறை மெக்கா சென்று இசையுடன் திரும்புவீரே" என்ற கடைசி வரியைக் கேட்டதும் அவன் பாகாய்க் கரைந்து கண்ணீர்கூடச் சிந்தினான். "அனாதைச் சீடன்" என்ற கையொப்பம் அவனை ஒரேயடியாக உருக்குலைத்துவிட்டது.



"அட நீதான் இதை எழுதினாயா, நாய்க் குட்டீ! உடனே ஒப்புக் கொள்வதற்கென்ன?" என்று கண்ணீருக்கு இடையே கூறினான். "உனக்குச் செய்யுள்கூட எழுத வரும் போல் இருக்கிறதே, ஊம்? அதுதான் விஷயம்!" - அவன் இடுப்புக் குட்டையை அவிழ்த்துக் கண்களைத் துடைத்துக்கொண்டு உள்கட்டுக்குப் போனான். அவன் வருவதற்குள் உஸ்தாது ஸலீம் என்னைப் புகழ்ந்து, செய்யுள் இயற்றுவதில் உள்ள சிரமங்களை விவரிக்கலானான். அவன் மிகவும் நுட்பமான அம்சங்களை விளக்கத் தலைப்படவே, அவன் சொன்னது என்னவென்றே எனக்குப் புரியவில்லை. அந்தச் சமயத்தில் ஹாஜி-பாபா திரும்பி வந்துவிட்டான். ஊதா வெல்வெட் மேற்புறம் வைத்த பழைய தொப்பி ஒன்று அவன் கையில் இருந்தது.

"இந்தா, இதைப் போட்டுக்கொள், மகனே. ஊம், ஊம், ஆசி பெறுவதற்குக் கைகளை உயர்த்து. என் வயது வாழ்ந்திரு! ஆமாம், இதுதான் விஷயம். குஞ்சு முட்டையை உடைத்துக்கொண்டு வெளி வந்ததுமே அதற்குச் சிறகு முளைக்கத் தொடங்கிவிடுகிறது. சௌக்கியமாக இரு. சீக்கிரம் பஞ்சு வைத்த மேலங்கி உனக்குக் கிடைக்கும்..."

அவனுடைய ஆசி பலித்துவிட்டது. இவை எல்லாவற்றையும் உடனிருந்து கேட்டுக் கொண்டிருந்த இந்தியன், மறுநாளே தன் கையற்ற பனிக்கால மேலங்கியை எனக்குப் பரிசு அளித்தான். எனக்கு வேண்டியதைவிட இரண்டு அடி நீளமாய் இருந்தது அது. ஆனால் நான் அதன் விளிம்பைக் கத்தரித்துத் தைத்துக் கொண்டேன். இப்போது நான் அரச குமாரன்போல உடைகளும் காலணிகளும் அணிந்திருந்தேன். நான் வயற்காட்டு பொம்மை போல் இருந்ததாக யாரேனும் அசட்டுப் பிசட்டென்று உளறினால் அவனை நான் இகழ்ச்சியுடன் புறக்கணித்தேன்.

இரண்டொரு நாட்கள் நான் உற்சாகமாக வேலை செய்தேன். ஆனால் இங்கிருந்து போய்விட வேண்டும் என்ற எண்ணம் என் மனத்தில் ஆணி அடித்தாற்போலப் பதிந்து போயிருந்தது. நான் போட்டிருந்த திட்டத்தின் முதல் பகுதியை நிறைவேற்றுவது என்று ஒரு நாள் காலை முடிவு செய்தேன். புலர்போதில் நான் மட்டுமே விழித்துக்கொண்டு புகைக்கூடத்தைத் துப்புரவு செய்கையில் மூக்குப் பொடி வைக்கும் வெற்றுக் குப்பி எனக்குக் கிடைத்தது. நான் அதை நீரால் நிறைத்து இறுக அடைத்து

ஹுக்காத் தலைப்பகுதியில் சாம்பலுக்குள் ஆழப் புதைத்தேன். பிறகு தணல் போட்டு ஹுக்காவைப் புகைக்கூடத்துக்கு எடுத்துச் சென்றேன். புகைக்கூடத்தில் இருந்தவர்கள் விழித்துக் கொண்டார்கள், புதிய வாடிக்கைக்காரர்கள் வந்தார்கள். விரைவில் காலை ஆகாரத்துக்காக எல்லோரும் குழுமினார்கள். ஹாஜி-பாபா, உஸ்தாது ஸலீம், இந்தியன், தூக்கிய மூக்கு ஸுல்தான் தன் துருக்கியத் தொப்பியும் தானுமாக, இப்படி வழக்கமான கும்பல் எல்லாம் அங்கே இருந்தது. சாப்பிட்டுக் கொண்டே அவர்கள் அரசியல் பேசத் தொடங்கினார்கள்.

"இந்த ஜெர்மன்காரன் பெரிய விபத்து" என்று ரொட்டியைச் சவைத்துக் கொண்டே சொன்னான் உஸ்தாது ஸலீம்.

"ஆமாம், பெரிய விபத்து!" என்று இந்தியனும் ஹாஜி-பாபாவும் ஒரே குரலில் ஒத்துப்பாடினார்கள்.

"குப்பி சூடு ஏறுகிறது" என்று எண்ணமிட்டேன் நான்.

"ஆகாயத்திலிருந்து குண்டுகளை எறிகிறார்கள். எங்காவது கண்டது உண்டா?" என்றான் உஸ்தாது ஸலீம்.

"அல்லா கொடுக்கும் தண்டனை இது. பூமி பாவங்களால் நிறைந்துவிட்டது. அதனால்தான் வானம் தகர்ந்து சிதறுகிறது" என்று சொன்னான் ஹாஜி-பாபா.

"இதோ தண்ணீர் கொதித்துவிடும்" என்று எண்ணமிட்டேன் நான்.

"வெடிகுண்டு விழுந்தால் ஆயிரம் வீடுகளைத் தரைமட்டம் ஆக்கிவிடுமாம்! ஒரே குண்டு வெடிப்பால் பத்து லட்சம் பேர் மேலுலகு சேர்ந்துவிடுவார்களாம்!" என்று வழக்கப்படித் தொப்பியைச் சரிப்படுத்திக்கொண்டே சொன்னான் தூக்கிய மூக்கு ஸுல்தான்.

"இதோ, இதோ!" என்று நான் எண்ணியபோதே ஐயோ என்று மெய்யாகவே கத்திவிட்டேன். ஹுக்காவில் குப்பி படாரென்று வெடித்தது குளியறையில் கொதிகலமே வெடித்தது போலப் பெரு முழக்கம் செய்தது. புகைக்கூடம் சாம்பல் படலத்தால் நிறைந்து விட்டது. கணீர் என்ற ஏதோ சத்தம் கேட்டது. துண்டுகள் சிதறின. எவையோ கனத்த சாமான்கள் தடாலென்று தரையில் விழுந்தன. மொத்தத்தில், யுத்தத்தில்கூட இதைவிட மேலாக



இருக்காது என்னும்படி அவ்வளவு அருமையான வெடியதிர்ச்சி ஏற்பட்டது. சாம்பல் ஓரளவு படிந்ததும் ஹாஜி-பாபாவும் ஸுல்தானும் நிமிர்ந்து தவழ்ந்து ஒரு புறம் விலகினார்கள். இந்தியனும் உஸ்தாது ஸலீமும் அசையாமல் கிடந்தார்கள். ஆனால் நான் சட்டென அவர்கள் முகங்களில் குளிர்ந்த நீர் தெளித்தேன். அவர்கள் சுய நினைவுக்கு வந்தார்கள். சில வினாடிகள் வரை ஐயோ என்று பயந்த குரல்களே கேட்டன. அப்புறம் ஹாஜி-பாபா தூதூவென்று துப்பிவிட்டு (அவன் வாய் சாம்பலால் நிறைந்திருந்தது), ஜெர்மனியையும் ஜார் நிக்கொலாயையும் சபிக்கத் தொடங்கினான்.

"அட ஆண்டவனே, என்னதான் வெடித்தது?" என்று கேட்டான் உஸ்தாது ஸலீம்.

"நீங்கள் நாசமாய்ப் போக, எல்லாம் உங்களால் வந்த வினை! அரசியலில் தலையிடாதீர்கள் என்று நான்தான் சொன்னேனே உங்களிடம்!" என்று இரைந்தான் ஹாஜி-பாபா.

ஸுல்தான் தவழ்ந்து கதவுவரை போய் மறைந்துவிட்டான். எல்லோரும் சற்று நேரம் பேசாதிருந்தார்கள். ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். என்னதான் உண்மையில் நடந்திருக்கும் என்று எண்ணமிட்டார்கள் போலும். எதற்கும் பயங்கர ஹுக்காத் தலையிலிருந்து எட்ட இருப்பதே மேல் என்று நினைத்து அப்பால் நகர்ந்தார்கள். கடைசியில் எல்லாரும் மூலையில் ஒதுங்கி முகத்திலிருந்து சாம்பலைத் துடைத்துப் போக்க முயன்றார்கள்.

"நீ என்ன காட்டுக் கோழிபோலச் சிறகைச் சிலுப்புகிறாய்? என்ன நிற்கிறாய், நீ உருப்படாமல் போக? ஹுக்காவை வெளியே எடுத்துப் போ!" என்று என்னைப் பார்த்துக் கூறினான் ஹாஜி-பாபா.

நான் ஒரேயடியாகப் பயப்படுபவன் போன்ற தோற்றத்துடன் ஹுக்காவை எடுத்து அப்பால் வைத்துவிட்டு, சாம்பலைப் பெருக்கித் தள்ளலானேன். இதற்குள் ஸுல்தான் வந்துவிட்டான் - தனியாக அல்ல, இரண்டு போலீஸ்காரர்களுடன்!

ஹுக்கா இருந்த இடத்தை விரலால் காட்டி, "குண்டு சுடப்பட்டது இதோ இங்கேதான்" என்று சொல்லிவிட்டு

உஸ்தாது ஸலீம் பக்கம் திரும்பி, "சுட்டவன் இதோ இந்த ஆள்!" என்றான் ஸுல்தான்.

உஸ்தாது ஸலீம் குழப்பம் அடைந்து ஏதோ ஊளையிட்டான், ஆனால் போலீஸ்காரர்கள் அவன் சொன்னதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. அவர்கள் சோதனை போடத் தொடங்கி, உஸ்தாது ஸலீமை எல்லாப் புறங்களிலும் தொட்டுத் தடவிப் பார்த்தார்கள். அவன் அவர்கள் கைகளில் நெளிந்தான். தான் வாழ்நாளில் ஒரு தரங்கூடக் குண்டு சுட்டதில்லை என்றும் கவணில்கூடக் குண்டு வைத்து அடித்ததில்லை என்றும் கிலி கொண்ட குரலில் சத்தியம் செய்தான். போலீஸ்காரர்கள் புகைக்கூடம் முழுவதையும் தலைகீழாகப் புரட்டிவிட்டார்கள். அப்புறம் பாஸ்போர்ட்டுகளைச் சரிபார்த்தார்கள். பிறகு ஹாஜி-பாபாவையும் உஸ்தாது ஸலீமையும் விசாரிக்கத் தொடங்கி அவர்களுடைய உறவுக்காரர்களைப் பற்றி துருவித் துருவிக் கேட்டார்கள். யாருடையவோ பாட்டியைக் கூட அவர்கள் விடவில்லை. அவள் மலடியாக இருந்துவிட்டதாகவும் நரம்புத் தளர்ச்சியால் இறந்து போனதாகவும் உஸ்தாது ஸலீம் சொன்னான். இரண்டு ராத்தல் அனாஷும் கால் ராத்தல் அபினும் தவிர வேறு எதுவும் போலீஸ்காரர்களுக்குக் கிடைக்கவில்லை. ஒரு போலீஸ்காரன் கைமுட்டி அளவு அனாஷை யாரும் அறியாதபடி விண்டு தன் பைக்குள் வைத்துக்கொண்டான். நான் அதைப் பார்த்து விட்டேன். ஆனாலும் பேசாதிருந்தேன் என்று சொல்லவே வேண்டியதில்லை.

சரி. துப்பாக்கி சுடப்பட்டது உறுதிப்படவில்லை. வெடிகுண்டுகளையும் காணோம். யாரேனும் பையன் வேட்டு தீர்த்திருப்பான் போல் இருக்கிறது என்று வயதில் இளைய போலீஸ்காரன் சொன்னான்.

அவன் இப்படிக் கூறியதுமே எல்லோரும் என்னைப் பார்த்தார்கள். அவர்கள் விழிகளில் பகைமை சுடர்ந்தது. அழுகையுடன் மறுப்பதற்கு நான் ஆயத்தமானேன். அதற்குள் இரண்டாவது போலீஸ்காரன் குறுக்கிட்டான்.

"ஹாஜி-பாபா, நீங்கள் எங்களுடன் வர வேண்டியிருக்கும். போலீஸ் தலைமை அதிகாரிக்கு இதைப்பற்றி விளக்கம் தாருங்கள்" என்று அனாஷையும் அபினையும் காட்டினான்.



"ஓ, பெரியவர்களே!" என்று சொல்லும்போதே ஹாஜி-பாபாவின் முழங்கால்கள் மடங்கின. அவன் முழந்தாள் படியிடப் போவதுபோல் இருந்தது. "முது வயதில் என்னை நீதி மன்றத்துக்கு இழுக்காதீர்கள். இது என்னுடையது அல்ல. வைத்திருக்கும்படி ஒருவர் கொடுத்தார்" என்றான்.

"இந்த விவகாரத்தை விட்டுவிடுங்கள். உங்கள் கருணையை ஆயுள் முழுவதும் மறக்க மாட்டோம். உங்களுக்கும் போலீஸ் தலைமை அதிகாரிக்கும் வெள்ளை ஜாருக்கும் ஆண்டவன் நீண்ட வாழ்வு தருவானாக" என்று மற்றவர்களும் கெஞ்சினார்கள்.

ஹாஜி-பாபா பதற்றத்துடன் பணப்பைக்குள் கையை விட்டுத் துழாவி, செப்பு, வெள்ளி நாணயங்களை ஒரு குத்து அள்ளி, பெரிய போலீஸ்காரனிடம் கொடுத்தான். "இந்தாருங்கள், நல்லவர்களே. கொஞ்சந்தான் என்றாலும் நிறைய என்று பாவித்துக் கொள்ளுங்கள். மனப்பூர்வமாகக் கொடுக்கிறேன்" என்றான்.

போலீஸ்காரர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள்.

"சரி, போகிறது. மேற்கொண்டு இப்படி நேராமல் பார்த்துக் கொள்ளுங்கள். முதல் தடவை மன்னிக்கிறோம். என்ன இருந்தாலும் நீங்கள் வயதானவர்" என்றான் இளையவன்.

"நிரம்ப நன்றி" என்று முணுமுணுத்துத் தலை வணங்கினான் ஹாஜி-பாபா. போலீஸ்காரர்கள் போய்விட்டார்கள். ஹாஜி-பாபா சோர்ந்துபோய், பலகை மேடை விளிம்பில் உட்கார்ந்தான்.

"அப்பா, விபத்திலிருந்து மயிரிழை தப்பினேன், அல்லா காப்பாற்றினார்... டேய், சைத்தான் மகனே, நேற்று மாலை என்னிடம் எவ்வளவு பணம் கொடுத்தாய்?"

"ஏழு ரூபிள்கள், ஒரு தன்கா, ஐந்து கோப்பெக்குகள்!"

"ஆண்டவன் புண்ணியத்திலே மலிவாகத் தீர்ந்து போயிற்று விவகாரம்... இப்போது சொல்லு, இது உன் கைவேலையா?"

"இல்லை, நான் சொல்வது பொய்யானால் நான் செத்துப் போகிறேன்."

"ஜாக்கிரதை, கடைத்தேற வகை இல்லாமல் செத்துப் போவாய்! யாரேனும் பையன் புகைக்கூடத்துக்குள் வந்தானோ?"

"நான் பார்க்கவில்லை..."

"ஓகோ, நீ பார்க்கவில்லையோ? அப்படிச் சொல்லடா என்றேன்! நீயும் ஒன்றும் செய்யவில்லை, யாரையும் நீ பார்க்கவும் இல்லை. வயிறாரச் சாப்பிடுகிறாய், நன்றாக உடுத்துகிறாய், மேற்கொண்டு இஷான்ஹானின் கழுதைபோல வித்தைகள் வேறு காட்டுகிறாயா? இந்த அழகில் நான் பார்க்கவில்லை என்று சொல்லுகிறாயோ! ஓகோ!"

தணல் எடுப்பதற்கான செப்பு இடுக்கி அருகே கிடந்தது. ஹாஜி-பாபா அதை எடுத்துக்கொண்டு என்மேல் பாய்ந்தான். அனேக அடிகளும் கொடுத்துவிட்டான், ஆனால் அதற்குள் மற்றவர்கள் அவனைப் பிடித்து நிறுத்தினார்கள். நான் மூலையோடு ஒண்டிக்கொண்டு அழுதேன். இந்தியன் முகங்கை கழுவி உடை மாற்றிக்கொண்டு ஏக்கத் தோற்றத்துடன் கடைவீதிக்குப் போய்விட்டான். உஸ்தாது ஸலீம் பல நிறக் காகிதங்களால் பூக்கள் தயாரிப்பதில் ஈடுபட்டான் - எவனோ ஜமீன்தாரின் இளைய மகனுடைய சுன்னத்துக் கொண்டாட்டத்தில் பரிசு அளிப்பதற்காக. ஹாஜி-பாபா தன் அறைக்குப் போய்விட்டான். தூக்கிய மூக்கு ஸுல்தான் கண்ணிலேயே படவில்லை. நடுப்பகல் ஆவதற்குள் எல்லாம் கொஞ்சங் கொஞ்சமாக வழக்கமான போக்குக்கு வந்தன. ஆனாலும் காரியம் என்னவோ நடந்து முடிந்துவிட்டது... நான் கடுமையான சந்தேகத்துக்கு உள்ளானேன்.

இரண்டு நாட்களுக்குப் பின் எங்கள் வாடிக்கைக்காரர்கள் புகைக்கூடச் சுவற்றை ஒட்டியிருந்த சிறு மேட்டில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கையில், சண்டையிட்டுக் கொண்டிருந்த இரண்டு கடுவன் பூனைகள் முகட்டிலிருந்து அவர்கள்மேல் விழுந்தன. மிருகக்காட்சி சாலையிலிருந்து புலி மெய்யாகவே தப்பி வந்து மேலிருந்து அவர்கள் மேல் பாய்ந்திருந்தால்கூட அவர்கள் இதைவிட அதிகமாக அரண்டு போயிருக்க மாட்டார்கள். பூனைகள் மட்டுமீறிய சீற்றம் கொண்டிருந்தமையால் கீழே விழுந்தபோதும் ஒன்றை ஒன்று பிறாண்டிப் பிய்ப்பதைத் தொடர்ந்தன. எங்கள் வாடிக்கைக்காரர் களின் அழகைப்பற்றி அவை பிரமாதமாகக் கவலைப்படவில்லை. உஸ்தாது ஸலீமின் தலைப்பாகையை அவை அலக்காகப் பிய்த்து



அகற்றிவிட்டன. தன் தலையில் பாகை இருந்ததற்காக அவன் அல்லாவுக்கு நன்றி செலுத்த வேண்டும், ஏனென்றால் இன்னும் இரண்டு பேருடைய தலை மயிரையும் தாடியையும் அவை சரி பாதி பிய்த்து எடுத்துக்கொண்டு எங்கோ ஓடி மறைந்துவிட்டன. அப்புறம் அந்தப் பூனைகள் இறந்து போயிருந்தாலுங்கூட, மனச்சாட்சியின் உறுத்தலால் அல்ல என்று உறுதியாகச் சொல்வேன்.

வேடிக்கை என்ன தெரியுமா? இந்தப் பூனைகளின் தாக்குதலுக்கும் நானே பொறுப்பாளியாகக் கருதப்பட்டேன்!

இந்த விஷயத்தில் நான் கனவில்கூடக் குற்றவாளி அல்ல. இந்தப் பூனைகளை அதற்கு முன் நான் கண்ணிலேயே கண்டது கிடையாது! ஆகவே எனக்கு ரோசமாயிருக்காதா? ஆனால் எந்த மோசமான விஷயத்திற்கும் நல்ல அம்சம் இருக்கும்தானே. இவர்கள் இனி என்னை இங்கே நிறுத்தி வைக்க விசேஷமாக விரும்ப மாட்டார்கள் என்பது தெளிவாகிவிட்டது.

எனினும் விவகாரம் இத்துடன் தீர்ந்துவிடவில்லை.

அடுத்த புதன்கிழமையன்று வழக்கமான வியாழக்கிழமைப் பொதுவிருந்துக் கொண்டாட்டத்துக்கு ஹாஜி-பாபா ஏற்பாடுகள் செய்யலானான். விட்டத்தை ஒட்டினாற்போல் இருந்த அகன்ற பிறை மாடத்தில் ஹாஜி-பாபாவின் இர்பீத் நகரப் பெட்டி வைத்திருக்கும். அதை அவன் ஒருவன்தான் திறப்பான். லாகிரி வஸ்துக்கள், தேயிலை, மிட்டாய்கள் முதலியன அதில் இருக்கும். இந்தத் தடவை அவன் அரை ராத்தல் நறுமணத் தேயிலையும் ஒரு ராத்தல் ஹல்வாவும் ஒரு ராத்தலுக்கு மேல் இர்கூத்ஸ்க் நகர மஞ்சள் திராட்சைப் பழமும் மற்றத் தின்பண்டங்களும் அதில் சேமித்திருந்தான். பெட்டியை அவன் வழக்கம்போல் பூட்டி, சாவியை இடுப்பில் செருகியிருக்கும் சாவிக்கொத்தில் வைத்திருந்தான். சாமான் அறை, வெளிக் கதவு, அறைக் கதவு, பெரிய பெட்டி ஆகியவற்றின் சாவிகளும் இன்னும் எவை எவற்றினுடையவோ திறவுகோல்களும் அந்தக் கொத்தில் இருந்தன. ஹாஜி-பாபா மகிழ்ச்சி பொங்கும் மனநிலையில் இருந்தான் என்பதை அவன் பாடியதிலிருந்து நான் கண்டுகொண்டேன். மனநிறைவோடு இருக்கும்போது அவன் எப்பொழுதும் பாடுவது வழக்கம். இப்போது அவன் எனக்குப் புரியாத ஒரு பாட்டைப்

பாடிக் கொண்டிருந்தான்: "அன்தால்-ஹாதி, அன்தால்-ஹாக், லாய்-ஸல் ஹாதி, இலால் ஹ..."

மாலையில் நான்காம் தொழுகைக்குப் பிறகு உஸ்தாது ஸலீம் செங்கல் பருமன் இருந்த ஏதோ ஒரு புத்தகத்தை வழக்கப்படி வாசிக்கத் தொடங்கினான். எல்லோரும் ஒரே கவனமாகக் கேட்கலானார்கள். இது முடிந்ததும் உறங்குவதற்காகப் படுத்தார்கள். வயதான காடை கூவி என்னை எழுப்பிவிட்டது. இது உராத்யூபேயில் ஹாஜி-பாபாவுக்குப் பரிசாகக் கிடைத்தது. இதை அவன் அன்புடன் பராமரித்து வந்தான். அதன் சீழ்க்கையைக் கேட்டவாறு நான் ஒரு நிமிடம் படுத்திருந்தேன். அப்புறம் எழுந்து உடம்பு கழுவிக்கொண்டு அப்புறம் எழுந்து உடம்பு கழுவிக்கொண்டு தேநீர் தயாரிப்பதற்காக ஸமோவாரை மூட்டினேன். இதை அடுத்து உஸ்தாது ஸலீமும் இந்தியனும் எழுந்திருந்தார்கள். நான் அறையை ஒழுங்குபடுத்திக் காலை ஆகாரத்துக்கு ஏற்பாடுகள் செய்தேன். ஹாஜி-பாபாவும் தன் அறையிலிருந்து வெளியே வந்தான். முந்திய மாலை போலவே இப்போதும் அவன் களிப்புடன் இருந்தது தெரிந்தது. அதே "அன்தால்-ஹாதி" பாட்டைப் பாடிக் கொண்டிருந்தான் அவன். நாங்கள் ஒருவருக்கு ஒருவர் முகமன் கூறிக்கொண்டோம்.

"நீர் கொதித்துவிட்டது, ஹாஜி-பாபா. தேயிலை கொடுத்தீர்களானால் தேநீர் தயாரிக்கிறேன்" என்றேன்.

இடுப்பிலிருந்த சாவிக்கொத்தைத் தடவிப் பெட்டிச் சாவியை எடுத்து மற்றவற்றிலிருந்து தனிப்பிரித்துவிட்டு மேலே பிறை மாடத்தைப் பார்த்தான் அவன். பெட்டியை அங்கே காணவில்லை.

"நீ என்ன, பெட்டியைத் தலைக்கடியில் மறைத்து வைத்தாயா? சபாஷ், மகனே. ஜாக்கிரதையாக இருப்பது நல்லதே. அதுதான் விஷயம். எச்சரிக்கை கடைப்பிடி, அண்டை வீட்டானை மட்டும் திருடன் என்று எண்ணாதே என்று வசனம் சொல்லுவார்கள்... ஆமாம், பெட்டியை எங்கே வைத்தாய்?" என்றான்.

"ஹாஜி-பாபா, நான் அதை எங்குமே மறைக்கவில்லை. தலைக்குயரமும் வைத்துக்கொள்ளவில்லை. அது வழக்கமான இடத்தில்தான் இருந்தது என்பது என் நினைவு."

"என்ன, என்ன? இடத்தில் இருந்ததா? உஸ்தாது ஸலீம், நீங்கள்



பார்க்கவில்லையா?" என்று கலவரத்துடன் கேட்டான் ஹாஜி-பாபா.

"சாயங்காலம் பார்த்தேன், அது அங்கேதான் இருந்தது."

"அப்படியானால் தேடுங்களேன்" என்று அழாக்குறையாகச் சொன்னான் ஹாஜி-பாபா. பின்பு உதடுகளை இறுக மூடிக் கொண்டு என்னைப் பகைமையுடன் பார்த்தான். "நன்றாக எண்ணிப்பார், அழுக்குப் பயலே, எங்கே ஒளித்தாய் அதை?" என்றான்.

"ஹாஜி-பாபா. கடவுள் ஆணை. நான் அதைத் தொடவே இல்லை. உங்கள் சாமான்களை நான் தொடுவதே கிடையாதே. உங்களுக்கே தெரியுமே. இந்தப் பெட்டி எங்கே என்று எனக்குத் தெரிந்திருந்தால் நான் நாசமாய்ப் போவேனாக" என்று வீரிட்டேன்.

"தானே பறந்து போக அது பறவை இல்லையே! வெளியே தாவிக் குதிக்க அது தவளையும் இல்லையே! அதுதான் விஷயம்! தேடு, பாழாய்ப் போகிறவனே! கிழவனிடம் வேடிக்கை செய்யத் துணியாதே!"

"ஹாஜி-பாபா, நான் எப்போதாவது..."

அவன் என்னை மேலே பேசவிடவில்லை.

"நான் போன பிறகு இங்கே யார் வந்தார்கள்?"

"ஒருவரும் வரவில்லை. ஹாஜி-பாபா. காக்கை கூடப் பறந்து வரவில்லை."

"ஒருவரும் வரவில்லையோ? ஒருவரும் வரவும் இல்லை, நீயும் குற்றவாளி அல்ல!" என்று கோபம் பொங்க எகத்தாளம் செய்தான் ஹாஜி-பாபா.

முட்டியைக் காட்டி என்னை அச்சுறுத்தி, புகைக்கூடத்தின் கதவைப் பூட்டிவிட்டு, தேட்டம் தொடங்கினான். எல்லாவற்றையும் தலைகீழாகப் புரட்டி விட்டான். போலீஸ்காரர்கள்கூட இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்யவில்லை. பெட்டி இருந்த வெற்றுப் பிறை மாடத்தை இரண்டு முறை துழாவிப் பார்த்தான் - அது தானே வெளிப்பட்டுவிடும் என்று நினைப்பவன்போல. விரிப்புக்கு அடியிலும் ஸமோவாரின் புகைக் குழாயிலும் உற்றுப்பார்த்தான். பின்பு என்னை இடித்து வாயைத்

திறக்கச் சொன்னான். பெட்டியை நான் துண்டு துண்டாக விழுங்கிவிட்டேன் என்றும், ஜீரணமாகாத துண்டுகளை இப்போது பயத்தினால் கக்கிவிடுவேன் என்றும் நினைத்தான் போலும்! கோபம் அளவு கடந்து பொங்க, தன் பிரியமான செப்பு இடுக்கியை எடுத்து அதனால் என்னை மொத்தத் தலைப்பட்டான். உஸ்தாது ஸலீம் அவனோடு சேர்ந்து கொண்டான். நான் தொண்டை கிழிய வீரிட்டேன். மெய்யாகவே நான் திகிலடித்துப் போனேன். ஏனென்றால் பெட்டியை நான் தொடக்கூட இல்லை. அது எங்கேதான் மாயமாய் மறைந்ததோ, சைத்தானே அறிவான். என்னை நையப் புடைத்தபின் ஒருவாறாக அவர்கள் ஓய்ந்தார்கள். இதை எல்லாம் பார்த்துக் கொண்டிருந்த இந்தியன் ஒரு மூலையில் ஒண்டியவாறு என்மேல் இரக்கம் காரணமாக அழுதானே தவிர எனக்குப் பரிந்துகொண்டு வரவில்லை. ஒன்றா அவன் குழப்பம் அடைந்திருந்தான், அல்லது நான் மெய்யாகவே திருடியதாக எண்ணினான் என்பது தெரிந்தது.

“கடைத்தேறா ஜென்மமே! சீ, தேய்ந்த விளக்குமாறே! அனாதைக் கன்றை ஊட்டி வளர்த்தால் வாயிலும் மூக்கிலும் வெண்ணெயாய் இருக்கும். அனாதைப் பயலை ஊட்டி வளர்த்தாலோ வாயிலும் மூக்கிலும் இரத்தந்தான் பெருகும் என்று சொல்வார்கள். அதுதான் விஷயம், ஆமாம்! நீ வந்ததிலிருந்து இங்கே ஒரு நாள்கூட நிம்மதியாகக் கழியவில்லை! பெட்டி எங்கே போயிற்று என்று சொல்லு! நல்லபடியாகச் சொல்லு, அதைத் திருப்பிக் கொடு. எல்லாவற்றையும் மறந்துவிடுவோம், இல்லையோ, உன்னைக் காஜியிடம் இழுத்துப் போவேன், மத நீதிமன்றத்துக்கு, ஆம், அதுதான் விஷயம்! அப்புறம் நீ சுகமாய் இருக்க முடியாது. நேரே சைபீரியச் சிறைக்கு அனுப்பப்படுவாய்” என்றான் ஹாஜி-பாபா.

நான் தேம்பிக்கொண்டே பதில் சொன்னேன்:

“விஷயம் அவ்வளவு தூரத்துக்குப் போய்விட்டது என்றால், நானே உங்களைக் காஜியிடம் இட்டுப் போவேன், ஹாஜி-பாபா! இவ்வளவு காலமாக நான் உங்களிடம் வேலை செய்கிறேன், ஒரு பழைய தொப்பி மட்டுமே எனக்குக் கிடைத்த கூலி. எங்கேயாவது இதைக் கண்டதுண்டா? போதாக்குறைக்கு அனாதையான என்னை நீங்கள் அடித்துப் புடைக்க வேறு செய்தீர்கள்! இஸ்லாம் மத விதிகளில் எங்கே இப்படிச் சொல்லியிருக்கிறது? வெள்ளை



ஜாரிடம் போக எனக்கு வழி தெரியாது என்று நினைக்கிறீர்களோ? ஐயோ அம்மா, ஐயோ, ஐயோ, ஐயோ...”

“அட உருப்படாத கழிசடைப் பயலே! இன்னும் உனக்கு வாய் வேறா? நன்றி கெட்ட பன்றிப் பயலே! ஒழி இங்கிருந்து! இந்தக் கணமே போய்த் தொலை! நான் உனக்குத் தர வேண்டியதை இறுதி நீதிமன்றத்தில்தான் பெறுவாய்!”

இப்போது உஸ்தாது ஸலீம் குறுக்கிட்டான்.

“ஹாஜி-பாபா, நீங்கள் எதற்காக இவனை விரட்ட வேண்டும்? எக்கேடுங்கெட்டுப் போகிறான், விடுங்கள்!” - இவ்வாறு சொல்லி ஹாஜி-பாபாவுக்குக் கண் ஜாடை செய்தான் அவன். பின்பு என்னைப் பார்த்து, “இந்தா, தம்பீ, நீ வாயைக் கொஞ்சம் அடக்கி வைத்துக்கொள், தெரிந்ததா? நீ எடுக்கவில்லை என்றால் 'யார் மேல் உனக்குச் சந்தேகம் என்றாவது சொல்” என்றான்.

இதற்குப்பின் இந்தியனால் பொறுக்க முடியவில்லை.

“அட ஏழைப் பையா, அதிர்ஷ்டங்கெட்ட அனாதையே!” என்று நடுங்கும் குரலில் கூறிவிட்டு, “ஹாஜி-பாபா; உங்கள் நஷ்டத்துக்கு நான் ஈடு கட்டி விடுகிறேன். உங்கள் பெட்டிக்கு என்ன விலை மதிக்கிறீர்கள்?” என்றான்.

“உன் கனிவையும் பரிவையும் கட்டி வை!” என்று அவனைக் கோபத்துடன் அடக்கினான் ஹாஜி-பாபா. அப்புறம் மறுபடி என்னைப் பார்த்து, “சொல்லு, யாரைச் சந்தேகிக்கிறாய்?” என்று கேட்டான்.

எனக்கோ, யாரைச் சந்தேகிப்பது என்று நிஜமாகவே தெரியவில்லை. பிறகு தூக்கிய மூக்கு ஸுல்தானைப்பற்றி நினைத்துப் பார்த்தேன். அவனாய் இருக்குமோ?

“மற்றவர்களைப் பழி தூற்றுவது கஷ்டமாய் இருக்கிறது, எஜமான்! ஆனால் ஸுல்தான் எடுத்திருக்கலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. போலீஸ்காரர்களை அவன் இங்கே கூட்டி வந்தது வீணாக அல்லவே. உங்கள் எல்லோருக்கும் எதிராக அவன் கெட்ட சூழ்ச்சி செய்தான் என்பது தெரிகிறதே!”

“ஹ்ம். இதை நாங்கள் சரி பார்ப்போம். அவன் எங்களிடமிருந்து எங்கும் தப்பிப் போக முடியாது” என்றான் ஹாஜி-பாபா.

இத்துடன் விவகாரம் முடிந்தது. ஆனால் பகல் வீணாகி விட்டது. புகைக்கூடம் நடுப்பகலுக்கு மேல்தான் திறக்கப்பட்டது. வியாழக்கிழமையாய் இருந்துங்கூட ஆட்கள் கொஞ்சம் பேர் தாம் வந்தார்கள். சாயங்காலம் நான் எல்லா வேலைகளையும் செய்து முடித்துவிட்டேன். அப்புறம் படுத்து உறங்குவது போலப் பாசாங்கு செய்தேன். ஹாஜி-பாபா தன் அறைக்குப் போய்விட்டான். இந்தியன் அன்று வரவில்லை. உஸ்தாது ஸலீம் சந்தேகத்துக்கு இடமான வகையில் வெகுநேரம் உறங்காமல் உட்கார்ந்திருந்தான். அவன் என்னைக் கண்காணித்தான் என்று எண்ணினேன். ஆயினும் கடைசியில் தூக்கம் அவனை ஆட்கொண்டது. அப்போது நான் எழுந்து பாப்ளார் மரத்தடிக்கு ஓடினேன். என் பணத்தின் ஒரு பகுதி சாம்பல் கிண்ணத்தில் வைத்து அங்கு புதைக்கப்பட்டிருந்தது. அதைத் தோண்டி எடுத்துக்கொண்டு ஓசைப்படாமல் திரும்பினேன். உஸ்தாது ஸலீம் இன்னும் உறங்கிக் கொண்டிருந்தான். நான் ஊசி நூல் எடுத்து இருட்டிலேயே காசுகளை எல்லாம் மேலங்கி விளிம்பில் வைத்து எப்படியோ தைக்கலானேன். அந்தப் பணம் சுமார் நான்கு ரூபிள்கள் வரை இருந்தது. இது பெருந்தொகை ஆயிற்றே! யுத்தம் மட்டும் இல்லாவிட்டால் இதைக் கொண்டு பத்து ஆடுகள் வாங்கலாமே!

நான் தையலை முடித்துவிட்டபின் எக்கச்சக்கமாகக் குனிந்தவன், பக்கத்தில் இருந்த சாம்பல் பாத்திரத்தில் இடித்துவிட்டேன். அது கணகணவென்ற ஓசையுடன் உருண்டது. உஸ்தாது ஸலீம் விழித்துக்கொண்டு திகிலுடன் துள்ளி எழுந்தான்.

"யார்... யார் அங்கே?" என்றான்.

"ஒருவரும் இல்லை, முல்லா-அகா, நான்தான்" என்று நிதானமாகக் கூறினேன். எல்லாக் காசுகளையும் அதற்குள் தைத்து முடித்திருந்தேன்.

"என்ன... என்ன செய்கிறாய் நீ இருட்டிலே? ஊம்?"

"நான் ஒன்றும் செய்யவில்லை. மேலங்கிக் கிழிசலைத் தைக்கிறேன். என்னையோ வேலையிலிருந்து நீக்கப்போகிறார்கள். கிழிந்த மேலங்கியோடு நான் வெளியே போவானேன்?"



"எங்கே, விளக்கை ஏற்று!"

நான் எழுந்து விளக்கை ஏற்றினேன். அவன் ஆவலுடன் அறையில் கண்ணோட்டினான். என் ஊசி நூல் மேலங்கி விளிம்பில் துருத்திக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

"அப்பாவிப் பிள்ளை" என்று இனிய குரலில் சொன்னான். "பாரேன், மெய்யாகவே இருட்டில் தைத்துக் கொண்டிருக்கிறான், பாவம்... ஆனால் தம்பீ, நீ தைப்பது வீண்தான். இந்தியன் மேலங்கியை உன்னிடமிருந்து பறித்துக் கொள்வான். படு கஞ்சனாயிற்றே!" என்றான். நான் அவன் முகத்தைப் பார்த்தேன். அவனும் என்னை நோக்கினான். அவன் முகத்தில் உறக்கம் நிழலாடியது. ஆயினும் விழிகளில் குள்ளநரித் தந்திரம் பளிச்சிட்டது. உடனே ஓர் எண்ணம் என் மனதில் உதித்தது. உஸ்தாது ஸலீமோ, பேச்சைத் தொடர்ந்தான்: "ஆமாம், நீயேதான் பார்த்தாயே, எவ்வளவு பணத்தை இங்கே கொண்டு வந்து எண்ணுகிறான் என்று? நானுந்தானே பக்கத்தில் இருக்கிறேன். ஒரு பிடி உலர் திராட்சைக்கு அலந்துபோய்! ஒரு தரமாவது இந்தா என்று ஒரு செப்புக்காசுகூட அவன் எனக்குத் தந்ததாக நினைவு இல்லை..." சற்று நேரம் உஸ்தாது ஸலீம் பேசாதிருந்தான். பின்பு சொன்னான்: "வாய்ப்பு இருக்கும்போதே நீ போய்விடு. அதுதான் மேல். இப்போது நிலாக்காலம்தான். உன்னைப் பிரிய வருத்தமாய்த்தான் இருக்கிறது. நாளைக்கு ஒரு பட்டம் கட்டி உனக்குத் தருவதாக இருந்தேன். இப்போது காகிதமும் நாணலும் வீணாகி விடும்! அதற்கு என்ன செய்வது? நீ கொடுத்து வைத்தது அவ்வளவுதான்." - இவ்வாறு கூறி என்னை ஓரக் கண்ணால் பார்த்தான் அந்தக் குள்ள நரி.

நான் நிரம்ப வருத்தப்படுபவன்போல நடித்தேன்.

"நீங்கள் என்ன, முல்லா - அகா! அவர் கொடுத்த மேலங்கியைத் திரும்பப் பிடுங்கிக்கொள்வாரா என்ன?" என்றேன். இது பொய் என்பது எனக்குத் தெரிந்திருந்தது. இந்தியன் எனக்குக் கொடுத்த பரிசுகள்பற்றி உஸ்தாது ஸலீமுக்கு ஒன்றுமே தெரியாதே. ஒரு விஷயம் எனக்குத் தெளிவாகப் புலப்பட்டது.

"அந்தக் கஞ்சப் பயல் பிடுங்கிக் கொண்டுவிடுவான்! கொஞ்சங்கூட முன்பின் யோசிக்க மாட்டான்! நிலவு வீசுகிறது. எல்லோரும் உறங்குகிறார்கள், இதுதான் சமயம், போய்விடு!...

பிரிவு சொல்லிக்கொள்வதும் அவசியம் இல்லை. ஹாஜி-பாபாவுக்கு நிறையப் பேசுவது பிடிக்காது. பேசாதிருப்பவர்கள்தாம் அவருக்கு உவப்பானவர்கள்" என்றான் உஸ்தாது ஸலீம்.

"அப்படியா சேதி!" என்று நான் எண்ணமிட்டேன். "பேசாதிருப்பதற்கு நல்ல ஆள்தான் கிடைத்தான் இவனுக்கு. விஷயம் இதுதான். சாயாக்கடைக்கார இல்ஹாம் கிளி வளர்த்தது ஆட்களைச் சாயாக்கடைக்கு வரச் செய்வதற்காக. ஹாஜி-பாபா இதே நோக்கத்துக்காக உஸ்தாது ஸலீமை வைத்திருக்கிறான். ஹாஜி-பாபா சொல்லிக்கொடுத்ததை இவன் திருப்பிச் சொல்லுகிறான். பெட்டியைத் திருடியவன் இவனேதான்! கட்டாயம் இந்த ஆள்தான். ஹாஜி-பாபாவுக்குத் தெரியாமல் திருடியிருக்கிறான், அவ்வளவுதான். அட, தள்ளு குப்பையில், எக்கேடும் கெட்டுத் தொலையட்டும் இவர்கள்! தங்கள் சிடுக்கைத் தாங்களே அவிழ்த்துக் கொள்ளட்டும். எனக்கு முக்கியமானது இங்கிருந்து சத்தம் காட்டாமல் நழுவிவிடுவதுதான்" இவ்வாறு முடிவு செய்து நான் சொன்னேன்:

"யோசனைக்கு நன்றி, உஸ்தாது ஸலீம். நீங்கள் சொல்கிறபடியே செய்கிறேன்... போய்விடுகிறேன்..."

ஸமோவாரிலிருந்து வெந்நீரைப் பாத்திரத்தில் ஊற்றி, வெளியே போய், வெதுவெதுப்பான நீரால் முகங்கை கால் கழுவிக் கொண்டேன் - விடுதலையைக் கொண்டாடுவதற்காக. அப்புறம் உள்ளே வந்து மேலங்கியையும் தொப்பியையும் போட்டுக் கொண்டேன். உஸ்தாது ஸலீம் என்னை விடாது கண்காணித்துக் கொண்டிருந்தான். கண்காணி, கண்காணி, என் பணத்தை நீ கண்டுகொள்ள முடியாது! நான் அவனுக்குத் தலை வணங்கி விட்டு வெளியே வந்தேன்.

முதல் வெண்பனி பெய்தபின் மறுபடி வெதுவெதுப்பாகி விட்டது. ஆயினும் காற்று குளுகுளுவென்றிருந்தது. நல்ல வேளைதான், நான் கதகதப்பாக உடைகள் அணிந்து ஜோடுகள் போட்டிருந்தேன். நெஞ்சு நிறையக் காற்றை இழுத்துச் சுவாசித்தேன். புகைக்கூடத்தில் காற்று எவ்வளவு கட்டுக்கிடையானது, நாற்றம் உள்ளது என்பதை இப்போதுதான் புரிந்துகொண்டேன். ஆகா, இப்போது நான் லேசானவன், துப்புரவுள்ளவன், சிறகுகள் சரியாகி விட்ட பறவைபோல விட்டாற்றி ஆனவன்! பொழுது புலர இன்னும் நிறைய நேரம் இருந்தது. ஆயினும் என் உள்ளத்தில் புலரொளி பரவத் தொடங்கி விட்டது! நான் எங்கே போகிறேன்?...

வீட்டுக்கு! வீட்டுக்கு!

●



"தப்பி ஓடி ஒளிய வேண்டுமானால் ஆள் கூட்ட நெரிசலில் அமிழ்வதைவிட மேலானது எதுவும் இல்லை. சந்தைத் திடலின் நடுவே, திறந்த வெளியில் கண்ணுக்கு மறைவதுபோல எந்தக் காட்டிலும் மறைய முடியாது" - இவ்வாறு கூறுகிறான் குதூகல சுபாவமும் சமயோசித சாமர்த்தியமும் உள்ள குறும்பன் - சின்னஞ்சிறு போக்கிரி. எத்தனையோ தடவை தன் கிருத்திரிமங்களுக்குப் பிறகு அவன் தலைதெறிக்க ஓடித் தப்ப நேர்ந்தது. எனவே அவன் இந்த விஷயத்தில் அனுபவசாலிதான்! இந்தக் குறும்புக்காரப் பையனின் கதையையே இந்நூல் ஆசிரியர் கூறுகிறார். அவர் தமது பிள்ளைப் பருவத்தை நினைவு கூர்கிறார். எத்தனையோ ஆண்டுகளுக்கு முந்திய காலம் அது. அப்போது உஸ்பெகிஸ்தானில் வாழ்க்கை இப்போதைய வாழ்க்கைக்கு முற்றிலும் வேறாய் இருந்தது. சாதாரண மக்கள் பாடு மிகக் கடினமாக இருந்த காலம் அது.

"குறும்பன்" என்னும் இந்தச் சுயசரிதை நவீனம் உஸ்பெகிஸ்தானின் மக்கள் கவிஞர் கஃபூர் குல்யாமின் (1903-1966) உரைநடைப் படைப்புக்கள் எல்லாவற்றிலும் மக்களால் பெரிதும் விரும்பப்படும் நூல் ஆகும். கஃபூர் குல்யாம் அரசாங்கப் பரிசு பெற்றவர், எத்தனையோ கவிதைத் தொகுப்புக்கள் இயற்றியவர்.



நாவல்

ISBN 978-81-2341-228-3



நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்.,
41-B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 600 098
போன்: 26241288, 26251968, 26258410
www.ncbhpublisher.com | email: info@ncbh.in


9 788123 412283
Code No. A1648 ₹ 125/-